ஆர்வம்பெருகிப் பள்ளிப்படிப்பிற் சிறிது ஊக்கங் குறைவதா யிற்று. இதற்கிடையில் கதிரைவேற்பிள்ளைக்கும் இராமலிங்க அடிகள் கூட்டத்தாருக்கும் பெருவழக்கொன்று நிகழ்ந்தது அதைச்சார்ந்த பிறிதோர் வழக்கில் திரு. வி. க சான்று பகரச் சென்றார் அவ்வழக்கின் வெற்றி தோல்விமுறைகளைக் கண்டறி தற்கு விழைந்தார். அதறகாக அடிக்கடி வெளியிற போயவர நேர்ந்தமையால் படிப்பில கருததுப் பதியாதவாறு ஓராணடு கழிவதாயிற்று. தமிழ்ப்பேராசிரியர் சிலநாள் ஓய்வெடுத்திருந் தனர் அந நாட்களில ஆசிரியர் விரிததுரைதத பாக்களின் அருமபொருட் கருததுரைகள் திரு வி. க வின் உளளத் தடத்தில் நிலைப்பவாயின பின்னர்ப் பள்ளிபபடிப்பில் வெறுப் புத் தோன்றிறறு, பளளியைவிட்டகன்றார். விட்ட சில திங்கட் குள் சுந்தரர் தந்தையார் விண்ணுலகெய்தினர். அபபோது இராசா முதலியார் தூண்டுதலால 'புகசீபிங' பயின்று தோவில் தேறினர். நாளடைவில் பன்னூற்களும் கறறுத்துறைபோய்க் கல்விககடலாக நிலவலானார்.

ஊழியம்

1906-ல் ஸ்பென்சர் கமபெனியில் சேர்ந்து வேலை பார்த் தனர் அஙகு இரண்டாண்டுகளே இருந்தனர் பின்னர் விலக லானார். 1908-ல் சென்னைக்கு வநது சோந்து கடறகரையில் பேசிய விபினசந்திரபாலரின அரிய சொற்பொழிவு, திரு. வி க. வை ஈர்ததது அது நாட்டுவெறியை உணடாககிற்று. நாளிதழகளில்வந்த அவர் சொற்பொழிவை ஸ்பென்சர் தொழி லாளிகளிடம சென்று ஓரிடத்திற் கூட்டஙகூட்டிப படிததுக் காண்பிததார். ஸ்பெனசரைவிட்டு விலகியபின், திரு வி. உலகநாதரும், சிவசஙகர முதலியாரும கூட்டாக வைதது நடததி வநத 'உமாபதி குருபிரகாசம் பிரஸ்' எனனும அச்சகத்தில் திரு. வி க பெரியபுராணக குறிபபுரையினை உரைநடையுடன் எழுதித திங்கள்தோறும் தனிததனி இதழாக வெளியிட்டார். பின்னர்த் திருமந்திரமும் வெளிவநதது பின் அச்சகம ஊதியக் குறைவினால் நின்றது, வெளியீடும நிறகலாயிறறு

அப்பால் சுந்தரனார் ஆயிரம் விளககிலுள்ள வெஸ்லியன் கல்லூரியில் முதற்பார ஆசிரியராக அமாநது தொண்டாறறினார். அதில ஆறாண்டுகள அலுவல் பாாததார். பிறகு இராயப்பேட்டை வெஸ்லி கல்லூரியில தலைமைத தமிழபபேராசிரியராக அமர்நது ஒன்றரையாண்டுகள நற்பணி புரிந்தார். 1917-ல் நிகழ்நத தன்னுரிமையாட்சிக கிளர்ச்சி காரணமாக அன்னி பெசண்டு, அருண்டேல், வாடியா ஆகிய மூவரும காப்புக்

கைதிகளாகக் காவலில் வைக்கப்பெற்றபோதுதான் வெஸ்லி ஆசிரியத் தொழிலைவிட்டு விலகினார்.

இல்லறக்கிழமை

பெண்ணுலகிற்கு நம திரு வி க ஆற்றிய தொண்டு மிகபபல. பெண்ணின் பெருமையென்ற தனி நூல, இவரால் எழுதபபெற்றது; இது அரிய கருததுச செறிவுடைய கருவூலமாகும் இவர் தம பேச்சுவனமையால் பெணணுலகு உயாச்சி பெறறு நின்று தலைநிமிாநது நிறகினறது. இததொணடு தமிழ்நாட்டில் யாரும் காணுத - ஆற்றுத ஓா அரிய பெரிய செயல. 1912-ல கமலாம்பிகை எனனும் அமமையாரைத தம வாழ்க்கைத்துணையாக மணநதார். ஆறுண்டுகள இவா தம இலலறம் நனகு நிகழ்நதது இககாலததில ஆண், பெண் மகவு இரண்டு தோனறி மறைநதன. 1918-ல கமலாமபிகை அமமையாரும தம ஆருயிாததுணைவரை விட்டுபபிரிநது மேலுலகெய்தினா. இவ் வளவோடு திரு வி. க வின இல்லறவாழவு முறறுபபெறறது பினனா நணபாகளும உறவினரும மறுமணம் செய்துகொளள வேணடுதல் விடுததனர். அதற்கு எம் இதயததில ஒருவரே இடமபெறற்குரியார் எனக் கூறி மறுத்துவிட்டனா.

நாடடுத்தொண்டு

பினனா 1917-ஆம் ஆணடு திசம்பர்த் திங்களில் 'தேசபக்தன்' என்னும் கிழமையிதழ் ஆசிரியராக இருந்து இரண்டரையாண்டுகள அரும்பெருந தொணடாற்றினா. 'தமிழ தெரியாது, தமிழில சொற்பொழிவு ஆறற இயலாது' எனறு கூறிககொண்டிருநத தலைவாகளை யெலலாம தமிழில பேசும ஆறறலை உணடாக்கினுர்; பலலாறறானும் தமிழ்மொழியை ஆக்கமபெற வளாத்தனர். அபபால 'தேசபகதன் லிமிடெட்' காரியதரிசிககும இவருக்கும் ஏற்பட்ட கருத்துவேறுபாட்டினுல் தேசபக்தனை விட்டு வெளியேறினா.

அதனபின், 22-10-1920-ல 'நவசக்தி' என்னும் கிழமை இதழ் துவங்கி வெளிபபோந்தது. 1930-ல் காந்தியடிகளால் உபபுச சததியாககிரகப போர் துவங்கியபோது காஙகிரஸையும் காநதியடிகள கொள்கைகளையும் தன்னகததே திறம்படத தீட்டி வெளிவநதமைககாக அரசினரால நவசக்திக்கு ஈடுகாணம் கேட்கபபட்டது அதனுல ஆறுதிங்கள் இடையிலே நின்று மீண்டும வெளிவநதுலாவிற்று. சிறப்பாக நவசக்தி இதழ் தமிழ் வளாசசிககுச் செய்ததொணடு மிகப பெரிது. ஒபபளவின்றி உயர்நதது. இவவாறு நவசக்தி இருபான் ஆண்டுக்காலம்

தமிழ்மாநிலம் முழுதும் மலர்ந்து கமழ்ந்தது. அண்மையில் நிகழ்ந்த உலகப் போர்க்காலத்தில் அதனை நிறுத்தினார்.

விபினசந்திரா பேசசினால் அரசியல்நெறியில் ஈடுபட்டுக் காங்கிரசுத் 'தொண்டராகத்' தலைவராக இலங்கினாராயினும் தாய மொழியாம தமிழமொழிததொண்டே தலைசிறந்ததாகக் கொண்டார்; பேசசு, எழுதது யாவும தனிததமிழாகவே இருக்கும இக்காரணததால் நம முதலியாருககுச் சிறைவாழவு கிடடாது அகன்றது நெல்லை, திருசசி, வடாற்காடு, தென்னாற்காடு, காஞ்சி முதலிய இடங்களில் நிகழ்ந்த மாநாடுகளில தலைமைதாங்கிச் சிறப்புற நடத்தினர். அககாலத்தில் ஈ வெ ரா, டாக்டா வரதராசுலு நாயுடு, திரு வி. க மூவரும ஒன்று கூடாத கூட்டமே இல்லையெனலாமபடி அரசியலமேடைகளில இம் மூவரும ஒனறுபட்டுச சொறபொழிவு ஆற்றினாகள இன்னும இன்னனபோன்ற அரிய பணிகள பலபல ஆற்றிவநதனர்.

தொழிலாளா உலகிற்குச செய்த தொண்டுகள் அளவற்றன. இந்தியாவிலேயே முதன்முதல் ஓர் தொழிலாளா சங்கம் அமைந்ததெனறால, அது சென்னைத தொழிலாளாசங்கம ஒன்றேயாகும இச்சங்கம 1918-ல அமைக்கப்பெற்றது. இதை அமைத்த தலைவாகள ஐவரில நம திரு வி க வும ஒருவராவர். இதில் தொழிலாளர் உலகிறகுச செய்த கடப்பாடு மிகப பெருமைககுரியதாகும்.

**சமயப்பணி**

திரு வி க சமயப்பற்று, சைவநெறிப் பற்றுமிக்க குடும்பத்தில தோன்றியவா, ஆகலான், சைவ நன்னெறியிற்படாந்து சைவசமயததில பொதுநெறி கண்டு வாழ்ந்தார். சைவசமயததில் ஏனைய சமயநெறிக் கருததுககள் செறிந்திருப்பதை உலகினாககு எடுதது விளக்கினர் அதனால், 'சைவததின் சமரசம்' என்னும நூல மலாநதது சைவசமயக்கொளகையில் வேரூன்றி நின்றாலும் வேறறுச் சமயங்களில் காழ்ப்புக்கொள்ளாது ஒதத கருத்தினவே யெனறுகொண்டு மகிழ்ந்தாா

**பிரிவு**

திரு. வி. க. பளிங்கனைய மாசு மறுவற்ற உள்ளப்பாங்கினராக; எளிய வாழ்வும எளிய உடையுமகொண்ட தூய முனிவராக இலங்கினா. இததகையாருககுச சிலகாலமாக உடலுரங் குன்றியே வநதது தம பிரிவுநாளுக்கு இரண்டுநாள முன்பே உணர்வற்றநிலையில் இருநதார். பின்னர் 17-9-53 ஆம நாள் இரவு 7-45 மணிக்கு இராயப்பேட்டை, கணபதி முதலி தெருவி

லுள்ள தம இல்லததில திரு வி. க.வின் நல்லுயிா இறையடிப் பேறுற்றது

மககள காட்டிய அன்பு

மறைநத பெரியார்கருத தம இறுதி அன்பைச செலுத்த இரவுமுதல பல தலைவாகளும பெரியவாகளும் அவா இல்லத திற்கு வந்தவணணமாகவே இருநதனா டாகடர் திரு மு வரத ராசனாா, திரு தெ பொ மீனாட்சி சுந்தரனாா, திரு ச சசசி தானநதம பிளளை, திரு. பககிரிசாமி பிளளை முதலியோா வநது, திரு வி க அவாகட்குத தம இறுதி வணக்கததைச செலுததி னா இரவு முழுதும திரு வி க அவாகளின் நலலுயிர் அமைதியுறத தேவார திருவாசகஙகள ஓதியவணணமாகப பலா சூழநதிருநதனா மறுநாட்காலையில் சென்னை மாநில முதலமைசசா் திரு ச இராசகோபாலாச்சாரியாா, சட்ட சபைத தலைவா திரு ஜே. சிவசணமுகம பிளளை, நகராண்மைக் கழகத தலைவா திரு டி. செஙகலவராயன், உதவித தலைவா, திருவாட்டியாா சரசுவதி பாணடுரஙகம, டாக்டா திரு பி. வரதராசுலு நாயுடு, சென்னை அரசியறபொருளாதார ஆலோச கா டாகடா திரு பி நடராசன, போலீஸ கமிஷனா திரு. பாாததசாரதி ஐயங்காா, திரு ம பொ சிவஞான கிராமணி யாா, திரு அ. மு. பரமசிவானநதம, திரு அ ச ஞானசம பநதம, பேராசிரியா திரு சுவாமிநாதன, நாடகக கலைஞா திரு. டி. கே சண்முகம முதலியோா கலியாண சுநதராககுத தம் இறுதி வணக்கததைச செலுததினா.

எலலாததுறைகளிலும பொதுத்தொணடாறறிய தமிழகத் தலைவா பிரிவினையறிந்த பொதுமக்கள யாவரும் மறுநாட் காலைமுதல பகலெலலாம் பெருநதிரளாக வநதுகொண்டே யிருநதனா பலா கருபபுடையணிநது வநதிருநதனா. ஆடவா, மகளிா யாவரும திரு வி. க வின் உடலுக்குத தம அனபைக் காட்டி வணககஞ் செலுத்திப புன்கண் உறறனா.

பிறபகல் ஒரு மணிக்கு திரு. வி. க வின் பொன்னுடலைக் கருப்புததுணி போாததிய ஓா பொறிவண்டியில் (கார்) இருத் திப் பெரம்பூா பாரககிலுள்ள சென்னைத் தொழிலாளா கழகக் கட்டிடத்துக்குக் கொண்டுபோகப் பெற்றது. ஆஙகே மக்கள் திரண்டுவநது வணக்கஞ் செய்தனர்.

வழிநடைச் செலவு

பின்னர் திரு. வி. க வின் திருவுடல் ஊர்வலம் பிற்பகல் மூன்று மணிக்குத் துவங்கியது. மக்கட்கூட்டம் வெள்ளம்

போல பின்தொடர்ந்து வநதது பெரம்பூர் பாரக்ஸ் ரோடி லிருநது புறபபட்டு வேபபேரி வழியாக வநது சிநதாதிரிப் பேட்டை லெவல்கிராசிங வழியாகபபோய் நேபபியா பூஙகாவை யடைந்தபோது, காற்றும மழையும கலநதடிததமதால் ஊாவலம் சிறிது தடைப்படடது. எனினும பின மவுணட்ரோடு, ஜெனரல் பீட்டாஸ ரோடு வழியாக வநது மௌபரீஸ ரோடிலுளள பாலசுபபிரமணிய பகதசன சபையை அடைநதது இது திரு. வி க அவாகளால ஏறபடுததப பெறறது அஙகுச சிறிது நேரம மக்கள பார்வைககாக வைககபபெறறது. அபபோது திரு ச. சசசிதானநதம பிளளை, முருகபபெருமானுக்கு ஆரததிசெய்த கறபூரததை யெடுததுவநது உடலததுககு முன காட்டி, சுதேசமித்திரன உதவி ஆசிரியா திரு சா நடேசன் அளிதத கஙகைநீரைத தெளிததுடன், திருவட்டீசுவரா திருககோவிலி லிருநதுவநத திருநீறறை நெற்றியில பூசி, அவையாா சாாபில் மலாமாலையும சாததினுர். இஙகுத் தமிழ் நாட்டுக காஙகிரசுககுழாம சாாபிலும மாலையணிவிக்கபபட்டது.

மனம்மாழ்கித் தொடாந்த மககட்கூட்டம்

திரு வி க. மறைவைத தொலைபேசி வழியாக அறிநது பெரியார் ஈ வே ரா. ஈரோட்டிலிருந்து பொறிவணடியில் விரைநது ஊாநதுபோநது ஊாவலததிற கலநதுகொண்டனா. ஊாவலக கூட்டம சாரைசாரையாக ஒருகல்தொலை நீளமிருந் தது, குறிபபிடததககது ஊாவலததில தேசீயக்கொடிகள, சென்னைத தொழிலாளா கழகக் கொடிகள, திராவிடக கழகம், முனனேறறக கழகக கொடிகள், கமயூனிஸ்டுக கட்சிக் கொடிகள முதலியன், பல தொண்டர்களினுல தாங்கபபெறறு திரு. வி கவின் திருவுடல் தாஙகிசசெலலும பொறிவண்டி இருமருங்கினும பரநது சென றன. மௌனமாகச் சென்ற ஊாவலம மாலை 6-45 மணிக்கு மயிலை நன்காடு அடைநதது. அதுகாலை அஙகு முன்னதாகவே பல்லாயிரக் கணககான மககள் கூடிவிட்டமையாலும, நடைவழி மிகக குறுகியதாகவும மிகசசீாகெடடுப் போயிருநததாலும சிறிது சிரமததோடு கூட் டத்தை விலக்கினா. பின் விறகடுக்கின்மீது திரு வி. க வின் பொன்னுடலை வைக்கபபெறறது. அங்குக் குழுமியிருந்த நூற்றுக்கணக்கான பெண்மணிகளும் உறவினரும் கடைசிக் காண்டலுக்கு விடுக்கபபெற்றனா் அவ்வேளை திருவாசகத்தி லுள்ள சிவபுராணம ஓதினர், உடலததுக்குக் கங்கைநீா தெளித்தனர்; திருநீறிட்டனா; மலர்மாலை சாததினர், கற்பூரம் சந்தனக்கட்டை முதலியன வைக்கப்பட்டன.

அப்பால் இறுதிச சடங்குகள் எதுவுமின்றித் தம் உடலை எரியூட்டுதல் வேண்டுமெனமுனனரே திரு. வி. க. அவாகள் வற்புறுததிக் கூறியதாக டாக்டர் மு. வரதராசனுர் தெரிவித் தாா அபபோது திரு வி க உடலுக்கு மக்கள் எண்ணிறந்த மலாமாலை சூட்டிக் கண்ணீாதெளித்து வணங்கினா. தமிழ் எழுத்தாளா சங்கம, நாடகக் கழகம, நக்கீரா கழகம், பெத்து நாயககன் பேடடைத தாய்மாா கழகம, புரசை கலவிச்சங்கம், சென்னை சிவனடியாா திருக்கூட்டம முதலியவைகளின் சார்பில் மலாமாலைகள அணிவிக்கபபெற்றன.

உடற்கு எரியூட்டல்

பின்பு திரு. வி. க. அவர்களின் பெரிய தந்தையார் மகனு கிய சி. ஐ டி. இன்ஸ்பெக்டர் திரு. பாலசுபபிரமணியததாலும் மற்றவாகளாலும உடலுககுத தீ மூட்டப்பட்டது. அபபோது திருவாசகப பாடல்களா ஓதப்பட்டன. 'திரு. வி. க வாழ்க, திரு. வி. க. புகழ் ஓங்குக' என்னும் பேரொலியை அங்குக் குழுமியிருந்த மககளா வானளாவ முழககினுாகள். இரவு எ-மணிககுப பெருநதகை திரு வி க வின் பொனனுடலை எரி மண்டி அழிக்கலுற்றது குழுமிய மக்கள் யாவருமபல பிரிவா கச் சென்று நீரிடை மூழ்கி நினைப்பொழிநதவர்களாய்த தததம் இல்லமநோககி ஏகினா.

எற்புடல் கடலொடு கலத்தல்

பிறறைநாட் பகலில் கொடுமைமிக்க ஞாயிற்றின் கதிாகள்; அவ் வெய்யிலில் ஓர் சிறுகூட்டம்; தமிழகப பெரியார் எற் புடமபை எடுக்க நடநதுசென்றது; ஒரு சிறு மட்கலம்; அதனுள தெங்கம்பாளைப பூங்கதிர்கள் சில. இவைகளுடன் 'எழில்' என்னும இதழ் நடத்திய தட்சிணுமூர்த்தி சென்று, திரு வி. க வின் சில துண்டும் துணுக்குமான எற்புடமபை யெடுத்து அக்கலததிட்டு மெல்லிய துணிகொடுமூடிக் கடலை யண்மினுர். கலத்தொடு கடலுண் மூழ்கி யெழுந்தாா. கடல் போற் பரந்தபேரறிவும் அன்புங்கொண்டு வாழ்நத திரு. வி. க. வின் எற்புச் சட்டகம், கடலிடைப் பொற்பொடு கலநது ஒன் ருகிக் கரந்து, பரநதது

வாழ்க திரு. வி. க; வளர்க அவர் புகழ்!

---

# 'மீட்டும் வருவார்'

[திரு. அ. ச. ஞானசம்பந்தன் எம். ஏ.]

திரு. வி. க மறைநதுவிட்டார் 'நெருநல் உளன் ஒருவன் இன்றில்லை' என்னும பெருமையுடையதுதான் இவவுலகம். தினநதோறும் ஆயிரக்கணககான மக்களைக கொடுந்தொழிலாளனுய இயமன கொன்றனன் குவிபப அழல்வாய்ச சுடலை தின்றுகொண்டுதான இருக்கிறது. ஆனல் உலகம அதறகாக நிற்பதுமில்லை, பெருவருததம் அடைவதுமில்லை. எனினும, ஒவ்வொரு சமயஙகளில இநநிலை மாறிவிடுகிறது யாரோ ஒருவா இறநதுவிட்டதறகாக உலகம நின்றுவிடுகிறது; பெருவருததம் அடைகிறது அததகைய ஒருநிலை தமிழ்நாட்டைப் பொறுததவரை இபபொழுது ஏற்பட்டுளளது திரு வி க. வின் மறைவால் தமிழநாடு நீக்கலாகாப பெருநதுயரில் ஆழ்நது விட்டது அவருடைய சுற்றததாரும் குடும்பததாரும அரிய ஒரு கொழுகொம்பை இழந்தனா, நண்பாகள உறறுழி உதவும் ஊற்றுக்கோலை இழநதனா, தமிழ்மொழி ஒபபறற ஒரு புலவனை இழநதுவிட்டது, எழுததாளா உலகம ஒரு வழிகாட்டியை இழந்தது; பெணணுலகம பெறுதறகரிய பெருந்துணையை இழந்தது, இளைஞா உலகம தனனைக கைதூக்கிவிடும முதிய துணைவரை இழநதது, தொழிலாளர் உலகம தநதையருள ஒருவரை இழநதது, சீாதிருதத உலகம் ஒரு முறபோக்காளரை இழநதது; பழைமை பாராடடும முதியவா உலகம ஒரு பழைய பண்பினரை இழநதது; சமரச சன்மாாககத்தினர் ஒரு தலைவரை இழநதனா; ஆம! இததுணைபபோகளும் தமதம்முடைய துணைவரைத் திரு. வி க எனற ஒரு பெரியாரிடததில் கண்டு அமைதியுற்றிருநதாா. இன்று அவா ஒருவர் இறந்தமையின் இத்துணைபபோகளும 'திசைகாடடும கருவி' இழந்த நாவாய் ஓட்டிகளாயினா. அதியமானை இழந்த தமிழ் உலகம அன்று தவித்ததைக் காட்டினும இன்றைத் தமிழ் உலகம் பன்மடங்கு தவிக்கிறது, திரு வி. க. வை இழந்து. இத்தகைய பெரியாரைப பெற இன்னும் எத்தனை ஆண்டுகள் ஆகுமோ அறியோம். ஆனல், ஒன்றை நினைந்து ஆறுதல் பெறலாம் 'தமிழ்நாட்டில் இன்னும எத்தனையோ தொண்டுகள் எஞ்சி உள்ளனவாகலின், அவற்றைச் செய்து தீர்க்கும்வரை வந்து வந்து பிறப்பேன்' என்று அப் பெருமகன கூறுவதுண்டு. எனவே மீட்டும் திரு. வி. க. நம்மிடையே தோன்றுவார்! அந்நாளை விரைவில் எதிர்பார்ப்போமாக.

---

# தமிழ் முனிவர்

[பண்டிதர் திரு கா. பொ. இரத்தினம் எம். ஏ., பி. ஓ. எல்.]

"என்னுடைய ஆசிரியர் யாழ்ப்பாணத்தவரே; திரு. நா. கதிரைவேற்பிள்ளை அவர்களே எனக்குத் தமிழார்வத்தை ஊட்டி, என்னைத் தமிழ்ப்பணியில் ஈடுபடச்செய்த பேராசிரியர். பாலசுப்பிரமணிய பக்தசன சபையினையும் அவர்களே தொடக்கினார்கள். இதன் முப்பத்தாறாம் ஆண்டுவிழா அண்மையில் நடைபெறும். அதிலே தாங்களும் ஒரு விரிவுரை நிகழ்த்த வேண்டும். யாழ்ப்பாணத்தவர்கள் பேசும் தமிழ் தனிச்சிறப்பு வாய்ந்தது, அவர்களுடைய தமிழுணர்ச்சி தலைசிறந்தது; தூய தமிழ் — செந்தமிழ் — இன்றும் யாழ்ப்பாணத்திலுள்ளது." இவ்வாறு திரு வி. க. பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன்னர்க் கூறினார். சென்னைப் பல்கலைக் கழகத்திலே யான் தமிழாராய்ச்சி செய்து கொண்டு இருந்தபொழுது அவர்களைக் கண்டு உரையாட அவர்கள் இல்லத்துக்குச் சென்றேன். முதற் சந்திப்பின்போது அவர்கள் கூறிய இக்கருத்துரைகள் அவருடைய அன்பின் திறனையும், உள்ளத்து உயர்வையும் புலப்படுத்தின. ஒருமுறை அவர்களுடன் பழகும்வாய்ப்புப் பெற்றவர்கள் சமயம் வாய்க்கும்பொழுதெல்லாம் அவரைக்கண்டு உரையாடி இன்புற விழைவது இயல்பே. யானும் அடிக்கடி அவரைச் சந்தித்தேன்; உரையாடினேன்; உளம் மகிழ்ந்தேன். அக்காலத்திலே அவர் ஒரு தமிழ் முனிவராகவே காட்சியளித்தார். அவரைக் காணும்பொழுதெல்லாம் "ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர்," தமக்கென முயலாநோன்றாள் பிறர்க்கென முயலுநர்" எனும் புறநானூற்றடிகளே என் உள்ளத்திலே தோன்றும்.

சென்றமாதம் நான் சென்னைக்குச் சென்றேன். "தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்களின் பிறந்த நாட் கொண்டாட்டம். அனைவரும் வருக" என்று அழைக்கும் அழைப்புப் பத்திரங்கள் பெரிய எழுத்திற் சென்னை நகரத்தின் மதில்களிலே காட்சியளித்தன. ஆனால் திரு. வி. க. அவர்களோ மரணத்துடன் போராடிய வண்ணம் இருந்தார். மரணப்படுக்கையில் இருந்த காலையிலும் தமிழ்நாடு சிறக்கவேண்டும்; தமிழ்மொழி ஓங்க வேண்டும்; உலகம் வாழவேண்டுமென்றே அவர் விழைந்தார்.

பிறந்து மொழிபயின்று உணர்ச்சி பெற்றவுடன் அவர் தமக்கு உரியதாக்கிக்கொண்ட எண்ணம் "எல்லாரும் இன்புற்றிருக்க

வேண்டும்'' என்பதே. அவருடைய சொல்லும் செயலும் இதனை நிறைவேற்றுதற்கே முயன்றன. இறக்கும்பொழுதும் அவர் உள்ளம் இப்பெரும் நோக்கத்திலேயே படிந்திருந்தது. இப்பொழுது அவர் நம்மைவிட்டுப் பிரிந்துவிட்டார். உள்ளம் கவர்ந்த உத்தமரை அவருடைய நண்பர்களும் அன்பர்களும் இழந்து விட்டனர்; ஒப்பில்லாத ஒரு தமிழ்முனிவரைத் தமிழ்நாடு இழந்து விட்டது; பேரன்பர் ஒருவரை உலகம் இழந்துவிட்டது. அவருடைய ஆருயிர் பேரின்பத்திற் றிளைக்குக.

இக்காலத்திலேயுள்ள மாணவரிடத்திற் குரு பக்தியைக் காணுதல் முயற்கொம்பாகி விட்டது. சென்ற தலைமுறையிலே கல்விகற்றுச் சிறப்படைந்தவர்களிடத்திலேயுள்ள பெருங்குணங் களிலொன்று குரு பக்தியாகும். திரு. வி. க. வின் குருபக்தி தனிச் சிறப்பு வாய்ந்தது. இதனைக்கண்டு வியப்படைந்து "ஆசிரியரும் மாணவரும்'' எனும் கட்டுரை ஒன்றினை எழுதி இலங்கைப் பத்திரிகைகளில் முன்னர் வெளியிட்டுள்ளேன்.

திரு. வி. க. அவர்களைப்போலப் பரந்த கல்வியறிவும் சிறந்த தமிழ்ப்புலமையும் உடையோர் சிலரைத் தமிழகத்திற் காண லாம். ஆனால் அவரைப்போலத் தமிழ்மயமான—தண்ணளி பொருந்திய—ஈரம் நிறைந்த உள்ளம் உடையாரைக் காணுதல் முடியாது. அவருடைய உள்ளம் எப்பொழுதும் உயர்வையே உள்ளியது. அது காந்தீயத்திலும் வள்ளுவத்திலும் மார்க்கீசத்திலும் தோய்ந்து விளங்கியது.

அன்பும் சிவமும் ஒன்றென்று வாய் வேதாந்தம் பேசும் பலர் உளர். இவர்களுடைய உள்ளத்திலே ஆணவம் மண்டி யிட்டுக்கொண்டிருக்கும்; இவர்கள் சாதி குலம் பிறப்பெனுஞ் சுழியுள் அகப்பட்டுத் தடுமாறுவார்கள்; மேலே மிதந்து உண்மை கண்டு ஒளிபெற வழிதெரியாது பிதற்றுவார்கள். இவர்களும் உண்மையினை அறியத்தக்கதாகச் சமரச சன்மார்க்க நெறியினை விளக்கிக்காட்டிய பெருஞ் செயலாளர் திரு. வி. க. அவர்களே.

அன்பு கனிந்து, அருள் சுரந்து, அறம் மலர்ந்த வாழ்க்கையினை அவர்கள் நடாத்தினார்கள். உலகு உய்யவேண்டுமானால் வள்ளு வர் வகுத்த அன்புநெறி எங்கும் பரவவேண்டுமென்று உணர்ந் தார்; உரைத்தார். மறந்தும் பிறன்கேடு சூழாத பேரியல்புக் கும், இன்னாசெய்தார்க்கும் இனியவே செய்யும் அருஞ்செய லுக்கும் அவர் எடுத்துக்காட்டாக மிளிர்ந்தார்.

அவர் தம் உள்ளத்து உயர்வும், தூய்மையும், ஒளியும் அவருடைய பேச்சிலும், எழுத்திலும், செயலிலும் வெளிப்

பட்டன. சிறப்பியல்புகள பலவாய்ந்த விறுவிறுப்பான உரைநடையினைத் தமிழுக்குத் தந்நார்; அருள நலங்கனிந்த அமுதனைய பாடல்களைப் பாடினா; ஒப்புயர்வற்ற நாவேந்தராகவும மிளிர்ந்தார்.

தம நாட்டுமக்கட்கு எந்த எந்தத் துறையில் அன்புத் தொண்டு ஆற்றவேண்டும் என்று அவா கருதினாரோ அநதந்தத் துறையிலெல்லாம தொண்டுசெய்து வெற்றிகண்ட பெரு வீரர் அவா, உணமைத் தொண்டினாலே மககளின் உள்ளஙகளைக் கொள்ளைகொண்ட தலைவா அவா தமிழ்நாட்டிலே அவர் ஈடுபடாத தேசிய இயக்கங்கள் இல்லை என்றே கூறலாம.

அவருடைய ஆராயச்சி சென்ற துறைகளும் அவர் எழுதிய நூல்களும பலவாகும. சிவனடியாா சிறப்புடன் பெண்ணின் பெருமையைப பேசினா, காநதியததுடன் வள்ளுவத்தின் ஒற்றுமை காட்டினார்; கடமையின் இயலபையும் உரிமையின் பெருமையையும விளக்கினா; காதலின சிறப்புடன் துறவின் இயலபையும் நவின்றா; சாதிமதப பூசல்களையுஞ சாததிர கோத்திரச சணடைகளையுந தகர்ததாா. மாணவாக்கும் விருநதளிததார்; தொழிலாளிகளுககும தொண்டாற்றினா; பொதுவுடைமைக்கும புது விளககங் கொடுததாா.

இததகைய பெருஞ செயல்களை எல்லாம் செய்த தமிழ் முனிவா திரு வி க அவாகளைப் போற்றி அவா வகுததுக்காட்டிய வழியினைக கடைபபிடிததலே அன்பர்கள அவருககுச செய்யுங் கைம்மாறாகும் இன்னும, அவருடைய வாழ்க்கை வரலாற்றைச் சிறநத முறையில் எழுதி வெளியிடுதலும பாலசுப்பிரமணிய பகதசன சபையின் முன்றிலில அமைக்கபபடவிருக்கும திரு. வி. க. மண்டபத்தை அழகாக விரைவில் அமைததலும் இன்றியமையாதன.

---

## தமிழ்

தமிழ் என்பதற்கு, 'இனிமை' என்பது பொருள். 'தமிழ் தழீஇய சாயலவர்' எனறும, 'தமிழ்சேர் காஞ்சி' எனறும, புலவா 'இனிமை' எனனும பொருளபடத 'தமிழ்' என்னுஞ் சொலலை ஆணடிருத்தல காணக. பழமை மக்கள் இயற்கையிலூறுந் தமிழையே, பின்னைத தாஙகள் அவ்வியற்கைப் பொருளுக்கிட்ட சொன்மொழிக்கும் வழஙகினர் போலும!

**திரு. வி. க. தமிழ்த் தென்றல்—பக்கம் - சுஎ.**

---

# எழில் உருவம்

[சித்தாந்த கலாநிதி, திரு. ஔவை - சு. துரைசாமி பிள்ளை]

திரு. வி. க. அவர்களின் மறைவு தமிழ்ப் புலமைச் செல்வர் ஒருவரது மறைவாகும். கால நிலையும் மக்கள் மனநிலையும் வாழ்க்கை நிலையும் நன்கறிந்து அவற்றிற்கேற்ப உயரிய கருத்து வழங்கும் அவரது பேச்சும் எழுத்தும் நாட்டில் பெரும்பணி செய்துள்ளன.

தமிழ் இலக்கிய உலகில் நம் திரு. வி. க. சிறு சிறு வாக்கியங்களால் திருந்திய கருத்துக்களை அழுத்தம் திருத்தமாக எழுதும் புதுமுறை எழுத்து நடை கண்டவர். எழுத்து நடையில் திரு வி க. நடையென்ற ஒரு சிறப்பு நடையும் நிலவுகிறது 'மனிதவாழ்க்கையும் காந்தியடிகளும்' 'பெண்ணின் பெருமை,' 'முருகன் அல்லது அழகு' முதலிய நூல்கள் பயிலுந்தோறும் இன்பவொளி வீசி நிற்கின்றன.

அரசியல் உலகில் காங்கிரசில் சேர்ந்து தமிழ்நாட்டுக் காங்கிரசு மாநாடுகளிலும் பொதுமேடைகளிலும் திருந்திய செந்தமிழில் அரசியல் உரிமைக் கருத்துக்களைப் பல்லாயிரம் மக்கள் கூடிப் பரிந்து கேட்குமாறு பேசுவார், திரு வி. க. பேசவருகிறார் என்றால் ஆண்களும் பெண்களுமாக மக்கள் திரண்டு விடுவர்.

சமயவுலகில் திரு. வி. க ஒரு தனித்துறவியாக விளங்கினார். அவர் சமயக்கணமுன் குறுகிய நோக்கங்களும் பொருளற்ற கட்டுப்பாடுகளும் எதிர்நிற்பதில்லை சைவசமயத் திருமுறைகளில் பேரிடம்பெறும் திருத்தொண்டர் புராணத்துக்கு அவர் பொறித்துள்ள முன்னுரையும் கருத்துரையும் அவரது விரிந்த உண்மையறிவை எடுத்துக்காட்டுவனவாகும்.

சமுதாய உலகில் தொழிலாளர் இயக்கம், பெண்ணுரிமை இயக்கம், சமதரும இயக்கம் ஆகியவை திரு வி. க வின் பேராதரவு பெற்றவையாகும். புத்தர், காந்தி, இராமலிங்கர், தாயுமானர் முதலிய பெருமக்கள் வழங்கும் உயரிய கருத்துக்களுக்கும் புதுமுறையில் விளக்கந்தந்து இன்றைய வாழ்வுக்கு ஆக்கமாகும் வகையில் திரு வி க எழுதியுள்ளவை என்றும் யாவரும் கற்றுப் பயன்படும் நிலையில் உள்ளன.

எளிமையில் அருமையும் பணிவில் பெருமையும், வறுமையில் செம்மையும் திரு. வி. க.வின் உருவில் திகழ்ந்து

கின்றன. வெள்ளிய கதராடையுடுத்து நெற்றியிற் சநதன மிலஙக மெலல நடந்துவரும் அவருடைய மேதக்க திரு வுடல மறைநதது. மென்னகை தவழும் முறுவல் மறைந தது மெலலிய தமிழ் ஒழுகும பேச்சிடையே இடதுகை யெழுநது எண்ணததைக் காட்டும திரு வி கவின் எழில் உருவம மறைநதது எலலாம் மறையினும் அவருடைய எழுததும பேசசும எமமுடைய நெஞ்சைவிட்டு மறையா. அவாக்கென அவா நினைவுககென, இனறைய தமிழறிஞர்கள் மண்டபம் நிறுவ முயல்கினறனர் அம்முயறசி இனிது நிறை வெயதுக.

---

# ஏரி நிறைந்தனைய செல்வர்

[திரு. வல்லை, பாலசுபபிரமணியம், சென்னை.]

தமிழநாடு நோற்ற நோன்பின்பயனாகத் திரு. வி. க. தோன் றினா. வையத்துள் வாழவாஙகு வாழ்நதார். நிறைநத புகழு டன மறைநதார் காலம தனது கடமையை ஆறறிவிட்டது. அதுகுறிதது நாம் கவலைபபடவேண்டா

திரு வி க. அவாகளின வாழககையைபபற்றி எவா எது சொலலினும சொல்லுக அவா வாழ்க்கை முழுவெற்றியென்று நான் சொல்லுவேன். அவவாறாயின, அவ வெற்றியின் இரகசி யம என்ன? தமக்கென வாழாது பிறர்க் குரியராய் வாழ்ந் தமைதான். அவர் எலலார்ககும நல்லர். யாருக்கும பகைவர் அல்ல. எளிய வாழவும உயாவுள்ளமுமே அவர்தம் சிறப்பியல்பு கள். எலலாக்கும எளிவந்த காட்சியினர் பிறர் குணஙகளே யனறிக குறறங்கள அவா கண்களுக்குத தோன்றா. ஒவ்வொரு வரும தததமது முனனேற்றத்துக்கு அவரிடமிருந்து ஆலோ சனை பெறக்கூடும கலலைப் பிசைந்து கனியாக்கும் கலைஞர் அவர். மிகச சாமானிய அறிவு படைத்தவர்கூட அவரிட மிருந்து ஓர் ஆககவுரை பெற்று, வாழ்வின் பல துறைகளில் பெரிதும் முன்னேற்ற மடைந்திருக்கின்றனர். தமிழ்நாட்டுத் தலைவாகளில் ஒரு சிலராயினும் ஒல்லுமவகை திரு. வி. க. ஆக முயலவேண்டும்.

---

# நூல்நிலையம் எரிந்தது

[திரு. கி ஆ. பெ. விசுவநாதம், திருச்சி]

திரு. வி. க. மறைவு என்னைத் திடுக்கிடச் செய்தது. மறைவுக்கு முதல்நாள் என் இறுதி வணக்கத்தை அவர்கட்கு நேரில் அளித்தது எனக்கு இப்பொழுது ஆறுதலளிக்கிறது.

திரு. வி. க. பரம்பரைப் புலவர் வரிசையில் இறுதியாகத் தலைமைபெற்று விளங்கியவர். அவரை ஒரு உயர்ந்த நூல்நிலையமெனக் கூறலாம். அது இன்று எரிந்தது. நாம்தான் எரித்தோம். தமிழ்ப்பகையை ஒழிக்காமல் தமிழனை ஒழித்துவிட்டோம். தமிழ்மொழியை வளர்க்காமல் தமிழ் எரித்து வாழ்கின்றோம்.

திரு. வி. க. ஒரு குணக்குன்று. புலவர் தலைவன். தொழிலாளர் தோழன். அரசியல் அறிஞன். சமயத்தொண்டன். பத்திரிகை ஆசிரியர். சிறந்த பேச்சாளி. சீர்திருத்தவாதி. நடுநிலை பிறழாத நல்லோன்.

இத்தனை துறையிலும் தன்னலங்கருதாது தொண்டு செய்துவந்த தமிழ்நாட்டுப் பெரியோன்.

மறைவுக்குச் சில நாட்கள் உள்ளபோது அவர் வறுமையால் வாடுகிறார் என்ற செய்தி பத்திரிகைகளில் வெளிவந்தது. அதனைக்கண்ட மதுரைத் தமிழ்வள்ளல் -கருமுத்து- தியாகராசச் செட்டியார் அவர்கள் ரூபாய் இருநூற்றைம்பது அவருக்கு அனுப்பி வைத்தார், இது செட்டியார் அவர்களின் உயர்ந்த பண்பை விளக்கியது. திரு. வி. க. அவர்கள் "என் வாழ்நாளில் இதுவரை எவரிடத்தும் எத்தொகையும் பெற்றதில்லை. இது முதலாவதாக இருக்க வேண்டாமே. மன்னிக்கவும்," என்று எழுதிய கடிதத்தோடு அப்பொருளைச் செட்டியாரவர்கட்கே திருப்பிஅனுப்பி வைத்தார்.

இது திரு. வி. க. அவர்களின் உயர்ந்த பண்பைக் காட்டுகிறது. இவை இரண்டையும் எண்ணும்போது "கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று, அதனெதிர் கொள்ளேனென்றல் அதனினும் உயர்ந்தன்றே," என்ற புறநானூற்றுப் பாடலின் இரண்டடிகள் நம் நினைவுக்கு வருகின்றன.

இந்தத் திரு. வி. க. அவர்களின் உயர்ந்த பண்பு சிறந்த தமிழ்ப்பண்பும், தமிழர் பண்புமாகும். அதுமட்டுமல்ல, இன்

றைய வயிற்றுப்பிழைப்பே தொழிலாகக்கொண்ட அரசியல் வாதிகட்கு இது ஒரு சவுக்கடியுமாகும்.

திரு. வி. க. ஒரு படிக்கும் நூல்நிலையமல்ல. பேசுகின்ற நூல்நிலையமாகத் தமிழகத்தில் உலவி வந்தது. எத்தனைபேர் அதனைப் பயன்படுத்திக்கொண்டவர்கள்? என்றால், விரல்விட்டு எண்ணக்கூடிய தொகையாகவே இருக்கும். இறந்த உடல் சுடுகாடு செல்லும்போது உடன்சென்று திரும்பிய உடல்களின் எண்ணிக்கை பல்லாயிரம் இருக்கும். இதனை ஒப்பிட்டுப் பார்க்கும்போது நமக்கு இரண்டே இரண்டுதான் தெரியுமென்று தோன்றுகிறது. ஒன்று, அறிஞர்கள் வாழ்ந்த காலத்தில் அவர்களை வெறுத்தது வாழ்வது, மற்றொன்று இறந்த பிறகு அனுதாபங்கூறி அழுதுகொண்டிருப்பது இது தமிழ்நாட்டின் தியூழேயாகும்.

தமிழறிஞர்கள், ஒருவர்பின் ஒருவராக மறைந்துகொண்டும், தமிழ்மொழி, தமிழ்ப்பகைவர்கள் ஒருவர்பின் ஒருவரால் அழிக்கப்பட்டும், தமிழ்நாட்டைத் தமிழ்நாடு என்று கூற வெட்கப்பட்டு "எஞ்சிய சென்னை மாகாணம்," என்று கூறுகிற மக்களால் ஆளப்பட்டும் வருகிற தமிழகம், எப்படி வாழும்? வாழ்ந்துதான் ஆகவேண்டும். "வாழும்," என்பது திரு. வி. க. அவர்களின் முழு நம்பிக்கை.

தமிழகமும், தமிழறிஞர்களும், தமிழ்மக்களும் ஒன்றுபட வேண்டும்; இன்றேல் தமிழ்நாட்டுக்கும், மொழிக்கும், மக்களுக்கும் வாழ்வில்லை "வாழவைப்போம், வாழ்வோம்" என்ற உறுதிப்பாடு ஒன்றையாவது திரு. வி. க அவர்களின் உடலை எரித்துவிட்ட இன்றேனும் எடுத்துக் கொள்வோமாக!

---

## முருகு

முருகெனுஞ் சொல்வழக்குக் காலத்தைக் காணட்லே அரிதாயிருக்கிறது. அங்ஙனமாக, அச்சொற்பொருள் காலத்தை ஆராயப் புகுவது அறியாமையாகவே முடியும். இவ்வாராய்ச்சியில் தலைப்பட வேண்டுவதில்லை. முருகெனும் செம்பொருள் காலஎல்லைக்கு உட்பட்டதன்று என்று கொள்வதே அறிவுடைமை. முருகன் காலங்கடந்த கடவுள்; இயற்கை என்று உண்டோ, அன்றுமுதல் முருகனும் உளன். இயற்கை அநாதி; முருகனும் அநாதி.

திரு. வி. க. முருகன் அல்லது அழகு—பக்கம்-உரு.

---

# நாகரிகப் பண்பாளர்

[வித்துவான், திரு. அ. மு. பரமசிவானந்தம் எம். ஏ.]

தமிழர்தம் நாகரிகப் பண்புக்கு மாறுவகையில் நம் கண் வாழ்ந்தவர் தமிழ்ப்பெரியார் திரு வி. க. அவர்கள். வாழும் நாள்வரை தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராகவே இருந் தார் செந்தண்மைபூண்ட அந்தணராகவே திகழ்ந்தார். சிலம் தாங்கிய செமமலாக நின்றார். தமக்கென ஒன்றுமின்றித் தமிழர்வாழ்வே தம்வாழ்வாக—தமிழ்நாட்டு ஏழைகள் வாழ்வே தம் வாழ்வாக—வாழ்ந்த பெரியார் அவர்.

தம உடல் கெடினும் உடலுக்கு ஊறுசெய்வதாயினும் உற்றவா கொடுக்கும எப்பண்டத்தையும் உவந்து ஏற்று உண்டு அவர்களை மகிழ்வித்து 'பெயக்கண்டும் நஞ்சுண்டு அமைவர்' என்ற சொல்லும் மெய்யாம் என்ற வகையில் நாகரிகப் பண்பில் வாழ்நதவர் அவர். ஏழையென்றும் அடிமையென்றும் எவனும் இல்லாது செய்ய முயன்றவர் அவர். கட்சிவேறுபாடுகளுக் கெல்லாம் அப்பால் நின்று தமிழ்—தமிழன்—தமிழ்நாடு—தமிழர்பண்பாடு என்றே எண்ணி, சொல்லி வாழ்ந்துவந்தவர் அவர். செலவத்தையும் பட்டத்தையும் பதவியையும் வேண்டா மென ஒதுக்கி, ஏழை பாட்டாளிமக்களோடு ஏழைபங்காள ராய் வாழ்ந்த ஏந்தல் அவர். ஆண்களோடு பெண்களும் சரி நிகர் சமானமாக வாழ வழிவகுத்துப் பெண்ணினத்தைப் பெரு மைப்படுத்திய தாயுள்ளம் படைத்த தயவாளர் அவர். சமய வெறிகளையும சழக்கர் நெறிகளையும் போக்கிச் சமரசத் திருக் கோயிலுக்கு வழிகாட்டிய வள்ளல் அவர். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்பதை வாழ்விடை வாழ்ந்து காட்டி எல்லோரையும் உற்றவராக ஓம்பியவர் அவர்.

இத்தகைய அரும் பண்பாளர்—எல்லா வேறுபாடுகளையும் தாண்டிய தன்மையார் சென்ற 17-9-53ல் மறைந்தார். அவர் பிரிவு தமிழ்நாட்டுக்கு ஈடுசெய்யமுடியாத ஒன்று. தமிழர் எல்லோரும் எல்லா வேறுபாட்டையும் மறநது அவருக்கு அன்று அஞ்சலி செய்தனர். அவர் பருஉடல் மறைந்தது. நுண்ணுடல் - என்றும் இம்மண்ணில் நிலவி அன்னை தமிழை ஓம்பும் என்பது உறுதி! •

# தமிழகத்தின் பெருந்தகை

[திரு. கா அப்பாதுரை எம் ஏ., எல் டி.]

அறிஞர்களுக்கு, கலைஞர்களுக்கு, மக்களை இயக்கும் தலைவர்களுக்குத் தமிழகத்தில் என்றும் பஞ்சம நேர்ந்ததில்லை. ஆயினும பொதுநீங்கு சிறப்புடைய அறிஞராகத் திரு வி. க. இருந்ததுபோல் வேறு எவரும இருந்ததில்லை அவர் தமிழகத்தின் அறிஞர் மட்டுமல்ல. அவர் சிறப்பு வகையிலே 'தமிழக அறிஞர்' என்று தனிப்படக் குறிக்கத்தக்கவர். தனித்தனி அறிஞர்கள் அறிவுகளையெல்லாம் ஒன்றுகூட்டி இணைத்துத் தமிழக அறிவாக்கும பேரறிவுப்பண்பு அவரிடம இருந்தது.

அறிஞர்கள் பெரும்பாலும் அறிவு என்னும சிறைக்கூடத்துக்குள்ளேதான் இருப்பர். மக்களிடையே வந்து உலவமாட்டார்கள். தமிழ்ப்புலவரோ புலவருலகம என்ற சீரிய அரங்கில் தான் ஊடாடுவர். அம்பலம வந்து அதைத் தம் புகழ் ஆடரங்காக்குவதில்லை. திரு. வி. கலியாணசுந்தரனார் அறிஞருள் பேரறிஞர். ஆனால் அவர் மக்களிடையே உலவ, தம் அறிவை அவர்களிடையே உலவவிட, பிற அறிஞர் அறிவுக்கருத்துக்களைத் தம அறிவால் வகுத்தியக்கி அவர்களுக்குத் தெளிவூட்டத் தயங்காத சீரிய அறிஞராயிருந்தார் தமிழ்ப்புலவர்களிடையே அவர் ஒரு தமிழ்ப்புலவர். ஆனால் அவர் தமிழ் மாணவர்களுக்கு மட்டும ஆசிரியராயிராமல், அவர் ஆசிரியர் மறைமலையடிகளைப் போலவே ஆசிரியர்களுக்கும ஆசிரியராய் இருந்தார். அவர் தமிழ் பழைய நூல்களைமட்டும் சுற்றிவராமல் புது நூல்களாக்கிற்று நூல் கடந்து பத்திரிகை உலகை அளாவி அவ்வுலகில் தமிழர் தமிழ் உலவும்படி செய்தது. அத்துடன் தமிழர் தமிழ் தமிழகத் தொழிலாளரிடையேயும் ஊடாடி, அவர்களைத் தமிழ்த் தொழிலாளர் ஆக்கவும் பெரிதும் பயன்பட்டது. அறிஞர், தமிழ்ப்புலவர் ஆகிய இரு திறத்தினரிலும மக்கள் அரசியல், சமுதாய, பொருளியல் வாழ்விலும் தொழிலாளர் வாழ்விலும் ஈடுபட்ட முதல் அறிஞர், புலவர் அவரே. அத்துறைகளில் இந்நாள் வரை முதன்மையுடைய அறிஞரும் புலவரும் அவரே.

செப்டம்பர் 17—தமிழகம் அவரை இழந்துபெற்ற வடு நெடுநாள் நீங்காதிருக்கும் வடு ஆகும. ஏற்கெனவே மறைமலையடிகள் நீங்கியதனால், கிட்டத்தட்ட என்றும் நிரம்புறுமோ என்று நினைக்கத்தக்க பெருவடு தமிழன்னையின் புகழுடலில் ஏற்பட்டுள்ளது. அந்த வடு இப்போது மிக ஆழ்ந்துவிட்டது.

தமிழின் சிறப்புக்குரிய ஒரு மறைமலை, தமிழர் சிறப்புக்குரிய ஒரு திரு. வி. க இவ்விரண்டு பெரியார்களின் இடத்தினை ஓரளவு நிரப்பவல்ல மறைமலை மரபையும திரு வி. க. மரபையும் உண்டுபண்ணிப்பேணும பெரும்பொறுப்பு தமிழகத்தின் மீது சார்ந்துள்ளது.

திரு. வி. க. வுக்குத் தமிழர் நினைவுச் சின்னங்கள், நினைவு நிலையங்கள், அமைப்பது மிகமிக அவசியமே. ஆனல் அதனினும் சால அவா மரபு பெருக்குதல் இன்றியமையாதது. சமய வேறுபாடுகளால் முன்பு தமிழ் அடைந்த இன்னல் பெரிது இன்று கட்சி வேறுபாடுகளாலும் மாற்சரியங்களாலும் தமிழகம் அடையும் இன்னலகள அவற்றிலும் குறைந்தவையல்ல. தாம் கொண்ட கொள்கைக்கு மாறுபடாமல, தம கொள்கைக்கேற்ற கட்சிகளும் அதற்கு அணுக்கமுடைய கட்சிகளுக்கும் நிலையங்களுக்கும் உழைத்துக்கொண்டே, கட்சி கடந்த நாட்டு நலன், நாடு கடந்த மொழிநலன், மக்கள் நலன, இத்தனைக்கும் அடிப்படை வேர் ஆன தொழிலாளர் நலன ஆகியவற்றில் என்றும திரு வி கலியாணசுந்தனர் வழுவாத பேருயிா நோக்கம உடையவராயிருந்தார். அப பண்பைத தமிழர்பேணும முறையில் திரு. வி க. பண்பும திரு. வி க மரபும நீடு நிலவவேணடும்.

---

## எச்சரிக்கை

*கொலை களவு கள் காமம் பொய முதலிய பாவங்கள் பரவுதற்குரிய வினைகள் பெருமிதமாக இககால உலகில் நிகழ்ந்து வருகின்றன. அப்பாவங்களின வளர்ச்சிககு இடந்தருவது இயற்கைவளர்ச்சியைத தகைவதாகும் ஆதலால் மாணுக்கர் சீலத்தை வாழ்வில கடைப்பிடித தொழுகுவாராக... .. ..*

*காப்பிககுடி, சுருட்டு பீடி சிகரெட் குடி முதலியன, வாழ்விற்கு இன்றியமையாதன வல்ல இவைகளால் உலகம இவை கட்குப் பாழாகிறது. இப்பாழுககு இரையாகா திருக்குமாறு மாணுககரை எசசரிக்கை செயகிறேன. இயற்கைககு மாறுபட்ட வினைகளில் தலைப்படாது, இயற்கையோடியைந்த வினைகளில் தலைப்படுதல் நலம என்று சுருஙகச சொலகிறேன.*

**திரு. வி. க. சீர்திருத்தம் அல்லது இளமை விருந்து—பக்கம்-கய௦அ.**

# அன்பும் அறனும்

[டாக்டர் திரு. அ. சிதம்பரநாதச் செட்டியார், எம். ஏ.]

திரு வி. க. என்றவுடன் திரு. வி. கலியாணசுந்தர முதலியாருடைய அன்பும் அறமுமே என் கண்முன் நிற்பன. அவர் மன்பதையிடத்து அன்பு பூண்டொழுகிய அந்தணர்; அறநெறி வழுவாது வாழவேண்டும் என்னும் எண்ணத்துடன் தொண்டாற்றிய தலைவர். பிறர்க்கு இன்னாமை செய்யாது பிறர் நலம் பேணிய பெருமை அவருடையது. குழந்தைமுதல் முதியவர் வரை எல்லாரையும் அன்பினால் அணைத்து ஆர்வத்தினால் தழுவி அருளுள்ளத்தொடு பிணித்துக்கொண்ட பெற்றி அவருடையது.

திரு. வி. க. அல்லற்படும் மக்கட் கூட்டத்துக்காக ஓயாது உழைத்தவர்; சமூக வாழ்க்கையில் உயர்வு தாழ்வினை நீக்குதற்கு உறுதி செய்துகொண்டவர்; கடவுள் முன்னிலையில் அனைவரும் ஓரினம் ஒரு கூட்டம் என்பதை அடிக்கடி பல மேடைகளிலும் பத்திரிகைகளிலும் எடுத்து இயம்பி வந்தவர்; எந்நெறியினின்றும் முழுமுதற் கடவுளை வழிபடக்கூடும் என்றும், குறிப்பிட்ட ஒரு நெறி துணையாக வழிபடுவோரே உய்தியடைவர் என்பது உண்மையாகாது என்றும் அடிக்கடி சொல்லி வந்தவர், புறவேடத்தினும் அகநிலையே நன்றாக இருத்தல் வேண்டும் என்பதை எஞ்ஞான்றும் வற்புறுத்தி வந்தவர்.

> "புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
> வாய்மையாற் காணப் படும்"

என்ற திருவள்ளுவர் மொழிக்குக் காட்டாக அமைந்த இப் பெரியார்,

> "வாய்மையின் வழாஅது மன்னுயிர் ஓம்புநர்க்கு
> யாவதும் உண்டோ எய்தா அரும்பொருள்"

என்ற சிலப்பதிகார அடிகளைப் பன்முறை நினைப்பதுண்டு. ஆயினும், அழிதன் மாலைத்தாகிய பொருட்செல்வத்திற் சிந்தை வைத்திலராகலின், அதனை அவர் நிரம்ப எய்தினால்லர். எய்திய செல்வத்தையும் பிறர் வஞ்சித்து எடுத்துக்கொண்டாலும், அவரிடத்து அதுகாரணமாக வெகுண்டவரும் அல்லர். அவ்வாறு, தம் சுற்றத்தாரோ பிறரோ தம்முடைய பொருளை அவாவிக்கொண்டனர் எனின், அந்த அளவுக்குத் தமக்கு அமைந்த துறவு நல்லதாயிற்றே என்று நினைக்கக்கூடிய பேருளளம் படைத்த முனிவராய் வாழ்ந்தார் முதலியார்.

"யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின அதனின் இலன்"

என்ற திருக்குறளைக் கற்றுத் தேர்ந்ததோடன்றி அவ்வழி யொழுகிய விழுபபம அப் பெரியாருடையதாயிறறு.

இயற்கையை வழிபடுவதே இறைவனை வழிபடுவதாகும் என்ற உண்மையையும, அழகுடைய பொருள்களிலே ஆண்ட வன் அமாநதிருககிறான் எனற உண்மையையும் அழகுற இனிய தெள்ளிய தீநதமிழிலே எடுததது எடுதததது இயமபிவநதாா திரு. வி க. அவருடைய சமரச மனப்பான்மை நாட்டிற்கு இக் காலத்தில அதிகமாக வேண்டபபடுவது சமயம காரணமாக, மதங காரணமாக மக்கள தமமுள்ளே மாறுபட்டுப் பூசலும் கலாமும் விளைததுககொண்டு இகலி அழிநதொழிநது போவ தைதத தவிாகக அவர் பாடுபட்டுளளாா.

தம் தாய்மொழியாகிய தமிழிடதது அவருக்கு மட்டிலாக் காதல் உண்டு தமிழிலே மாணவரும் பிறரும் நன்றாக எழுது தற்கும் பேசுதற்கும் அடிகோலியவா அவர் என்று உரைககின், அவ்வுரை புனைநதுரை ஆகாது. "தேசபகதன்", "நவசகதி" முதலிய பததிரிகைகள வாயிலாகவும், கணககிலடங்காப் பல வேறு விரிவுரைகள் வாயிலாகவும நாடெங்கணும தமிழ் பரப பிய அப பெரியாருக்குத தமிழுலகு பெரிதும கடபபாடுடையது. "தமிழ்த் தென்றல", "முருகன் அலலது அழகு", "பெணணின பெருமை", "உளளொளி" முதலிய அவருடைய நூல்கள குறிப்பிடததககன. நலல தமிழநடை பயில விரும்பும தமிழ் மக்கள் இவற்றை வாங்கிப் படிததுப பழகிக்கொளளுதல நலல தொன்றாகும,

தமிழ்மொழியின் ஆக்கததிற்காக உழைத்தவரும், அதற்கு ஊறு செயயும் சூழ்ச்சிகளைத தகாத்தவரும ஆகிய திரு வி. க. வை மீண்டும என்று காணபேம எனத தமிழுலகு ஏங்குகிறது. அவா மறைநதார் ஆயினும, அவருடைய உணாசசிகள ஒடிநத உளளஙகளுககு ஊககம அளிககும எனவே நம்புகின்றேன்.

---

# செந்தண்மை பூண்ட அந்தணர்

[திரு. ஆ. அருள்தங்கையா]

தமிழ்ப்பெரியார் திரு. வி. க. வின் மறைவு என்னைத் துன்பக்கடலில் ஆழ்த்திவிட்டது. திரு. வி. க. வை, நான் முதன் முதல் கண்டதும் செந்தமிழ்த்தேன் உண்டதும் 1924-இல் தூத்துக்குடியில். 1936-இல் நான் சென்னைக்கு வந்தேன். நான் வந்த அடுத்த மாதமே அப்பெரியார் நட்பு எனக்குக் கிடைத்தது. அதனைப் பெறற்கரும் பேறென நான் கருதுகிறேன்.

திரு. வி. க. பத்தாண்டுகட்கு முன் பெரிய மாணவர் கூட்டம் ஒன்றில் "திரு. வி. க. மாண்புமிக்க அந்தணர்" என்று நான் சொன்னேன். "யான் இன்னும் அந்தண்மை எய்தவில்லை, அந்தண்மை எய்தவேண்டுமென்பதே என் குறிக்கோள்" என்று அவர் கூறினார். "தாங்கள் அந்தணர் அல்லராயின், அந்தணரும் உளரோ" என்று நான் சொன்னேன். திரு. வி. க. செந்தண்மை பூண்டொழுகிய அந்தணர் என்பது அவரோடு பழகிய அனைவருக்கும் தெரியும்.

## முற்றத் துறந்த முனிவர்

அவர் துறவுக்கோலம் பூண்டவர் அல்லர். அவர் கள்ளத் துறவைக் கடிந்தவர், உள்ளத் துறவால் உள்ளொளி கண்டவர். அவர் பலவகைத் தொண்டு செய்தவர்; ஆயினும் எவ்வகைப் பதவியையும் நாடாதவர். அவா என்பதனை அறவே அறுத்த பெரியார் அவர். "பொருட் செல்வத்தையாதல் அஃது இன்மை குறித்து வருந்தும் உள்ளத்தையாதல் இறைவன் எனக்கு வழங்கவில்லை" என்று அவர் கூறியிருக்கிறார். ஓடும் செம்பொனும் ஒன்றென நோக்கியவர் அவர். அவர் கேடும் ஆக்கமும் கெட்ட திருவினர். அவர் முற்றத் துறந்த முனிவர். உள்ளத்தின் அமைதி குலைந்து அவரிடம் செல்வோர் உள்ளொளி பெற்றுத் திரும்புவர்.

## செந்தமிழுக்குச் சிறப்பளித்த செம்மல்

தேனினும் செந்தமிழ் இனிப்பதென்பதை அவர் தமது பேச்சாலும் எழுத்தாலும் காட்டிவிட்டார். இனிமை பயக்கும் இலக்கிய நடையில் அவர் பேசினார், எழுதினார். எப்பொருளையும் இனிய தமிழில் வன்மையாகச் சொல்லலாம் என்பதைக் காட்டியவர் அவர்.

கலைஞர் கால்டுவெல் "தமிழ் ஒன்றே இந்திய மொழிகளுள் தனித்தியங்கும் ஆற்றல் வாய்ந்தது" என்றார். மாண்புமிக்க மறைமலையடிகள் இன்பமூட்டும் தனித்தமிழில் நூல்கள் செய்து தமிழின் தனித்தியங்கும் ஆற்றலைத் திறமையாய்க் காட்டினார். திரு வி க இலக்கியம், சமயம் இவைபற்றிய கூட்டங்களில் மட்டுமன்று, அரசியல் பேரவையிலும், தொழிலாளர் கூட்டத்திலும், தோதல் கூட்டங்களிலும் ஆற்றல் விளங்கச் செந்தமிழில் பேசி மக்கள்மனத்தைக் கவர்ந்தார 'தேசபக்தன்' நாள்இதழிலும், 'நவசக்தி' கிழமைஇதழிலும் செந்தமிழே எழுதினார். அவர் பல்வகைப் பொருள்கள் பற்றியும் நூல்கள் எழுதி, கால்டுவெலின் கூற்று உண்மை என்பதைக் காட்டிவிட்டார்.

மேனாட்டு அறிஞர் வின்ஸ்லோ "இக்காலத்து மொழிகளுள் சொல்லாற்றலில ஜெர்மன் மொழியையும் ஆங்கிலத்தையுமே தமிழுக்கு இணையாகக் கொள்ளலாம" என்று எழுதியிருக்கிறார் திரு வி க. காலத்தில அவர் வாழ்ந்திருந்தால், "அவ்விரு மொழிகளுமே தமிழுக்கு இணையாகா, அவற்றினும வன்மை மிக்கது தமிழ்" என்று சொல்லியிருப்பார்

திரு. வி. க தமிழ், வன்மைமிக்க தமிழ், இனிமை கொழிக்கும தமிழ், பழமையும் புதுமையும் கலந்த தமிழ், செந்தமிழுக்குச் சிறப்பளித்த செம்மல் அவர் அவர் பேசிய தமிழ் வாழ்தல் வேண்டும்; அவர் எழுதிய தமிழ் வளர்தல் வேண்டும். திரு. வி. க. புகழ் ஓங்குக.

---

## முறையீடு

குறையுடையேன் கோதுடையேன்
குணமில்லா நடையுடையேன்
கறையுடையேன் கரவுடையேன்
கருணையில்லாக் கருத்துடையேன்
சிறையுடையேன் சினமுடையேன்
சீரில்லா நெறியுடையேன்
இறையவனே கடையேறும
இனியவழி காட்டாயோ.

**திரு. வி. க. பொதுமை வேட்டல்—பக்கம் - கூஙு.**

# அருமைச் சகோதரர்

[திருவாட்டியார் பண்டிதை. எஸ். கிருஷ்ணவேணி யம்மையார்]

உலகில் மக்கள் பிறத்தலும் இறத்தலும இயற்கையே யாயினும், சில அறிஞர்களின பிரிவு, எவராலும் ஈடுசெய்ய இய லாத இழப்பை உண்டாக்கிவிடுகிறது. இதனால், உலகம் பெரி தும வருநதுகிறது இப் பேரறிஞர்களுள் நம அருமைச் சகோ தரர்—திரு வி கலியாணசுநதர முதலியார் அவாகளும் ஒருவ ராவா. சிலலாண்டுகளாய் இவர்தம கண்ணொளி மழுங்கியது; உடல்வன்மை குன்றியது ஆயினும், இவர்உளத்தின் உரமோ, அறிவின ஆறறலோ, நினைவின நிலையோ சிறிதும் குறைநதில. அவ்வமயம் இவர் ஆக்கிததந்த சில அரிய நூலகளே இதறகுச் சான்று பகருகின்றன. 'இமமுறையில் அறிஞர் எந் நிலையிலும் பயன்படத் தக்கவரே', என அறிகின்றோம்.

இப பெரியார் எளிய வாழ்க்கையும் உயரிய நோக்கமும் உடையவர்; தமிழ்த் தலைவர்; தமிழ்நாட்டுத் தந்தையார்; அறத்துறநத முனிவர்; ஆசைப்பேயை அகற்றிய அறிஞர்; வீரப் பேச்சாளர், அழகிய எழுத்தாளா; பிறா நலத்திற் கெனவே உழைத்த பெறறியர்; பிறர் குற்றஙகாணுப பெருந் தகையா; உண்மையை அஞசாதுரைக்கும உத்தமா, ஒழுக் கத்தை உயிரினும ஓமபியவர். இஙஙனமே சகோதரரின் குண நலங்களை எழுதிசசெல்லின், அவற்றின் முடிவு காணுதல் அருமையினு மருமை என்பது யாவரும் அறிந்ததே.

இச் சீரியர் உலகிற்குப் புரிந்த நலங்கள் பலப்பல. இவற் றுள் இவர் நூல்களினுல் செய்த நன்மை, என்றும் அழியாததும் உலகை உய்விப்பதுமாகும். இவா ஆக்கித்தந்த நூலகள் ஏறக் குறைய ஐமபதிருக்கலாம். இவற்றுள் 'இது குறைவுடையது, இது நிறைவுடையது' எனச் செப்புதற் கியலாதமுறையில், யாவும் உயரிய பொருள்களையே தம்முள்கொண்டு, எக்காலத் தவர்க்கும், எந் நாட்டினர்க்கும் பயன்படும் தன்மையில் ஒளிர் வது பெரிதும் போற்றத்தக்கதாகும்.

நம திருவள்ளுவர் போன்ற தெய்வப்புலவர்க்குப் பின்பு, மங்கையரின் உண்மைப் பண்புகளை உய்த்துணர்ந்து உரைதத பெருமை—திரு. வி. க.—அவர்களையே சார்ந்ததாகும். ஆயி னும, இங்கு இன்னென்று புகலாமல் செல்ல மனமெழுந்திலது. "பெண்ணின் பெருமை" என்னும் அந் நூலில், அடக்கம், தியா

கம், கற்பு, பொறுமை முதலிய பெண்மைப் பண்புகள் வாய்ந்து, செம்மை நெறியைக கடைபபிடிததொழுகும் பெண் இரத்தினங் களைப் பெரிதும போற்றுகின்றனர் எனபது உண்மையேயாயி னும், இப பண்புகளை நழுவவிட்டு, வெறும பெண்ணுருவததை மட்டும தாஙகிநிறகும போலிமகளிரை இவா கடியாமலில்லை; அவர்கள் அலகை இனததைச சாாநதவர் என்பதைச சொல்லா மல் சொல்கிறா ஆதலின, இவ வுயரியநூல, மாண்புடைய மகளிரை ஊககுதறகும, அஃதறறவரைச் செமமைப படுத்தற் கும் எழுந்த ஒரு திறவுகோல் என்பதை மககள மறநதுவிடுதல் கூடாது இச சானறோாக்குப பெணணுலகம செயயும கைம மாறுயாதோ!

ஏறக்குறைய நாறபது ஆணடுகளாக இச் சீரியரைபபற்றி யான் அறிநதுளளேன. காலம நோ்நதுழி, இவரிடம அரிய பொருளகளைக் கேடகும வாயபபும எனககுக் கிடைததிருநதது. இவர், தம வாழ்க்கைக்குறிபபு நூலில, ஒனறும தெரியாத எனனை, "என்னுடன பிறநது வளாநத சகோதரிமார் மூவர்; இபபொழுது நாலவராயினா" எனப பாராட்டியிருக்கும இவர் சில குணததை என்னெனறியமபுவது! யான முதல்முதலில் எழுகிய "கோதையார்" என்னும சிறுநூலை இவா நோககி, என்னை ஊக்கவிலலையேல், இபபோது எழுதியுளள சில நூல் களையும வெளியிடும மனததிட்பம எனக குண்டாயிராது என்பது உண்மை. ஆதலின, இம் முதியோருககு என் நன்றி யைச செலுததக் கடமைபபட்டுளளேன

சகோதரா திரு. வி க வின் ஆன்மா இறையடியை அடைநது அமைதியுறுவதாக அவா குடும்பததினருக்கு என வருததத் தைத் தெரிவிததுக்கொளளுகிறேன.

---

## உள்ளம்

எண்ணுவது எது? உள்ளம் உள்ளம் தானே எணணுது. அதற்குத் துணைக்கருவி வேணடும துணைககருவி எது? கரணம். உளளம கரணததுணை கொணடே பொருளை எணணுவதாகிறது. கரணத்துக்கு ஆதாரமாக மறறககருவிகள் நிற்கினறன. ஆகவே, உள்ளம் ஒன்றை எண்ணுதறகுக கருவி கரணததுணை வேணடி நிற்கிறதென்க

உள்ளம் பொறிபுலன்களின் தொடர்புகொண்டே காணடல் கேட்டல் முதலிய செயல்களை ஆற்றுகிறது.

திரு வி. க. உள்ளொளி—பக்கம் - கூஎ.

---

# தந்நலமற்ற தமிழ்த்தொண்டர்

[மகாமகோபாத்தியாய பண்டிதமணி. திரு. மு. கதிரேசச் செட்டியார்]

பல்லாண்டு தமிழுக்கு உழைத்து அண்மையில் சிவபதம் அடைந்த திரு. வி. க. அவர்களைப் பல ஆண்டுகளுக்கு முன் தூத்துக்குடி சைவசித்தாந்த சபையின் ஆண்டுவிழாவில் சிவஞானபோதத்தைப்பற்றிச் சொற்பொழிவு செய்யுங்கால் முதலிற்கண்டதுண்டு. அவர்களுக்குச் சிறந்த தமிழ்இலக்கிய அறிவும் சைவசித்தாந்த நூற்பயிற்சியும், உலகியல் அனுபவமும் உண்டு. படிப்பவர் கேட்பவர்களின் கருத்தைத் தம் வயப்படுத்தும் எழுத்து நடையும், பேச்சுவன்மையும் உடையவர்கள். சமயநோக்கத்தில் சமரசக் கருத்துடையவராயினும் சைவப்பற்று சிறப்பாக இவர்களிடத்தில் இருந்தது. யாரோடும் இகலின்றி அன்போடு பழகும் குணமுடையவர். தம் கல்வியின் பயனாகத் தமிழ்நாட்டு ஏழைகளாகிய தொழிலாளர் நலங்களைப் பாதுகாப்பதில் இடையறாது உழைத்து வந்தார். அதனால் தமிழுலகம் எய்திய பயன் மிகவாகும். இந்த நூற்றாண்டில் பலவகையாலும் தமிழ்நாட்டிற்கு அருந்தொண்டு ஆற்றியவர்களுள் இவர் தலைசிறந்தவர் என்னலாம். தம் தொண்டின் குறிக்கோள் ஏழைமக்கள் நலங்குறித்ததேயன்றித் தந்நலம் குறித்ததன்று. தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர் என்று இவரைக் கூறுவது முற்றிலும் உண்மையாகும். நல்லொழுக்கமும் குணங்களும் நிரம்பப்பெற்ற திரு. வி. க. அவர்கள், தம் அரிய கருத்துக்களைப் புதிய முறையில் தமிழ்நிலத்தார்க்கு உதவியாகும்படி உரைநடையில் பல நூல்கள் எழுதி வெளியிட்டிருக்கிறார்கள். தம் வாழ்க்கையில் ஆரவாரம் சிறிதுமின்றி எளிய முறையில் ஒழுகிக் காட்டினவர். நாட்டுநலமும், மொழிநலமும் ஆகிய இவ்விரண்டும் தம் கண்ணெனப் போற்றிப் பேணி வந்தவர். இத்தகைய அரிய பெரிய குணஞ்செயல்களையுடைய திரு. வி. க. அவர்கள் மறைந்தது தமிழர்களுக்கு ஈடு செய்ய முடியாத குறையேயாகும். என் செயலாம்! இறைசெயலை எண்ணி ஆறுதலடைவதேயாம். அவர்கள் நல்லுயிர் அழிவில் இன்பத்தில் ஈடுபட்டு இன்புறுகவென வேண்டுவோமாக.

---

## எங்கள் தந்தை

[திருவாட்டியார் வ பா தாமரைக்கண்ணியம்மையார், சென்னை.]

தமிழில் 'பெண்ணின் பெருமை' என்னும் நூல் இருப்பது போல் உலகமொழிகளில் வேறு எதிலாகிலும இருக்கிறதா என எவ்வளவோ ஆராய்நது பாாததேன். தெரிநதவர்களையும் கேட்டுப் பார்த்தேன ஒருவராவது உணடு எனறு சொல்ல வில்லை. வள்ளுவர் பெருநதகைகூட, 'பெணணிற் பெருந் தக்க யாவுள?' எனக கேள்வி கேட்டு, பெண்ணின பெருமை கூற வந்தவர்போல் நடிதது, பெணணின்மீது எவவளவோ பொறுப் புக்களைச் சுமத்திவிட்டுச சென்றாா. இததகைய மகத்தான பொறுப்புக்களை ஆண்மீது அவா சுமததவில்லை யென்பது அறிஞர்களின் நினைவிலிருக்கவேண்டும. வளளுவரே கைவிட் டால், மற்றவர்களைப்பறறிக கேடகவேணடுமா? பேதை, பேய், மோகினிப் பிசாசு, பாவததின உருவம, ஆசைக்கொள்கலம், ஒழிந்த பிறவி எனறெலலாம பெணணை அடிதது நொறுக்கி விட்டார்கள.

இவ்வாறு யுகயுகாந்தரங்களாக ஏறிவந்த மாசினைப்போக்கி, பெண்உருவத்தைத் துப்புரவுபண்ணி, மெருகிட்டு, ஒப்பனை செய்து அதை ஒரு மணிமண்டபததின் நாப்பண் கொலுவீற் றிருக்கச்செய்த பெருமை எஙகள் தநதை திரு வி. க. ஒருவருக்கே உரியதாகும். இவ்வொரு செய்கைக்காகவே உலகததுப் பெண் குலம் இப் பெரியாருக்கு என்றென்றும கடமைப்பட்டதாகும்.

---

## அஃறிணை உலகம்

அஃறிணை உலகைச சிறிது நோக்குவோம். காலைவானில் ஒரு பெரும் செந்தாமரை; மாலைவானில் ஒரு பெரும் வெண தாமரை; செறிந்த முத்துப்பூககள்; ஒளிவழி; வானவிதானம்— மறிகடல்; மரகத வயல், கருஙகாடு, சாந்தமலை—ஞாயிற்றின் வெப்பம்; கடல் ஆவி; மேக எழுசசி; மழைப் பொழிவு; அருவி வீழ்ச்சி; ஆற்றோட்டம்; கடற் கலப்பு—அன்னத்துயில்; கன்று; வண்டிசை; குயில் பாடல்; மயில் ஆடல்—சுறு நெளிவு; காளை எக்காளம்; பாம்புப்பணம, மான் மருட்சி; புலிப்பாய்சசல்; குரங குலா—அஃறிணையின் அமைதி என்னே! என்னே!

திரு. வி. க. பரம்பொருள் அல்லது வாழ்க்கைவழி—பக்கம் - ரு.

---

# இரங்கலுரைகள்

திரு. வி. க. அவர்கள் தமிழ் மொழிக்கு ஆற்றிய தொண்டு அளப்பரிதாம். உரைநடை, செய்யுள், ஆராய்ச்சி, உரைவளம், தத்துவம் ஆகிய பலவகையான நூல்கள் அவர் இயற்றினர்.

பூ. ஆலாலசுந்தரஞ் செட்டியார், எம் ஏ., தாம்பரம்.

இருபது முப்பது ஆண்டுகட்கு முன் ஆங்கிலேயர் ஆட்சி செழித்துப் படர்ந்திருந்த காலம். அப்போது திலகர், மகாத்துமா முதலான தியாகிகள் நாட்டின் விடுதலைக்காக மூலை முடுக்குகளிலெல்லாம் விடுதலை முழக்கம் செய்தனர். அந்த முழக்கம் திரு வி. க. அவர்களின் காதில் ஒலித்தது. அவரும் விடுதலைப் போர்க்கோலம் பூண்டார். தூய செந்தமிழில், உணர்ச்சி கொழிக்கும் சொல்லால் விடுதலை வேட்கையைத் தமிழ் மக்களுக்கு உண்டாக்கினர். அப்போது இம் என்றால் இங்குள்ள சிறை அம் என்றால் அந்தமான் சிறை. இவையே விடுதலை வீரர்களுக்கு விருந்து மாளிகைகள். இத்தகைய அடக்கு முறைக்கு அஞ்சாமல் நாட்டின் விடுதலைக்கு அவர் போராடினர். வார இதழாகிய 'நவசக்தி'யால் நாட்டில் நவசக்தியை ஊட்டினர்.

வித்துவான் இ மு. ஆறுமுக செட்டியார், தியாகராயர் உயர்நிலைப்பள்ளி.

தமிழ்த்தாயின் தவப்புதல்வர்; உள்ளத்துறவு பூண்ட உத்தமர், பெண்ணினத்திற்குப் பெருமையளித்த பேரறிஞர்; எளிய வாழ்க்கையில் ஏற்றங்கண்ட ஏந்தல்; ஏழையின் நண்பர்; கற்றுணர்ந்தடங்கிய கவிஞர்; அன்னாரது ஊனக்கண் மறையி னும் ஞானக்கண் இறுதிவரை ஒளிவீசியது.

இராஜாமணியம்மையார், எம்.ஏ மேரியரசி கல்லூரி.

தமிழ்ப்பெரியார் திரு. வி. க. ஏறத்தாழ நாற்பத்தைந்து ஆண்டுகள் தமிழன் வளர்ச்சிக்காகப் பாடுபட்ட பெரியார் ஆவர். இவர் முதல்தர எழுத்தாளர்; இனிய-எளிய செந்தமிழ் நடை எழுதுவதில் இணையற்றவர்; அங்ஙனமே பேசுவதிலும் பெயர் பெற்றவர்; தொழிலாளர் தலைவர்; எச்சமயத்தாரும் பாராட்டத்தக்க பொதுநோக்குடைய சமய அறிஞர்.

டாக்டர் எம். இராசமாணிக்கம், எம் ஏ., எல்.டி., எம்.ஓ எல்., பி.எச் டி.

மாதர் தம்மை இழிவுசெய்யும் மடமையைத் தொலைப்பதற் காகவே கலியாணசுந்தரனர் அரும்பாடுபட்டார். தாம் மாதோடு

கூடியிருப்பின் பெண்களைப்பற்றித் தாழ்வான எண்ணம் எங்கு தோன்றிவிடுகிறதோ என்னும் அச்சத்தினால்தான் அவர் கமலாம்பிகை என்னும் மனைவியை இழந்தபின்னும் மறுமணஞ் செய்துகொள்ளாது உறுதியுடன் இருந்தார்.

சு. அ. இராமசாமிப் புலவர்.

இவரது வாழ்த்து என்றென்றும் தமிழகத்தை உய்விக்கும் என்பதை யறிந்துள்ளேன். இப்பெரியாருக்குத் தமிழகம் தன் கடமையைச் செய்யாது விட்டது இன்று பண்பாளர்களது உள்ளத்தில் கலக்கமெனும் புயலவீச, ஆன்றவிந்தடங்கிய அப் பெரியாரை இழந்து நிற்கின்றோம் இவருக்கு ஆட்சிப் பீடங்களும், மக்களனைவரும் தத்தம் கடமையைச் செலுத்தி நன்றி மறவாதவர்களாக வேண்டும்.

இராமசாமி அடிகளார், திருப்பேரூர்.

திரு வி. க அவர்களின் பிரிவு பொதுவாக நம நாட்டுக்கும், சிறப்பாகத் தமிழ்மொழிக்கும், தொழிலாளர்களுக்கும் பேரிழப்பாகும். திரு. வி. க அவர்கள் நாட்டிற்கும் மொழிக்கும் பலவகைகளில் பெருந்தொண்டு செய்தவர்கள், தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர், எல்லோரும் இன்புற்றிருக்கவேண்டும் என்னும் பரந்த உள்ளம் உடையவர்கள்.

பண்டித வித்துவான் லெ ப. கரு. இராமநாதன் செட்டியார், சிதம்பரம்.

எப்பொருளாயினும் எப்பாலவர்க்கும் இனியப் பேச வல்லவராக, ஈடும் எடுப்புமற்ற நிலையில் இலங்கினர். அவர்தம் மூச்சும் பேச்சும் தொண்டேயாகும் ஔவை மூதாட்டியாரது வாக்கின்படி 'இதொண்டர்தம் பெருமை சொல்லவும் அரிதே' என்று கூறுதலே பொருந்துவதாகும்.

சி. இராமலிங்கம், எம் ஏ, அண்ணாமலைநகர்.

"ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோன்" என்று கூறியது, இருபதாம் நூற்றாண்டுத் திரு. வி. க வை உள்ளிருத்தியே என எண்ணுமாறு வாழ்ந்த ஓர் இல்லறத் துறவி அவர்; அவர் மறைந்தார்; அவர் வாய்மலர்ந்த அருங்கருத்துக்கள், அவர் நூலில் இறவாது நிலவுகின்றன; அவற்றைப் பொன்னே போல் போற்றி வளர்த்து, அவற்றின் ஊடே அவரைக் கண்டு, அவர் காட்டும் வழி சென்று வாழ்க நம தமிழகம்.

புலவர் கோவிந்தன், எம்.ஏ, திருவத்திபுரம்.

இறப்பு என்பது இயற்கை. "பிறந்தன இறக்கும்" என்பது ஞானமொழி. அதுபற்றி வருந்துதற்கு இல்லை. ஆயினும், தொழிலாளர் இயக்கத்தை, பெண் நல உரிமையை, சமயப்

புரட்சியை எத்தகைய எதிர்ப்பையும் பொருட்படுத்தாது தாம் மேற்கொண்டதைச் சாதித்து நடத்தியவர் யார் என்பதே மக்கள்—தமிழ்மக்கள் மனத்தை அசைத்துக்கொண்டிருக்கிறது.

சித்தாந்த பிரசங்காமிர்தம் பூ. சமாபுரி முதலியார்

அவர் தமமுடைய மனைவியும் அருமைப் புதல்வனும் இறந்தபின், உடல், பொருள், ஆவி மூன்றினையும் தமிழ்மொழிக்கும், தமிழ்நாட்டுக்கும், தமிழ்மக்களுக்கும் அர்ப்பணம் செய்து துறவியைப்போல் வாழ்ந்துவந்தார். இத்தகைய பெரியார் இவ்வுலகை நீத்துச்சென்றது தமிழ்நாட்டுக்கு ஒரு பேரிழப்பேயாகும். அன்னார் எழுதியும் பேசியும் வந்த நீதிஉரைகளைப் பின்பற்றி நடப்பதே தமிழ்மக்கள் அன்னாருக்குச் செய்யும் கைம்மாறு ஆகும். அவருடைய ஆன்மா சாந்தி உறுவதாக.

திருமந்திரமணி அ. சிதம்பரனார்.

"என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்பது திரு. வி. க. அவர்களின் வாழ்க்கைக் குறிக்கோள். இக் குறிக்கோளைச் சிந்தை, சொல், செயல் மூன்றினாலும் கடைப்பிடித்த உண்மை அறிஞர், பேரருளாளர் ஒருவர், தமிழகத்தில் உண்டென்றால் அவர் திரு. வி. க. வே

—பெரியகுளம் வித்துவான் வி. சிவக்கொழுந்து.

திரு. வி. க. அவர்கள் மறையினும், ஒரு கருத்தினை உடன்பாட்டு வினையிலோ, எதிர்மறை வினையிலோ மும்முறை கூறும் கூற்றொலியும், கண்ணிமைத்தலும் என் மனத்தினின்றும் என்றும் அகலா.

ஆ. சிவலிங்கனார், மயிலம்.

எங்கள் முருகன் செந்தமிழ்க்கழகத்தின் சார்பாக, 21-9-53 திங்கள் பிற்பகல் 3-மணிக்கு மயிலம் தமிழ்க் கல்லூரியில், தமிழ்ப்பெரியார் திரு. வி. க. அவர்களின் மறைவைக் குறித்து, கல்லூரித் தலைவர் உயர் திரு. S. துரைசாமி ஐயர் அவர்களின் தலைமையில் ஓர் இரங்கற்கூட்டம் நடைபெற்றது.

பெ. சுந்தரமூர்த்தி, கழகச் செயலாளன்.

பெரியார் திரு. வி க. அவர்களுடைய உள்ளொளியின் ஊற்றத்தால் அவர்களுடைய அழகிய ஆணித்தரமான சொல்லடுக்குகள் ஓர் உரம்பெற்றுக் கேட்பவர் நெஞ்சிலும் படிப்பவர் மனத்திலும் நன்கு பதிந்து நல்ல பயனைத் தந்தன. அவர்களுடைய உரைநடை நெருப்புப்போன்ற தூய்மையுடையதாய், இனிதாய், எளிதாய், எழிலுடையதாய்ப் பிறமொழிக் கலப்பின்றி உள்ளத்தை ஊடுருவும் ஆற்றலுடையதாய்த் திகழ்

கிறது. அவர்கள் இளமைக் காலத்தில் தமிழ்நாட்டில் காங்கிரசுக்கட்சி பலமுறுவதற்கும் காந்தீயம் வலுப்பெறுவதற்கும் அரும்பாடு பட்டிருக்கிறார்கள். பார்ப்பதற்குப் பழமை கலந்தவர்களாய்த் தோன்றினும் அவர்களுடைய கருத்துக்களும் கொள்கைகளும் புத்தம் புதியனவாய், இக்கால இளைஞர் உள்ளத்தைக் கவர்வனவாய் இருந்தன. அவர்கள் முருகன் திருவடி கலந்துவிட்டார்கள். மறு பிறப்பு உளதேல், பெண்ணாகத் தான் பிறப்பார்கள். பெண்மையைப் பெருமை செய்வார்கள்.

வித்துவான். கோ. சுப்பிரமணிய பிள்ளை

1939-ம் ஆண்டு ஒருநாள் நல்லநாள்; நன்மையை என் வாழ்வில் நாட்டிய நாளுங்கூட. தென்காசி என்றாலே சிவநாடியைச் சீர்செய்யும் காசி. நம் உடல், பொருள், ஆவி மூன்றையுமே ஒன்றாக்கும் காசி.

அன்று நடந்தது ஆன்றோர் கூட்டம். எதன்பொருட்டு? தமிழ்ப் பெருந் தெய்வமாம் வள்ளுவனாரின் வாய்மொழியைப் போற்ற, வல்லவாறு கூட்டப்பட்ட மாண்புறு மாநாடு. அம் மாநாட்டிற்குத் தலைமை தாங்கவே தமிழ்த்திரு மேலோராம் திரு. வி. க. அவர்கள் வரவேற்கப்பட்டார். அவ்வமயம் அரும் பெரும் தலைவர்மணியின்கீழ், எளியேற்கும் உரைவழங்கும் பணியொன்றும் போடப்பட்டிருந்தது.

அப் பணியும் தென்காசித் திருவள்ளுவர் கழகத்தில் மூன்று நாள் தொடர்ந்து நடைபெற்றது. அதுபோது அடியேற்கும் அம்மூன்று நாட்களும் அரும் பெரும் மணியுடன் கலந்து வாழும் பெரும் பேறும் கிடைத்தது.

வித்துவான் பொன். சுப்பிரமணிய பிள்ளை.

தமிழ்நாட்டிலே யன்றி இப் பூஉலகின்கண்ணே இவரை யறியாதார் ஒருவருமிலர். அமைதி, அன்பு, அருள், அறன், தியாகம், சமுதாயத் தொண்டு என்பதான பல உயரிய நற்பண்புகளைக்கொண்டு தோன்றியவர் இவர் ஒருவரே எனலாம்.

M. A. சுப்பிரமணிய முதலியார்.

அறிவிற் சிறந்த பெரியார் திரு வி. க. அவர்களைச் சுமார் நாற்பது ஆண்டுகளாக எனக்குத் தெரியும். அவருடைய நல்லறிவும் சொல்லாற்றலும் யாவரையும் வசப்படுத்தும் தன்மையன. இவருடைய வாக்கே வாக்கு என்று யாவரும் வியக்கத் தக்க பண்புகள் இவர் பேச்சிற் பொலிந்தன. இவர் பேசும் ஆற்றலையும் பேச்சின் அழகையும் கண்டு வியந்து முன்னரே

'வாக்குக் கருணகிரி வாதவூரார் கனிவில்' என்னும் ஆன்றோர் வாக்கைத் தழுவி,

> 'வாக்குக்கு ஞானியார் மற்றுந் திரு வி. க
> தேக்குந் தெளிவுகளுக் சேதுபிள்ளை—நோக்குக்குக்
> கோதண்டபாணி பிள்ளை கூற்றிதனுக் கையமில்லை
> ஈதுண்மை உண்மையுண்மை யே''

என ஒரு பாடல் அமைத்தேன். பிரமன் தந்த திரு வி க. வின் வெற்றுடம்பு மாய்ந்து மறைந்தது; ஆனால் அவர் இந்த அவனியிற் புகழ்கொண்டு செய்த உடம்பு மறையாது, மறையாது என்றும் மறையாது.

தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம். ஏ.

தமிழகத்தின் பேராண்மை மிக்க தவப்புதல்வர் மறைந்து விட்டார் அந்திய காலத்தில் ஆதரவற்று, தமது இல்லத்தினின்றும் விலக்கப்பட்டு, சிறித்துவ நண்பர்களால், ஆதரவு செய்யப்பட்டு உயிர் துறந்தார். சைவமக்களாவது, தமிழ்ப் பேரன்பர்களாவது அவருடைய அந்திய காலத்தைச் சிறிதளவேயாயினும் மன அமைதியுடன் போக்க முனைவந்தாரில்லை. இது தமிழ்மக்கள் செய்த துரப்பாக்கியம். இனி, அவருக்கு மண்டபம் கட்டுவதிலும் ஞாபகச் சின்னங்கள் எழுப்புவதிலும் அவர் ஆன்மா சந்தோஷப்படப் போவதில்லை.

ஜே எம். சோமசுந்தரம்.

தமிழ்த் திருமகனாரகிய நம கல்யாணசுந்தரனார் "தமிழறியோம்'' என முன்னர்த் தறபெருமை பேசிய மாக்கள், அந்தோ! யாம், இத்தகைய இனிமை கெழுமிய தாய்மொழியைக் கற்றிலோமே'' என நாணித் தலைகவிழும்படியும, ஆ! தமிழ் இத்துணை இன்பமுடையதோ! ஆயின் யாமும அதனைக் கற்போம; எம் மக்களையும் தமிழ் கற்கச்செய்வோம்,'' என இத்தமிழநாடு முழுதும் விழிப்புறறுத் தமிழ்மொழி கற்கும்படியும, நாடு முழுதும சென்று ஆங்காங்கே அரங்கங்களிலே ஆற்றிய தெளிதமிழ்ச் சொற்பொழிவானும், முருகன், பெண்ணின் பெருமை முதலிய தம்இனிய நூல்களானும, தெய்வத்தமிழின் சிறப்பனைத்தும் தமிழ்நாடுணருமபடி செய்து தமிழமக்களை தமிழ்த்தாயிடம் ஆற்றுப்படுத்தியவராவார்.

புலவர் போ. வே. சோமசுந்தரனர்.

ஒவ்வொரு தலைவரிடத்தும ஒவ்வோர் தனிபபண்பு தலைசிறந்து காணப்படும. அவ்வகையில் நம்மருமைத திரு. வி. க. அவர்களிடங் காணப்பட்ட தலைசிறந்த பண்பு "அன்பு'' ஆகும். அவரை நெருங்கி அறிந்தாரெல்லாரும் இவ்வுண்மையை ஒப்புக்

கொள்வர். உயர்பண்பாடுகள் யாவற்றிற்கும உயிரான அன்புப் பண்பு நிறைந்திருந்த அவர்கள்பால் ஏனைய உயர்பண்புகளெல்லாம் அமைநதிருததல் இயல்புதானே! ஆதலின் திரு. வி. க. அவாகளின் புலமை, தொண்டு, கோட்பாடுகள, செயல்கள், வாழ்க்கை யாவும கவாச்சியான அனபு நெறியில் அமைந்தனவே.

வித்துவான் மறை திருநாவுக்கரசு.

தம் வாழ்வின் குறிக்கோளை இலகக்கியமாகக்கொண்டு அதன்மூலம் மக்கள்சமுதாயததை உயாநிலைக்கு உயர்த்த வேண்டுமென்று தம் வாழ்க்கையை அமைததுககொணடாரனறோ! தமிழ்நாடடிலே கவிமழை பொழிநது, புவி மன்னனை எதிாதது நாட்டைவிட்டு வெளியேறிய கவிமன்னன் கமபனையும், தன் உளளததில தோன்றிய உண்மையை நிலைநாடட "பெண்டிரின் கூந்தலுக்கு இயற்கை மணம இலலை" எனறு கூறி இறைவனோடு வாதாடி, நெறறிககண்ணுக்கும, நெஞசுக் கண்ணுக்கும் அஞசாத நககீரன் போன்ற கவிவீரர்களைக கதைகள் மூலமதான் கணடிருககிறோம. ஆனால மாசற்ற கனனித தமிழமொழி வளரப் பிறமொழி வேண்டுவதிலலை. அதனால தமிழ் கெட்டுவிடும்" எனறு பல மகாநாடுகளின மூலமும, சொறபொழிவு, கவிதை, கட்டுரை மூலமும் விளககித தள்ளாத வயதில்கூடத் தொண்டாற்றித் தமிழைககாத்த பெருமை நம் தமிழ்ப்பெரியார் திரு. வி. க. அவர்களையே சாரும்

K நாகரத்தினம், பேரூர் (கோவை)

திரு. வி. க என்று உச்சரித்தாலே தமிழனுக்கு உடல் சிலிர்க்கும்—உள்ளம் பூரிக்கும். அவருடைய இன்முகமும், இனிய பேச்சும, குழந்தை மனமும, விருநதோம்பலும் எண்ணி எண்ணி உவகை அடைவதொன்றாய் உள்ளது திரு. வி. க. என்றால் தமிழபபெரியார், சைவசித்தாநதி, கிறிஸதுவததிலே சைவம், புத்தமததிலே சைவம், வைணவததிலே சைவம், மார்க்ஸ்கொள்கையிலே சைவம், இப்படி எத்துறையிலும் புகுந்து அவ்வத துறையில் உள்ள அடிப்படைச் சித்தாநதங்களையும்—சைவசிததாந்த அடிபபடைத் தத்துவங்களையும ஒற்றுமைப்படுத்தி மக்கள மனததிலே சமரசசன்மார்க்க வித்தினைப் பதியவைத்த பெரியார்.

சிறுவை. மோகனசுந்தரம், அமைசசா, நககீரர் கழகம்.

நம் தமிழ்நாட்டின் தந்தை திரு. வி. க. ஒப்புடையர் அல்லர். இவா நல்வினைப்பயன் உளளவர் என்பது இவர் ஆற்றிய செயலினின்றும் நன்கு விளங்குகின்றது.

மயிலை - சி. வேதாசல முதலியார்.

தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவாகளின் அருகிருந்து அறிவுரை கேட்கும் பேறுபெற்றவர்களுள் யானும் ஒருவன். வேறு கூறுவானேன்; மறைந்த பெரியார் செந்தண்மை பூண்ட அந்தணர் வேந்தன். அவர் காட்டிய நெறிநிற்கும் உள்ளம் நம்பால் மலர்வதாக.

ம. இராசமாணிக்கம்.

உலகம் ஒரு பல்கலைக்கழகம். அதில் அநுபவம் என்னும் கல்வியைக் கற்றுத் தேர்ந்து கல்விமானென்றும் கலைஞரென்றும், அறிஞா என்றும் அன்பரென்றும், பாவலரென்றும் நாவலரென்றும், வீரரென்றும் தீரரென்றும், வள்ளலென்றும் மற்றும பல சீரும் சிறப்பும் பெற்றோர் பலர். ஆனால், மனிதராக வாழ்ந்து—மனிதன் ஆற்றவேண்டிய கடமைகளை ஆற்றி—வள்ளுவாகண்ட மனித இலக்கணத்துக்கு உரியவராகி—மனித உள்ளங்களில் குடியிருநது—அவற்றின் உணாசசிகளில் இரண்டறக்கலந்து—முடிவில் அம்மனித இனத்தின் கண்ணீரிலே கரைநது மறைநதவர் மிகச் சிலரே. அத்தகைய தெள்ளியரில் நமது அண்ணல் திரு. வி. க. வும் ஒருவராவர். சுருங்கச் சொல்லவேண்டுமானால் அன்பர் திரு. வி. க. வின் மறைவால் இந்நாடு ஒரு நல்லாரை இழந்துவிட்டது—உண்மை மனிதரை இழந்துவிட்டது என்றே சொல்லவேண்டும்.

நாகை. த. சிங்காரவேலன்.

உலக ஒற்றுமைக்காகப் பாடுபட்டுவரும் பெரியார்களுள் ஒருவா நம் திரு. வி. க. பிளவு மனப்பான்மையை அவர் அறவே வெறுப்பவர்; அமைதிக்கு ஓர் எடுத்துக்காட்டாக இலகியவர்; இயற்கையழகில் இறைவனைக் கண்டு வழிபட்டவர்; பெண்ணின் தாய்மைப் பண்பினைப் பாராட்டுதற்கு நம் பெரியாரினும் சிறந்தாரை நான் கண்டிலேன். நம் பெரியாரின் கனிவு மொழி கேளாத கழகங்கள் இல்லை. நம் பெரியார் உரைநடையில் கவிநயம் காட்டியவர்; காவியத்திலே ஓவியம் தீட்டியவர்; திருவள்ளுவத்தைத் தம் வாழ்க்கைத் துணையாகக் கொண்டவர். அவர்தம். பிரிவு தமிழர்கட்குத் தாங்கொணுத் துன்பினைத் தருவது.

மயிலை சிவ. முத்து, சென்னை.

# சொல்வல்ல இனிய நாவான்

[புலவர்—'அரசு']

காலமெனுங் கொடுங்கூற்றே! அறக்கொடுமை எமக்கிழைத்த
கருத்துத் தேறேம்!
ஞாலமெலாம புகழ்விரித்த தமிழ்க்கதிரைத தொழிலாளர்
நல்ல வாழ்வைச்
சீலமெலாம வளர்ததிட்ட பெருந்தகையைப் புலவரின்பத்
தென்றல் தன்னை
ஓலமிட்டு யாம்வாடப் பிரிததனை! நின் செயல்தீமை
ஒனறே! ஒன்றே!! (க)

செந்தமிழில் அரசியலைச் செப்பவொண்ணு தென்றோரைத்
திகைக்கச செய்தே
எந்தவிய லுந்தமிழில் இசைத்திடலாம் எனக்காட்டும்
ஏந்தல் தன்னைச
செந்தமிழ்த்தாய் மனகளிப்பப் பலகலனும் புனைந்துமகிழ்
செம்மல் தன்னை
எந்தமக்கோர் நெறிகாட்டும் கலியாண சுந்தரனை
யிழந்தோம; அந்தோ! (உ)

உடல்முதுமை யுற்றாலும உளமும்உரை யும்முதிரா
உரவோன தன்னை
அடலரியே றெனமுழங்கித தொழிலாளர்க் குழைததிட்ட
அண்ணல் தன்னைக்
கடனறியாத் தமிழருளக் கசடறுத்துச சோம்பகற்றுங
காட்சி யானை
இடனகன்ற தமிழ்நாடின் றிழந்திட்ட தீயூழை
யென்னென போமே! (ங)

இலக்கியநன் னடையாலே தமிழ்மொழிக்கு நவசக்தி
யிணைததான் முன்னாள்!
துலக்கியசெந் தமிழ்மழையாற் பேரவையாம் பயிர்வளர்த்தான்!
தூய சைவம
இலக்குமுறச் சமரசமாம் அணிபுனைந்தான்! சொல்வல்ல
இனிய நாவான!
கலக்கமுற்றே யாம்வாட இன்றந்தோ கைநெகிழ்ந்தான்!
காலம்! காலம!! (ச)

இனியதமிழ்த் தென்றலாய்த் தமிழ்ப் பொழிலாய்ப் பொதுநெறியாய்
இலகி நின்றான்!
தனியுயர்ந்த இமயமலை யிலக்கானான் முருகனடி
தாழும் அன்பன்
முனிவறியாப் பெருமுனிவன்! பெண்ணுரிமை யறிவித்த
முன்னோன்! முன்னி
மனிதவாழ்க் கையையளித்தான! தேசபக்தன் ஆகிநின்றான்!
மறைந்தான் அந்தோ! (௫)

காந்தியமார்க் கியமறிந்தான்! வாழ்விலதை கடைப்பிடித்தான்
காலமெல்லாம்
மாந்தருக்கே உழைத்திட்டான்! தன்னலத்தை வெறுத்திட்டான்!
மாண வாக்கும்
ஆந்தகவாய்த தமிழ்நூல்கள் யாத்திட்டான்! தமிழருளத்
தமர்ந்தி ருக்கும்
எந்தலைவன் பிரிவாலே தமிழ்நாடு பொலிவிழந்த
தென்னென் பேமே! (௬)

தொழிலாளர் தலைவனென்கோ? தமிழ்ப்புலவ ரேறென்கோ!
தூய்மை சார்ந்த
வழியமைந்த பலசமயக் குரவனென்கோ? அரசியலின்
மன்ன னென்கோ?
எழிலாரும் பேரவைநா வலனென்கோ? எழுத்தாளர்
ஏந்த லென்கோ?
பழியறியா நடையுடையான கலியாண சுந்தரனைப்
பகர்வ தென்னே! (௭)

நின்னுடைய தமிழ்க்காதல் நிலையத்தில் விளைந்திட்ட
நிகரன நூல்கள்
மன்னுறஇத தமிழ்நாட்டில தமிழறிந்தோ ருள்ளத்தே
வாழ்வுற் றோங்கும்!
பொனனுடையார நட்பிருந்தும் பொனவிழையாப் பண்பாள!
புகல்வ தென்னே?
மன்னிய நின்வாழ்வினிலே வறுமையொடு செம்மையென்றும்
மனனல் கண்டோம! (௮)

புன்னகைசேர் மலர்முகமும் பொருள்நகைசேர் மணிமொழியும்
புகரில் காட்சி
மன்னியபுண ணியவுருவுங கணடுகளித் தார்வமிக
வாழ்ததுக் கூறும

துன்னியபே ரறிஞர்நிறை பேரவையில் தலைமைபெறுந்
தோன்ற லே! நின்
இன்னிசை மெய்ம் மொழிகேட்ப தினியெங்கே? மணவழகே!
என்னே! எனனே!! (க)

ஆயிரததெண ணூ றறெணப தொடுமூன்றும் ஆண்டினிலே
ஆகஸ் டுற்ற
மேயஇரு பத்தாறும் நாளில்விருத் தாசலப்போ
மேலோன செய்த
தூயதவப் பயனுலே சினனமமை பெற்றெடுதத
தோனற லே! நீ
ஆயஎழு பதெொனறும் வயதுமுற்றி இறைவனடி
யடைநதாய! மனனே! (க0)

ஊனுடலை ஆயிரதெதாள் ளாயிரநதைம் பதின்மூன் றில்
உறுசெப் டமபா
தானுடைய பதினேழாம நாளினிலே நீததென் றும
தமிழ்ச்சான் றோரின்
மானமிகும உளளத்தே புகழுடம்போ டுறைகின் ற
வள்ளால! நீமன்
வானுலவு பேரின்ப வீட்டினிலே இறைவனடி
நிழலில வாழ்க! (கக)

செந்தமிழ்நாட் டுறைகினற சீரியரே! திரு. வி. க.
செய்து வந்த
செந்தமிழ்நற் பணிதமைழககச செய்திடுவோம! தமிழன்னை
சீர்பெற் றென் றும்
முந்தியநல் லரியணையில் இனிதிருகக முயன் றிடுவோம!
முற்றச செய்வோம்!
இந்தநறும் பணியாலே திரு. வி. க. மனஅமைதி
எய்து வாரே. (கஉ)

---

# தீந்தமிழ்க் களஞ்சியம் திரு. வி. க!

[புத்தனேரி ரா. சுப்பிரமணியன்]

பேரதிர்ச்சி யடைந்திட்டோம்! கலியாண சுந்தர! நின்
பிரிவி னாலே
ஆரதிர்ச்சி யடையாதார்? அருந்தமிழே உருவான
அறிவு வள்ளால்!
காரதிர்ச்சி கொண்டுபெரு மழையென்னும் கண்ணீரை
நினது மேனி
ஊர்வலத்தில் பொழிந்ததொரு விந்தையினை எண்ணிமனம்
உருகி னோமே!

காந்தீயம் மார்க்ஸீயம் இரண்டினையும் தமிழ்த்தேனில்
கலந்து தந்தாய்!
சாந்தியினைச் சமரசசன் மார்க்கத்தைத் தமிழரெலாந்
தழுவ வேண்டிச்
சாந்துணையும் பணியாற்றிக் கட்டமைத்துத் தடையெல்லாந்
தகர்த்து நின்றாய்!
தீந்தமிழ்நற் களஞ்சியமே! திரு.வி.க! நின்மறைவால்
திகைக்கின் றோமே!

இலக்கியப்பூந் தென்றலினை எல்லார்க்கும் ஈந்துவக்கும்
இன்பங் கண்டோய்!
கலக்கமுறுந் தொழிலாளர் இயக்கத்தைப் புயலாக்கிக்
காத்த வீரா!
மலக்காமல் தமிழுணர்ச்சி மருந்தூட்டி வளமாகத்
தமிழர் உள்ளந்
துலக்கியதோர் கலியாண சுந்தர! நீ மறைந்த துயர்
துடைப்பார் யாரே?

நாட்டிற்கு நல்லதெனை நீகண்ட எதனிலுமே
நாட்டங் கொண்டு
பாட்டாலும் எழுத்தாலும் பேச்சாலும் மூச்சாலும்
பஞ்சை உள்ளம்
கேட்டறியா உண்மைகளை ஊட்டிமிகப் பேரறிவுக்
கிளர்ச்சி செய்தோய்!
கூட்டுறவு நலமமைதிக் குரலமுதம் இனியாரே
கொடுக்க வல்லார்?

முருகனையே அழகாகக் கண்டதமிழ் முனிவரனே!
பெண்ணினத்தின்
பெருமையினை மாந்தரின உரிமையினைப் பேணும்எழில்
நூல்களாக்கித்
தரமுயரும் தமிழ்நடையால் புதியதொரு சகாப்தத்தைச்
சமைத்த நின்றன்
கரமலரை எரியுண்ணக் கண்டந்தோ! கையற்றோம்!
கலங்கி னோமே!

# தொழுவதால் உண்டே துணிவு!

[திரு. க. வெள்ளைவாரணன்]

**கலி வெண்பா.**

பாட்டும் உரையும் பயின்ருேன் தமிழ்மக்கள்
வேட்ப விரித்துரைக்கும் வித்தகன்—நாட்டோர்
உரிமைக் குழைத்த உரவோன் தமிழா
பெருமை விளக்கும் பெரியோன்—திரு வி.க.
என்றுலகர் போற்ற இனிய தமிழ்மொழியாந்
தென்றல் அளையுந் திருவாளன்—துன்று
கலியாண சுந்தரப்போ பெற்றுக் கதிர்வேல்
வலியாற் றமிழ்நலத்தை மாந்தி—நலிவகன்றே
ஏழைத் தொழிலாளர் இன்பமுடன் இவ்வுலகில்
வாழ வழிவகுத்த வல்லாளன்—வாழ்வுயரப்
பெண்ணுரிமை பேசிய பீடுடையான் பாரதத்தார்
மண்ணுரிமை பேண வழிகண்ட—அண்ணலார்
காந்தி யடிகள் கருத்தறிந்திந் நாட்டவர்க்கு
வாய்ந்த வுரைகள் வழங்கினுன்—சாந்துணைய
துன்ப முறினுந் துளங்காத சிந்தையினுன்
அன்பே உருவாம அழகுடையான்—முன்பு
நெருங்கிப் பழகியவா நீரலசெய் தாலும்
வருகதிப புறனுரையா மாண்பிற்—றிருந்தி
உலகியல்வாழ் வோங்க உயர்ந்தபே ருண்மை
பலவும் பகர்ந்த பழையோன்—இலகு
பெருங்குணங்கட் கெல்லாமோா பேழையென இந்நாள்
திருந்து தவநெறியிற் சேர்ந்தோன்—பொருந்தும்
இருளில் ஒளிகண்ட எந்தல் அருளே
பொருளென் றுணர்ந்த புனிதன்—தெருளா
உடல்வாட்ட முற்றுலும் உள்ளம் இளையா
அடலே றெனத்திகழ்ந்த அண்ணல்—சுடரார்
இராமலிங்கர் போற்றும எழிலார்சன் மார்க்கம்
பரவ வழிகண்ட பண்பன்—உரையினுல்
தூய தமிழ்வளாத்த தோன்றல் இளமைவளா
சேயின் அடிமறவாச சிந்தையினுன்—தாய்போல்
இளைஞர்களைக் கண்டால் இனியவுரை பேசி
வளமைபெற ஊக்கும் மதியான்-கிளைவளரச
செந்தமிழ ரொற்றுமையாற் சேர்ந்துயர வேணடுமெனச
சிந்தையினில் வேட்கை சிறந்துடையான்—சிந்தையிற்
கண்ட கனவு நனவாகா முன்னரவன்
விண்படர்ந்தா னென்றுரைக்கும் வெவ்வுரையாற்—கண்கள்
கலங்குகின்ருர் செந்தமிழர் கண்ணீரை மாற்றி
நலம்புரித லன்றியே நாளும்—புலமபி
அழுவதால் என்னே? அவன்பே ரறத்தால்
தொழுவதால் உண்டே துணிவு.

# இரங்கற்பாக்கள்

**தமிழ்ப் பெரியார்**

தமிழ்ப்பெரியார்! இந்தியத்தாய் தந்ததவப் பெரும்புதல்வர்
தககார் போற்றும்
அமிழ்தமென இனிதுரைக்கும் ஆற்றலுயர் பெருஞ்சான்றோர்!
ஆண்மை யுள்ளம
இமியளவும மாறாமல என்றென்றும் மக்களுயர்
வாழவே எண்ணி
இமிழ்கடல்சூழ் வையமதில் எளிமையுடன் தூய்மையினை
எடுததுக் கொணடார.

—புலவர் தில்லை. தா. அழுதவேலனார்.

**திரு. வி. க. செம்மல்!**

பெண்ணின் பெருமை விண்ணுறப் புகன்றவன்
கண்ணெனப் பலரும கருதிடும் பெரியவன்
புண்ணியம இதுவெனப் பொதுநெறி உரைத்தவன்
திண்ணிய திரு வி.க எனனும்பேர்ச செம்மலே!

—R. இராசரத்தினம், எம்.எ., எல்.டி., சென்னை.

**அறந்திறம்பாத் திரு. வி. க.**

அன்புகனி தமிழ்க்கடலே! அறம்பொழியும் வான்முகிலே!
இன்புநிறை கலியாண சுந்தரனும் எம்பெரியோய்!
துன்புசெறி மண்ணுலகில் தொண்டுபல நீசெய்து
பின்புபெருந் தொண்டாற்றப் பிறக்கவுல கேகினையோ!

தண்ணாரும் தமிழ்பிலிற்றும் தனிநாவின் திறனெங்கே?
கண்ணாரும கடனாற்றக் கடுகவிரை காலெங்கே?
எண்ணாரும ஏததெடுப்ப இசைமைநிறை நூல்எழுதும்
பண்ணாரும திருக்கையின் பணியெங்கே? எங்கேயோ!

அறந்திறமபாத திரு.வி.க. அரியவுயிர் இறையடியின்
திறஞ்செறிந்த சேவடி மலர்த்தேனுண் டின்புறுக
வறனறியா மாநிலத்து வளங்கள்பெற அவர்கண்ட
பெறலரிய வழிநடந்து பெருந்திருவேம் ஆகுவமால்.

—செல்லூர்க்கிழார் செ. ரெ. இராமசாமி பிள்ளை.

**கைலைமலை சென்றாயோ?**

ஒலியாருங் கடல்சூழும் உலகினிலே பிறந்தவர்கள்
எலியாகித் தொழில்செய்து இறந்தொழிந்து போனார்கள்
மலியாணர் தொண்டுகளை மட்டின்றிச செய்துநின்ற
கலியாண சுந்தரா! நீ கைலைமலை சென்றாயோ?

—சு. அ. இராமசாமிப்புலவர்.

## தமிழ்ஞாயிறு மறைந்தது !

எந்தை திரு.வி.க. ஈசனடி சேர்ந்தாரென்
றிந்த வுலகம் இயம்புமால்—அந்தோ ! கேள் !
ஈசனடி சேர்ந்தார இவரோ ? இருந்தமிழோ ?
பாச வுலகே பகர் !

—வித்துவான் மீ. பொன். இராமநாதன் செட்டியார்.

## அவர் தொண்டே நற்றுணை

பலகலையும் நற்பண்பும் பயிற்றுதவத் தோன்மன்
பாரெல்லாம் கடலணையும் ஆறெனக்கொள் வோன்மன்
உலகுபுகழ் பெண்பெருமை முதல்அலகில் நூல்கள்
உதவிஉயக் கொண்டோன்மன் ஒண்காந்தி அடிகள்
நிலவுவழி நின்றோன்மன் நீடுமண அழகன்
நிறைதிரு வி க எனும்பேர் நேயன்மன முன்னோன்
நலஅடியைச் சார்ந்தோன்மன் நமக்குமவர் தொண்டே
நற்றுணையாம் அவர்தொழுது வாழ்த்தல்நினைப் பாமே.

—கழகப்புலவர் ப. இராமநாத பிள்ளை.

## தமிழ்ப் பெரியோன்

திருவார் தமிழின் கடலெழுந்து சிவமாம் சமய ஒளிபரப்பி
உருவார் உலகின் தொழிற்றுறையோர் உலவா இன்பப் பெருக்கெய்த
மருவார் மக்கள் இருளொழித்த மணவழ காரும் மாமதியாம்
செருவார் இல்லாத் தமிழ்ப்பெரியோன் சென்ற துலகின் தீவினையே!

தேனும் பாலும் கலந்ததெனத் தெவிட்டா தினிக்கும் தெளிநடையில்
வானுங் கனிக்கச் சொற்பொழிவு வரையின் இழியும் அருவியென
ஊனும் உருகப் பொழிந்துளத்தின் ஒளியாம் ஒளிர்நூல் பலவளித்த
ஆனாப் புகழின் கலியாண சுந்தரன் மறைந்த தளியுடைத்தே.

—பேராசிரியர் பாரிப்பாக்கம்-கண்ணப்ப முதலியார்.

## ஆக்கங்கண்ட திரு. வி. க.

நடையினில் தோற்றந் தன்னில் கட்பினில் பழகும் வாய்ப்பில்
உடையினில் உளத்தில் என்றும் ஒப்புமை யில்லா வள்ளல்
படையினில் பகாந்து செய்யும் பான்மையில் மேம்பா டுற்ற
அடையினில் ஆக்கம் கண்ட திரு.வி.க. யாண்டுற் றீரோ?

—நாஞ்சில், கா. கணபதி.

## நற்பெரியோன் !

செந்தமிழ் மாது செய்த சீர்மிகு தவத்தி னாலே
இந்தநல் உலகம் தன்னில் எழின்மிகு நூல்கள் செய்ய
வந்தநற் பெரியோ னான வளர்கலி யாணப் பேரார்
சுந்தர ! யாண்டு சென்றாய் ? செந்தமிழ் உலகம் விட்டே!

கோமளப்பேட்டை சு. கலியாணசுந்தர முதலியார் என்ற மணவழகன்.

மறைந்தாரோ அவர்?

மறைந்தாரோ மணமீது வாழ்க்கை கொடிதென்
றறைந்தாரோ, இல்லையே, ஆறுபவ—மறந்தேனும்
விண்மீது நலவாழ்வு வேட்டுத் துறந்தாரோ,
நுண்மீனை அகத்தது நுழைந்து.

வாழ்க்கையிலே பன்மை வளங்கண்டார், மக்கள்நிலை
தாக்கையிலே வாழ்வில களங்கண்டார்,—போக்கையிலே
பாவில் கருத்தமைத்துப் பலவுயிரும் செம்மையுற
ஏவி மொழியமைத்தார் இங்கு.

—கோவை கிழார்.

மாமணியே திரு. வி. க!

செந்தமிழின நற்கடலே! செய்தவத்தின் மாமலையே!
சிறந்த பண்பு
தந்தவிரும் நற்றுணையே! அறிவுரைகள் தருகருவே!
தக்க சீரசால்
வந்தவிரும் மாமணியே! திரு.வி.க எனும்பெயர்தான்
வழங்கு மேலாய!
அந்தமிலாப் புகழுடையாய்! மண்ணீத்தாய! இதுமுறையோ?
அந்தோ! அந்தோ!!

—தீ. மு. சங்கரலிங்கம்.

சைவத்தின் அருநிதி

செந்தமிழும சிவநெறியும் தேயுமால் வாழ்வுபெற
வந்தருளுங கலியாண சுந்தரனும் வன்மையனே!
நந்தமரும பணிவிடுத்து நாமாக எழவிடுத்து
எந்தவுல கினிற்சென்று யெம்மருங்குங் காணலிலமே! (க)

அருவியெனப் பொழிசொல்லும் அருந்தமிழின் பொருணலன்கள்
திருவொளிர வுரைதிறனும் சிவமணக்கும, திருமுகமும்
பெருவிறலும அருந்துறவும் பெணமைநலன் ஓம்புதலும்
திரு.வி.க நின் பாறகண்டு இசையனைத்தும் புகழ்ந்தனமே! (உ)

நிலைபெறுநல லுடலமைக்க நிறைமலரோன் நினைந்திலனே!
கலைவலனை நனைக்காக்கக் கார்வணனும் கருதிலனே!
தலைவனென அறிந்துமெம தருமனுமனைச் சார்ந்தானே!
அலைகடல்சூ ழுலகினுன்போ லாரையுமே காணகிலமே! (ங)

வித்தகநின் புலாலுடமபு வீழ்கினுநற் புகழுடம்பை
உத்தமநீ கொண்டிடலா லுனபிரிவா லெந்தமக்கு
உயத்ததுயர் சிறிதகன்று உளத்தமைதி கொள்கின்றேம்
சித்தனெனப் பத்தனெனச் சிறந்தொளிரும் புலவோனே! (ச)

ஆண்டகையே! சைவத்தின் அருநிதியே! அளப்பரிய
ஈண்டுபுகழ்க கலியாண சுந்தரனும் எம்நண்ப!
தாணடவஞ்செய் தம்பிரான் தணணடிககீழ்ப் புக்கொன்றி
மீண்டுவராப் பேரினப மேவியென்றும் வாழ்ந்தருளே! (ரு)

சித்தாந்தப் பேராசிரியர் ந. சிவகுருநாத பிள்ளை.

உள்ளங் கலங்கினன் !

என்னருந் தலைவ ! என்னருந் தலைவ !
நின்னரும் பிரிவை என்னென் றுரைப்பேன்
கண்ணுதற் கடவுளின் கழலடி கருதும்
எண்ணரும் புகழ்க்கல் யாணசுந் தர !நீ
விண்ணுல குற்றனை விரைவுட னெனுஞ்சொற்
கேட்டன னுள்ளங் கலங்கின னந்தோ !
பெறலருந் திருவாய விளங்கிய பெரியோய் !
அருந்தினை தமிழைப் பொருந்திய அமிழ்தென
திருந்திய மனத்துடன் வளர்ந்தனை மனனே !

—நா. சீனிவாச முதலியார்.

உரைநடைப் புலவர்

செந்தமிழ்த்தாய் தவப்புதல்வ ! சிறந்தஉரை நடைப்புலவ !
சந்தநடைச செய்யுள்சொலச் சலியாத கலியாண
சுந்தரனே ! இந்நிலத்த தூயரெலாம உளமவாட
இந்தணியுஞ் சடையிறைவன் இணைமலாத்தாள் கலந்தனையே !

—சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரி மாணவர்கள்.

மாணிக்க மாமணி !

செந்தமிழின் களஞ்சியமே ! தமிழ்ப்புலவர் தமக்கேறே !
திருவா ரூர்ககண
மைந்தனென வந்துதித்த மாணிக்க மாமணியே !
மகிழ்கல் யாண
சுந்தரனே ! பைந்தமிழ்நாட் டவரெல்லாம் உளம்வாடச்
சிவனா தாளில்
சொந்தமெனக கலந்தனையே ! நினபோல உரைநடைநூல்
செயதார் யாரே ?

—சுந்தரம், புலவர் வகுப்பு மாணவர், பேரூர்.

இனிப் பெறுவதென்று ?

ஒருவிகற்ப மில்லாத உலகத்து மக்கள்தனை
நிருவிகற்ப முறசெய்த நேர்மைதனை யென்சொல்வேன்
திருவிகற்ப மில்லாத திரு வி.க. உன்பெருமை
கருவிகற்ப முற்றாலும் கணடுகொள்ளும தன்மையதே !

காந்தியம் செழித்தோங்கக் கணணியமாம் வழிகாட்டிச
சாந்தமதை பெறசசெய்த தமிழ்ப்புலவோய் ! சார்ந்தவாதம்
காந்தமடை யுள்ளத்தைக் கனிவுறசெய் நினனாற்றல்
போந்தவுல கிடையேயும் பொலிவுற்று வாழியரோ !

தமிழறிஞர் கூட்டத்தே தனியொருவன் நீயென்னும்
அமைவுடைய பெயர்பெற்ற அருங்குணத்தோய் ! நின்பிரிவால்
தமிழடையும் குறையொன்றோ ? தமிழுடையார் குறையொன்றோ ?
எமையுடையாய ! எம்தலைவா ! இனிப்பெறுவ தென்றேயோ !

—வித்துவான் பொன். சுப்பிரமணிய பிள்ளை.

திரு. வி. க. பேச்சோட்டம்

திரு வி.க. திரு வி.க. என்றுபல எததி
ஒருவர்ப் புகழ்வர் செந்தமிழ் உலகர்
திரு வி.க. ஒருவரு மல்லா
அருவிகள் தருமொரு மாரியும் உளதே.

திரு.வி.க. பேசசோட்டச் சீரழகின் முன்னர்
அருவிகாள்! உம்மோட்ட ஆற்றல்—ஒருவிதத்தும்
நேராகா தன்னூர் நிகழ்த்துரைக்குக் கார்மழையே
நேராம இதுவே நிசம்.

—வ. சு. செங்கல்வராய பிள்ளை.

கண்ணென வந்தவர்!

பெண்ணின் பெருமை ஓஙக
மண்ணில் அடிமை நீங்க
கணணென வந்தவரடி—கிளியே
கலியாண சுந்தரரடி!

ஏழைகள் வாழவந்தார்
இளைஞர்கள் ஓஙக வந்தார
யாவரும வாழ வந்தார்—கிளியே
எங்கள்பெருந் தலைவரடி!

சாதி சமயச சண்டை
சாயப் பொதுமை கண்ட
சமரச ஞானியடி—கிளியே
தமிழக்கலி யாணனடி!

—டாக்டர் S. தருமாம்பாள்.

தமிழே மூச்சு!

அனபுக் கடலே! அருந்தமிழ்ப் பெரியோய்!
திரு வி க வெனும் திறல்மிகு சான்றோய்!
உன்றனைப் பிரிந்து தமிழுயிா வாழுமோ?
என்றனுல யாதும இயமப இயன்றில
தமிழ்மலை சாயந்தது தமிழரண் உளளதென்
றிறுமாந் திருந்தனம் எந்தமிழ் அணணல்!
காலமல் வாக்கா லததில் நும்மை
காலன வயததில் கதற விட்டேம
தமிழே மூசசாயத் தனிததது வாழ்ந்தோய்!

—வித்துவான் வி. பொ. பழனிவேலன்.

தமிழ்ப் பெரியார்!

எல்லார்க்கும் பொதுமையராய் இலஙகுதிரு வள்ளுவர்போல்
சொல்லார்க்கும தமிழ்ப்பெரியாா கலியாண சுந்தரனார்
பல்லார்க்கும் உரியரெனப் பலகட்சி களும்போற்ற
நல்லார்க்குள் நல்லாராய் வாழ்ந்திருந்தார் நமைப்பிரிந்தார்!

அறைவதெங்ஙன் ? அந்தோ ! நம் தமிழகத்தின் அவலநிலை !
செறிவுமிகத் தமிழ்வானில் திங்களும்நன் ஞாயிறும்போல்
கறையில்புகழ்க் கலியாண சுந்தரனா கலைஞருயர்
மறைமலையார் எனஇவர்தாம் வயங்கிவந்தார் ! மறைந்தகன்றார் !

—புலவர் முருகவேள், பி.ஓ.எல்.

## தீந்தமிழ்த் தந்தை !

திருவுறு விருத்தா சலகலி யாண
சுந்தரத் தீந்தமிழ்த் தந்தை !
உருவுறு நாள்தொட் டுலகியல் உணர்வும்
ஓங்குமஉள ஒளிபெருக் குணர்வும்
கருவுறு செல்வம் எனக்கவின் பெறவே
கதிரவன் இருள்துமித் தொளியைப்
பருவரல் உலகம் அடைதரா வண்ணம்
பரப்புதல் போல்அறி வொளியை.

நந்தமிழ் நாடோ நானிலத் தியங்கும்
நாகரி கத்துறை நாடும்
எந்தநல் நாடும் ஏற்றுப்போற் றிடுமா
றின்னுரை வழங்குநற் கொண்டால் !
செந்தமிழ்த் தூயமை செறிதேச பக்தன்
தினப்பதிப் புடன்நவ சக்தி
பைந்தமிழ்ப் புலவர் உரைவளம் பெற்றே
பாங்குற நடத்தினை பன்னாள்.

முன்னையான் பதிதொல் காப்பிய மூலம்
முதன்மைய தென்றுநல் மதிப்புச
சொன்னஅம் மதியோ டென்னையும் வல்ல
நாட்டறம் சொற்றிட வைத்தாய் !
உன்னையும் அன்னை இயற்கையும் உணர்ந்தோர்
உனதுடல் மயிலைநன் காட்டில்
மனப்பதைத் திரள்ஓர் மைலென்ச் சூழ
வனிக்கிரை ஆக்கினார் யாரோ !

—பு. சீ புன்னைவனநாத முதலியார்.

## நெஞ்சே ! இதுகேள் !

தொண்டுக் கொருவன் தூயதமி ழுக்கொருவன்
பண்டை நெறியுணர்த்தும் பான்மையன—அண்டினரை
ஆதரிக்கு நல்லோன் அருளார் திரு வி.க.
தீதகற்ற எங்குற்றான் சென்று ?

நெஞ்சே ! இதுகேள் : நம் நேயன் திரு வி க
வஞ்சமிலா தென்றுநாம் வாழ்தற்கு—விஞ்சியசீர்
நூல்களபல தந்தான் ; நுவலுதுமவா, மற்றவன்போல்
சால்புற்று நிற்போம் தழைத்து.

—வித்துவான் மே. வீ. வே. பிள்ளை.

# திரு. வி. க. வின் சேமவைப்பு

[செல்லூர்க்கிழார் திரு. செ ரெ. இராமசாமிபிள்ளை]

செந்தமிழ்த் திருமகனார் திரு. வி. க. நமக்குச சேமவைப்பாக வைத்தவை, அவா அருளிய ஐம்பதுக்கு மேறபட்ட உரைநடை, பாநடைகளால் அமைந்த நூற்கள. அவையாவும் செந்தமிழ் வளம துறமிய ஓவியஙகள் ஆகும். அவை கருத்துச் செறிவும், உரைவளமும செறிந்தவை. அதனகண அமைந்திருக்கும் சொறகள் முழுதும் உயிரப்புள்ளவை. அவைகளைப் படித்து இடைவிடாது பயிலவோர் வீரம, அறம், அன்பு, அருள், அறிவு முதலியவற்றில் சிறந்தாராவதொருதலை. திரு. வி. க. இயற்கை அறிவூற்று. அவ்வூற்றிலிருந்து சுரந்து பெருக்கெடுதது வந்தவையே இந்நூல் வைப்புநிதிகள். இவைகள் எக்காலததும வாடாத பொன்மலர்கள்; மென்மலாகள்; நனமலாகள், மணமலாகள்; இவைகளில் தோயத் தோய அவை, ஒருமகனை அந்தணமை வழியல கொண்டு நிறுததும். இவா மனத்தடத்து நிலைதத சமயநெறி சைவநெறி அந்நெறி, திரு. வி. க. உள்ளத்தடத்தில் பொதுநெறியாகப் பன்மையில் ஒருமையாகக் கிளர்ந்துள்ளது. அக்கிளர்வில் பூததவை, திருமால அருளவேட்டல, கிறிஸது வின அருள்வேட்டல், கிறிஸதுமொழிக குறள், சமரசதீபம, அருகன் அருகே முதலிய அரிய நூலகள். மேலும் பொதுநெறிகொணடு ஆற்றிய சொறபொழிவுகள் நூல்வடிவில உருவாகியுள்ளன. அவைகளெலலாம் சுவைத்துப்படித்தற்கேற்ற அழகுமிககவை. அவைகளுட் சில:

(க) மனிதவாழ்க்கையும காந்தியடிகளும்

(உ) பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைததுணை

(ங) இந்தியாவும விடுதலையும்

(ச) தமிழ்த தென்றல் அல்லது தலைமைப் பொழிவு

(ரு) பரம்பொருள் அல்லது வாழ்க்கைவழி

(சு) நாயன்மாா வரலாறு

(எ) இருமையும ஒருமையும

(அ) முருகன் அல்லது அழகு

(கூ) சீர்திருத்தம் அல்லது இளமைவிருந்து

(க0) இராமலிங்கசுவாமிகள் திருவுள்ளம

(கக) முடியா? காதலா? சீர்திருத்தமா?

(கஉ) என் கடன் பணிசெய்து கிடப்பதே

(கங) சைவத்தின் சமரசம்

(கச) சைவத்திறவு

(க௫) சன்மார்க்க போதமும் திறவும்

(கசு) தமிழ்நாடும் நம்மாழ்வாரும்

(கஎ) இமயமலை அல்லது தியானம்

(கஅ) கடவுள் காட்சியும் தாயுமானாரும்

(கக) சித்தமார்க்கம்

(உ0) தமிழ் நூல்களில் பௌத்தம்

இன்னும் பல நூல்களுமாகும். இவ்வழியா உடலங்களை என்றும் நிலவுமாறு செய்யவேண்டுவது, நம் தமிழக மாந்தர் கடமையும், உரிமையுமாகும். எத்தனை எத்தனை நூல்கள் தேடுவாரற்றுக் கறையான் உண்டு பசியாறிற்று; மண்கொண்டு மறைந்தது, கடல்கொண்டு செறிந்தது. மக்கள் வெற்றாரவாரமான நூல்களைப் படிக்கின்றனர். அந்நூல்கள் பெயரளவில் நூலாகுமேயன்றி நூல்வரிசையில் சேர்த்தெண்ணப்படா. அவைகளைக் கற்பதால் கருத்து ஒன்றுமின்றாயப் படித்த அளவோடு முடிவதன்றி மக்கள் மக்களாக வாழவேண்டிய வழியைக் காட்டா; ஒழுக்கத்தினின்றும் இழுக்கத்துக்கே கொண்டுசேர்க்கும். நம் திரு. வி. க. நூல்களில் கலைகள் உண்டு; கருத்து உண்டு; இயற்கை உண்டு; செயற்கை உண்டு, அதில் ஞாயிற்றொளி; திங்கள் வெண்கதிர்; கடலின் கருநிறம்; பொழில், வயல், கா, யாறு, மலை முதலிய காட்சிகளும் உண்டு. இவ்வியற்கைகளிடையே செந்தமிழணங்கின் அழகொளி, மின்னி மின்னிக் காட்சி நல்கும்; இவ்வொளியினிடையே உள்ளொளி கிளர்ந்து உயர்ந்து தோன்றும். அவ்வுயர்வினால் மக்கள், அஃறிணைப் பிறப்பற்று உயர்திணை மக்களாய் இலகுவர். அச் சிறப்பை நல்குவது நம் திரு. வி. க. தந்த சேம வைப்பாம் திரு நூல்கள். இவைகள் மறு மறு பதிப்புத்தோன்றி, உலகில் நன்னெறியை வளர்க்குமாறு செய்யவேண்டுவது தமிழக மாந்தர் தனிப் பெருங்கடமை. அவ்வழியே கருத்தூன்றிப் படாத தமிழ்மக்களைப் பணிவுடன் வேண்டுகின்றோம்.

---

# பொன்மொழிகள்

வாழ்க்கை உள்ளொளியைக் குறிக்கொண்டு அமைந்து தோன்றுமின், அது மாண்புடையதாகும்.

உள்ளொளிப்பேறே வாழ்க்கையின் குறிக்கோள்

இயற்கைப் போக்குக்கு அரணாக வாழ்க்கையை நடத்துவது அறம்

இறைவன் செந்நிறம்; இறைவி நீலநிறம்

இறைவனை மறத்தல் நன்றி கொல்வதாம்.

கடவுட் காட்சிக்கு அக் கடவுள் துணை இன்றியமையாதது, அத்துணையுடன் உயிர்கள் முயற்சியும் வேண்டும்.



திரு வி. க.

ஆராயப்புகும் ஒவ்வொரு பொருட்கண்ணும் அறிவு விளங்க விளங்க அவ்வப்பொருளைப்பற்றிய அறியாமை தேய்தல் பெறுகின்றது

ஆண்டவன் ஆன்மாவை அறியாமையினின்றும் எடுத்துத் தன்னைப்போலாக்குதற்கு மாயை என்னும் கருவியைக் கொள்கிறான். அம்மாயையின் காரியமே இவ்வுடல் உலகம் முதலியன.

கடவுளைக் காட்டும் செந்நெறியே சமயம். சமயநெறி நில்லாதவர் மக்களல்லர். சமயங்களைத் துருவித்துருவி ஆராய்ந்தால் அவற்றின் அடியில் சமரசம் நிலவுவது காணப்படும். சமரசம் கடவுட் காட்சிக்குரியது.

இளமையில் யான் பயின்ற சில ஆங்கில நூல்களினும் தமிழ் நூல்களினும் பொருளாக மகாத்மா காந்தி என்னறிவில் இன்று விளங்குபவரானார். அவ்விளக்கம் அரணாக நின்று என் வாழ்வைப் பண்படுத்திவருகிறது

முன்னைய வாழ்வில் நிகழ்ந்த பல மாறுதல்களுள் இரண்டு எனது நினைவில் அடிக்கடி உறுவது வழக்கம்: ஒன்று, 'யான் இரவும் பகலும் ஒரு பெருங் காதல்கொண்டு சென்னை வெஸ்லி கலாசாலையில் ஆங்கில மயமாக நின்று பயின்று மெட்ரிக்குலே

ஷன் பரீட்சைக்குப் போகுந்தருவாயில் எனக்குத் தேனென இனித்துவந்த ஆங்கிலத்தை வேம்பெனக் கைக்குமாறு செய்து என் மனதை அந்தமிழில் தோய்த்தாண்ட யாழ்ப்பாணம் நா. கதிரைவேற்பிள்ளை அவர்களின் கூட்டுறவு இன்னொன்று, பின்னைப் பலாபால் தமிழ் பயின்று அவ்வெஸ்லி கலாசாலையிலேயே தலைமைத் தமிழாசிரியனாய் அமர்ந்திருந்தபோது பலப்பல பாடப் புத்தகங்கள் எழுதுதற்குச் செய்யப்பெற்ற ஏற்பாடுகளை யொட்டி அம்முயற்சியில் தலைப்பட்ட நேரத்தில் ஐரோப்பாப் பெரும் போரிடை நமது தேசத்தில் எழுந்த சுயஆட்சிக் கிளர்ச்சியும், அதுபோழ்து நேர்ந்த அன்னை பெசண்ட் அம்மையார் சிறைக் காவலும் அம்முயற்சியைத் தகைந்து 'தேசபக்தன்' (தினத் தாள்) ஆசிரிய பீடத்தை ஏற்குமாறு செய்தமை.

எனக்கு இனிய நண்பரென யான் நினைந்துகொண்டிருந்த சிலர் அரசியல் கருத்து வேற்றுமையை மன வேற்றுமையாகக் கொண்டு என்மீது சொல்லம்புகளை பெய்தனர். அவ்வம்புகள் எனது மெலிவிய நெஞ்சிற் பாயும்போது அந்நண்பர்க்குக் கேடு சூழும் எண்ணம் நினைவளவிலும் எழாத உறுதியும் ஆற்றலும் என்பால் இல்லையேனும், காந்தி அடிகளின் அருளுரைகள் எனக்கு அவ்வுறுதியையும் ஆற்றலையும் தந்தன.

யான் பொருட்பேறு பெறாத ஏழைமையேன். மனித வாழ்க்கைக்கு இலக்கியம் மகாத்மா.

சமரச ஞானமாவது எங்குமுள்ள கடவுள் காட்சிபெற்று இரண்டறக் கலந்து பிறவா இறவா நிலையுடையதாகும்.

நல்லியல்பை விழையும் ஒருவன் சத்தியத்தை உண்டுவருவானாக. சத்தியத்தை (உண்மையை) இடையறாது உள்ளிவருவானுக்கு ஆண்டவன் அருள் கூடும்.

நமது நாட்டில் தாய்மொழிவாயிலாக நிகழ்த்தப்பெறும் வாய்மொழிப் பேச்சுக்கு உள்ள ஆக்கல் வேறெதற்கும் இல்லை. தமிழப் புலமையுடையார் தமிழ்ச் சுருக்கெழுத்துப் பயின்று தமிழ்த்தாய்க்குத் தொண்டுசெய்தல் நலம்.

உரிமை வேட்கையை மக்களிடை எழுப்பவேண்டுதற்கு அடிப்படை தாய்மொழி.

ஆக்கவேலை பட்டணங்களில் நடைபெறல் அரிது; அவை நட்குத் தக்க இடம் கிராமமேயாகும்.

நம்மைச் சுற்றிலும் உள்ள தெய்வங்களாகிய மக்களை உயிர்களை வழிபடுவோமாக. நாம் வழிபடவேண்டிய முதற்கடவுளர் நமது சொந்த நாட்டவர்களேயாவர்.

தொண்டர்படையில் சேர்வோர் உயரிய செல்வ வாழ்வை விரும்பலாகாது. அவ்விருப்பம தியாக உணர்வை அழிப்ப தாகும். அகிம்சா தருமம என்னும் அருள்நெறி பரவிலன்றி உலகம உயயாது. இதனைப் பரப்பவேண்டியவர்கள் தொண்டர்களே. பணியில் பெரிதுமில்லை, சிறிதுமிலலை, பணி பொது.

ஆன்மா தேகத்தோடு தொடர்பு கொண்டுள்ள நிலையை ஏற்படுததுவது கடமை.

பெண்மையினின்று தாய்மையும, தாய்மையினின்றும் இனிமையும் மலர்கினறன.

பெண் ஆண பிறவியில உயாவு தாழ்வு என்பது கிடையாது உரிமை இருபாலாாக்கும உரியது.

உரிமையே மக்களின் உயிரணி அவ்வணி இழந்தவர் மக்களாகார், அவர் உயிர்நிலை அறறவர், என்புதோல போாததவர்.

காதலின் பெருமை காதலில் ஈடுபட்டவாக்கே புலனுகும.

உடன் பிறநதவரை நேசியாதவர் உலகை நேசிததல அரிது.

அன்புக்கு உறையுள பெண்மை. தனித்த ஆண்மையில் அன்பு சுரவாது

சமரச சன்மார்க்க சங்க அமைப்பு—தலைமை—இறை, அமைச்சு—இயற்கை. நிருவாகர்கள்—குருமாாகள். உறுப்பினர்களா—உயிர்கள சநதா—இரக்கம

மன உணர்வினர் சத்தினை நேரே உணர்தல் இயலாதாயினும், இயற்கையைககொண்டு சததின் இருபபை உணாதல் கூடும்.

இயற்கைக்கும இறைக்கும் உள்ள தொடாபு பிரிவற்றது

இயற்கையை அன்னை எனறும, இறையை அப்பன் எனறுங் கூறுவது கவிமரபு. வாழ்த்தும வணககமும மெயயனபுவழி நிகழ்தல்வேண்டும

இயற்கையோடு இயைந்த வாழ்வு நடாத்துவோர் ஆததிகர். அவ்வாழ்வு நடாத்தாது வேறுவழியிற செலவோர் நாததிகர்

இயற்கைக் குணத்துக்கு மாறுபட்ட செயற்கைக் குணததை நீப்பது துறவாகும். பெண்ணின் துணையால் ஞானவுணர்வு

பெற்ற பெரியோர்கள் தாய்மைப் பெண்ணை ஒருபோதும் குறை கூறமாட்டார்கள். அவர்களிடத்தும் கடவுளைக் காண்பார்கள். பெண்ணிடத்துள்ள இறைமை அவர்கட்கே நன்கு புலனாகும். குடும்பச்செலவுக்குப்போய்ப் பொருள் எஞ்சிநிற்குமாயின் அதனைக் கலவிச்சாலை, தொழிற்சாலை, வைத்தியசாலை முதலிய அறச்சாலைகட்குப் பயன்படுத்தல் வேண்டும். இதுவே மன்பதைக்குத் துணைபுரியும் முறைமை.

தாய்மொழிவழிக் கல்வி பயில்வது இயற்கைக்கு அரண் செய்வதாகும். நாட்டுக்கலைகள் நாட்டின் உயிர். இதனை அழியுமாறு இடந்தரும் நாடு இயற்கை இன்பம் நுகர்தல் அரிது.

பிறப்பில் மக்கள் எல்லாரும் சமத்துவமானவர்கள். இன்ப துன்பங்கள் எல்லார்க்கும் பொது. அன்பு அகநோக்குப் பெருக்கத்துக்கு உறுகருவி. உயிர்க்கும் இறைக்கும் உள்ள தொடர்பு இயல்பாயிருப்பதைத் தெளிவது அநுபூதி எனப்படும்.

இயற்கையோடியைந்த வாழ்வு சமய வாழ்வாகும். சுகாதாரத்துக்கு அரண்செய்யும் புறக்கோலங்களால் தீங்கில்லை.

சமய வாதம் பொல்லாதது, இழிந்தது.

சத் ஒன்றே, அதற்குரிய மார்க்கமும் ஒன்றே.

கலப்புமணம் இயற்கையின்பாற்பட்டது. அது பலதிற வேற்றுமைகளைக் களையவல்லது.

அகத்தூய்மை அற்ற புறத்தூய்மையாற் பயனில்லை.

நல்லெண்ணங்கள் உயிரையும் உயிர்வழி உடலையும் ஓம்பும் அமிழ்தம்.

இலட்சம் பிரசாரகர்கள் முயற்சியினும் ஒரு நல்லோன் விரதமும் தியானமும் பெருநலஞ் செய்யும்.

அஃறிணை உயிர்களின் வளர்ச்சிக்குக் கேடு சூழ்வோரின் வளர்ச்சியும் தடைபடுதல் இயல்பு.

நிதியுள்ள இடத்தில் பெரிதும் நீதி இருப்பதில்லை.

குறைகளை உணர்ந்து அவைகளைப்போக்க முயல்கின்றவன் சன்மார்க்கத்தில் நிற்க முயல்பவனாவான்.

பெண் ஆணை வெறுப்பதும், ஆண் பெண்ணை வெறுப்பதும் துறவு என்று சொல்லப்படுவது தவறு.

ஒருவன் ஒருத்தியுடனும், ஒருத்தி ஒருவனுடனும் வாழ்வது அறம். பருமை உருவங்களைக் கொளவது வெளிமனம், நுண்மை உருவஙகளைக் கொள்வது உள்மனம்.

உடல் இறை கோயில். அதை நோய்க்குடில் ஆக்குவது தவறு. மலச்சிக்கலே எலலா நோய்கட்கும் தாயகம்.

மல நஞ்சேறப்பெற்ற மூளையினர்க்கு அமைதிததியானம் கூடுதலரிது. தியானம உடலநலனுக்கும உயிரநலனுக்கும் வேண்டறபாலது நோன்பிகட்கு மலம் சிக்குதல் இல்லை.

நாட்டின் உயிர காடு, நாட்டைக் காப்பது காடு. பசுமைக் காட்சி வழஙகாத ஊர் பாழ்.

கதிரொளி பசிலைகள்வாயிலாக உடலில் படர்வது நல்லது. தெய்வமறையின் நிலைமூன்றில் மோனத்தினின்றும் ஒலியும், ஒலியினின்றும மொழியும பிறக்கும்.

காதல் என்பது தெய்வத்தன்மை வாய்ந்தது, அது காமமன்று. காதலரிடம் காதலே வீறுகொண்டு நிற்கும்.

நாகரிகக் கூறுகளாகிய கண்ணோட்டம் உரிமை என்பவற்றுள், பெணணுரிமையினின்றும அரும்பி மலாவது நாகரிகம். உரிமைகளுள் உயிரபோன்றது காதல்வழி மணஞ்செய்துகொள்ளும உரிமையே.

விவேகானந்தா சொற்பொழிவுகளை நன்மனங்கொண்டு வாசிபபோர் ஏட்டு வேதாந்தங்களை விடுத்து வீறுகொண்டு எப்பற்றுமின்றி உயிர்கட்கு ஊழியஞ்செய்யப புறபபடுவா.

துவித வழிபாடே அததுவித ஞானத்தை உண்டுபண்ணுவதாகும். மெய்கண்டார் துவிதவழி அத்துவித உண்மையை அறிவுறுத்தி உலகைச் செமமைநெறியில் நடாத்தும் இயல்பினதாய்ப் பொலிகிறது.

சைவசித்தாநதிகள் எச்சமயத்தாரையும் தங்களுக்கு மாறுபட்டவராகக் கருதலாகாது

தொகுததோர்.

பு சி. புன்னைவனநாத முதலியார்

# திரு. வி. க வின் வாழ்க்கைக்

# காலக் குறிப்பு

12 9-1831 திரு. வி. உலகநாத முதலியார் பிறப்பு.

26-8-1883 தமிழ்ப்பெரியார் திரு வி. க பிறப்பு

1890 துள்ளம் கிராமத்திலிருந்து இராயப்பேட்டைக்குக் குடி யிருப்பை மாற்றுதல்.

1891 இராயப்பேட்டை ஆரியன் பிரைமரி பாடசாலையில் சேர்தல்.

1894 வெஸ்லி கலாசாலையில் சேர்தல். சில மாதங்கட்குள் பக்கவாத முறிவால கால் கைகள் முடங்குதல்.

1894—1898 படிப்புக்கு ஓய்வு.

1898 மீண்டும் வெஸ்லி கலாசாலையில் சேர்தல்.

1901 டிசம்பர் கதிரைவேற் பிள்ளையவர்களைச் சந்தித்தல்.

1901—1906 கதிரைவேலரின் மாணுக்கராய்ப் பயிற்சி பெறுதல்.
1903—ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபை தொடங்குதல.

1904 கதிரைவேற் பிள்ளை வழக்கில் சான்று கூறுதல் மெற்றி குலேஷன பரீட்சைக்குச் செலலத் தீர்க்கெடுக்கப்படாமை, பள்ளிக் கூடப் படிப்பின முடிவு.

11-9-1905 தந்தையார் சிவபதமடைதல்.

1906 'புக் கீப்பிங' பயிற்சி பெற்றுத் தேறுதல்

26-3-1907 கதிரைவேற்பிள்ளை கந்தனடி சேர்தல்.

1907 கடற்கரையில் விபினசந்திரபாலர் சொற்பொழிவுகளைக் கேட்டல.

1907—1908 ஸ்பென்ஸர் கம்பெனியில் வேலை பார்த்தல்.

1908 கதிரைவேற் பிள்ளை சரிதம் இயற்றல.

1908 திருவலலிக்கேணிச் சிவனடியார் திருக்கூட்டம் தொடங்குதல்

1908—1910 மயிலை மகாவித்துவான் தணிகாசல முதலியாரிடம சித்தாந்த சாத்திரம பயிலுதல்.

1908—1910 'உமாபதி குருபிரகாசம் பிரஸ்' தொடங்கிப் பெரிய புராண உரை வெளியிடல்

1908—1915 திருவல்லிக்கேணிச் சிவனடியார் திருக்கூட்டச் சார் பில் பெரியபுராணம் முதற்காண்டம் சொற்பொழிவு செய்து முடித்தல்

1908 ஜஸ்டிஸ் ஸர் டி. சதாசிவ ஐயரவர்கள் நட்புப் பெறுதல்.

1910 அன்னிபெசண்ட் அம்மையாரைச் சந்தித்தல்.

1910—1916 ஆயிரம்விளக்குப் பள்ளிக்கூடத்தில் ஆசிரியராய்ப் பணிபுரிதல்.

1911 டிசம்பர், சைவசித்தாந்த மகாசமாஜத்தில் முதன்முதல் சொற்பொழிவாற்றுதல்.

13-9-1912 கமலாம்பிகையாரைத் திருமணம் புரிதல்.

1912—1918 இல்லறம் நடத்துதல்

1912 டிசம்பர், காஞ்சிபுரத்தில் மணம்பூண்டி குமாரசாமிப் பிள்ளையின் நட்புப் பெறுதல்.

1913 பட்டினத்தார் பாடல்கட்கு உரை எழுதுதல்.

1913 டிசம்பர், ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகள் தலைமையில் சைவசித்தாந்த மகாசமாஜ விழாவில் பேசுதல்.

1914 சுப்பராய காமத் சந்திப்பு

1914 எஸ் சீனிவாச ஐயங்கார் நட்பு.

1915 புதுப்பாக்கம் சிவசுப்பிரமணிய பக்தஜன சபையின் தோற்றம்.

1916 ஜூன், வெஸ்லி கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியராதல்.

1916 டிசம்பர், ஜஸ்டிஸ் கட்சியின் பிறப்பு.

1917 காஞ்சிபுரத்தில் வாடியாவின் கேண்மை.

7-12-1917 "தேசபக்தன்" பத்திரிகாசிரியராதல்.

1917 நவம்பர், மாகாணசங்கக் காரியதரிசிகளுள் ஒருவராதல்; டாக்டர் வரதராஜுலு நாயுடுவைக் காணடல்

5-12-1917 வெஸ்லி கல்லூரித் தமிழாசிரியர் பதவியிலிருந்து விலகுதல்

8-12-1917 சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியாரை முதன்முதல் காணடல்.

27-4-1918 சென்னைத் தொழிலாளர் சங்கம் தோன்றுதல்.

18-9-1918 மனைவியார் கமலாம்பிகையம்மையார் சிவபதமடைதல்

28-2-1919 'தேசபக்தன' ஈடுகாணம் பறிமுதல் செயயப்படுதல்.

6-4-1919 காந்தியடிகளை முதனமுதல காணடல.

18-3-1919 சத்தியாக்கிரக நோன்புநாள.

12-6-1919 லாாட் வில்லிங்டன் தேசியப்பத்திரிகாசிரியாகட்கு எச்சரிக்கை வழங்குதல்.

1919 ஈ. வே. இராமசாமி நாயக்கர் நட்புப் பெறுதல்.

17-12-1919 பாலகஙகாதர திலகர் காட்சி

11-1-1920 அன்னிபெஸண்ட் அம்மையாருக்கு வரவேற்பு.

4-7-1920 மத்தியத் தொழிலாளர் சஙகம் பிறத்தல்.

22-7-1920 "தேசபக்தன்" ஆசிரியர் பதவி நீத்தல்.

21-10-1920 பக்கிங்காம் மில் கதவடைப்பு

22-10-1920 "நவசக்தி" பத்திரிகை தொடங்குதல்.

11-11-1920 தொழிலாளர் இயக்கத் தலைவர்மீது வழக்கு.

1920—1929 பல அரசியல் மாநாடுகளில் தலைமை தாங்கலும் பேசுதலும்

27-1-1921 மில் கதவடைப்பின் முடிவு.

20-6-1921 மீண்டும் வேலை நிறுத்தம்.

5-7-1921 லார்ட் வில்லிங்டனுடன் சந்திப்பு.

9-8-1921 வழக்கு நிறுத்தம்.

10-8-1921 எயலிங் கமிட்டி விசாரணை.

29-8-1921 டிசம்பர் துப்பாக்கிப் பிரயோகம்.

1921 வேலைநிறுத்த முடிவு.

21,22-11-1925 காஞ்சிபுரத்தில் தமிழ்நாட்டுக் காங்கிரஸ்மாநாட்டுத் தலைமை வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் பற்றிய தீர்மானம் புறக்கணிக்கப்படுதல். ஈ. வே. ரா. முதலியோர் வெளியேற்றம்.

1926 தென் இந்திய ஜீவரக்ஷா சபையின் பிறப்பு.

25-2-1927 சாபூர்ஜி சகலத்வாலா சந்திப்பு.

9-10-1928 தமையனார் முதல்வன் திரு. உ. பாலசுப்பிரமணியம் சிவபதமடைதல்

1931 சென்னைத் தொழிலாளர் சங்க நிலையத் திறப்பு விழா.

1933 டிசம்பர் மாமண்டூரில் உழவர் வேலை நிறுத்தம்.

1934 ஜூலை சைவ சித்தாந்த மகாசமாஜத் தலைமை.

1937 காங்கிரஸ் மந்திரி சபை அமைத்தல்.

1939 காங்கிரஸ் ஆட்சியில் மில்வேலை நிறுத்தம்.

1940 ஜனவரி திருவொற்றியூரில் பஸ் நிறுத்தம்.

1941 திருவாட்டி இராதாமணியம்மையாருக்கு "நவசக்தி" பத்திரிகையைத் தருதல்.

14-4-1943 சென்னைத் தொழிலாளர் சங்க வெள்ளி விழா.

24-8-1943 திரு வி. க. அறுபது ஆண்டு நிறையப்பெறுதல்.

19-1-1943 பெத்துநாயக்கன்பேட்டையில் திரு. வி. க. மணி விழா.

25-8-1943 முதல் பல நாட்கள் மணி விழாக் கூட்டங்கள்.

27, 28, 29-12-1943 மதுரையில் சைவர் மாநாட்டுத் தலைவர்.

30, 31-12-1943 காரைக்குடி இந்துமதாபிமான சங்கத்தில் வெள்ளி விழாத் தலைமை.

12-2-1944 திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்பு நூல் வெளியீடு.

1945—1946 தமிழ்த்திருமணங்கள் நடாத்தி வைத்தல்.

11-3-1947 மில்தொழிலாளர் வேலை நிறுத்தம்.

29-3-1947 அந்தோணி பிள்ளை சிறை—திரு. வி. க. மீண்டும் மில் தொழிலாளர் சங்கத் தலைமைப் பதவி.

9-6-1947 திரு வி. க. இல்லத்தில் போலீசார் காவல்

7-7-1947 திரு வி. க இல்லச் சிறைவாச நீக்கம்.

7-12-1947 தமிழாசிரியர் துக்கவார இறுதிக் கூட்டம். மொழி யாசிரியர் மாநாடு

14-8-1948 சென்னைமாகாணத் தமிழாசிரியர் மாநாட்டில் சுந்தரம் பிள்ளை படத்திறப்பு

1949 கண்ணில் படலம்—ஒரு கண் பார்வை மறைதல். 'பரம பொருள்' நூல் எழுதுதல்.

1950 இரு கண்களும் ஒளி இழத்தல். 'இருளில் ஒளி,' 'அருகன் அருகே' முதலிய நூல்கள் எழுதுதல்

20-10-1951 'முதுமை உளறல்' என்னும் இறுதி நூல் எழுதுதல்.

5-1-1952 டாக்டர் தருமாம்பாள், சிவ - முத்து மணிவிழாவில் தலைமை கொண்டமை.

3-9-1952 எழுபதாம் ஆண்டின் துவக்கம் காரணமாக 'எழுபதின் எழுச்சி' என்னும் அரிய செய்தியை மாணவர் மன்றம் மூலம் இளைஞர் கட்கு அறிவித்தல்

24-8-53 முதல் 16-9-1953 வரையில் சென்னை மாகாணம் முழுதும் எழுபதாம் ஆண்டு நிறைவு விழாக் கொண்டாடுதல்.

6-9-53 இராயப்பேட்டை பாலசுப்பிரமணிய பக்தஜனசபையில் திரு. வி. க மணிமண்டபம் நிறுவுதற்குத் தீர்மானம்

17-9-53 இரவு 7-45 மணி: தமிழ்ப்பெரியார் திரு வி க இறை திருவடிப்பேறெய்துதல்

18-9-53 பகல் 3 மணி முதல் இரவு 7 மணி வரையில் கூலித் தொழிலாளர் நிலையத்திலிருந்து மயிலைமாநகர் நன்காடு நிலையம் வரையில் மாபெரும் ஊர்வலம்

18-9-1953 இரவு 7 மணிக்குமேல் மயிலைமாநகர் நன்காடு நிலையத்தில் பெரியார் திரு. வி. க. அவர்கள் பொன்னுடலம் எரியூட்டப் பெறல்.

---

## சமயம்

இன்பப் பொருளாம் இறைவனை அடைதற்கு உயிர்கள் கடைப்பிடித்தொழுகும் ஓர் அறவழியே சமயம் என்று கூறலாம். சமயமென ஒன்றில்லையேல் உலகில் அறமேது? அன்பேது? ஆன்ம உணர்வேது? மக்களை விலங்கினின்றும் பிரித்து, அவர்களைச் செந்நெறியில் நிறுத்தி, ஆண்டுவருவது சமய மெனில், அதன் பெற்றியை என்னென்று கூறுவது?

**திரு. வி. க. சைவத்தின் சமரசம்—பக்கம் - ௮.**

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ சுப்பையா.



மகாமகோபாத்தியாய, பண்டிதமணி

மு. கதிரேசச் செட்டியார் அவர்கள்

தோற்றம் 1881

மறைவு 24-10-1953

[பக்கம் ககரு




சிலம்பு உஅ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௪, ஐப்பசி
நவம்பர், 1953 | பரல் ௩

# பண்டிதமணி மறைவு

பண்டிதமணி என்றால் தமிழகம் முழுதும் அறியும்; நாடறியும், நகரறியும், வீடறியும், ஏடறியும், கடல்கடந்த நாடுகளும் அறியும். அத்தகைய தமிழ்ப்பேரறிஞர் முதுபெரும் புலவர் பண்டித மணியார் கதிரேசனார், சென்ற 24-10-53ல் இறைவன் திருவடிப் பேறுற்றார்கள்.

இவர்தம் மறைவால் கலைவானம் மங்கிக் கிடக்கின்றது; கலைவானில் ஒளிவிளங்கித் தோன்றும் ஞாயிறு அவர். பாட்டுக்கு ஒருமணியாக, நாட்டுக்கொரு பெரும்புலவராக விளங்கினார். அவர் பிரிவு ஈடுசெய்ய வொண்ணாத வொன்றாகும்.

கடல்மடை திறந்தெனத் தட்டுத்தடையின்றிப் பேசும் நாநலங்கனிந்த நாவலர் காவலர்; பாநலம் பயின்ற பண்பினர்; வடமொழி வல்ல மாண்பினர்.

கலை ஊற்று; இன்பச் சுரங்கம்; அன்பின் ஆறு; அறிவுக் கடல்; தெருளின் ஒளி; சைவ ஞாயிறு, மெய்ம்மைக்கேணி; அறத்தின் ஆணி; மறத்தின்வாள்; தமிழ்வளம் இன்று தணந்தது! சாய்ந்தது!

அன்றோர் புலவர், பெருஞ்சாத்தன் என்னும் ஓர் வள்ளல் பிரிவுக்கு வருந்தி,

'முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே'

என, அஃறிணையுலகை விளித்து வினவிக் கதறினார்.

அதியமான் அஞ்சியின் அரும்பிரிவுக்கு ஆற்றாத ஔவை மூதாட்டியார்,

'ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
இனிப், பாடுநரும் இல்லைப் பாடுநர்க்கு ஒன்று
ஈகுநரும் இல்லை'

என, அழுது சாம்பினர் அவன் பண்பைப் பாராட்டிய. அளந்து கொடையறியாக் கோச்சேரமான் இறந்தகாலை,

'மைந்துடை யானை கைவைத் துறங்கவும்
திண்பிணி முரசம் கண்கிழிந் துருளவும்
காவல் வெண்குடை கால்பரிந் துலறவும்
காலியற் கலிமாக் கதியின்றி வைகவும்
மேலோ ருலகம் எய்தினன்'

எனக் கூடலூர்கிழார் வாய்விட்டுக் கதறிப் புலம்பினர்.

இன்று யாம் பண்டிதமணியார் பிரிவுக்கு எச்சொல் எடுத்துப் புலம்புவது! அவர் பெருமை அளத்தற்கரியது! அஞ்சொல் நுண்தேர்ச்சிப் புலவர் சொல்லினளவேயாம் அதற்கு எல்லை. அவர் பிரிவை நினைந்து நினைந்து அறிஞருலகம் அலமருகின்றது! சைவ உலகம் தத்தளிக்கின்றது! காவிய உலகம் கதறுகின்றது! ஓவிய உலகம் உலைவுறுகின்றது! புலவர் உலகம் புலம்புகின்றது! செந்தமிழ்த்தாய் நைந்து நைந்து உருகுகின்றாள்! இந்நிலையில்,

மண்ணும் மருள, மலையும் கனிய, நீரும் கொதிக்க, நிழலும் சுழல, அருங்கலைஞர் பண்டிதமணி, முதுபெரும்புலவர், மகாமகோ உபாத்தியாயர், மு கதிரேசச்செட்டியாரவர்கள் மறைந்தார்கள். அவர் மறைவு கருதி,

'ஊனில் ஆவி உயிர்க்கும் பொழுதெலாம்
நானிலாவி யிருப்பனென் னாதனை'

என, இறைவனை அப்பர்பெருமான் பரவியதொப்ப, யாமும் உள்ளங்கசிந்து நெக்குருகுகின்றோம்.

இன்று பண்டிதமணியார் பறந்தார்! கலைப் பறவையன்றோ பறந்தது! செழுங்கலை வாணரார் சென்றார்! செந்தமிழ்ச் செல்வமன்றோ சென்றது! கலையும் பண்பும் அன்பும் அறமும் வீரமும் நேர்மையும், வேர் கவடு தளிர் இலை காய் கனிகளாக அமைந்து நின்ற அரிய தாருவன்றோ சாய்ந்தது! தமிழ்மண்ணில் வேரூன்றி ஓங்கி உயர்ந்த கொடுமுடிகொண்ட மலையன்றோ வீழ்ந்தது! இம்மணியின் பிரிவு குறித்து நாடெல்லாம் மறுக்கங் கொண்டுளது! இத்தகைக் கலைஞர் நம் நாட்டிடை இனி எக்கால் தோன்றுவரென அறிவறிந்த இளைஞருலகம் ஏக்கங் கொள்கின்றது!

வடமொழி தென்மொழிக்கடல், அதன்சுவை என்பெல்லாம உருக்கும; தெள்ளத்தெளிந்த கதிர், அதன் ஒளி நினைப்பவர் நெஞ்செல்லாம விளக்கும; இன்பமேகம, அதன் நீர்மைப் பொழிவு கல்லையும கரைக்கும; கனிவிக்கும். இத்தகை உருக்க மிக்கவர் நம பண்டிதமணி கதிரேசனார்.

பண்டிதமணி வடமொழியில் வல்லுநராயினும், 'மணிப்பிரவாளம்' எனனும கலப்புத் தமிழ்நடை அவர்கள் எழுதிய நூல்களில் விரவுவதில்லை. அவர்கள் கலப்புத் தமிழ்நடை, தமிழை வளமபடுததாதென்னும ஊன்றிய கருததுடையர் இது முறுகி வளாதற்குக காரணம், மறைத்திரு மறைமலையடிகளாரின் வளர் தொடாபே.

இவாகள கலைததிறனைப் பாராட்டிப் பட்டஙகள் பல சார்ந்து, அவை பெருமையுற்றன. பட்டததால் பெருமை பெறுவாா பலா, பட்டம் சிறபபுற்றது கதிரேசனாரால். பண்டிதமணியென்றால் பிறரைக் குறிக்காது இச் சான்றோரையே குறிததல் ஓர்க பண்டிதமணிப பட்டம் இவாகள தோற்றுவிதத மேலைச்சிவபுரி சன்மாாக்கசஙகச் சாாபிலும், முதுபெரும புலவாப் பட்டம செனனை மாகாணத தமிழ்ச்சஙகச் சாாபிலும, மகாமகோ உபாத்தியாய பட்டம் அரசினரால் அண்ணாமலைப பலகலைக் கழகச் சாாபிலும் வழஙகியனவாகும். இப் பட்டஙகளும மணியாரைப் பிரிநதன!

ஒரு நூலின் சொறகள் சொற்றொடர்கள் நம்போன்றார்க்கு வெறுங் கறபனையாக—எதுகைமோனைத் தொடைக்கமைநத சொறகளாக—சொற்றொடர்களாகத் தோன்றும. நம கதிரேசனார்க்கு அரிய கருததாகக் கற்பனையாக-கலைவிளை பயனாக-அரிய காட்சியாகக்-காட்சிதரும். இவர்தம் கலைத்திறங்கண்டவராகிய மறைநததென்றல் திரு. வி. க. ஒருகால் பணடிதமணியாரைப் பாராட்டுமுகமாக, 'கதிரேசனார் காவியமானாா; காவியம் கதிரேசனாராயிற்று' என, அவர்தம் செநநா புகழ்நதது. அத்தகைய வாய்ப்புப்பெற்றவர் நம் பண்டிதமணி. எழுத்தெண்ணி, எழுத்தின் திறனறிநது கற்றவர் நம் பண்டிதமணி; நுனிப்புல மேய்வார் உலகுவேறு, கதிரேசனார் உலகுவேறு! 'இருவேறு உலகத்தியற்கை' என்னும செந்நாப் போதார் திருமொழியைக் கடந்தவர் நமபண்டிதமணி. இததகைச் செம்மைசான்ற நங்கதிரேசர் கலைபிழிவுத தீஞ்சாற்றை மாணவர் மனத்திலே—கலைஞர் காதகத்திலே—சுவைஞர் உளத்தடத்திலே - ஓடி நிரம்பிப் பெருகி நிலைத்து நின்று மகிழுமாறு ஊட்டுவார்; ஊற்றுவார். சொற்பொழிவின் இடையிடையே நகைச்சுவை தோன்றும்; அது தூங்குவோரை எழச் செய்யும் துடிப்புடையது. அதனிடையில்

நுண்கருத்து ; அறிவுநுட்பம் மிளிரும். பின்னர்க் கருங் கொண்மூ மின்னென மறையும் பண்டிதமணி பேச்சு எல்லை யற்றது. அவர் பேச்சே தனிக்கலை ; அதை அவர்களுடன் தோய்ந்து பழகினோர் உணர்வர். அவர் பேச்சில வெற்றுச் சொற்கள், வேண்டா வெறுப்புத்தரும் மொழிகள் இல்லை

'கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல்'

என்னும் பெருநாவலர் ஒரு மொழிக்கு இலக்காக இலங்கியது நம் பண்டிதமணி பேச்சுநடை. அவர் வாயினின்றும் மலர்வன தமிழ், பழந்தமிழ்நாடு, பரந்த தமிழ்நாடு, அதன் கலை பண்பு மாண்பு வள்ளன்மை புலமை இவைகளே.

1940 நவம்பர் 30, திசம்பர் 1-ஆம் நாட்களில் நம கழகச் சார்பில் சென்னையில் நிகழ்ந்த குறுந்தொகை மாநாட்டுக்குத் தலைமை தாங்கி விரிவுரையாற்றி அங்குக் குழுமிய அவையினரை இன்பக் கடலில் மூழ்குவித்தார்கள். 'குறுந்தொகை'க் கடவுள் வணக்கச் செய்யுட்கு இவர்கள் விரித்துரைத்த உரைவளம் மிகச் சிறப்புக்குரியது. அச் செய்யுளில அமைந்துள்ள கருத்து நயம், கருப்பொருள், உரிப்பொருள், உவமையழகு முதலிய யாவற்றையும் தம் அஃகி ஆழ்ந்தகன்ற அறிவுத் திட்பத்தால் யாவரும் உரை விளக்கியுள்ளார்கள். அப்பேருரை அவர்கள் தலைமைப் பொழிவு. அது, 'குறுந்தொகைச் சொற்பொழிவு என்னும் எம் வெளியீட்டு நூலில் வெளிவந்துளது.

எம்மால் தமிழ்நலங்கருதி வெளியிட்டு வரும் 'செந்தமிழ்ச் செல்வி' என்னும் திங்கள் இதழுக்குப் பல்லாண்டுகள் இதழா சிரியர் கூட்டத்து உறுப்பினர்களில் ஒருவராக அமர்ந்து பல தலைப்புகளில் அரியபெரிய கட்டுரைகள் வழங்கியுள்ளார்கள் அவை கருத்துவளம், திட்ப நுட்பம், இலக்கிய நயம், சமய நுண்மை செறிந்தவைகளாக உள்ளன.

எம் செந்தமிழ்ச் செல்வி வரிநெடும்புத்தகத் தெழுதிய எம் தமர் பெயர், இப்போது பெயர்தற்கு மனந்துணுக்குறுகின் றோம்! மரீஇப்பின்னைப் பிரிவு வருந்துதற்கிடனன்றே! யாது கழறுவது? உலக நிலை ஒன்றொன் றொருவழி நில்லா நிலையாமைத் தன்றே !

இத்தகைய அறிஞரைத் தமிழகம் நன்கு பயன்படுத்தில் றில்லை. இற்றைநாள் தமிழகத்துக்குப் பயன்படுத்தவும் தெரி யாது. அவ்வாய்ப்பை அது பெறவுமில்லை. அதற்குக் காரணம் தனித் தமிழரசு அமையாததே. தமிழகம் ஒருதலைப்படவில்லை; அது நான்குபுறமும் சிதறுண்டுக் கிடக்கின்றது. தமிழரசு

அமைந்திருப்பின் நம் பண்டிதமணியைப் பயன்படுத்தியிருக்கும். நம் மணியாரைச் சிறைகாத்தியிருக்கும். அவர் இருமருங்கினும் கலைத்துறை முற்றிய இளம்புலவர் பலரை இரவும் பகலும் இருத்திருக்கும்; நம் மணி வாயில் எத்தமிழ் முத்துக்கள் உதிர்கின்றன என ஏக்குற்று நிற்கச் செய்திருக்கும். மணியின் மலர்வாய் எதனை உமிழும்? தண்ணார் தமிழை, அவ்வறத்தையன்றோ? அவர், அக்கலைத்தேறலை, ஆணிமுத்துக் கோவையை வடிப்பர், சேர்ப்பர்; குவிப்பர்; அவை தமிழகத்துக்கு என்றும் கெடாத வான கலையான—தமிழுருவான—செழுங்கலைச் சேம வைப்பான—நூலாகக் கிட்டும். அந்நூற்கள் தமிழ், தமிழகத் தொன்மை முதலியவற்றை நல்கும். அது நாட்டை வளப்படுத்தும் அதனால் தமிழன் நாகரிகப்பண்பை எல்லா நாட்டுக்கும் எடுத்து நவிலும். அவ்வரசு அமையாததால் இன்று தமிழகம் தமிழ்த்தொன்மையை மறந்தது! நாட்டுநலத்திற கால் கொண்டிலது! கலைக்கருத்தைக் கை விட்டுளது! பண்பின் தலைப் பிரிந்தது! தனித்தமிழில எழுதப்-பேசக்-கூசுகின்றது. தனித்தமிழ் கூடா என்பார்க்கு மணியின் 'உரைநடைக் கோவை' என்னும் கட்டுரை நூலொன்றே சாலும்! தன்னுரிமை பெற்ற பண்டைத் தமிழ்நாடு உயர்கலை பெற்றோங்கி யிருந்தது. இன்றோ இந்நிலை! அந்தோ தமிழ்நாடே! உன் பக்கல் நாடுகள் கலைஞரை-புலவரை-எப்படிப் பயன்படுத்துகின்றன? உனக்கு எக்கால் இப்பண்பு கிட்டுமோ அறியோம்!

வங்கநாடு கவி இரவீந்திரநாதரை எப்படிப் பாராட்டியது, பாராட்டுகின்றது? இங்கிலாந்து சேக்குப்பியரை எவ்வாறு உயர்த்துப் போற்றுகின்றது? இங்கிலாந்து இளைஞன் ஒருவனை 'சேக்குப்பியர் வேண்டுமா? இந்தியநாடு வேண்டுமா? இதில் ஒன்று கூறு' என, ஒரு நண்பர் அவனை வினவியபோது, அவன், 'இந்தியாவை இழப்பினும் இழப்பேன்; பிற வேறெதை இழக்க நேரினும் ஏற்றுக்கொள்வேன்; என் சேக்குப்பியரை ஒரு போதும் இழந்து இருக்கமாட்டேன்' எனக் கூறினன் என்ப.

அவ்வீறு நம தமிழகத்தே மலர்தல்வேண்டும்; நம் இளைஞருலகில் அதனைக் காண்கின்றோமில்லை. சேக்குப்பியர், ஃசெல்லி, பைரன் முதலிய கவிஞர்கள்பால் இங்கிலாந்து இளைஞனிடத்துத் தோன்றிய அன்பு, இன்று நம் தமிழக இளைஞன் திருவள்ளுவரிடத்துக் கொள்கின்றானா? இளங்கோவிடத்து அவன் மனம் எழுச்சி கொள்கின்றதா? இல்லை! இல்லை! என்றே கூறலாம்.

தமிழகம் பழம் பெருமை கூறுவதோடமைகின்றது. செயலில் கொணர அஞ்சுகின்றது! அண்மையில் தமிழகத்

தந்தை திரு. வி. க. மறைந்தார். அவரை யடுத்து இப் பெரியாரும் பிரிந்தார். அடுத்தடுத்து அறிஞர்கள் மறைவது தமிழ் நாட்டுக்கே பெரும் அதிர்ச்சி உண்டாக்குவதாகவுள்ளது. ஆகக வேலை செய்யும பெரியார் ஒருவரைக காண்டற்கியலாவாறு இதுகாலை அருகியிருக்கின்றது.

"பொன்னே கொடுத்தும் புணர்தற் கரியாரைக
கொனனே தலைககூடப் பெற்றிருந்தும்—அன்னோ
பயனில் பொழுதாக் கழிப்பரே"

என்னும் பொன்மொழிக்கு நன்கிலக்காக நடப்பதே நம் தமிழக மக்களின் நிலையாகப் போயிற்று.

இலக்கணம் கைப்பது; புளிப்பது; இருப்புக்கடலை என்று கூறும் கூட்டம் நம் நாட்டிடை இன்றும் உள்ளது. அது இனிக்கும், சுவையுள்ளது எனக் கூறிக் காட்டிக் கல்லைப் பிசைந்து கனியாக்கும் வித்தை நம பண்டிதமணியாக்கு உண்டு. தொல்காபபியச் சொல்லதிகாரச சேனாவரையததை மாணவரன்றிப் பிறரும் கதை கேட்பதுபோல் காது கொடுத்துக் கேட்குமாறு சொல்லவல்ல சொல்லின் செல்வா நம பண்டிதமணி! சமயம் குருட்டுவழி என்று கூறும நாத்திகர்க்கு, சமயமே மக்களாக்குவது, விலங்கினினறும் மக்களைப் பிரிப்பது எனத தெருட்டி, அவா உளங்கொள்ளுமாறு உரைக்கும் ஒண்மையர் பண்டிதமணி. திருவாசகததை தித்திக்கக்கூறி உரை காட்டுவார் நம் பண்டிதமணி. சிலம்பை, மேகலையை, தேவரை, திருத்தக்கதேவரை, கம்பரை, சேககிழாரைத் திறம்படக்காட்டும் திறலார் நம் பண்டிதமணி ஒருவரே. அற்றைத திஙகள் அவ் வெண்ணிலவில் நம மணி வீற்றிருந்தார்! இற்றைத் திங்கள் இவ் வெண்ணிலவில மறைந்தார்! அவரை இழநதோம்! ஆ! 'நெருநல் உளனொருவன் இன்றில்லையென்னும் பெருமையுடைத்தன்றோ இவ்வுலகம?

உலகில் மரையிலைபோல மாய்நதிசினோர் பலர்! உரையும் பாட்டும உடையார் ஒருசிலரே! நம் மணி உரையும் பாட்டும் உடங்கியைந்த பெரியார். அவர் பொன்றாப் புகழ், தமிழ்நாடு உள்ள அளவும், தமிழ் ஏடு நிலவும வரையும் நின்று நிலவும. திருவாசகத் தேனுக்கு அவர் பேருரை பாலாகக் கலந்து இனிக்கின்றது! அதன் கருத்தில் தோய்ந்த பலர், களிப்பாரும, தேனிப்பாருமாக இலகிப் பண்டிதமணியின் பண்புடலைப் பாராட்டுவர். நம்மிடையே கலந்து கருத்தில் நிலவுகின்றார் நம் கதிரேசனார். அந்தோ! திருவாசகம் முழுதிற்கும் அவர் உரைகாணும் முன் காலனும் கண்ணறை கவர்ந்தனன்! இவ்வளவேபோலும் தமிழ்நாடு செய்த தவப்பயன்!

இவர்தம் திறனை ஒருவாறு கண்டு அண்ணாமலைப் பல்கலைக் கழகம் ஏற்றுப் போற்றியது. இவர் திறங்கண்டு போற்றிய பெருமை வள்ளல் இராசா சர். அண்ணாமலைச் செட்டியாரவர்கட்கே உரித்து. அக்கழகத்தில் பன்னீராண்டு தமிழ்ப்பணி புரிந்தார்.

இத்தகையார் எங்கோ எப்போதோ இரண்டாயிரம் மூவாயிரம் யாண்டுகட்கு ஒருமுறைதான் தோன்றுவர். அவரைக் காலமுண்டாகவே காதலசெய்து பயன்படுத்திக்கொள்ளவேண்டுவது அந்நாட்டு மக்கள் கடன். அவர் பருவுடல் இன்று மறைந்தது. ஆனால், அவர் தந்த நுண்ணுடற்கூறுகள் நம்மிடையே இருக்கின்றன. அந் நுண்ணுடலாம் அறிவுநூற் செல்வங்களை நமக்கு ஈத்துச் சென்றனர். 'ஈந்தவர் அல்லது இருந்தவர் யாரே' என்பது முதுமொழியன்றோ? நாம் அவைகளைப் பயன்படுத்திக்கொண்டு வாழ்தலே சிறப்பு. அவை, வடமொழியினின்று அகழ்ந்தெடுத்த 'சுலோசனை', 'மிருச்சகடிகம்' என்னும் 'மண்ணியல் சிறுதேர்', 'சுக்கிரநீதி' முதலியனவும், 'உரைநடைக் கோவை' என்னும் கட்டுரை நூலும், 'திருவாசகக் கதிர்மணி விளக்கம்' என்னும் உரைநூல் முதலியனவும் பிறவும் ஆகும். இவைகளைப் பயில்வோர் அறிவுத் திறலோராய் மிளிர்தல் ஒருதலை. அஃதறிந்து யாவரும் பயிலுதலவேண்டும் அதுவே, அவர்க்கு நாம் எழுப்பும் மணிமண்டபம்; நினைவுக்குறி. வெற்றுரைவாரத்தால் பயன் இன்று. அவர் ஆன்மா இவ்வாரவாரச் செயலை விரும்பாது. ஆகவே, அவர் நூற்செல்வத்தைக் கற்றல் கேட்டல் சிந்தித்தலே செயற்பாலது; இன்றியமையாது நமக்கு வேண்டற்பாலது.

'அந்தோ! பண்டிதமணியாரே! அறிந்தோர் சொன்மலையே! பலர்புகழ் நன்மொழிப் புலவர் ஏறே! முதுபெரும் புலவரே! மகாமகோபாத்தியாயரே! கதிர்மணி விளக்கக் கதிரேசனாரே! யாண்டுற்றீர்! யாண்டுற்றீர்!' எனக் கூறி வருந்தியாழ்கினும் அவர் நம்மிடை வாரார், தோன்றார். செயற்பாலன அவர் நூல்களைக் கற்றல் கேட்டல்களே என ஓர்மின்!

பண்டிதமணியாரின் பிரிவாற்றாது வருந்தும் அவர் அருமைப் புதல்வர் புதல்வியர்கட்கும், விருப்புறாச் சுற்ற மேதகையாளர்க்கும் எம் ஆற்றொணாக் கடப்பாடுடைய வருத்தத்துடன் ஆறுதல் கூறுகின்றோம்.

பண்டிதமணியவர்களின் அரும்பெறல் ஆருயிர், இறை சிவபெருமான் திருத்தாண் மலரில் ஒன்றி இன்பத் தேனுண்டு என்றும் இன்புறுவதாக!

—ஆசிரியர்.

# பண்டிதமணியின் மாண்பு

[திரு. ஔவை. சு. துரைசாமிபிள்ளை, மதுரை.]

முதுபெரும்புலவர் மகாமகோபாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் அவர்கள் இந்த நூற்றாண்டில் சிறந்து விளங்கிய புலவர் பெருமக்களுள் தலைமையிடம் பெற்றுத் திகழ்ந்தவர். தமது தனியுழைப்பு ஒன்றாலே உயர்ந்த பெரியவர். செட்டிநாட்டிலுள்ள மகிபாலன்பட்டியில் தனவணிகர்குடியிற் பிறந்து தமிழிலும் வடமொழியிலும நல்ல புலமைபெற்று உயர்நது அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப்பேராசிரியராய் இருநது தமிழ்ப்பணிபுரிந்து ஓய்வு பெற்றுத திருவாசகததுக்கு உரையெழுதும் பணியை மேற்கொண்டு அது முடியுமுன்பே மறைந்து இறைவன் திருவடிப் பெருவாழ்வு பெற்றார்.

மகிபாலன்பட்டிக்கு அப் பெயர் இடைக்காலச் சோழ மன்னர் காலத்தில் உண்டாயிற்று; அதற்கு முன்பெல்லாம் அவ்வூர் 'பூங்குன்றநாட்டுப் பூங்குன்றம்' என்று வழங்கிவந்தது. சங்ககாலச் சான்றோர்களுள் கணியன் பூங்குன்றன் என்னும் சான்றோா இவவூரினர்; "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்று தொடங்கும் பாட்டு அப் பூங்குன்றனாருடையது. பரந்த புலமையும் சால்புமுடைய அத் தக்கோர் நிலவிய ஊரே நம் பண்டிதமணிக்கும் பிறந்த வூராய்த் தமிழ்ப்பெரும்புலமை யெய்துதற்கு ஏற்ற இடமாய் அமைந்தது; இஃது அவர்கள் கருவிலே வாய்த்த தமிழ்த்திருவாகும்.

சான்றோர் பாராட்டும் தகவுடைப்புலமை எய்தியதும் பண்டிதமணியவர்கள் தாம் பயின்ற வடமொழிக்கண் சிறந்து நிலவிய நூல்களுள் சுக்கிரநீதியைத் தமிழில் மொழிபெயர்த்தார்கள். அதன்பின் சுலோசனை, மிருச்சகடிகம், உதயணகாவியம ஆகியவற்றை இனிய தமிழில் மொழிபெயர்த்தார்கள். பண்டிதமணியவர்கட்கு முன்னோரும் பின்னோருமாகப் பலர் தோனறி வடமொழிநூல்கள் மொழிபெயர்த்தோர் உண்டு. அவர் பலரும் தமிழில் நிரம்பிய புலமையில்லாக் குறையால் கற்பவர் விரும்பத்தக்க நிலையில் அம்மொழிபெயர்ப்புக்களைச் செய்யும் திறம் குன்றினர் பண்டிதமணியின் மொழிபெயர்ப்புக்கள் முதனூலினும் சிறந்த சொன்னலமும் பொருள்வனப்பும்கொண்டு சிறப்புற்றன. சுக்கிரநீதி, மிருச்சகடிகம் (மண்ணியல் சிறு தேர்) என்ற இரண்டன்மொழிபெயர்ப்புக்கள் அச்சாகி வெளிவந்துள்ளன.

இந்நிலையில் மேலைச்சிவபுரியில் சன்மார்க்க சங்கத்தை நிறுவி ஆண்டுதோறும் விழாக்கள் நடத்துவதுடன், பல மாணவர்களை மதுரைத் தமிழ்ச்சங்கத்தார் நிறுவி நடத்திய தேர்வுகளுக்கு அனுப்பும் முறையில் கல்லூரி நிறுவி இடையறவின்றி நடைபெறச் செய்தது பண்டிதமணியின் கல்விப்பணியாகும். சன்மார்க்க சங்க நிகழ்ச்சிகளில் தமிழகத்தில் சிறந்து விளங்கிய தமிழ்ச்சான்றோர் பலரும் கலந்து இன்புறுவது வழக்கம். இப் புலவர்பெருமக்கள் பண்டிதமணியவர்களின் புலமை நலத்தை வியந்து தம்மிற்கலந்து நல்கிய சிறப்புத்தான "பண்டிதமணி" யென்னும் பட்டம்

பண்டிதமணி யவர்களின் பெரும் புலமைநலத்தை நேரிற் கண்டு வியந்து பாராட்டி இன்புற்ற தஞ்சைக் கரந்தைத்தமிழ்ச் சங்கத் தலைவர் த. வே. உமாமகேசுவரன்பிள்ளை அவர்கள் வாயிலாக அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தார் பண்டிதமணியவர்களின் புலமைச் சிறப்புணர்ந்து பல்கலைக்கழகத்திற் பேராசிரியராகக்கொண்டு பெருமையெய்தினர். அக்காலத்தே அவரது புலமை விளக்கத்தை யறிந்து இந்திய அரசியலார் அவர்க்கு மகாமகோபாத்தியாயர் என்ற சிறப்புப் பெயர் தந்தனர்.

பண்டிதமணி யவர்கள் "வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகம்" முற்றும் சுற்றி ஆங்காங்குள்ள தமிழறிஞர் கூட்டத்தில் இனிய சொற்பொழிவாற்றி இன்பம் செய்தவராவர். அவருடைய சொற்பொழிவு எளியநடையில் அரிய கருத்துக்களை இலேசாக உரைக்கும் இயல்பினதாகும். எல்லோரும் நன்கு தெரிந்த பாட்டேயாயினும், அது பண்டிதமணியவர்களின் சொற்பொழிவில் அகப்படின், அவர் அணைவரும் அதுகாறும் கேட்டிராத நயங்கள் பல உட்கொண்டிருப்பது வெளிப்பட்டுக் கேட்டார் உள்ளத்தைப் பிணித்து இன்பம் செய்யும். பெரிய புராணம், சிலப்பதிகாரம், கம்பராமாயணம் என்ற தொடர்நிலைச் செய்யுட்கள் வரலாறு கலந்தவையாகலின், இயல்பாகவே இனிமையுறச் சொல்லாடும் பண்டிதமணியால் அவை பெரிய அறிவின்பநிலையமாய்க் காட்சியளிப்பது ஒரு புறம் இருக்க, இறையன்பில் பேரீடுபாடுகொண்ட திருவாசகப் பாட்டுக்கள் வந்துவிடின், பண்டிதமணியவர்களின் சொன்னலம் காலமும் கருத்தும் கடந்து இறையின்ப வெள்ளத்தில் ஆழ்த்தி மகிழ்விக்கும் இயல்பிற்றாகும்.

பண்டிதமணியவர்கள் ஒரு கூட்டத்தில் தலைமை தாங்குகின்றார்கள் என்றால், சொற்பொழிவாளர் பலரும் மிக்க விழிப்புடன் தமது பணியை ஆற்ற முற்படுவர். சொற்பொழிவில் பொறுக்குமளவினும் மிக்கஅளவில் குற்றம் நிகழின்,

மகாமகோபாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியாரவர்கள்
பிரிவுக்கு இரங்கிக் கூறிய

# கையறுநிலைப் பாக்கள்

[மதுரைத் தமிழ்ப்பேராசிரியர் திரு ஆ. கார்மேகக் கோனார்]

தமிழ்மொழியின் அமிழ்தென்னும் தாவில்சிலம் பின்சுவையும்
இமிழ்திரைசூழ் வரைப்பினிணை யிலாதகம்பன் கவிச்சுவையும்
அமைதரவே புலவோர்க்கிங் களித்தகதி ரேசவண்ணால்!
இமையவர்க்கும் அச்சுவையை யெடுத்தளிக்கச் சென்றனையோ (1)

ஓதுவா ருளங்கரைத்தே உற்றபெரும் மலங்கெடுக்கும்
போதமார் வாசகத்தின் பொருளெல்லாம் புகன்றுநன்கு
ஏதமிலாப் பேரவையை யின்புறுத்தும் கதிரேசா!
கேதமார உளத்தோடும் கேளிரனைய நீத்தனையே! (2)

வடமொழியும் தென்மொழியும் வடித்துணர்ந்து வடமொழியின்
திடமுள்ளகாப் பியச்சுவைக்குச் செந்தமிழ்க்காப் பியச்சுவைதான்
எடையிலிமி யுங்குறையா தென்நிறுத்துக் காட்டிஅவை
அடல்பெறும்எம் கதிரேசா! அகன்றனையே! அகன்றனையே! (3)

வேறு

கவியியற்றல் உரைகாண்டல் கட்டுரைகள் வரைதலவை
களிக்கும் வண்ணம்
நவையிலருஞ் சொற்பொழிவு புரிதல்மொழி பெயர்த்தலிவை
நன்கு சேர்ந்த
உவமையிலாப் பெரும்புலமை உன்போலுற் றார்களெவர்
உற்றார் யாரும்
அவலமிகக் கதிரேச! அண்ணால்! நீ அகன்றனையீ
தளிய தாமோ! (4)

குறிப்பு:—(1) தாவுஇல - குற்றமில்லாத. சிலம்பு - சிலப்பதிகாரம். இமிழ்திரை - ஒலிக்கும் அலைகளையுடைய கடல். வரைப்பு - உலகம். (2) கேதம் - துன்பம். வாசகம் - திருவாசகம். (3) எடையில் - நிறுவையில். இமியும் - இம்மியும்; மிகச் சிறிய அளவு. அவை - வாதசபை. அடல் - வெற்றி.

தென்னிந்திய தமிழ்ச்சங்கம், திருநெல்வேலி

# புலவர் மாணவர் தேர்வு

இச்சங்கததார் ஆண்டுதோறும் "புலவர் மாணவர் தேர்வு நடத்தித தேர்ச்சியுற்றவர்கட்குத் தகுதிததாள்களும் முதற் றகுதியில் முதன் மூவர்கட்குப பரிசுகளும வழங்கி வருகின் ரூர்கள்.

1954 பிப்ரவரிமீ 22 (மாசிமீ 11) திங்கட்கிழமை முதல் ஆறுநாட்களும் ஷை தேர்வு சென்னை மாநிலத்திலுள்ள விதது வான் கல்லூரிகளெல்லாம வழக்கம்போல நடைபெறும்.

சென்னைப் பல்கலைக்கழக வித்துவான் பட்டத் தேர்வுககும அதன முறபகுதிகளாகிய வித்துவான் முதனிலை, விததுவான் புகுமுகவகுப்புககும விண்ணப்பிததெழுதும் தனிபபட்ட மாணவாகளும மேற்குறிதத கலலூரிக கட்டிடத்தில் எழுதித் தேர்ச்சியுறலாம்

வித்துவான் இறுதிநிலைககு ரூ. 3,-ம் விததுவான் முத னிலைக்கு ரூ 2,-ம் புகுமுக வகுபபுக்கு ரூ. 1ம் கட்டணங்களாம்.

விண்ணபபங்கள் வெற்றுததாள்களில எழுதிக் கட்டணத் துடன் 1953 டிசமபாமீ 20உக்குள திருநெலவேலிக் கீழைத தோத்தெரு 24-ஐ தென்னிநதிய சைவசித்தாநத நூற பதிப்புக் கழக மேலாளா முகவரிககு அனுப்பபபடவேண்டும. பிறகு குறிபபுகட்கு நேரில் எழுதவும.

தெ த சஙகம
நெல்லை

பு. சி. புன்னைவனநாதன,
புலவர் குழுத்தலைவர்.

# செய்திகளும், குறிப்புக்களும்

**கரந்தைக் கவியரசு பிரிவு**

தமிழ்ப் பேரறிஞா, கரந்தைக் கவியரசு ஆர். வேஙகடாசலம் பிள்ளை யவர்கள 6-12-53-ஆம் நாள ஞாயிற்றுககிழமை நணபகல் 1-30 மணிக்கு இறைவன் திருவடிப்பே றெய்தினாகள். அவாகள் பிரிவு, தமிழுலகுக கும அறிஞருலகுக்கும் ஆற்ரெுணா வருததந்தருவதாகும்.

அவாகள, பனனெடுஙகாலம் கரந்தைத் தமிழ்சசங்கததில் ஆசிரியராக அமாந்து தமிழ்ப்பணி ஆற்றியுள்ளாாகள. பல உரைநடை நூல்களும, சிறந்த தமிழ்ப் பாக்களும் யாததுள்ளாாகள். இவாகள் வரலாறு, அடுதத செலவி இதழில் வெளிவரும்.

இவாகள் பிரிவு குறித்து வருந்தும் அன்னார் குடும்பததார்க்கு ஆறுதலுடன், எம் ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்துககொள்கின்றோம்.

—ஆசிரியர்.

*விருதைத் தமிழ்க் கழகத் தீர்மானம்*

26-9-1953 தி. வ. ஆண்டு 1984 புரட்டாசி 10-ம் நாள் சனிக்கிழமை பிற்பகல் கூடிய விருதைத் தமிழ்க்கழகப் பேரவைக் கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேறின.

**தீர்மானங்கள்**

எண் (6) அ. 'ஔவையார்' என்ற திரைப்படத்தை "ஏழாண்டுகள் முயன்று ஔவையார் வரலாற்றைத் திரைப்படமாக எடுத்திருக்கின்றோம்" என்று கூறி நடத்துகிறார்கள். ஆனால் அப்படத்தில் சிறந்த வரலாறுகள் மறைக்கப்பட்டும், இல்லாதன பல புகுத்தப்பட்டும், கால மாறுபாடுகள் பல காட்டப்பட்டும், குறிப்பாக வள்ளுவப் பெருந்தகையை இழிவு படுத்தியும், பல முரண்பாடுகள் சேர்க்கப்பட்டும் காட்டப்படுவதால் இக்கழகம் அவற்றிற்காக மிகவும் வருந்துவதுடன் வன்மையாகக் கண்டிக்கிறது.

ஆ. இனிமேல் வெளிவரும் திரைப்படங்களில் இலக்கியத்திற்கும் வரலாற்றுக்கும் மாறுபாடான நிகழ்ச்சிகள் வாராதவண்ணம் தடுக்க வேண்டுமென்று அரசியலாரை வேண்டிக்கொள்கின்றது

இ. அதனோடு தமிழறிஞர்களும் இத்தகைய நிகழ்ச்சிகளில் விழிப்புடனிருத்தல் வேண்டுமென்றும் வேண்டிக்கொள்கின்றது.

எண் (7) **ஆந்திர மாகாணம் பிரிந்துவிட்டதனால் இனி, தமிழ் மொழியை ஆட்சி மொழியாக்க வேண்டுமென்றும் தமிழ் மாகாணத்தை அமைக்கவேண்டுமென்றும் அரசியலாரை வேண்டிக்கொள்கின்றது**

குறிப்பு —மேற்கண்ட தீர்மானத்துக்கு நாடெல்லாம் ஆதரவளித்துத் தமிழ்மொழிக்கும், வரலாற்றுண்மைக்கும் ஆக்கமளிக்க வேண்டுவது முதற்பெருங் கடமை.

**—ஆசிரியர்.**

---

# மதிப்புரை

*இராமநாதபுர மாவட்டக் கழகச் சாதனைகள்*

இவ்வறிக்கைநூல் இராமநாதபுரம் மாவட்டக் கழகம் (ஜில்லா போர்டு) 1949 முதல் 1953 வரை அவ்வட்டத்திற் செய்த அரும்பெரும் பணிகளின் விரிவை விளக்குவதாகும்.

இக் கழகத்தில் பல அறிஞர்களும், செல்வர்களும் தலைவராக அமர்ந்து தொண்டாற்றியுள்ளனர், அண்மையில் தலைவராக அமர்ந்து பணியாற்றியவர்கள், பாகனேரி உயர்திரு சி. உ. சுப உடையப்பர் அவர்கள். இவர்கள் தம் காலம் முழுதும் நாட்டுத் தொண்டொன்றே குறிக்கோளாகக்கொண்டு பணிபுரிந்துவருபவர்கள். இவர்கள், காங்கிரசுப் பேரவையின் உறுப்பினராகப் பன்னெடுங்காலம் இருந்து நாட்டுக்கு நலஞ்செய்துவருபவர்கள் இவர்கள் தொண்டின் நலனை உணர்ந்த மக்கள் இராமநாதபுரம் மாவட்டக் கழகத்துக்குத் தலைவராகத் தேர்ந்தெடுத்தனர். அப்பதவியையேற்று உடையப்பர் அவர்கள் 27-9-49 முதல் 30-6-53 வரை இருந்து தொண்டாற்றியுள்ளார்கள். அத்தொண்டின் விளக்கமே இவ்வறிக்கை.

இவ்வறிக்கையில் சாலை வேலைகள், கல்வி, மருத்துவ சாதனங்கள் என மூன்று பிரிவினுள்ள தொண்டுகள் குறித்து விளக்கப்பட்டுள்ளன. இறுதியில் அதன் வரவு செலவு கணக்குகளும் கொடுக்கப்பெற்றுள்ளன.

இந்தக் கழகம் ஆட்சிபுரிந்த காலத்தில் 52 மைல் 7 பாலாங்குள்ள 7 சாலைகளை அகலப்படுத்தியும், 192 மைல் 1 பாலாங்குள்ள 44 சாலைகளில் கல் பரப்பியும், 25 மைல் 6 பாலாங்குள்ள 3 சாலைகளுக்குச் சரள் (Gravel) பரப்பியும் உள்ளது. அரசினர் முழுவுதவிபெற்று பெரும் பாலங்கள் 4-ம் சிறு பாலங்கள் 9-ம் கட்டியது. 48 மைல் 4 பாலாங்குள்ள 9 சாலைகளுக்குக் கல் பரப்பியது.

இக்கழக ஆட்சிக்கீழ் துவக்கப்பள்ளிகள் 509-ம் உயர்தரத் துவக்கப் பள்ளிகள் 41-ம் நடுநிலைப் பள்ளிகள் 4-ம் உயர்நிலைப் பள்ளிகள் 15-ம் இருக்கின்றன. 37 பெரிய மருத்துவ நிலையங்களும், 31 கிராம மருத்துவ நிலையங்களும் இருக்கின்றன. 1949-ல் இக்கழகம் ஆட்சி ஏற்குங்கால் மூடிக்கிடந்த 18 கிராம மருத்துவ நிலையங்களை மீண்டும் திறந்து நடத்தியது குறிக்கத்தக்கது.

நோயாளர் தங்கி நோய் நணிக்கப் பெறத்தக்க மருத்துவ நிலையம் ஒன்றைப் பரமக்குடியில் பெண்களுக்கெனத் தனியாக 12-10-51 முதல் தொடங்கியுளது. சேத்தூரில் 22-1-51 முதல் ஓர் மருத்துவ நிலையம் அமைத்து நடக்கின்றது. சிவகங்கையில் உள்ள கழகப் பெண்கள் குழந்தை மருத்துவ நிலையத்தின் காம்பவுண்டில் பொதுநலக் கழகத்தார் கட்டித்தந்த மகப்பேறில்லம் ஒன்றை 27-2-53 முதல் துவங்கிச் செயலாற்றிவருகின்றது. இன்னும் இதன் தன்னலமற்ற பணிகள் பல.

இப்பணிகளைத் தலைவராக அமர்ந்து ஆட்சிப் பொறுப்பேற்று நடத்தி வந்த உயர்திரு. உடையப்பர் அவர்களின் பயன்கருதாத்தொண்டு பெரிதும் பாராட்டற்குரியது. ஆட்சிப்பீடத்தில் அமருவோர் தந்நலங்கருதாதவராய், இவர்கள்போல் நாட்டு ஆக்கம் கருதுபவராய் அமர்தல் வேண்டும். அறிவறிந்த காலமுதல் நாட்டு நலங்கருதி உழைப்பதில் நாட்டங்கொண்ட நல்லார் உடையப்பர் அவர்கள் நலவுளப்பாங்கினால் வையையாற்றின் 'உடையப்பர் பால'மும், பேரையூர்ப் பாலமும், முடங்கியாற்றுப் பாலமும் நடராசபுரம் 'முத்து உல உலகப்ப செட்டியார்' பாலமும் புதுவனவாக உருவாயின. பள்ளிக் கட்டிடங்கள் பலவும் எழுந்தன. அவர்கள் பிறந்த ஊராகிய பாகனேரியில், உ இரு. மு முத்தையா அம்பலம் அவர்கள் பெயரால் உயர்நிலைப் பள்ளியும் உண்டாயது.

இத்தகைய அரும்பணிகளை இனிவரும் ஆட்சிப்பொறுப்புத் தலைவர்கட்கு வழிகாட்டிய உடையப்பர் அவர்களின் கைம்மாறு வேண்டாக் கடப்பாடு நிலத்தினும் பெரிது, வானினும் உயர்ந்ததெனப் பாராட்டி மகிழ்கின்றோம்.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.

தமிழ் ஆட்சிமொழி மாநாடு, சென்னை—20-12-53



திராவிட பார்லிமெண்டரி கடசித்தலைவா, திருவாளா,
எஸ். சுயமபிரகாசம அவாகள, எம். எல ஏ
துவககஉரை நிகழத்துதல



தமிழ ஆட்சிமொழி மாநாட்டுக்கு வந்திருநத
பெருநதிரளான மககட கூட்டம




சிலம்பு ௨௮ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௪, மார்கழி
சனவரி, 1954 | பரல் ௫

# தமிழ் ஆட்சிமொழி ஆகவேண்டும்!

தமிழ்மொழி, தமிழர் தாய்மொழிமட்டுமல்ல. நூறு நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்வரையில், அது தமிழகத்தின் ஆட்சிமொழியாக ஆயிர, பதினாயிரக கணக்கான ஆண்டுகள் நிலவியுள்ளது. தன்னரசைத் தான் ஆண்டதுடன் அமையாமல், சேர சோழ பாண்டியர் தமிழ்ப்பேரரசராயிருந்த காலங்களிலெல்லாம், அதுவே கங்கம், கலிங்கம், வங்கம் முதலிய நிலங் கடந்த எல்லைகளிலும், ஈழம் (இலங்கை), கடாரம் (மலாயா), பழந்தீவம் (மாலத்தீவு) ஆகிய கடல்கடந்த எல்லைகளிலும் தன்மொழி வைத்து ஆண்டிருக்கிறது. அத்துடன் மற்றப் பல மொழிகளைப போலல்லாமல், தமிழ் தமிழரின் சமயம், இலக்கியம், கலை, அறிவுத்துறை, பண்பாடு ஆகிய எல்லாத் துறைகளையும் அளாவிய முழுநிறை தேசியமொழியாகவும் அமைந்துள்ளது. இத்தகைய மொழி ஆட்சிமொழியாக வாய்ப்பளித்தால், திறம்பட்ட ஆட்சிமொழியாகவும், மற்றத் தாய்மொழிகளுக்கு வழிகாட்டியாகவும், உலக நாகரிகததை இன்னும் உயர்த்தி வளப்படுத்தும் மொழியாகவும் இயங்கும் என்பதை எவரே மறுக்கமுடியும்?

தமிழின் இன்றைய நலிவுக்குரிய தலையான காரணம் ஒன்றே ஒன்றுதான்—நூறு நூற்றைம்பது ஆண்டுகளுக்குமுன் வெள்ளையர் இந்நாட்டின் ஆட்சியையும் கல்வித்துறையையும் கைப்பற்றியபோது, தமிழ் ஆட்சிமொழிப் பதவியையும் கல்வித்

துறையில் முதனிலையையும் ஒருங்கே இழந்துவிட்டது. தமிழறி ஞரும் தலைவரும் எத்தனையோ தமிழியக்கங்களாலும், தனித் தமிழ் இயக்கங்களாலும், தமிழர் இயக்கங்களாலும் இந்நலிவைப் போக்க முயன்றுள்ளனர்; ஆனால், அவற்றால் நலிவைத் தடுத்து நிறுத்த முடிந்ததேயல்லாமல், ஆக்கமுறையில் தமிழை வளம் பெற வளர்க்கமுடியவில்லை. தமிழுக்குப் பாடுபடுபவர் அனை வரும் வறுமையிலும் உரிமையற்ற நிலையிலும் கிடந்துதான் பாடுபடவேண்டிய சூழ்நிலை அமைந்துள்ளது. ஏழைத் தமிழன் தமிழ்க்குரல் ஆட்சியம்பலமேற வகையற்றுத் தவிக்க வேண்டியதாயுள்ளது. இந்நிலை மாறவேண்டுமானால், தமிழர் அனைவரும் கிளர்ந்தெழுந்து தமிழை ஆட்சிமொழியாக்கித் தீர வேண்டும்.

மாநிலம் தன்னாட்சிபெற்று ஆறு நீண்ட ஆண்டுகள் ஆய்விட்டன. இன்னும் தமிழ்மொழி மீட்டும் தன்னாட்சி பெற்றபாடில்லை. நம் மாநிலத்துடன் ஒரே நாளில் தன்னாட்சி பெற்ற சின்னஞ்சிறிய இலங்கையில், சிங்களமொழி மட்டுமன்றி, நம் தமிழ்மொழியும் சரிசமமாக அரசியல்மொழியாக ஆக்கப் பட்டிருப்பதைப் பார்க்கிறோம தமிழ்நாட்டுத் தமிழா மட்டும் தமிழின் உரிமையைப் பாதுகாக்க முடியவில்லை என்பது தமிழில் பற்றுடைய தமிழர் அனைவர்க்கும் வருத்தந தரத்தக்க நிலையே யன்றோ? அயலாராகிய சிங்களவரிடமிருந்து இலங்கைத்தமிழர் பெற்ற இந்த மொழியுரிமையை நம்மவராகிய நம் தாய்நாட்டு ஆட்சியாளரிடமிருந்து நாம்பெற முடியாதா?

அண்டைவீட்டு மொழிநாடாகிய ஆந்திரம் தன்மொழிநாடு பெற்றதுடன், உடனடியாகத் தன் மொழியாட்சியும் நிறுவி யுள்ளது. தமிழர் ஆட்சி செய்யும் தமிழகம் மட்டும ஆந்திரருக்கு இவ் இருவகையிலும் பின்னிடைந்து நிற்பது காணத தமிழன்பர் வருந்தாதிருக்க முடியாது.

மத்தியபாரத்தின் நிலை இபபோதைய சென்னையின் நிலை யிலிருந்து வேறுபட்டதன்று. மராத்தி மொழியைப் பெரும் பான்மை மக்கள் பேசுகிறார்கள். ஆனால் மொழிஎல்லை பிரிக்கப் படவில்லை. ஆயினும் அரசியலாரின் மொழிநேர்மையை இது தடுக்கவில்லை. அவர்கள் மராத்தியை ஆட்சிமொழி ஆக்கிச்

சட்டம் செய்து தம் நாட்டுப்பற்றை மெய்ப்பித்திருக்கிறார்கள்.

தமிழக ஆட்சியாளரும இதுபோல முன்வந்து தமிழை ஆட்சிமொழியாக்கிச் சட்டம் அமைத்திருந்தால், அது அவர்கள் பெருமைபடததக்க ஒரு செயலாயிருந்திருக்கும். ஆனால் பொதுமன்றத்திலும் மேல்மன்றத்திலும் தமிழ்ஆர்வமும் நாட்டார்வமும் உடைய சில உறுப்பினரே இதற்கான சட்டம் கொண்டு வர முயற்சி செய்து வருவதாக அறிகிறோம். இது வரவேற்கத்தக்கது. தமிழன்பர் உள்ளப்புண்ணுக்குப் பேரளவு ஆறுதலும் தருவதே. இதற்காதரவாகச் சென்ற திசம்பர் 20-ம் நாள சென்னை அண்ணாமலை மன்றத்தில், சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கத்தின் முயறசியால், தமிழ் ஆட்சிமொழி மாநாடு ஒன்றும் நடைபெற்றிருக்கிறது. ஆளும் கட்சிததலைவர்கள், எதிர்கட்சித்தலைவர்கள்உட்பட, கிட்டத்தட்டத தமிழகத்தின் எல்லாக் கட்சியினரும் கட்சிச் சார்பற்ற அறிஞரும் கலைஞரும் தலைவரும் இமமாநாட்டில் கலந்து, தமிழை ஆட்சிமொழியாக்கு வதற்குப் பேரூக்கம் அளித்துள்ளனர். தமிழ் உள்ளார்வமும், தமிழர் அனைவரின் ஒருமிதத பேராண்மையு முடைய இம்மா நாட்டின் முடிவும் அறிநது தமிழ்மக்கள் மொழிச்சீட்டால் தேர்வுபெற்ற மன்ற உறுப்பினரும், ஆட்சியாளரும் விரைவில் தமிழ்ஆட்சிமொழிச் சட்டத்தை நிறைவேற்றிச் செயற்படுத்துவார்களென்று எதிர்பார்க்கிறோம்.

'மொழிவாரி மாநாடு இன்னும் அமையவில்லை; அது அமைநதபின் தமிழ் ஆட்சிமொழியாய் விடும்' என்று தமிழருக் கெதிராகச் சிலா வாதிடக்கூடும். இது நொண்டிச்சாக்கு. நேர்மையுமற்றது. ஏனெனில் ஒரு தவறை அடைக்க இன்னொரு தவற்றைப் பயன்படுத்துவதாகவே இது அமைகிறது. மொழிவாரியாக நாடு பிரிவதை விரும்பாதவாகளே, மொழி வளர்ச்சிக்கு எதிராகப் பன்மொழி ஒற்றுமையை ஒரு முட்டுக் கட்டையாக எடுத்துக்காட்ட முன்வந்து விடுகின்றனர். உண்மையில் மொழிநாடு அமைந்துவிட்டபின்கூட மொழிச் சிக்கல் தீர்ந்துவிடாது. நாட்டுமொழி ஆட்சிமொழி ஆனால் மட்டுமே தீரும். ஆகவே, மொழிநாடு அமைப்பது வேறு;

ஆட்சிமொழிச் சட்டம் வேறு. ஒன்றன் முதன்மையை ஒன்று குறைக்காது, நிறைவுபடுத்தவே செய்யும்.

இப்போது சென்னை அரசுக்குச் சட்டப்படி ஆட்சிமொழி எதுவும் இல்லை. பதினொரு ஆண்டுகளில் ஆங்கிலமும சட்டப்படி விலக இருக்கிறது. அதன்பின் ஆங்கிலமொழியின் இடத்தில் இந்திதான் அமரமுடியும். தமிழ் ஆட்சிமொழி ஆகும் வாய்ப்பை அதற்குள் ஏற்படுத்தாவிட்டால், தமிழர் மொழியுரிமைக்கு எளிதில் நீக்கமுடியாத பெருங்கேடு ஏற்பட்டுவிடும்.

பெரும்பான்மை மொழியை ஆட்சிமொழியாக்கச் சட்டப்படியோ, மக்களாட்சிமுறைப்படியோ எத்தகைய தடையும் கூற முடியாது. ஆந்திரநாட்டில் தமிழ் பேசுபவர் இருந்தாலும், தெலுங்கு ஆட்சிமொழியாகியுள்ளது. மததியபாரதத்தில் மராத்தியை ஆட்சிமொழியாக்கி அரசியலார் சட்டம அமைத்தது இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்துக்கு மாறானதன்று என்றே கூட்டரசின் முறைமன்ற நடுவர் தீர்ப்பளித்துள்ளனர்!

திருச்சிராப்பள்ளியில் தமிழாட்சிபற்றிய தேர்வு நடந்து வந்துள்ளது. ஆட்சிமொழிச்சட்டம் ஆக்குவதற்குமுன் அதன் முடிவறிய வேண்டும் என்று சென்னை முதல்வர் சட்டமன்றத்தில் பேசியுள்ளார். ஆனால், தேர்வுமுறைகள் நடைமுறைத் திட்டங்களுக்கான முதற்படி மட்டுமே. தமிழ் ஆட்சிமொழியாக வேண்டுமென்ற நோக்கத்தையோ, அதற்கான சட்டத்தையோ அது பாதிக்கத் தக்கதன்று. தமிழர் உரிமை காக்கும் முயற்சியில் இத்தகைய முட்டுக்கட்டை போடுவது தமிழக நலனுக்குப் பாதகமானது என்று கருதுகிறோம்.

தமிழ் ஆட்சிமொழி ஆகும்வரை மாநிலம் தன்னாட்சி பெற்றதனாலான பயனைத் தமிழும் தமிழரும் அடைந்தவர் ஆகமாட்டார். ஆகவே, தமிழகத்துக்கும் மாநிலத்துக்கும் உரிய தம் கடனாற்றத் தமிழகப் பொதுமக்கள் கிளர்ந்தெழுந்து மன்ற உறுப்பினருக்கும் ஆட்சியாளருக்கும் ஊக்கம் அளிப்பார்களென்று நம்புகிறோம்.

# ஆட்சிமொழி மாநாட்டு நிகழ்ச்சிகள்

கடந்த 20—12—1953 ஞாயிற்றுக்கிழமையன்று சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கத்தின் சார்பில், சென்னை அண்ணாமலை மன்றத்தில் தமிழ் ஆட்சிமொழி மாநாடு இனிது நடைபெற்றது. இம்மாநாட்டிற்கு ஓய்வுபெற்ற மாவட்ட நீதிபதி திருவாளர் ஆ. கசபதி நாயகர் பி.ஏ., பி.எல்., எம்.எல்.சி. அவர்கள் தலைமை தாங்கினார்கள். ஆயிரக்கணக்கான தமிழன்பர்கள் இம்மாநாட்டில் கலந்து தம் மகிழ்ச்சியையும் கிளர்ச்சியையுந் தெரிவித்தனர்.

## வரவேற்புரை

தமிழ் ஆட்சிமொழி மாநாடு பிற்பகல் 3-மணிக்குத் துவக்கப்பட்டது. முதன் முதலில் இசையரசு எம். எம். தண்டபாணி தேசிகர் அவர்கள் தமிழ் வாழ்த்துப்பாடல் பாடினார்கள். பின்னர் வரவேற்புக்கழகத் தலைவரான செஞ்சிலுவைச் சங்கச் செயலாளர் திருவாளர் சொ. அமிர்தகணேச முதலியார், பி.ஏ., அவர்கள் மாநாட்டிற்குவந்த தலைவர்களையும், திரளான பெருமக்களையும் தாய்மார்களையும் வரவேற்று மாநாட்டை நடத்த வேண்டியதின் இன்றியமையாமையைப் பற்றிப் பேசினார். அவர் பேசியதாவது

"இந்நாட்டின் வரலாற்றிலேயே இது ஒரு சிறந்த நாள். நம் நாட்டின் குடியரசு வரலாற்றில் ஒரு புதிய முன்னேற்றம் காண, கட்சி சமயம் முதலிய எத்தகைய வேறுபாடுகளுமின்றி தமிழை ஆட்சிமொழியாக்கி நம் உரிமையைப் பேணுவதற்கு நாம் இங்குக் கூடியிருக்கிறோம். நாம் கேட்பது புதுமையான தொன்றுமில்லை. புரட்சியாகக்கருதக் கூடியதுமில்லை. எல்லா நாடுகளும் தத்தம் மொழியில் ஆட்சி நடத்திவருகின்றன. ஆனால், இன்று நமது நாட்டில், ஆட்சியின் பல துறைகளிலும் மேல் மட்டத்தில் வழங்கிவருவது பிறநாட்டு மொழியாகிய ஆங்கிலமே இது எங்குமில்லாத காட்சி. இயற்கைக்கு மாறுபட்ட முறை.

இதை மாற்றி நம் மொழியையே நமது சென்னை இராச்சியத்தில் அரசியல் மொழியாகக் கொள்ளவேண்டுமென்பது நம் அவா. இதற்கு இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் நமக்கு இடமளிக்கிறது. அச்சட்டத்திற்கு இணங்க நம் நாட்டில் தமிழை ஆட்சிமொழியாக்க முடிவு செய்தற் பொருட்டே நாம் இங்குக் குழுமியுள்ளோம். ஒரு இராச்சியத்தின் ஆட்சிமொழி வகுப்பதற்கு யாது செய்யவேண்டுமென அரசியல் அமைப்புப் பின் வருமாறு கூறுகிறது;—

'ஒரு இராச்சியததின் சட்டமன்றம சட்டத்தினல் அந்த இராச்சியததில் வழங்கிவரும மொழிகளில் ஒன்றையோ அல்லது பலவற்றையோ அல்லது இந்தியையோ அந்த இராச்சியத்தின் அரசியல காரியஙகள் எல்லாவற்றிற்குமாவது அலலது எவற்றிற்குமாவது பயன் படுததவேண்டிய மொழி அல்லது மொழிகளாகக் கொளளலாம்.'

இதற்கேற்பத் தமிழை நமது இராச்சியததில அரசியல் மொழியாகச் செய்யவேண்டுமென்பது நமது ஒருமித்த விருபப மென்று உலகிற்கும், அரசினர்க்கும தெரிவிக்கவே நாம இங்குக் கூடியிருக்கிறோம் அரசியலமைப்பில் நமக்கு அளித்திருக்கும் இந்த உரிமையைப் பயன்படுததிக்கொளளவேண்டுவது நமது கடமை. நாம் சிறிதும காலந்தாழததாமல் உடனே செய்ய வேண்டிய வேலை இது. நாடு உரிமை பெறறு ஆறு ஆண்டு கள ஆகிவிட்டன. அரசியல் சட்டத்தின்படி இன்று நமது இராச்சிய ஆட்சிக்கு ஆட்சிமொழி என்பது ஒன்று இலலை. ஆட்சி அலுவலகங்களில் அரசியல் சட்டததின் தொடககத் திற்குமுன் ஆங்கிலம வழஙகிய காரியங்களுக்கு மட்டுமே தமிழ் மொழி பயன்படுததலாம் என்று அரசியலமைபபுக் கூறுகிறது. இனனும் 11 ஆண்டுகளில் ஆங்கிலம அகறறபபடும. அதற்குள் தமிழ் ஆட்சிமொழி ஆகாவிடடால, நமது நிலை என்ன ஆகும் என்று எண்ணிபபாருங்கள்! இன்றே தமிழ்மொழியை ஆட்சி மொழியாகச சென்னைச் சட்டமன்றம சடடத்தினல் இயற்றி னல்தான் ஆங்கிலம் அகன்றபின் இடரின்றித தமிழ் ஆட்சி மொழியாகத தொடர்ந்து வழங்கமுடியும். இன்று அப்படித் தமிழை ஆட்சிமொழியாக முடிவு செய்யாவிட்டால் நாம் பின் னர் வருநத நேரும. செய்யவேண்டியதை உரிய காலத்தில் செய்யாத பழியும நமமைச்சாரும. அரசியல் சட்டத்தின் 210-ம் பிரிவு இதுபற்றி நமக்கு எசசரிக்கை செய்கிறது.

அரசியல் அமைப்பு 347-வது பிரிவில் ஆஙகிலத்தில் தன் கருத்துக்களைத் தெரிவிக்கத் திறமையற்றவாகளுக்கு மட்டுமே தாய்மொழியில் பேசத் தலைவர் அனுமதியளிக்கலாம் என்று கண்டிருக்கிறது. ஆங்கிலம் தெரிந்த பிரதிநிதிக்குத் தம் தாய் மொழியில் பேச உரிமை இல்லை. அவரைத் தோநதெடுத்தவர் களுக்குத் தங்கள் மொழியில் அவரது பேச்சைக் கேட்கும் உரிமை இல்லை.

மலையாளம், தென்கன்னடம் ஆகிய இரு மாவட்டங்கள் இன்னும் நம் நாட்டோடு இணைந்து இருததலால் தமிழ்மொழி

ஆட்சிமொழி ஆவது பொருந்துமா என்று சிலர் வினவலாம். அந்த மாவட்டங்களில் அவர்கள் மொழிகளை ஆட்சிமொழியாக வழங்குவதற்கு அவர்களுக்கு உரிமையுண்டு. அவர்களது அந்த உரிமையைக் காக்கும விதி அரசியல் அமைப்பின் 347-வது பிரிவில் உள்ளது. அவர்கள் அதனைப் பயன்படுத்திக்கொள்ள லாம். ஆனால், இந்த இராச்சியத்தில் பெரும்பான்மையோராக இருக்கும் நாம் நம்மொழியை ஆட்சிமொழியாக ஆக்கிக்கொள் வதைத் தடுக்கும் உரிமை அவர்களுக்கு இல்லை. இரண்டு மாவட்டங்களில் வேற்றுமொழி பேசுவோர் இருப்பதால் நம் முன்னேற்றம் தடைப்படவேண்டுமா? நம உரிமை பறிக்கப் படவேண்டுமா?

தமிழை ஆட்சிமொழியாக்க முடியுமா என்று கேட்போ ருக்கு இரண்டொன்று கூறவிரும்புகிறேன். இன்று நாட்டில் நடப்பதை அவர்கள் நோக்குதல் வேண்டும் நிலவரித்துறை யில் தாசில்தார அலுவலகம் உட்பட அதற்குக் கீழுள்ள எல்லா இடங்களிலும் தமிழே ஆட்சிமொழியாக இருந்துவருகிறது.

தமிழிலேயே பஞ்சாயத்துக்களிலும், நாட்டாண்மைக் கழகங்களிலும் நகராண்மைக் கழகங்களிலும் ஆட்சி நடை பெறுகிறது. மற்ற அடிப்படை அரசியல் அலுவலகங்களிலும் அப்படியே இப்போது வேண்டுவதெல்லாம், இவ்வடிப்படை அலுவலகங்கள மட்டுமன்றி அதற்கு மேலுள்ள அலுவலகங் களிலும தமிழிலேயே பணியாற்ற வேண்டுமென்பதுதான். அது எளிதே என்று ஐயமின்றிக் கூறலாம்.

அரசியல் பொருளியல் பற்றிய சிக்கல்கள், பேச்சுக்கள் முடிவுகள் பற்றிய செய்திகளும், நுணுக்கமான குறிப்புக்களும் உடனே தமிழ்ப்படுத்தப்பெற்று வானொலியில் தெளிவாகச் சொல்லப்படுகின்றன. செய்தித்தாள்களில் வெளியிடப்படுகின் றன. வானொலி உரைகளைக் கேட்பதற்கும், செய்தித்தாள்கள் படிப்பதற்கும எழுத்தாளர (கிளார்க்குகள்) முதலிய ஆட்சித் துறை ஊழியர்களுக்கு வாய்ப்பு வழங்கிவிட்டால், அவர்கள் எளிதாக எல்லாவற்றையும் தமிழில் எழுதும் திறமை பெறு வார்கள். தேவையானால், அவர்களுக்குச் சிறிது பயிற்சியும் அளிக்கலாம். இன்று மந்திரிகள் தம் ஆட்சிக் கொள்கைகளை யும், திட்டங்களையும் தமிழிலதானே மக்களிடத்தில் எடுத் துரைக்கிறார்கள். அவர்களுக்குத் தமிழில் சொல்ல இயலாமலா போயிற்று?

தமிழ் ஆட்சிமொழியானல் ஆட்சிச்செலவு அதிகமாகுமே என்ற கேள்வியையும நாம் கருதக் கடமைப்பட்டுள்ளோம்,

நாளாக ஆக ஆட்சிச்செலவு குறையுமேயன்றி அதிகமாகாது. தமிழ் ஆட்சிமொழியாக அமையும் காலத்தில் தொடக்கச் செலவு சிறிது ஏற்படலாம். தமிழ் டைபரைட்டர்கள் வாங்க வேண்டியதிருக்கலாம். ஆட்சிச்சொல் அகராதிகள் தொகுக்க வேண்டியதிருக்கலாம். வேறு ஒரு செலவும் ஏற்பட்டுவிடாது. தமிழ் ஆட்சிமொழியானால், நாட்டுக்கும் சமூகத்துக்கும் பல வகை நலன்கள் விளையும். கடந்த ஒரு நூற்றாண்டில் நம் நாட்டில் முன்னர் இல்லாத ஒரு புதிய சாதிப் பகுப்புத் தோன்றியுள்ளது. ஆங்கிலம் கற்று ஆட்சி நடத்துவோர் உயர்ந்த சாதியைச் சேர்ந்தவர்கள்; ஆங்கிலம் அறியாத மக்கள் தாழ்ந்த சாதியைச் சேர்ந்தவர்கள்; என்ற இந்த வேறுபாட்டு உணர்ச்சி ஒழிதல் வேண்டும். ஆங்கிலம் நன்கு தெரியாதவர்கள் மந்திரிகளாகவாவது சட்டமன்ற உறுப்பினராகவாவது வந்தால் ஆட்சி நடத்தும் ஊழியர் அவர்களைப்பற்றிக் குறைவாய் எண்ணுமநிலை மாற வேண்டும். தமிழ்ஆட்சிமொழியாக வந்தால் ஆங்கிலம் கற்றோர் தங்களை உயர்ந்தவர்கள் என்று எண்ணத்துணியார். தமிழ்ஆட்சிமொழியானால் மக்களுக்கும் ஆட்சி நடத்துவோருக்கும் நெருங்கிய தொடர்பு உண்டாகும். நம் நாட்டு ஆட்சி உண்மையாகவே, மக்களாட்சியாக விளங்கும்.''

## துவக்கஉரை

பின்னர் சட்டசபை உறுப்பினரும், திராவிட பார்லிமெண்டுக் கட்சித் தலைவருமாகிய திருவாளர், எஸ் சுயம்பிரகாசம் அவர்கள் துவக்கஉரை நிகழ்த்தினார்கள். அவர்கள் ஆற்றிய சொற்பொழிவின் சுருக்கமாவது :

"நாடு நமதானபின் அந்த அந்த இடத்தின் மொழி மக்களுக்கு உரியதாக ஆகவேண்டும். பழந்தமிழ் வளம்பெற்ற மொழி; ஆட்சிமொழியாக இருக்க இம்மொழி முற்றிலும் தகுதி வாய்ந்தது. இனிமை, இன்பம் எனனும் பொருள்கொண்டது தமிழ். எனினும், இன்று தமிழின் பெருமையால் தமிழன் பயன் பெற முடியாமலிருக்கிறது. சிறந்த கருவூலம் நம்மிடம் இருக்கிறது. அதைப் பயன்படுத்தும் கருவியாகவே இந்நாள் நாம் கூடியிருக்கிறோம். தமிழ் ஆட்சிமொழி ஆகவேண்டுமானால், மக்கள் கிளர்ச்சியின் மூலமே சட்டம் திருத்தப்படவேண்டும். கிளர்ச்சி இல்லையென்றால், கோரிக்கைக்கு மதிப்பு கிடைக்காதல்லவா? தமிழ் நாட்டில் தமிழே ஆட்சிமொழியாக இருக்க வேண்டுமென்ற உரிமையை நிலைநிறுத்த இன்று முதல்கூட்டமாகக் கூடியிருக்கிறோம். நமது மொழி சிறந்த மொழி; உலக

முழுவதும் ஓசையைக் கிளப்பவேண்டுமென்று வீணே பேசுவ தால் மட்டும் பயனில்லை. கிளர்ச்சி செய்ய நாம் தயங்கக் கூடாது.”

## ஆண்டு அறிக்கை

பின்னர்ச் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தின் அமைச் சர், டாக்டர் இ. மு சுப்பிரமணியபிள்ளை அவாகள் தமிழ்ச் சங்கத் தின் ஆண்டு அறிக்கையைப படித்தார். சென்னை மாகாணத் தமிழ்சசங்கம பல ஆண்டுகளாகத் தமிழ் வளர்ச்சி குறிததுப் பாடுபட்டு வருவதாகவும், கலைசசொல் ஆக்கத்திற்கு அரசின ரோடு கலந்து செய்த இன்றியமையாத பல வேலைகளை நிகழ்ச்சி களோடும் குறிப்பிட்டார். தமிழ்நாட்டில் தமிழ் ஆட்சிமொழி ஆகும்வரை நாம் ஓய்ந்திருக்கலாகாது என்றும வற்புறுத்தினர்.

அவர் மேலும் கூறியதாவது :

“நமது இந்தியக் கூட்டுக் குடியரசு தோன்றிப் பல ஆண்டு கள் ஆகியும் தமிழ் தெலுங்கு முதலிய தாய்மொழிகள ஆட்சி மொழிகள் ஆகாமலும், ஆவதற்கு வேண்டும் முயற்சி கூடத் தோன்றாமலும் இருப்பதை அறிநது நமது சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம் 11—7—1952ல் சென்னைக் கவானரவர்களுக்கும் தலைமை மந்திரியாரவர்களுக்கும அதுபற்றி ஒரு விண்ணப்பம் அனுப்பியது. அதற்குக் கவர்னர் மட்டும அவ்விண்ணப்பத்தை அரசாங்கத தலைமைச் செயலருக்கு (Chief Secretary) அனுப் பியிருபபதாக 16—7—1952ல் மறுமொழி விடுத்தனர். பயன் ஒன்றும் விளையவில்லை; அதனால், தமிழ் ஆட்சிமொழி மாநாடு நடத்தி நாட்டில் உணர்சசியை வளர்ததல் இன்றியமையாத தென்று நமது சங்கம் உணாந்து 12—10—1952ல் திருநெல் வேலியில் ஒரு பொதுக்கூட்டத்தை நடததி, “சென்னையில் ஆட்சிமொழி மாநாடு நடத்தவேண்டும்” எனறு தீாமானித்தது. அன்றே சஙகத்தின் தொழிற்கழகம் கூடி உயர்திருவாளர் இ. மு சுப்பிரமணியபிள்ளை (சங்க அமைச்சர்) அவர்களையும் உயர்திருவாளர், வ. சுப்பையாபிள்ளை (சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தின் ஆட்சிப் பொறுப்பாளர்) அவர்களையும் மாநாட்டு அமைச்சர்களாக நியமித்து மாநாடு பறறிய எல்லாப் பணிகளையும் ஆய்நது செய்து முடிக்குமாறு அவர்களுக்கு உரிமையை அளித்தது.

மாநாட்டு அமைப்புக்கூட்டம் சென்னையில் 26—10—1952 லும் 21—12—1952லும் நடைபெற்றது. சென்னை முழுமையும் சுவரொட்டிகளின்வழியாகத் தமிழ் ஆட்சிமொழி மாநாடு விளம்

பரம் செய்யப்பெற்றது; தமிழ்நாடு முழுமையிலும் உள்ள சங்கங்கள் மாநாட்டு அமைச்சர்களின் வேண்டுதலின்படி பொதுக்கூட்டங்கள் போட்டுத் தீர்மானங்களை நிறைவேற்றி அரசாங்கத்துக்கு அனுப்பின. அந்நிலையில் தெலுங்கு நாட்டுப் பிரிவினைக் கிளர்ச்சி மிக ஓங்கிறது அதுபற்றிப் பொட்டி என்பவர் பட்டினி கிடந்து தம் உயிரைவிட்டார். தெலுங்கு நாட்டுப் பிரிவினையைச் சென்னை அரசாங்கமும் தில்லி அரசாங்கமும் ஏற்றுக்கொண்டு ஆவன செய்யத் தொடங்கின. அதனால் தெலுங்குநாட்டுப் பிரிவினையின் பின்னரே தமிழ் ஆட்சிமொழி மாநாட்டைக் கூட்டவேண்டும் என்ற தீர்மானம் நிறைவு பெற்றது.

தெலுங்குநாடு பிரிந்துவிட்டது; தெலுங்கைத் தமது நாட்டு ஆட்சிமொழியாக்க அந்நாட்டு மந்திரிமார்களும் உறுப்பினர்களும் யாவரும் ஒருமுகமாக முடிவுசெய்து தெலுங்கிலேயே பேசிவருகின்றனர். ஆதலின் தமிழ்நாட்டிலும் தமிழை ஆட்சிமொழியாக்குவதற்கு முன் ஒத்திவைத்த மாநாட்டை நடத்தவேண்டும் என்று அண்மையில் திருநெல்வேலியில் நடைபெற்ற தமிழ் மாநாடு தீர்மானித்தது. 13—12—1953 ஞாயிறன்று உயர் திருவாளர் ஆ. சுப்பையாபிள்ளையவர்கள் தலைமையில் சென்னை மாநகரத்திலே மாநாட்டு அமைப்புக் கூட்டம் நடைபெற்றது அதில் வரவேற்புக் கழகம் அமைக்கப் பெற்று மாநாட்டுக்கு வேண்டிய நாள், இடம், தலைமை முதலியனவெல்லாம் தீர்மானிக்கப்பெற்றன அத்தீர்மானத்தின் வண்ணம் தமிழ் ஆட்சிமொழி மாநாடு இன்று இவ்வண்ணமலை மன்றத்திலே நடைபெறுகின்றது.''

## தலைவர் தேர்தல்

பின்னர், திருவாளர் ஆ. கசபதி நாயகரவர்களைத் தலைமை தாங்கி ஆட்சிமொழி மாநாட்டைச் சிறப்புற நடத்தித்தருமாறு திரு. இ. மு. சு. அவர்கள் கேட்டுக்கொண்டார்கள்

தலைவர் தேர்தலைச் சங்க அமைச்சர் திரு. இ. மு. சு. அவர்கள் முன் மொழிந்தபின் திருவாளர் கி ஆ பெ. விசுவநாதம் அவர்கள் வழி மொழிந்து பேசியதாவது.

“தலைவரவர்கள் இம் மாநாட்டுக்குத் தலைமைதாங்க மிகப் பொருத்தம் உடையவர். அவர் ஓர் சட்ட நிபுணர்; மாவட்ட நீதிபதியாகவும், செஷன்ஸ் நீதிபதியாகவும், தனி நீதிபதியாகவும் இருந்தது மட்டுமன்றிப் பல இடங்களில் திருவள்ளுவர் கழகங்களை நிறுவித் தமிழுக்கே வேலை செய்து வருகிறார். சமீபு

# தமிழ் ஆட்சிமொழி மாநாடு, சென்னை—20-12-53



ஓய்வுபெற்ற மாவட்ட நீதிபதி, திருவாளா,
ஆ. கசபதி நாயகா அவாகள், பி ஏ, பி எல், எம. எல். சி
தலைமைபபேருரை நிகழ்த்துதல்



சட்டசபை உறுப்பினா, திருவாளா,
கே விநாயகம் அவர்கள், எம எல் ஏ, எம சி
சொறபொழிவாறறுதல்

ஒழிப்புச் சங்கத்திற்குத் தலைவராக இருந்து தொண்டாற்று பவர். இவர் எவ்வகையிலும் இம் மாநாட்டிற்குத் தலைமை தாங்கத் தகுதி உடையவர்.'' என்று குறிப்பிட்டார். மேலும் அவர் பேசுகையில் "மாநாட்டின் முடிவு தமிழனுக்கு வேண்டி யது; தமிழ்மொழிக்கு வேண்டியது; சாதியால், சமயத்தால் யாரும் பிளவுபட வேண்டியதில்லை'' என்று அவர் கேட்டுக் கொண்டார்.

இதைத் தொடர்ந்து மேல் சட்டஅவை உறுப்பினர் திரு வாளர் ஆ. கசபதி நாயகர் பி ஏ., பி. எல்., எம். எல். சி அவர்கள் மாநாட்டிற்குத் தலைமை தாங்கி, தம் தலைமைச் சொற்பொழிவை நிகழ்த்தினார்கள். அது வருமாறு:

## தலைமைப் பேருரை

"சென்னை மாகாணத்திற்குச் சென்னியாய் விளங்கும் சென்னையம்பதியில், இன்று கூடும் "தமிழ் ஆட்சிமொழி மாநாட்டுக்குத் தலைமை தாங்கித் தமிழ்ப்பணி ஆற்றுக'' என்று பணித்தருளிய சென்னைமாகாணத் தமிழ்ச்சங்கத்தாருக்கு என் வணக்கமும், நன்றியும் உரியவாகுக.

தென்இந்தியப் பகுதியில் நான்கு மொழிகளைப் பேசு கிறார்கள். அம்மொழிகள் முறையே தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம். இம்மொழிகள் நான்கும் திராவிட மொழிகளாத லால் இம் மொழி பேசுகிறவர்களைத் திராவிடமக்கள் என்பர். இவர்கள் தென்னாட்டில் ஒவ்வொரு தனித்த, குறிப்பிடத்தக்க பகுதிகளிலே வாழ்ந்து வருவதையும் பார்க்கலாம்.

இப்போது ஆந்திரமக்கள் பிரிந்து ஆந்திர நாட்டை அமைத்துக்கொண்டார்கள். அவர்கள் பேசும் மொழியாகிய தெலுங்கு அந்நாட்டிலே ஆட்சிமொழியாக விளங்குகிறது. சட்ட மன்றங்களிலும், வழக்கு மன்றங்களிலும், கல்விக் கழகங் களிலும், பிற எல்லாத் துறைகளிலுமே தெலுங்கு பேசப்பட்டும், எழுதப்பட்டும் வருகின்றது. ஆயினும் இங்கு ஒன்று கவனிக்க வேண்டும்; ஆந்திரநாடு முழுவதிலும் தெலுங்கு பேசும் மக்கள் மாத்திரம் இல்லை. தமிழ் பேசும் மக்களும் இருக்கிறார்கள். தமிழ் பேசும் மக்கள் பெரும்பான்மையாகச் சித்தூர் முதலிய எல்லைப்பகுதிகளில் குடியிருக்கிறார்கள் இம்மாதிரி வேறு மொழி பேசும் மக்கள், நாட்டிற்குள் இருந்தாலும்கூட, தெலுங்கு மொழி ஆட்சிமொழியாய் நடைபெறுகின்றது. ஏனெனில் பெரும்பான்மையாகத் தெலுங்கு பேசும் ஆந்திரமக்களே ஆந்திர நாட்டில் வாழ்வதால், தெலுங்கு ஆட்சிமொழியாக இடம் பெற்றிருக்கின்றது.

ஆந்திரநாடு பிரிந்ததுபோக, இப்போது இருக்கும் சென்னை மாகாணம், பெரும்பான்மையும் தமிழ் பேசும தமிழ்மக்கள் கொண்ட நாடாக இருக்கிறது. 14-மாவட்டங்கள் கொண்ட இம்மாகாணததில் 12-மாவட்டங்கள் முழுவதும் தமிழ் பேசும் மக்கள் வாழ்கின்றார்கள். சிறுபகுதியான "மலபார்" என்னும் பெயர்கொண்ட ஒரு மாவட்டததிலும், "கன்னடம்" என்னும் பெயர்கொண்ட மாவட்டத்திலுமே மலையாள மக்களும், கன்னட மக்களுமே வாழ்கிறார்கள். எவவாறு தமிழ்மக்கள் ஆந்திரநாட்டு எல்லைப பகுதியாகிய சித்தூர் மாவட்டததில் வாழ்கிறார்களோ, அதேபோல் இம்மலையாள மக்களும், கன்னட மக்களுமே, தமிழ் மாகாண எல்லைப்புறஙகளில் இருககிறாாகளா.

இப்போது இம்மாநாட்டில் நாம் கேட்பது, "சென்னை மாகாணம பெரும்பான்மைப பகுதியில தமிழ் பேசும மக்களே இருக்கிறார்கள். ஏன் தமிழ்மொழியை ஆட்சிமொழியாகச் செய்யக்கூடாது? இதற்கு என்ன தடைகள்?" என்பதுதான்.

நம்மில் சிலர் சொல்லுவர்: "நாமெல்லாம் சட்டசபை களிலும் நீதிமன்றங்களிலுமே மற்ற நகராண்மை நாட்டாண்மைக் கழகங்களிலும் தமிழில்தானே பேசுகிறோம். இதற்கு யாருமே தடை சொல்லவில்லையே? ஆகையால் இம்மாதிரியாகவே தமிழில் நடத்துவோம். பின், சட்டப்படி மொழிவாரி நாடுகள் பிரிக்கப் பட்டால் அநதநத நாடுகளில் அவ்வமமொழிகளை ஆட்சி மொழி யாய்ச் செய்துகொள்ளலாம் அபபோது வேறுமொழி பேசும மக்களா அந்நாட்டிடை இருந்தாலுமே அவாகளால் ஒருதடையும் ஏற்படாது; அப்படிச் செயவதுதானே நல்லது"

இநதப் பேச்சின் திறத்தை ஆராய்வோம்: தமிழ் மக்கள் இப்போது தமிழ்நாடு என்ற ஒரு நாட்டை வரையறுக்க வேண்டும் என்று கேட்கவில்லை. அதற்கெனச் சட்டம் செய்து ஆந்திரநாட்டைப்போல் ஒரு நாட்டை வகுத்துக்கொடுக்க வேண்டுமென்றும் கேட்கவில்லை. மேலுமே மொழிவாரியாக ஒரு நாட்டைப் பிரிதத பிறகுதான் ஒரு மொழியை அநநாட்டிற்கு ஆட்சிமொழியாகச் செய்விக்கவேண்டும் என்று, ஒரு சட்டமும் விதிக்கவில்லை. ஒரு நாட்டுப் பகுதியைத தனிநாடாக அமைக்க வேண்டுமென்றால் சட்டப்பிரிவுகளா 2, 3-ன்படி நடத்தவேண்டும். ஆகையால், நாடு பிரிக்கத் தனிச்சட்டமே இருக்கிறது. அதே போல் நாட்டுமொழிகளை ஆட்சி மொழிகளாக ஆக்குவிக்க அதற்கெனத் தனிச்சட்டப் பிரிவுகள் இருககின்றன. இவை இரண்டிற்கும் யாதொரு தொடர்பும் இல்லை. இப்படியிருக்க, மொழிப்பேச் சோடு நாடு அமைக்குமே பேச்சை இணைபபது, குழபபத்தை உண்டாக்குவதாகும்.

சென்னை மாகாணத்திலிருந்து பெரும்பான்மையும் தெலுங்கு பேசும் மாவட்டங்களைக்கொண்டு ஆந்திரநாடு அமைக்கப்பட்டது. அதேபோல இப்போது கன்னடம்பேசும் மக்களும் மலையாளம் பேசும் மக்களும் தங்களுக்கெனத் தனி நாடுகளை அமைத்துக்கொள்ள முயலுகிறார்கள். அவ்விதம் தனி நாடுகள் அமையும்போது, இப்போது சென்னை மாகாணத்திற்குள் சேர்க்கப்பட்டிருக்கும் மலையாளம் கன்னடம் ஆகிய மாவட்டங்கள் அவைகளோடு சேரும்.

அப்படியிருக்க இந்த மலையாள கன்னட மாவட்டங்கள், தற்காலிகமாய்ச் சென்னை மாகாணத்தின் எல்லைகளுள் இருப்பதின் காரணத்தாலே, கேரளநாடு கூடாது, கன்னட நாடு கூடாது என்று சொல்லவும் தடுக்கவும் முடியுமா? பெரும்பகுதி கொண்ட கேரள கன்னட நாடுகள் அமையும் வழியிலதானே இவைகளும் சேரவேண்டியது. அதேபோல சென்னை மாகாணத்தில் பெரும்பகுதிகொண்ட தமிழ் மாவட்டங்களில் வாழும் மக்களுக்கு, தாங்கள் வாழும் நிலப்பகுதியை, தமிழ்நாடு என்று பெயரிட்டுக்கொள்ளவும், தங்கள் மொழியை ஆட்சிமொழியாய்ச் செய்வித்துக்கொள்ளவும் உரிமையுண்டு. அவ்விதம் செய்வது கூடாது என்று, இச் சிறு பகுதி மாவட்டங்களிலிருக்கும் மலையாள மக்களும் கன்னட மக்களும் தடுக்க ஒருவித நியாயமும் சட்டமும் இல்லை. இதை அறிந்தே அம்மக்கள் ஒன்றும் பேசாது இருக்கிறார்கள். அப்படியிருக்க நாமாகவே, மலையாள கன்னடப் பகுதிகளைப்பற்றிப் பேசுவது, குட்டிக் கலகம் செய்வதுபோலாகும்.

மேலும் தமிழ்மொழியை ஆட்சிமொழியாய்ச் செய்விப்பது தமிழ் மாவட்டங்களுக்குள் மட்டும்தான். மற்ற மலையாள கன்னட மாவட்டங்களில் தமிழை ஆட்சிமொழியாகப் புகுத்த வில்லை. முன்போலவே அப்பகுதிகளில் அம்மொழிகள் வழங்கும். ஆங்கிலமொழி அரசுமொழியாய் இருக்கும். பின்னிட்டு மொழிவாரியாகத் தம் நாடுகளோடு சேரும்போது, தம் தாய் மொழிகள் ஆட்சி செய்யும். ஆகையால், இப்போதிருக்கும் சென்னை மாகாணத்தை ஒரு தனி மாகாணமாக்கச் சட்டம் செய்ய அவசியமில்லை. தனிமாகாணமாகவே இருக்கிறது. அதற்குத் தமிழே ஆட்சிமொழியாகும்.

வடதிசையிலிருந்து சில மிரட்டுப் பேச்சுக்கள் வருகின்றன. "ஆந்திரநாடு ஒன்றுதான் அமைத்தோம். வேறு தனி நாடுகளை அமைக்கமாட்டோம்; இன்னும் 10 ஆண்டுகள் கடக்க வேண்டும்" என்று சில அதிகாரிகள் பேசுகிறார்கள். ஆனால், அது

வரைக்கும் நாம் வாய் மூடிக்கொண்டு வாளா இருப்பதா? சட்டப்படி தமிழை ஆட்சிமொழியாய்ச் செய்விக்க உரிமை இருக்கும்போது, அவ்வுரிமையை, இன்னும் மலையாளநாடு, கன்னட நாடு அமைக்கவில்லை யென்று சொல்லிப் பறிக்கமுடியுமா? முடியாது.

தமிழை ஆட்சிமொழியாய்ச் செய்வித்தால் பணச் செலவு ஆகும் என்கிறார்கள். இஃதென்ன பேச்சு? தமிழர்கள் கொடுக்கும வரிப்பணம் தமிழர்களுக்குச் செலவு செய்யத்தானே இருக்கிறது. வீண்பேச்சுகள் பேசி மதிமயக்க வேண்டாம். நல்ல எண்ணத்தோடு தமிழை ஆட்சிமொழியாக்க எல்லோரும் ஒருமனபபடுவோம்.

இக் கருத்தைச் சட்டப்படி விளக்கஞ் செய்வோம். அரசியல் அமைப்புச் சட்டத்தில் (The Constitution of India) 8-வது அட்டவணையில் 14-மொழிகள் காணப்படுகின்றன. அவையாவன: அஸ்ஸாமிய, பெங்காலி, குசராத்தி, இந்தி, கன்னடம், காச்மீர், மலையாளம, மராததி, ஒரிசா, பஞ்சாபி, சான்ஃச்கிரிட், தமிழ், தெலுஙகு, உருது—இம்மொழிகள் நாட்டு மொழிகள என்றாவது அல்லது ஆட்சிமொழிகள் என்றாவது பெயர் கொடுக்கபபடாமல் பொதுவாக "மொழிகள்" என்ற பெயரளவில் குறிபபிடபபட்டு இருக்கின்றன.

மொழிகளைப் பற்றிய சட்டப்பிரிவுகள் 210, 343 முதல் 349 வரையாகும்.

இவைகளை ஆராய்வோம:

343-வது பிரிவுப்படி தேவநாகரி எழுத்துக்களைக் கொண்ட இந்தி மொழி ஒன்றே இந்தியப் பேரரசுக்குச (Indian Union) சட்டப்படி ஆட்சிமொழியாகச் செய்யப்பட்டிருக்கிறது. வேறு மொழிகளை இந்தியப பேரரசுக்கோ, அல்லது மாகாணங்களுக்கோ, ஆட்சிமொழிகளாகச் செய்யப்படவில்லை. மேலும் 343 பிரிவு விதிப்பது: "இந்தி ஆட்சி மொழியாய் இருப்பினும் இன்னும் 15 ஆண்டுகளுக்கு ஆங்கிலமொழியே அரசியல் அலுவல்களுக்கு முன்போலப் பயன்படுத்தப்படும்." ஆகையால் ஆங்கில மொழி ஓர் ஆட்சி மொழி அன்று. அது ஒரு (authorised) தற்காலிக மொழியாக ஏற்றுக் கொள்ளப் பட்டிருக்கிறது; 15 ஆண்டுகளுக்குப் பின் அது நில்லாது நீங்கி விடும்.

இந்தி மொழியைப் பலவிதத்தானும் வளர்ப்பதற்கென 344-ம் பிரிவு சட்டம் வகுக்கிறது. அஃதாவது இந்தி மொழியை

மேன்மேலும் இந்தியப் பேரரசுக்கு ஆட்சி மொழியாய் இருக்க வேண்டி வளம்படுத்துவது. (a) ஆங்கில மொழியை அரசியல் ஆட்சியிலிருந்து எவ்வாறெல்லாம் குறைத்துக்கொள்வது. (b) உயர் நீதி மன்றங்களில் எந்த மொழியை, 348-வது பிரிவுப்படி கையாள வேண்டுவது. (c) பேரரசுக்கும் ஒரு மாகாணத்திற்கும் இடையேயும், ஒரு மாகாணத்துக்கும் மற்றொரு மாகாணத்திற்கும் இடையேயும் எந்த மொழியைத் தொடர்பு மொழியாக (for communication) ஆக்க வேண்டியது,—இவை எல்லாம் ஆராய்ச்சி செய்ய ஒரு மொழிவாரிக் கமிசனும் அதன் சிபார்சுகளை ஊன்றி ஆராய்ந்து சனாதிபதியிடம் அறிக்கை (report) செய்ய ஒரு பார்லிமெண்ட் கமிட்டியும் அமைக்கச் சட்டம் செய்திருக்கிறது ஆனால், நாட்டுமொழிகளை வளர்க்கவோ அல்லது காக்கவோ ஒரு சட்டமும் செய்யப்படாம லிருக்கிறது.

இவ்வாறு இந்தி மொழிக்கும் தேவநாகரி எழுத்துக்கும் 343, 344, பிரிவுகள் சட்டம் செய்திருக்க, ஏனைய 12 மொழிகளுக்குப் பிரிவுச்சட்டங்கள் 210, 345, 346, 347, 348 என்ன விதிக்கின்றன என்பதைக் கவனிப்போம்.

பிரிவுச் சட்டம் 210 சொல்லுவது: ஒரு நாட்டுச் சட்ட சபையின் நடைமுறை வேலைகள (Business in the Legislature of the State) அந்நாட்டின் ஆட்சிமொழியிலாவது (official language) அல்லது இந்தி மொழியிலாவது அல்லது ஆங்கில மொழியிலாவது நடைபெறும். இம் மொழிகளில் விளக்கமாகப் பேச இயலாத சட்டசபை அங்கத்தினர், சபாநாயகரின் அனுமதி பெற்றுத் தம்தம் தாய்மொழியில் பேசலாம்.

இப்போது நமது சட்டசபையைக் கவனிப்போம். அங்கே ஆங்கிலத்தில்தான் நடைமுறைகள (Business in the Legislature) அச்சிடப்பட்டிருக்கின்றன. அமைச்சர்கள் பேசுவது ஆங்கிலமொழியில்தான். ஏனைச் சட்டசபையினர் ஆங்கிலத்திலும், தமிழ், மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகளிலும் பேசுகிறார்கள். நாம் முதலாவதாகக் கேட்கலாம். அச்சிட்டு வழங்கும நடைமுறைகளைத் தமிழில் அச்சிட்டு வழங்குவார்களா? தமிழில் அச்சிட்டால் மற்ற மொழிகளிலும் கேட்போருக்கு அச்சிட்டு வழங்கவேண்டி வருமே என்று சிலர் உரைப்பார்கள். ஆனால், தமிழ்மொழி ஆட்சிமொழியாய்ச் செய்வித்திருந்தால் இந்த வினாவே எழாது. ஆங்கிலமொழி அரசு மொழியாய் (Authorised) விதிக்கப்பட்டு இருப்பதால்தான் ஆங்கிலத்தில் அச்சிடப்படுகிறது. தமிழ் ஆட்சிமொழியாய்ச் செய்விக்காத காரணத்தால் அது தமிழில் அச்சிடப்படவில்லை.

210 பிரிவின்படி 2-வது உட்பிரிவு சொல்வதாவது : "ஒரு நாட்டுச் சட்டசபை ஆங்கிலமொழியை நீட்டிக்காது விட்டுவிட்டால், 15 ஆண்டுகளுக்கு இறுதியில் ஆங்கிலமொழி மாண்டதாகக் கருதப்படும்" ஆகையால் இச்சட்டப்படி ஆங்கிலத்திற்கு ஒரு காலவரையறை உண்டு. இதற்குப் பிறகு இந்திமொழி நாட்டுக்குள் முதல்இடம் பெறும். ஏனெனில் இப்போதுள்ள சட்டப்படி நம் நாட்டில் தமிழ்மொழியை ஆட்சிமொழியாகச் செய்யாது இருப்பதால்.

345 பிரிவு சொல்லுவது என்னவென்றால்—ஒரு நாட்டின் சட்டசபை நாட்டில் இயங்கும் ஒரு மொழியினையோ, அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகளையோ, அல்லது இந்தி மொழியையோ, சட்டம் செய்து ஆட்சி மொழியாக அமைத்துக் கொள்ளலாம். இப்பிரிவு முக்கியமானதால் ஆங்கிலத்திலும் படிக்கிறேன் :

Subject to the provisions of Articles 346 and 347, the Legislature of a State may by law adopt any one or more of the languages in use in the State or Hindi, as the language or languages to be used for all or any of the official purposes of that State ஆகையால், உடனடியாகத் தமிழ்மொழியை ஆட்சிமொழியாக இச் சட்டப்பிரிவின்படி அமைக்கவேண்டும்.

மேலும் 345 பிரிவு கூறுவதாவது—ஒரு நாடு தன் மொழியை ஆட்சிமொழியாக அமைத்துக்கொள்ளாவிட்டால் முன் இருந்தவாறே ஆங்கிலமொழி அரசியல் நடவடிக்கைகளுக்காக (for all official purposes)த் தொடர்ந்திருக்கும்— ஆகையால் நம் நாட்டில் அரசுமொழியாக இருப்பது ஆங்கிலமொழி ஒன்றுதான். 346 பிரிவு விதிப்பதாவது—இந்தியப் பேரரசுக்கும் ஒரு நாட்டுக்கும் இடையேயும், ஒரு நாட்டிற்கும் மற்றொரு நாட்டிற்கும் இடையேயும் எந்த மொழியைப் பேரரசு அரசுமொழியாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறதோ, அந்த மொழிதான் அரசியல் நடவடிக்கைகளுக்குப் பயன்படும். ஆகையால், இந்தச் சட்டப்படிக்கும் இந்தியா முழுதும் ஆங்கிலமொழிதான் அரசு மொழியாக இருக்கிறது.

345-வது பிரிவுப்படி தமிழ்மொழியை ஆட்சிமொழியாகச் செய்யாது, பின்னிட்டு இந்தி மொழியும் ஆட்சிமொழியாக அமர்ந்துவிட்டால் என்னவாகும்? — அப்போது தமிழுக்கு முதல் இடம் இல்லாமல் போய்விடும். இதைப்பற்றி 347 பிரிவுச் சட்டம் சொல்லுவது : "உங்கள் நாட்டிலே பெரும்பான்மை

பான மக்கள் பேசும் ஒரு மொழியினை, அந்நாட்டிலே ஏற்றுக் கொள்ளவேண்டும் (recognise) என்று ஒருமுகமாகக் (demand) கேட்டால், அப்போது இந்தியப் பேரரசின் சனாதிபதி மன மிசைந்தால், அந்த மொழியும் நாட்டு வேலைக்காகக் குறிப்பிட்ட அளவுக்கு இருக்கட்டும் (shall also be officially recognised) என்று (direct) கட்டளையிடுவார். 345 பிரிவுப்படி ஆண்டவன் கொடுத்த கைகளாலேயே நாமே சட்டம் செய்ய வகையிருக்க, அது செய்யாது சோம்பிக்கிடந்து, பின் 347 பிரிவைக் காட்டி மொழிக்கெனப் பலலைக்காட்டிப், பிச்சை கேட்கக் கையேந்து வது என்ன பேதைமையாகும். ஆகையால் நாம் எச்சரிக்கையா யிருந்து, உடனடியாகத் தமிழ்மொழியை ஆட்சிமொழியாகச் செய்விக்கவேண்டும்—இல்லாவிடில் தமிழ் நாட்டின்கண் தமிழ் மொழி முதல இடம பெறாது குன்றிவிடும்.

முன்பாகத்தில் விளக்கினபடி இநதிமொழி ஆட்சிமொழி பாகிச் சட்டமனறங்களிலும வழக்குமன்றங்களிலும் புகும். "சட்டமன்றஙகளில் தமிழ தானே வழங்குகிறது" என்று சிலர் சொல்வார்கள. ஆனால், தமிழ் வழங்குவதினாலேயே அது ஆட்சிமொழி ஆகிவிடாது ஏனெனில், 348 பிரிவு இதைப் பற்றிச் சட்டம சொல்வதாவது :

(1) பார்லிமெண்ட் சட்டம் இயற்றும் வரைக்கும் (a) தீர்ப்புகள் (Judgements) டிக்ரிகள் (Decrees) (b) இதர உத்தரவுகள (Orders) இவையெல்லாம் ஆங்கில மொழியிலேயே இருக்கும.

(2) உயர் நீதிமன்றங்களில் (Supreme Court and every High Court) நடைபெறும் நடவடிக்கைகள் (proceedings), மற்றைய நூல்கள் (Texts), சட்டங்கள் (Bills), விதிகள் (Acts, Rules, Regulations) முதலியவை ஆங்கிலமொழியில் நடைபெறும்.

(3) ஆனால், இந்தியப் பேரரசுத் தலைவரின் முன் அனுமதி பெற்று, அநநாட்டரசுத தலைவர் (Governor) அவர்கள் மேற் கண்ட நடவடிக்கைகள்—சட்டங்கள் இவைகளை இநதிமொழி யிலாவது, அல்லது அந்நாட்டின் ஆட்சிமொழியிலாவது, நடை பெற உத்தரவு செய்யலாம். ஆகையால் உயர்நீதி மன்றங் களில் நாம், நம்மொழியிலே மன்றாடவேண்டுமென்றால், முதலடியாக நம் தமிழ்மொழியை ஆட்சிமொழியாக, 345 பிரிவுச் சட்டப்படி செய்யவேண்டும். அப்படிச் செய்யாதவரைக்கும் ஆங்கிலமே உயர்நீதிமன்றங்களில் நடைபெறும். ஆங்கிலத்தை விடுத்து இந்திமொழியை, உயர்நீதிமன்றங்களில் வைக்க,

348 (2) உட்பிரிவு, சனதிபதி அவர்களுக்கு அதிகாரம் கொடுக்கிறது. நாட்டின் சட்டசபைகளைக் கேட்டுத்தான் செய்ய வேண்டும் என்றில்லை. ஆகையால் தமிழ்மொழி உயர்நீதி மன்றங்களில் வழங்கவேண்டுமானால் முன்னடியாகவே ஆட்சி மொழியாகச் செய்வித்தல் வேண்டும்.

இவ்வாறு சட்டமன்றங்களிலும், உயர்நீதிமன்றங்களிலும், தமிழ்மொழியை ஆட்சிமொழியாய்ச் செய்விக்கவேண்டிய பொறுப்பு யாருடையது? எல்லாப் பொறுப்பும் நமது சட்ட சபைகள்மீதும், சட்டசபை உறுப்பினர்கள்மீதும் சார்ந்திருக்கின்றது. அவர்கள் செய்தக்கது செய்யாது சோம்பிக்கிடந்தால் என்னவாகும்?

"மடிமை குடிமைக்கண் தங்கின்தன் ஒன்னார்க்கு
அடிமை புகுத்தி விடும்"

என்னும் திருவள்ளுவநாயனார் திருமொழியும் நன்குணர்க.

இம்மாநாட்டில், தெரிந்த இனம் எல்லாம் கூடி இருக்கிறது. நாட்டுக்குப் பலதுறைகளிலும் பாடுபட்ட நன்மக்கள் கூடியிருக்கிறார்கள். நாட்டு நிலமக்களுக்கெல்லாம், தலைமக்கள்போன்ற சட்டசபை உறுப்பினர்கள் இங்கு இணைந்திருக்கிறார்கள். நல்லவை எல்லாம் கடன் என்ப என்று சான்றாண்மை மேற்கொண்ட பெரியார் பலர் பரிவுடன் இங்கு இருக்கிறார்கள். தமிழே தாயுருவாயமைந்த தாய்மார்கள் இங்குத் திகழ்கின்றார்கள். இவ்வாறு நற்குணத்தாலும் நல்லறிவாலும் நிரம்பப்பெற்ற மக்கள்முன் யான் உரை ஆற்றுவது,

"உணர்வது உடையார்முன் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந் தற்று."

நாமெல்லாம் ஒத்த மனத்தோடு தமிழ்ப்பணியாம் தெய்வப் பணியை ஆற்றுவோம்.

நமது "தமிழ் ஆட்சிமொழிச் சட்டம்" சட்டசபைகளில் நிறைவேறுவதற்கு எல்லாச் சட்டசபை உறுப்பினர்களின் உதவி வேண்டுமென்று கேட்டுக்கொண்டோம். சிறப்பாக நம் முதல் அமைச்சர் உயர்திருவாளர், சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார் அவர்கள் பேருதவி நிரம்பவும் வேண்டும். நம் தமிழ்நாட்டில் பிறந்து முதல் மகனாக ஆட்சிப்பீடத்தில் அமர்ந்திருக்கிறார்கள். தமிழ்மொழியிடத்தில் பேரன்புகொண்டவர். திருக்குறள் முதலிய தமிழ்நூல்களைப் படித்து மதிநுட்பம் வாய்ந்தவர். எவ்வது உறைவது உலகம் என்று அறிந்து உலகத்தோடு அவ்வது உறையும் அனுபவமும் பெற்றவர்.

இப்பேரறிவும் பேராற்றலும் கொண்டு ஆந்திரநாட்டை அமைத்துக்கொடுத்த நம் இராசகோபாலாச்சாரியார் அவர்கள், உடனடியாகச் சென்னை மாகாணத்தில் தமிழ்மொழியை ஆட்சி மொழியாய்ச் செய்விக்க எல்லா உதவியும் செய்யவேண்டு மென்று உங்கள் சார்பாகக் கேட்டுக்கொள்கின்றேன்.

"தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்கு
அரும்பொருள் யாதொன்றும் இல்."

உலகுக்கு ஒருவன்தான் முதல்வன் என்னும் மெய்யுணர்வை உணர்த்திய திருவள்ளுவர் சிறப்பாக மொழியைத்தான் உவமை யாகக் கையாளுகிறார். எப்படி, எல்லா (தமிழ்) எழுத்துக் களின் ஒலிக்கும் வடிவத்திற்கும், முதலெழுத்தாகிய அகரம் காரணமாயிருக்கிறதோ, அதேபோல நாம் ஞானம் பெறவும், கல்வியைக் கசடறக் கற்கவும், கற்றவழி நிற்கவும், எல்லாத் துறைகளிலும் கல்வி கற்று ஊதியம் பெற்று நலமெல்லாம் அடைந்து நல்வாழ்வு வாழவும் உதவி அளிப்பது நமது தமிழ் மொழியே ஆகும்.

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு."

தமிழ்மொழியை ஆட்சிமொழி ஆக்குவோம்.

"தமிழ் வாழ்க!"

---

## பல கட்சித்தலைவர்களின் கருத்துரைகள்

தலைவரவர்களின் தலைமைச் சொற்பொழிவுக்குப்பின் பல கட்சித் தலைவர்களும் தமிழ்மொழி ஆட்சி மொழியாகவேண்டிய தின் இன்றியமையாமையைப்பற்றித் தக்க அகச்சான்று புறச் சான்றுகளுடன் சொற்பொழிவாற்றினார்கள்.

**கே. விநாயகம், எம். எல். ஏ.**

"நமது ஆட்சிமொழி எம்மொழியாக இருக்கவேண்டு மென்பதை முடிவுசெய்ய நாம் இங்கே கூடியிருக்கிறோம். நாமெல்லாம் தமிழர் என்ற நிலையில் மாறுபட்ட கருத்து இருக்க முடியாது. நாம் நான்குமொழிகள் பேசும் தென்னாட்டினர் என்பதில் வேறுபாடில்லை. நான்குமொழி பேசுபவர்களுள் ஆந்திரர்கள் கிளர்ச்சி செய்தார்கள். பொட்டி ஸ்ரீராமுலு இறந்தார். அவர்கள் தனிநாட்டை அமைத்துக்கொண்டார்கள். தமிழர்கள் முயற்சிக்கவில்லை. ஆந்திரம் பிரியும்; மலையாளம் மறையும்; கன்னடம் கலையும்; பிறகு எஞ்சியது தமிழகம்.

வேங்கடத்தை வடவெல்லையாகக்கொண்டு பாரதியார், பாரதி தாசன் பாடுகிறார். தமிழ் ஆட்சி, தமிழர் ஆட்சி ஏற்பட இயக்கம் துவக்கப்பட்டால் அதற்கு முதல் பலியாக நான் தயார்.''

ப. சீவானந்தம், எம். எல். ஏ.

"பொதுவுடைமைக் கட்சிச்சார்பில் சென்னை சட்ட அவையில் தமிழ்ஆட்சிமொழித் தீர்மானத்தில் முதல் வரிசை யில இருப்போம். உறுதியாக ஒன்றுபட்டிருக்க நாங்கள் தயாராக இருக்கிறோம. இம் மாநாட்டில் மாறுபட்ட கட்சிக் காரர் பேசினாலும் நம் எண்ணம தமிழ் ஆட்சி ஏற்படுவதிலேயே இருத்தல்வேண்டும். உண்மையிலேயே ஒரு ஆட்சி மக்களாட்சி யாக இருக்கவேண்டுமானால், அநத அநத நாட்டு மக்களின்மொழி எல்லாததுறைகளிலும் பயன்படவேண்டும். தமிழக மக்கள் அனைவரையும் ஒன்றுபடத திரட்டத்தக்கவகையில நம கருத் துக்கள அமையவேண்டும். எந்த ஒரு சாராரும் தங்களது கருத்துக்களைப் பிறர்மீது திணிக்க முயன்றால் முடியாது. சன நாயகக் கொள்கை நிலைக்க மொழிவழி அரசியல் ஏறபட்டாக வேண்டும்.''

கே. சாம்பசிவ ரெட்டியார், எம். எல். ஏ.

"வீட்டில் பேசும் மொழியே நாட்டு ஆட்சிமொழியாக இருக்கவேண்டுமென்றே எங்களில் சிலர் கருதுகிறோம். காங் கிரஸ் கட்சியைச்சார்நத சட்ட அவை உறுப்பினரில பெரும் பாலோர் கருத்தும இதுவே. நாம் எதிர்காலததில் பொலிவுடன் திகழவேண்டுமானால் தமிழ்ப் பெரியார் திரு. வி க. அறிவுரைப் படி கருததுவேறறுமைக்கு இடநதந்து நடக்கவேணடும். ஆனால், தமிழ்மொழி தமிழ்நாட்டு ஆட்சிமொழியாக இருப்பதில் யாருக்கும் கருத்து வேற்றுமை இருக்கவே முடியாது.''

ஏ. கோவிந்தசாமி நாயகர், எம். எல். ஏ.

"மொழியின் அடிப்படையிலேயே நாம் யாவரும் இங்குக் கூடியிருக்கிறோம். காங்கிரஸ் தோழர்கள் ஒத்துழைத்தால் சட்ட அவையிலே இத்தீர்மானத்தை நிறைவேற்றிவிடலாம். எல்லாக் கட்சிகளையும் ஒன்றுசேர்க்கும பெருமை தமிழ் மொழிக்குத்தான் உண்டு. இக் கூட்டுமுயற்சி தமிழ் ஆட்சி மொழியாகும் என்பதறகு அறிகுறி சட்ட மன்றத்தில் மட்டும் தமிழ் பேசப்பட்டால் போதாது. நீதிமன்றம், சாக்கார் அலுவ லகங்கள் அனைத்திலும் தமிழ் ஆட்சி நடைபெறவேண்டும். இரயில் நிலையங்களில் இந்தி ஆதிக்கம் ஒழிந்து தமிழ்மொழிக்கு முதலிடம் கொடுக்கப்படவேண்டும்.''

ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி. ஏ., எல்.டி.

"தாய்மொழி ஒரு நாட்டில் புறக்கணிக்கப்பட்டால் அந் நாட்டு மககள பிற நாட்டு மக்களால் மிகவும் இழிவாகக் கருதப் படுவாாகள். பலலவர் காலத்திலும் அதற்கு முன்பும் தமிழ் ஆட்சிமொழியாக இருநதது. அதற்குபபின் தமிழ் ஆட்சி படிப்படியாகக் குறைந்துவிட்டது. தமிழ்மொழியில் ஆட்சி நடந்தால்தான் எலலோருக்கும் தெரியும. குழப்பமும் இருக் காது. நான் முழுமனதுடன் இமமுயற்சியை வரவேற்கிறேன்."

பி. இராமமூர்த்தி, எம் எல்.ஏ

"தமிழ்மொழியை அரசியல்மொழியாக ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்க இமமாநாடு கூட்டப்பட்டது. ஏன் இவ் வாறு கேட்கிறோம்? உண்மையாகவே சனநாயகம் நிலவ வேண்டுமானால், அந்த அந்த நாட்டு மக்கள் பேசும் மொழியி லேயே அவ்வந்நாட்டு ஆட்சி நடைபெறவேண்டும். சட்ட அவையில் ஆங்கிலம் தெரிநதவர் சிலர். தெரியாதவர் பலர். சட்ட அவையில நடைபெறுவதை நன்கு ஆராய்ந்து உண்மை தெளியத் தமிழில் ஆட்சி நடைபெறல வேண்டும். இல்லை யெனில் சட்ட அவை உறுப்பினர் கைகாட்டிப் பொம்மை களாகவே இருப்பர். உருஷ்யப் பிரதிநிதியாகிய விஷின்ஸகிக்கு ஆங்கிலம் தெரிநதிருந்தபோதிலும, ஐக்கியநாட்டு மன்றத்தில் உருஷிய மொழியிலேயே பேசுகிறார் இது அவர்கள் தாய் மொழிபபற்றை விளக்குகிறதல்லவா? நம நாட்டில் பல்வேறு பகுதியிலுள்ள மக்கள என்னென்ன மொழிகளில் ஆட்சி நடை பெற வேண்டுமென்று சொல்கிறார்களோ, அதே மொழியே சடட அவையிலும் பேசப்படவேண்டும். ஆங்கிலம் தமிழ் வளர்ச்சியைத் தடை செய்தது பதினைந்து ஆண்டுகளுக்குப் பின் நம் நாட்டில் தமிழிலேயே ஆட்சி நடைபெறல்வேண்டும். 'ஆங்கிலம பண்பட்டது, கலைகள் கொண்டது; தமிழில் இவை களைக் கொண்டுவருவது எப்படி இயலும?' எனபர் சிலர். தமிழுக்குச் சூழ்நிலை அளித்தால் புதுப்புதுக் கலைச்சொற்கள் நமமொழியிலும உண்டாகும். நீந்தப்பழகுகிறவன் தண்ணீரில் குதித்தால்தான் நீந்தமுடியும். அதேபோல் தமிழில் ஆட்சி செம் மையாக, புதுப்புதுக் கலைச்சொற்களுடன் நிலவ அம்மொழிக் குச் சூழ்நிலை அளித்தே தீரவேண்டும். ஆட்சிமொழியாகத் தமிழ் ஆக்கப்படுமானால் இம்மொழி முன்னிலும் செழித்து வளரும்.

இளவழகனார்

"நம்மை நாடுகடத்திவிட்டாலும், நம்மோடு வருவது நம் தாய்மொழி. நம்மை எங்கு கொண்டுபோய்விட்டாலும்;

நம்மைவிட்டுப் பிரியாமலிருப்பது நம் தாய்மொழி. அது நம்மைவிட்டுப் பிரியக்கூடாது. சில நூற்றாண்டுகளாகத் தமிழ் மொழி ஆட்சியில் இல்லை. தமிழ் ஆட்சிமொழியாகுமானல் தமிழ்மொழி சிறந்து விளங்கும். அப்பொழுதுதான் தாய்நாடு விடுதலையானதற்கு ஒப்பாகும். நமக்கு இருக்கும் பெருமை யெலாம் நம்முன்னேர்கள் ஆக்கிவைத்த அருந்தமிழ்க் களஞ்சி யங்களாலேதான். கருத்து வேறுபாடின்றி ஊக்கம், ஒற்றுமை, தியாகம், பெருந்தன்மை முதலிய உயரிய பண்புகளுடன் நாம் ஒத்துழைக்கவேண்டும். எல்லோரும் ஒத்துழைப்பார் களாக. மொழி தலைமை பெற்ருல்தான் நாட்டின் தலைமை நன்ருக நமக்குக் கிடைக்கும்.''

திரு. கி. ஆ. பெ. விசுவநாதம்

"மாநாட்டின் நோக்கம் எழுத்துருவத்தில் உருவாக்கப் படுகிறது. தகுந்த இடத்தில், தக்க காலததில், பல கட்சித் தலைவர்களும் பேசியிருக்கிருர்கள். பல சாதியினர், கட்சியினர், சமயத்தினர் அனைவரும் தமிழர்களாக இங்குக் கூடியிருக் கிறேம்,'' என்று குறிப்பிட்டுத் தீர்மானத்தைப் படிக்கலானர். தீர்மானம் வருமாறு :

'மக்கள் ஆட்சியின் கொள்கைகளுக்கு ஏற்ப, மாநில ஆட்சி திறமையாக நடைபெற, அந்தந்த மாநிலப் பெரும்பான்மை மக்களின் மொழியிலேயே ஆட்சி நடைபெறவேண்டுமெ என்று இம்மாநாடு தீர்மானிக்கிறது.

எனவே, இனியும் காலந்தாழ்த்தாது சென்னை நாட்டரசின் சட்டமன்றம் இந்திய அரசியல் அமைப் புச் சட்டத்தின் 345-வது பிரிவின்படி நாட்டரசின் துறைகள் எல்லாவற்றிலும் தமிழ்மொழியே ஆட்சி மொழியாக இருத்தல்வேண்டும் என்று சட்டம் இயற்றுமாறு இம்மாநாடு வலியுறுத்துகின்றது.

அதுபற்றிச் சென்னை நாட்டரசின் சட்டமன்றத் தில் கொண்டுவரப்பெறும் தமிழ் ஆட்சிமொழி மசோதாவை இம்மாநாடு பாராட்டுவதோடு அதை நிறைவேற்றி வைக்கும்படி சட்டமன்றத்தினரைக் கேட்டுக்கொள்கிறது.'

தீர்மானத்தை ஒட்டிப் பின்னர்ப் பேசியதாவது: "இத் தீர்மானத்திற்கு மாறுபட்ட கருத்துள்ளவர்கள் இம்மண்டபத்தி லில்லை ; தமிழ்நாட்டிலுமில்லை. இருந்தால் அவர்கள் தமிழரல்

லர் என்பது தமிழறிஞர்கள் கருத்து. இப்படித் தமிழர் தம் உரிமையைக் கேட்கவும், கைக்கொள்ளவும் சட்டம் இடந்தருகிறது. இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் அடிப்படையில்தான் இத்தீர்மானம் கொண்டுவரப்படுகிறது. அரசியல் அமைப்புச் சட்டம் 210-பிரிவுகள் 1, 2, 3-ம் நம் தீர்மானத்திற்குத் துணைசெய்கின்றன. சட்டங்கள் அமைக்கப்பட்டு ஐந்தாண்டுகளாகிவிட்டன. உரிமை வந்து, இன்னும் நமக்கென ஒரு மொழியை ஆட்சிமொழியாகக் கொள்ளவில்லை. தமிழன் சுருக்கிட்டுத் தொங்கக்கூடிய நிலையில் இருக்கின்றான். இந்நிலை மாறவேண்டும். காலும் போயிற்று, தலையும் போயிற்று; வலதுகை இடதுகை எல்லாம் வெட்டப்பட்டுத் தமிழ்நாடு முண்டமாக இருக்கிறது. தமிழ்நாட்டில், நாஞ்சில் நாட்டில் தமிழ் படிக்கத் தமிழர்க்கு உரிமையில்லை; மலையாளம் படிக்கக் கட்டாயப்படுத்தபபடுகிறார்கள். கேட்க நாதியில்லை; வடக்கே ஆந்திரம்; மேற்கே கன்னடம்; கிழக்கே பிரெஞ்சு; தெற்கே மலையாளம் கட்டாயப்படுத்தப்படுகின்றன. கேட்க நாதியில்லை. சேர சோழ பாண்டியர் ஆட்சிக்காலததில் நிலவிவந்த வணக்கம் என்ற தமிழ்ச்சொல் பல்லவர் காலத்தில் நமஸ்காரம், நமஸ்தே ஆயிறறு. பின்னர் நாயக்கர் ஆட்சி வந்தபோது நமஸ்காரம் போய் தாசானுதாசண்டி என்றாயிற்று. பின்னர் நவாப ஆட்சிக் காலத்தில சலாம் ஆயிறறு. எவன் ஆண்டாலும் அவன் மொழியில் ஒரு கும்பிடு போடுவது நம்மவர்க்கு வழக்கமாகிவிட்டது. வெள்ளையன் ஆட்சியிலே 'குட்மார்னிங' ஆயிற்று. வடநாட்டார் ஆட்சி வநது 'ஜேய் ஹிந்த்!' ஆயிற்று. இது தவறு; இந்நிலை மாறவேண்டும்.

2000 ஆண்டுகளாக ஆரியரோடு போராட்டம்; 600 ஆண்டுகளாக உருதுப்போராட்டம; 150 ஆண்டுகளாக ஆங்கிலத்தோடு போராட்டம; இபபோது இந்தியோடு போராட்டம். தமிழன் தன் நாட்டைத தன்மொழியால் ஆளவேண்டும் என்பதற்கு இப்படி மாநாடு கூட்டுவதுபோல் உலகிலேயே காணமுடியாது; இது நமக்கு மானக்கேடு அல்லவா? தமிழன் இப்பொழுதுதான் வலது காலை எடுத்து வைக்கத் துணிந்திருக்கிறான். சாதி சமயக் கட்சிகளால் பிளவுபடாமல் இதற்கு நாம் ஒன்றுபடவேண்டும். எல்லாக் கட்சிகளுககும உலக முழுவதும் கிளைகளுண்டு. தமிழ் நாட்டில் தமிழ்க்கட்சி என ஒன்றுளது; அதற்குப் பிற நாட்டில் அவ்வாறு கிளைகளும் இல்லை. "யாதும் ஊரே! யாவரும் கேளிர்" என்று சொல்லித் தமிழர் பரந்த நோக்கத்துடன் இருக்கின்றனர். அனைவரையும் கைகூப்பிக் கேட்டுக்கொள்கிறேன், பெற்றநாட்டையும், வளர்த்த மொழியையும் வலுப்

படுத்திகொண்டு உலகமெலாம் ஒன்று என்று சொல். மொழி அடிப்படையில்தான் நாம் ஒன்று சேர முடியும். இழந்துபோன உரிமைகளை எல்லாம் தமிழன் பெற்று வாழவேண்டும். அசோகன் ஆண்ட காலத்திலும, அம்மன்னன் சக்கரபொறி தமிழ்நாட்டில் பதிக்கப்படமுடியவில்லை. 3000 ஆண்டுகள் தொடர்ந்து ஒரு நாட்டை ஆண்டவன் தமிழன். கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன்தோன்றி மூதத குடி நம் குடி. நாம் ஒன்றுபடக் கட்சி, மதம், சாதி நமக்குத துணைசெய்யாது; மொழிதான் துணை செய்யும். சட்டஅவையில் இத்தீர்மானம் நிறைவேறத் துணை செய்யுமாறு யாவரையும் நான் கோருகிறேன்.

கவிஞர் கா. மு. ஷெரீப்

திருவாளர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் கொண்டு வந்த தீர்மானத்தை, அடுத்துப் பேசிய கவிஞர் கா. மு. ஷெரீப் அவர்கள் ஆதரித்துப் பேசினர். அவர்கள் பேசியதின் சுருக்கம வருமாறு :

" தீர்மானத்தை ஏன் ஆதரிக்கின்றேன்? தமிழரசுக் கழகக் கொள்கைகளில் ஒன்று, தமிழ்மொழி ஆட்சிமொழியாக ஆக்கப் படவேண்டுமென்பதாகும். சட்டஅவை உறுப்பினர்களை நாம் அணுகி அவர்கள் ஒத்துழைப்பைப் பெறவேண்டும். தமிழ் ஆட்சிமொழியாகிவிட்டால் ஆங்கிலததை எண்ணிக்கொண்டு இருப்பவாகளின் கதி என்ன என்று எதிர்ப்பார்கள் தமிழரசுக் கழகச் சார்பில் நான் இத்தீர்மானத்தை முழுமனதுடன் ஆதரிக்கின்றேன். கூட்டம் கூட்டி மாநாடு நடததிப் போராட்டங்கள் செய்து ஒத்துழைக்கிறோம் என்று தமிழரசுக் கழகச் சார்பில் நான் கூறுகிறேன்."

க. அன்பழகன், எம். ஏ.

" தாய்மொழி எங்நாட்டில் ஆட்சிமொழியாக இருக்கிறதோ அந்நாட்டு ஆட்சிதான் நல்லாட்சியாக இருக்கமுடியும் 'இராமன் ஆண்டால் என்ன? இராவணன் ஆண்டால் என்ன?' என்ற பழமொழி எப்படியோ நமக்கிடையே முளைத்துவிட்டது. இப்பழமொழியால் தமிழுக்கு இழுககேயாகும். தமிழுக்கு ஆற்றல் இல்லையா? வன்மை இல்லையா? தமிழுக்கு வன்மை இருந்த காரணத்தினுலேதான் இன்றளவும் தமிழர் வாழ்கிறார்கள். தமிழர்க்கு உணர்ச்சி, வரலாற்று அறிவு, நம்பிக்கை முதலியவை தேவைப்படுகின்றன. ஆட்சிபபீடத்திலுள்ளவர்கள் நல்ல தமிழர்களாக இருப்பார்களேயானல், 'வாழிய செந்தமிழ்,

வாழ்க நற்றமிழர்' என்ற பாரதியாரின் பாட்டுக்கு ஏற்பத் தமிழை ஆட்சிமொழியாக ஆக்கியிருப்பார்கள். ஆலயம், வீடு, வழக்குமன்றம், சட்ட அவை முதலிய இடங்களில் வேற்று மொழிகள் நிலவுகின்றன. ஆந்திரா இன்று நம்மைவிட்டுப் பிரிந்துவிட்டாலும் அவர்கள் மொழியாகிய ஆந்திரம் தமிழிலிருந்து தோன்றியதே.

வெளிநாடுகளுக்குச் செல்லும் இந்தியப் பெருமக்கள் வட மொழியின் பெருமையையும, கீதையின் பெருமையையும்பற்றிப் பேசுகிறார்களே யொழியத் தமிழிலுள்ள செல்வக் களஞ்சியங் களைப்பற்றிப் பேசுவதில்லை. கீதையை மொழிபெயர்கக முன் வந்தார்களேயொழியத் திருக்குறளை மொழிபெயர்க்க யாரும் முன்வரவில்லை. தமிழ்மொழியிலுளள திருக்குறளை, மேனாட் டிலிருந்து எவரேனும் வநது அதைப படித்து, மொழிபெயர்த் தாலொழிய அதன் பெருமையை உலகில் விளக்க எவரும் இல்லை. நாதியற்ற நிலைமைக்கு நாம் ஆளாகி இருக்கிறோம். அதை அகற்றவேண்டும் மலையாளத்தார், தெலுங்கர், கன்ன டர் முதலியவர்கள் தம தம் தாய்மொழி தமிழிலிருநது தோன் றியது எனறு சொல்லவைக்கவேண்டும். அபபோதுதான் தமிழ் உயரும்; இல்லையெனில, தமிழர் நிலை சீரகேடாகும்.

தமிழை விரட்டியவா யார்? தமிழ் நாட்டிலே வாழ்ந்து கொண்டு இநதியை, சமஸ்கிருததநதைப் போற்றுபவர் துரோகி கள். தமிழ்மொழி ஆட்சிமொழி ஆக்கப்பட்டால் தமிழா நிலை உயரும இமயவரமபன் நெடுஞ்சேரலாதன், ஆரியப்படை கடநத நெடுஞ்செழியன் முதலிய காரணப்பெயர்கள் நம் நாட்டை ஆண்ட மன்னாகளின் பெயர்கள். சட்டமன்றத்திலுள்ள வர்கள் நல்ல தமிழர்களானால் தமிழ்மொழியை ஆட்சிமொழி யாக ஆககியே தீரவேண்டும். இத தீர்மானத்தை நிறைவேற் றாத சட்டஅவை உறுப்பினர்கள் மீண்டும் சட்ட அவைக்குள் போகமுடியாது."

நடிகர். டி. கே. சண்முகம்

"சட்ட அவையில் உண்மையில் தமிழர் யார்? தமிழரல்லா தார் யார்? என்பதைக் கண்டுபிடிக்க இத்தீர்மானம பெரிதும் பயன்படும. நாடக, திரைப்பட நடிகர்கள் சார்பாக இத் தீர்மானத்தை நான் முழுமனதுடன் வரவேற்கிறேன்."

பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரை, எம்.ஏ , எல்.டி.

"இம் மாநாட்டில் கலந்துகொள்வதில் நான் மகிழ்ச்சி கொள்கிறேன். நான் இந்நாட்டில் இருக்கிற எல்லாக் கட்சி

களிலும் இருந்திருக்கிறேன். எல்லாக் கட்சிகளிலிருந்தும் நான் கண்ட கனவு இன்று நிறைவேறியுள்ளது. தமிழரின் அடிப்படை உரிமைக்காக வாதாடும் மாநாடு இது. இந்த அடிப் படை உரிமையின் குறுக்கே எவராவது நின்றால், அவர்களை இன்று நாம தமிழரென்று கருதமாட்டோம். தமிழகத்தின் பகைவர் என்றே கருதுவோம். வருங்கால வரலாறு அவர்களை மனித இனத்தின் எதிரி என்றே காட்டும தமிழின் நிலையை உயர்த்த நாம் எவ்வளவோ செய்யவேண்டும் என்னென்ன செய்வது என்பதில் கருத்து வேற்றுமை இருக்கலாம். தமிழ் அரசியல் மொழி ஆவது இவ் வெல்லாவற்றுக்கும் அடிப்படை யான முதற்படி. தமிழ அரசியல்மொழி ஆனால் தமிழ் வாழும்; வளரும். இதில் எல்லோரும் ஒன்றுபடுவோம். அதன்பின் மற்றப் படிகள் தோன்றும். உலகக் கட்சிகள் அனைத்திற்கும் தமிழகத்தில் இடமுண்டு. ஆனால் தமிழகத்துக்கு உலகத்தில் இடமில்லாமலிருக்கிறது. இது ஏன்? தமிழ்ப் பண்பு தமிழகத் தில் வாழ்ந்தால் தமிழர் தம் மொழியில்மட்டுமன்றி கலை, இலக் கியம், சமயம் ஆகிய எல்லாத துறைகளிலும வளர்ச்சி பெறு வார்கள்."

மயிலை சிவ முத்து. தலைவர், சென்னைத் தமிழாசிரியர் கழகம்

"பல அறிஞர்கள் பேசியபின்னர், தமிழாசிரியனாகிய நானா எதிர்க்கப்போகிறேன்? உரிமை ஆட்சியை ஒரு சொட்டு இரத்தம் சிந்தாமல் பெற்றோம். மொழி ஆட்சி அவ்வளவு இல்லாமல் முடியுமா? இப் போராட்டத்திற்கு நாம் தயங்கக்கூடாது. சென்னைத் தமிழாசிரியர் கழகச்சார்பில் இத் தீர்மானத்தை நான் முழுமனதுடன் வரவேற்கிறேன்."

சீவா - நாரண துரைக்கண்ணன்

"தமிழ் நாட்டில் தமிழ்மொழி ஆட்சிமொழியாக வேண்டு மென்று கனவுகண்டவர்களுள் நானும ஒருவன். இதைப்பற்றி முதல்முதல் செய்தித்தாளில் எழுதியவன் நான்தான். எழுத் தாளர் சங்கச்சார்பில் இத் தீர்மானததை மனமுவந்து ஏறகி றேன். தாய்மொழிப்பற்று இல்லாதவர் சித்தூர்ப் பகுதியைத் தாண்டிச்சென்றால், கட்டாயம் தாய்மொழிப்பற்று அடை வார்கள். தமிழ்நாட்டில் தமிழ்மொழி ஆட்சிமொழியாவதற்கு யாரும் குறுக்கே நிற்கமாட்டார்கள்"

பிற சொற்பொழிவாளர்கள்

தமிழ்நாட்டில் தமிழ்மொழி ஆட்சிமொழியாக்கப்பட வேண்டுமென்ற தீர்மானத்தை வலியுறுத்தித் திருவாளர் இ. எஸ்,

இராகவ முதலியார், எம். எல். ஏ., திருவாளர் டி. சண்முகம் பிள்ளை, எம். எல். ஏ., திருவாளர், பி. அரங்கசாமி ரெட்டியார் எம். எல். ஏ, திருவாளர், சோம இலக்குமணச் செட்டியார், திருவாளர், ஜி. உமாபதி, திருவாளர், டி கணபதி, எம். எல். ஏ., திருவாளர், என். வி நடராசன், உயர்திரு. அருணகிரிநாத அடிகள், திருவாளர், சண்முகாநந்த அடிகள் முதலியோர் தம்தம் கருததுக்களை எடுத்துக் கூறினார்கள்.

இரா. நெடுஞ்செழியன், எம். ஏ.

"சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கத்தின் முயற்சியின் காரணமாகப் பல்வேறு கட்சியினரும், பல்வேறு கருத்து வேறுபாடுள்ளவர்களும் ஒன்றுகூடியதற்கு மகிழ்ச்சியடைகிறேன். ஒவ்வொரு கட்சிக்காரரும தம்தம் கைகளில் இத்தீர்மானத்தை எடுத்துச்சென்று முயறசியுடன் வெற்றிபெறுவார்கள. தமிழ் அல்லாத பகுதியிலே தமிழ் ஆதிக்கம செலுததவேண்டும் என்ற வீம்பு எண்ணம அல்ல நம முயற்சி. நம் கொள்கை நேர்மையானது; தாய்மொழிப்பற்று இன்றித் தாய்நாட்டுப்பற்று ஏற்பட முடியாது. சிறிய நாடாகிய அபிசீனிய மக்கள் தங்களுக்கென ஒருமொழி கொண்டிருக்கிறார்கள். அவ்வாறிருக்கத் தமிழாட்சி கூடாதா? அல்லது முடியாதா?

ஆட்சிப பீடத்திலே தமிழை ஏற்ற ஆசைப்படுகிறோம். இதற்கு எதிர்ப்பாக யாரும இருக்கமுடியாது. வீழ்ச்சியுற்ற நம் நாடு எழுச்சிபெறவேண்டுமானால், நாம் ஒத்துழைக்கவேண்டும். இறந்தகாலத்தைத் திரும்பிப் பார்க்கிறோம. வீழ்ச்சியுற்ற நாடு எழுச்சிபெற வரலாறு தேவைப்படுகிறது. இது தெரியாத காரணத்தினால், திருக்குறள் ஒரு மூலையில் கிடக்கிறது. பல தமிழ்ச்செல்வங்கள் மூலையில் முடங்கிக்கிடக்கின்றன. நம் நாகரிகம் ஸ்பெயின் நாடுவரை சென்றது. எல்லா நாடுகளுக்கும் எண்கள் கற்றுக்கொடுத்தவன் தமிழன்; வார நாட்கள வரையறுத்துக்கொடுத்தவன் தமிழன்; தாய்மொழியிலே என்ன இருக்கிறது என்று சிலர் சொல்வதைக் கேட்க வெட்கப்படுகிறேன். இன்று இலக்கணம் வரையறை செய்யாத மொழிகள், நாகரிகம் அடையாத மொழிகள், மொழி வளப்பம் பெறாத மொழிகள் எல்லாம் நாட்டை ஆளும்போது, சுமார் 7,000 ஆண்டுகளுக்கு முன்பே இலக்கணத்தை வரையறைசெய்த தமிழ்மொழி ஏன் ஆட்சிசெய்ய முடியாது? உலகிலுள்ள இலக்கிய மொழிகளிலே ஒன்று தமிழ். சமக்கிருதம், கிரேக்கம், இலத்தீன் முதலிய இலக்கிய மொழிகள் பேச்சுவழக்கில் அழிந்துபட்டு விட்டன.

தொல்காப்பியத்தில் 'வடவேங்கடம் தென்குமரியா யிடைத் தமிழ்கூறு நல்லுலகத்து' என்று தமிழகத்துக்கு எல்லை வகுத்துக் கூறப்படுகிறது. தமிழகம் வாழவேண்டுமானால், தமிழ் ஆட்சிமொழியாகியே தீரவேண்டும ஒரு நாட்டு மொழியை அழிப்பதுதான் கேவலம். தமிழர்கள் என்ற நிலையில் ஒன்றுகூடி இருக்கிறோம். மொழியால் அழைக்கப்படும்போது நான் தமிழனாக இருக்கிறேன். பிறமொழி சேர்த்தால் தமிழ் வளரும் என்கிறார்கள். தமிழ் வளரக்கூடிய மொழி; பிற மொழிக் கலப்பால் அழியும்.

ஆங்கிலமும் இந்தியும் பிறமொழிக் கலப்பால் வளர்ச்சி யடைவதாகச் சான்று கூறுகிறார்கள். அவை இயற்கை மொழிகளல்ல ஆனால், தமிழ் தனித்தது, தமிழுக்கு வேர்ச் சொற்கள் உண்டு. வேதாரண்யம என்ற பிற சொல் வந்ததால் திருமறைக்காடு என்ற அழகான தமிழ் ஊர்ப்பெயர்ச் சொல் மறைந்தது; விருத்தாசலம் என்ற பிறசொல் வந்ததால் முது குன்றம் என்ற தூய தமிழ் ஊர்ப்பெயர்ச்சொல் மறைந்தது; ஜலம் என்ற சொல் வநததால் தண்ணீர், நீர் என்ற தனித் தமிழ்ச் சொற்கள் வழக்காறற்றுவிட்டன. நமஸ்காரம் என்ற சொல் சேர்ந்ததால் வணக்கம் என்ற தமிழ்ச்சொல்லை இழந்தது. தமிழ் ஆட்சிமொழியானல், தமிழ வளரும். பாராளு மன்றம் என்றால் உணர்ந்துகொள்ள முடியும்; சட்டசபை, பார்லிய மெண்ட் என்ற அயற் சொறகள் வாரா. பிறநாட்டுப பொருள் களை இறக்குமதியாக்கும்போது அவற்றின்மேல் வரிவிதிப்ப தற்கு எப்படி ஒரு குழு (போர்டு) அமைககப்பட்டிருக்கிறதோ, அதேபோல இறக்குமதியாகும் வெளிநாட்டுப் பொருள்களுக் கும் தனித்தமிழில் பெயரிட ஏன் ஒரு குழு அமைக்கக்கூடாது? இ. மு. சுப்பிரமணியபிள்ளையும் இன்னும பல தமிழறிஞாகளும ஒன்றுகூடி வெளிநாட்டுப் பொருளாகிய 'சைக்கிள்' இறக்குமதி யாகும்பொழுது அதற்கு ஈருருளி என்ற அழகிய தமிழ்ப்பெயர் கொடுத்திருந்தால், சைக்கிள் மறைநது போயிருக்கும். ஈருருளிதான் நிலைத்திருக்கும். வெளிநாட்டுச் சொற்களைத் தமிழ்ச் சொற்களாக ஆக்குமபோது தமிழறிஞர்களைக் கலந்து கொள்ளவேண்டும்.

படி என்ற தமிழ்ச்சொல் பலவிடங்களில் பலவித பொரு ளைக் கொடுக்கக்கூடிய சொல் ஆகும். இதேபோல ஒவ்வொரு சொல்லையும் ஆராய்ந்தால் தமிழ் இயற்கையோடு ஒன்றியது என்பதைக் காணலாம். தற்போது நூற்றுக்குப் பதினறு பேர் படித்தவர்கள். எண்பத்துநான்கு பேர் ? -படியாதவர்கள். தமிழ்மொழி ஆட்சிக்கு வந்தால், எல்லாரும் எளிதில் படிக்க

லாம். உலகத்தோடு உறவுகொள்ள ஆங்கிலம் வேண்டும். தமிழ் போதாது. தற்போதுள்ள சூழ்நிலைகளைச் சரிப்படுத்தத் தாய் மொழியாகிய தமிழே போதுமானது. தமிழ்மொழி தமிழ் நாட்டு ஆட்சி மொழியாக ஆக்கப்படவேண்டும் என்ற தீர்மானத்தைத் திராவிட முன்னேற்றக் கழகச் சார்பாக நான் ஆதரிக்கிறேன்."

திருவாளர், இரா. நெடுஞ்செழியன் அவர்கள் சொற்பொழிவுக்குப் பின்னர் தலைவர் தம் முடிவுரையை ஆற்றினர். தலைவர் தீர்மானத்தை மக்கள் சமமதத்திற்குவிட்டு ஒப்புதலைக் கேட்டார். எல்லாரும் கைதட்டி தம மகிழ்ச்சியையும் ஒப்புதலையும் தெரிவித்தார்கள். தீர்மானத்தை எதிர்ப்பவர் உண்டா என்று கேட்டபோது "இல்லை இல்லை" என்ற குரல் எங்கும் ஒலித்தது. சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக ஆட்சியாளரும், மாநாட்டுச் செயலாளருமாகிய, திருவாளர், வ. சுப்பையாபிள்ளை அவர்கள் நன்றிகூற மாநாடு இனிது முடிந்தது.

தொகுத்தவர்: முத்தமிழ்மணி.

---

## பொங்கல் நன்னாள் வாழ்த்து

[செல்லூர்க்கிழார், திரு. செ. ரெ. இராமசாமிபிள்ளை]

### நேரிசை வெண்பா

க. அறந்தழைக இன்பம் அலாக தமிழே
சிறந்தமொழி யாயெங்குஞ் செல்க—பிறங்கொளிசேர்
தைத்திங்கள் முன்னாள் தவழ்ந்துவரு பொங்கல்நன்னாள்
எத்திக்கும் ஓங்க இனிதே.

உ. நென்மணி கூலம் நிறைந்த வளந்தந்து
மனமாடோ டாடும் மகிழ்கூரப்—பன்னுகின்ற
பொங்கல் புதுநாள் பழநாள்போல் வந்ததால்
எங்கும் களிக்க இசைந்து.

ந. பாலாறு நெய்யாறு பணடமெலாம் தந்தஇன்ப
மேலாறு காட்டுபொங்கல் மேதினியில்—ஏலாரும்
ஏற்கப்பாற் பொங்கலவிழ் எல்லாரும் உண்பவே
நாற்களனும் வாழ்க நயந்து.

---

# கரந்தைக்கவியரசு மறைவு

[பேராசிரியர், திரு. ஔவை சு. துரைசாமி பிள்ளை, மதுரை.]

கரந்தைக்கவியரசு. திரு. R. வேங்கடாசலம்பிள்ளை அவர்கள் மறைந்தசெய்தி தமிழகத்துக்கு இவ்வாண்டில் உண்டான இழப்புகளில் ஒன்று. இனிய தமிழ்ககவி செய்ய வல்ல இனிய புலவரைத் தமிழன்னை இழந்து வருந்துகிருள். கரந்தைத் தமிழ்ச்சங்கத்தின் தோற்றம், வளர்ச்சி, பெருமை, பணி முதலிய கூறுகள் எல்லாவற்றிலும நேரடியாகத் தொடர்பு கொண்ட ஒருவரை, சங்கத்தின் தந்தையாய்த் தாயாய்ப் பணி புரிந்த தக்கோரைக் கரந்தைத் தமிழ்ச்சஙகம இழந்துவிட்டது. யாங்கள் எங்கள் ஆசிரியரை இழநதோம்

கண்டர் கோட்டை எனப்படும் கந்தருவக் கோட்டைக்கு அண்மையில் உள்ள மோகனூர் கவியரசர் தோன்றிய நல்ல ஊர். தமிழ்ப்புலமை நலம் சிறந்த பழங்குடி அவரது உயர்நத குடி. தமிழ்க் கல்வி சிறந்ததும் தஞசைக்குப் போந்து தமிழாசிரியாக இருந்து அரும்பணியால் அயராத தமிழ்த் தொண்டால் கவியர சாக மேன்மையுற்றவர் ஆசிரியர் வேங்கடாசலம் பிள்ளையாவார் கள். அவரது தமிழ்வாழ்வு கரந்தைத தமிழ்ச்சங்கத்தோடு இணைந்து விளங்குவது. சங்கத்தின் வாழ்வும் அவரது வாழ்வும் ஒன்றுபட்டவையாகும்.

தஞ்சைத் தமிழவேள் த. வே. உமாமகேசுவரம்பிள்ளை அவர்கள் தலைமை தாங்க, கவியரசர் R. வேஙகடாசலம்பிள்ளை யவர்கள் அமைச்சராய்ச் செயலாற்றக் கரந்தைத் தமிழ்ச்சங்கம் சிறந்த தமிழ்பபணி புரிந்து நாடெங்கும் நல்ல புகழ்பெற்று மேம்பட்டது. அதன் வெள்ளிவிழா விளக்கததால் வீறு பெற்றது; அதன்பின்னர்ச் சங்கததிற்குப் பொருள் சிறிது சேர்நதது; கடமைகள் பெருகின. தமிழவேள் மறைந்தார்; பொருள் வளம் சுருங்கிற்று ; செயலொளி குறைந்தது. கடுகு சிறுத்தாலும் காரம் போகாது என்றபடி பொருளளவு சிறுமை யுற்றுப் பெரும்பணி ஆற்றி வருகிறது.

இதற்கிடையே, கவியரசா தமது தமிழ்ச்சங்க அமைச்சுக் கடைமையைத் தக்க இளைஞர்பால் இருத்தித் திருவையாற்று அரசினர்கல்லூரியில் தமிழ்பபேராசிரியர் பதவியேற்றுத் திருவையாறு சென்று சேர்ந்தார். பல ஆண்டுகள் தமிழ்ப் பேராசிரியராய் இருந்ததன் விளைவாக மிகப்பல சிறந்த தமிழ்ப் புலவர்கள் நாட்டில் தோன்றுவாராயினர். பின்னர் அவர்கள்

கரந்தைக்கே வந்து கரந்தைத் தமிழ்ச்சங்கம் நடத்தும் புலவர் கல்லூரியிற் பேராசிரியராய் இருந்து முதுமையும் தளர்ச்சியும் எய்தித் தமிழ்த்தாயின் தண்ணிய திருவடிநீழலை யடைந்தார்கள்.

கவியரசர் க. த. சங்க அமைச்சராய் இருந்தபோது தமிழ்ப் பொழில் என்னும் திங்கள்வெளியீடு தோன்றிற்று. அதன் இரண்டாமாண்டில் எனக்குத் தமிழ்ச்சங்கத் தொடர்பு உண்டாயிற்று. சங்கக் கல்விநிலையத்தில் ஆசிரியர்பணியும் நூல் நிலையப்பணியும் புரியும்பேறு எனக்குக் கிடைத்தது. அக் காலைக் கவியரசர் எனக்குத் தமிழ் கற்பிக்கும் பேருதவியைச் செய்யலுற்றார்கள். தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்குத் தெய்வச் சிலையார் எழுதிய உரையை வெளியிடும் பணி வந்தது. ஏடு படித்தலும், பெயர்த்தெழுதலும் என பணியாயின. இடையிடையே எழும் ஐயங்களை அகற்றுமுகத்தால் ஒரே காலத்தில் இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் என்ற உரையாசிரியர்களின் உரைநலங்களை எனக்குக் கற்பித்து இன்புறுத்தவது கவியரசரின் கல்விப்பணியாய் இயங்கிற்று. உரைநலங்களைப் படித்து முடித்தேன். நூலும் வெளியாயிற்று. யானும் வடஆற்காடு மாவட்டத்தில் தமிழ்ப்பணி புரியும் செயல் மேற்கொண்டு சென்றேன்.

எனக்கு இலக்கணம் கற்பிக்கும் பணி தெய்வச்சிலையார் உரை வெளியீடாய் நிலவினமையின் அக்காலை சங்கத்தில் நெருங்கிய தொடர்புற்றிருந்த பேராசிரியர்களான பண்டித நாவலர், ந. மு. வேங்கடசாமிநாட்டார், பண்டிதமணி. மு. கதிரேசன் செட்டியார், எல். உலகநாதபிள்ளை முதலியோர்களின் தொடர்பு எனக்கு எய்துவதாயிற்று.

அவரது தொடர்பு அன்பு செய்வதோடு நில்லாது தமிழறிவு நல்கும் ஆசிரியர்களாக இருந்து எனக்கு ஐயமகற்றி அவரது நன்றி மறவா மாணவனாய் நிலவுமாறு செய்தது. அவர்கள்பால் என்னைப்பற்றி அன்புரை வழங்கி ஆதரவுசெய்த கவியரசரின் கல்விநலத்தை இன்று நினைப்பினும் என் நெஞ்சு கரைந்துருகுகிறது.

ஒருகால் திருக்காட்டுப்பள்ளிக்கு டாக்டர் உ. வே. சாமிநாதையர் வந்திருந்தபோது ஒருவர் தேட்கடியில் வருந்தி மருந்துண்டு தேறினார். அப்போது நாட்டார், கவியரசர், தண்டாயுதபாணிக் காடவராயர், தமிழவேள் அனைவரும் சூழ இருக்க, "கடித்த இடம்தான் கடுக்கிறது," என்று காடவராயர் சொன்னார். கடியும் கடுக்கிறதும் ஒன்றுதானே என்று நாட்டார்

அவர்கள் கூற எல்லோரும் நகைத்தனர். அது எப்படி யெனத் தமிழவேள் ஐயரவர்களைக் கேட்க, அவர்கள் என்னை விடை கூறப் பணித்தார்கள். யான் கடியென்னும் உரிச்சொல் கடுக்கிறது எனத் திரிந்து வினையாயிற்று: "கடுத்தது காட்டும் முகம்," என்றாற்போல என்றேன். அப்போது ஐயரவர்கள் எனக்கு இலக்கணம் கற்பித்த கவியரசரைப் பாராட்டியது இப்போது என் நினைவுக்கு வருகிறது. அவரது பிரிவு என் அறிவைப் பேதுறுவிக்கின்றது. தெய்வசிலையார் உரை எழுதிய ஏட்டைத் திரு ஐயரவர்கள்பால் பெற்றுவந்தபோது அவர்கள் கவியரசர் புலமையைப் பாராட்டி, தாம் சீவகசிந்தாமணியைப் பதிப்பித்து வெளியிட்டபோது, "பெயர் விழையான்" என்னும் புனைபெயரில் சில திருத்தங்களை மிக்க நுட்பமாக ஆய்ந்துரைத்தாரெனவும் பின்பே அவர்கள் கவியரசரைத் தெரிந்துகொண்டாரெனவும் கூறியது என் நினைவில் எழுகின்றது.

தமிழவேள் மகன் பஞ்சாபகேசன் மறைந்தபோது கவியரசர், தமிழவேள் மனநிலையையும் தமிழன்பையும் வியந்து, "மன்மக்கள் எல்லாம் தன் மக்களெனக் கொள்வானை, எனனை யினிச் செய்வது இடர்," என்று பாடியதுகேட்டுப் பண்டிதமணியவர்களும் நாட்டார் அவர்களும் பாராட்டி யுரைத்ததும், தமிழவேள் அவர்களின் கலங்கிய வுள்ளம் தெளிந்ததும் இன்று நிகழ்வனபோல் நெஞ்சில் தோன்றுகின்றன. இதை நினைவில்கொண்டிருந்து பண்டிதமணி யவர்கள் திரு. வேங்கடாசலம் பிள்ளையவர்கட்குக் கவியரசர் என்ற பட்டம் தந்தபோது பாராட்டியதும் திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் அடிகள் முறுவலித்து மகிழ்ந்ததும் இன்று நினைக்கினும் இன்பம் தருகின்றன.

என் இனிய ஆசிரியர் அவர்களின் நலங்கள் பல நினைவுக்கு வருகின்றன. எதனை நினைப்பேன்! எதனை எழுதுவேன்! இவ்வாண்டு என் மனதுக்கு அமைதி நிலவாதவகையில் பல இழப்புக்களை நல்கிவிட்டது. பொதுநோக்கால் புகழ்பெருகிய திரு. வி. க. மறைந்தார்; அன்பால் நட்பால் அறிவுபெருகிய பண்டிதமணி மறைந்தார்; ஆர்வத்தால் அருளால் சித்தாந்த நுண்பொருள் காட்டிய தூத்துக்குடி சித்தாந்தப் பேராசிரியர் சிவகுருநாத பிள்ளை மறைந்தார்; இறுதியாகப் பழந்தமிழ்ச் செல்வம் எனக்கு நல்கிய கவியரசர் மறைந்தார் இக் கொடுங்காலம் இப் பெருமக்களை மறைக்கலாம். வேறே என்ன செய்ய முடியும்? அவர் தம் புகழ் பொன்றாது நிற்பது. வாழ்க அவர் புகழ், வளர்க தமிழ்.

# தமிழ்நாட்டுச் சிற்பக்கலைகள்

[மயிலை, திரு. சீனி. வேங்கடசாமி.]

சிற்பக்கலை அழகுக் கலைகளில் ஒன்று. நாகரிகம் படைத்துள்ள எல்லா நாட்டவரும் இந்தக் கலையை வளர்த்துள்ளார்கள். தமிழ்நாட்டிலும் இந்தச் சிற்பக்கலையை நம் முன்னோர் நன்கு வளர்த்திருக்கிறார்கள். நமது சிற்பம் உலகத்தவரால் நன்கு மதிக்கப்படுகிறது.

மிகப்பழைய காலத்தில் சிற்ப உருவங்கள் மண்ணாலும் சுதையினாலும் மரத்தினாலும் அமைக்கப்பட்டன. அதற்குப் பின்னாக கல்லிலும் செம்பு பித்தளை முதலிய உலோகங்களிலும் சிற்பஉருவங்கள் அமைக்கப்பட்டன. பல்லவஅரசர் காலத்திலும், பின்னர் சோழஅரசர் காலத்திலும் சிற்பக்கலை செழித்து ஓங்கி வளர்ந்து உயர்நிலை பெற்றது. சோழர்காலத்திற்குப் பிறகு, அஃதாவது 15-ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு நமது நாட்டில் சிற்பக்கலை வளர்ச்சி குன்றிவிட்டது என்னலாம்.

பல்லவஅரசர் காலத்திலும் சோழமன்னர்காலத்திலும் கல்லிலும் செம்பிலும் அமைக்கப்பட்ட கண்ணையும் கருத்தையும் கவர்கின்ற அழகான சிற்ப உருவங்கள் நமது நாட்டில் ஆங்காங்கே சிதறிக்கிடக்கின்றன. சிற்பக்கலையின் அழகைச் சுவைத்து மகிழ்கின்ற நற்பண்பு, நம் நாட்டவரிடத்தில் (ஒரு சிலரைத் தவிர) இப்போது பெரும்பாலும் மறைந்துவிட்டபடியினாலே இச் சிற்பங்கள் ஆங்காங்கே சீரழிந்து கிடக்கின்றன. சிற்பக்கலையின் அழகைச் சுவைத்து அதன் சிறப்பை உணர்ந்து மகிழும் பண்பை நம்மவர் வளர்க்கவேண்டும். ஒரு நாட்டுக்குப் பொருட்செல்வம் எவ்வளவு தேவையாக இருக்கிறதோ அவ்வாறே கலைசெல்வங்களும் தேவைதான். ஆகவே, நமது பழைய கலைச்செல்வங்களைச் சிதறவிடாமலும் அழியவிடாமலும் போற்றிப் பாதுகாக்க வேண்டியது நம்முடைய கடமையாகும். ஏனைய நாட்டவர் தத்தம் கலைச்செல்வங்களைப் பொன்னேபோல் போற்றிப் பாதுகாத்து வருகிறார்கள். நமது நாட்டுச் சிற்பக்கலைப் பொருள்கள் நமது நாட்டின் பொதுச் சொத்து; நம் பண்டையோர் வைத்துச்சென்ற பெருஞ் செல்வம் என்பதை உணர்ந்து அவற்றைப் பாதுகாக்கவேண்டுவது நம் எல்லோருடைய கடமையாகும்.

பல்லவ அரசர்களும் சோழமன்னர்களும் கல்லிலும் செம்பிலும் சிற்பக்கலைகளை அமைத்து வைத்தார்கள் என்று சொன்னோம். இந்தச் சிற்ப உருவங்கள் நமது நாட்டிலே ஆங்காங்கே

யுள்ள கோயில்களில் அமைந்துள்ளன. முற்காலத்தில் அமைத்த சிற்பக் கலைச்செல்வங்களின் விலைமதிப்பைக் கணித்தால் அவை பல கோடி பொன்பெறும். இவ்வாறு கூறுவது வெறும் புகழ்ச்சி வார்த்தை எனக் கருதவேண்டா. உண்மையில் பல கோடி பொனபெறும் என்பதைச் சிற்பக்கலை வல்லவர் ஒப்புக் கொள்வர்.

சிற்பக்கலைகள், கண்ணையும் கருத்தையும் கவர்ந்து மனதிற்கு இன்பங் கொடுக்கும் இனிய கலைப்பொருள்கள்! அவற்றின் அழகும் அமைப்பும் எல்லோருக்கும் உணர்ச்சி கொடுத்து மகிழ்வூட்டுகின்றன! ஆனால், அவற்றில் சிறிது கருத்தூன்றிக் காணவேண்டும். சற்றுக் கலைச்சுவையும் இருக்கவேண்டும். இக் கலையுணர்வு பெற்றோர், அழகிய கலைப்பொருள்களைக் காணுந் தோறும் புதியதோர் இன்ப உலகத்திலே வாழ்கிறார்கள்.

நமது நாட்டுச் சிற்பக்கலை உருவங்களில் பல அழிந்துவிட்டன. பல சிற்பக்கலைச்செல்வங்கள் மண்ணுள் மறைந்து கிடக்கின்றன. பல சிற்பச்செல்வங்கள், பழைய கோயில்களைப் புதுப்பிக்கிற பெருஞ்செல்வர்களால், அந்தோ! அந்தோ! கொலைசெய்யப்பட்டன; கொலைசெய்யப்படுகின்றன. (இவ்வாறு கலைச்செல்வங்கள் கொலைசெய்யப்படுவதைப்பற்றி எழுதினால் அது ஒரு பெரிய நூல் ஆகும்.) மற்றும் பல சிற்பக் கலைச்செல்வங்கள் ஐரோப்பியரால் கொள்ளைகொண்டு போகப் பட்டன. சென்ற இருநூறு ஆண்டுகளாக இருந்த ஆங்கில ஆட்சிக்காலத்திலே, இந்தியச் சிற்பஉருவங்களை அயல்நாடுகளுக்கு அனுப்பக்கூடாது என்னும் சட்டம் இல்லாதபடியினாலே நம் சிற்பக்கலைப்பொருள்கள் அமெரிக்கா, பிரான்சு, இங்கிலாந்து முதலான மேல்நாடுகளுக்குக் கள்ளத்தனமாகக் கொண்டு போகப்பட்டன. நம் கோயில்களிலிருந்த (கல்லிலும் உலோகத்திலும் செய்யப்பட்ட) சிற்பக்கலைப்பொருள்களைக் கள்ளத்தனமாக வாங்கிய ஐரோப்பியர்களுக்கும் அமெரிக்கர்களுக்கும் அப்பொருள்களைக் கள்ளத்தனமாக விற்றவர் யார்? நம் நாட்டுக் கோயிற் "பெருச்சாளிகள்" தான். எலிகளுக்கும் பெருச்சாளிகளுக்கும் கலைப்பெருமை தெரியுமா? சிறுகாசுக்குப் பெருஞ் செல்வமான சிற்பக்கலைகளைக் கொடுத்துவிட்டார்கள்! களவாடிய பொருள்களைக் கள்ளர்கள் சிறுதொகைக்கு விற்பதுபோல.

தெரிந்தும் தெரியாமலும் மேல்நாடுகளுக்குச் சென்ற நம் நாட்டுச் சிற்பக்கலைப்பொருள்கள் அந் நாட்டுக் காட்சிச்சாலைகளில் காட்சியளிக்கின்றன. நமது நாட்டைவிட்டுச் சென்ற அவை மறுபடியும் நமது நாட்டிற்கு வருமா? ஒருபோதும் வாரா. இலட்சக்கணக்காக டாலர்களைக் கொட்டிக்கொடுத்

தாலும் அப் பொருள்களை அவர்கள் திருப்பிக்கொடுக்கமாட்டார்கள். ஏனென்றால் அவர்கள் கலைப்பொருள்களின் சிறப்பை நன்கறிந்தவர்கள். நம்மவரைப்போன்று ஏமாளிகள் அல்லர். காட்சிச்சாலைகளில் அல்லாமல் தனிப்பட்டவரிடத்திலும் நம் கலைச்செல்வங்கள் சென்றுவிட்டன. இதற்காக மேல்நாட்டாரைக் குறைகூறுவதில் பயன் இல்லை. கலைச்செல்வங்களில் அவர்களுக்குள்ள ஆர்வத்தையும் கலையுணர்வையும் நாம் மெச்ச வேண்டும். மதுரை மாவட்டத்தில் இருந்த ஒரு பெரிய கருங்கல் மண்டபத்தை—சிற்பக்கலை பொருந்திய பெரிய மண்டபத்தை அமெரிக்காவில் உள்ள ஒரு பெரிய நகரத்திற்குக் கொண்டு போய் இங்கிருந்தமாதிரியே அங்கு மண்டபம் கட்டியிருக்கிறார்கள்! இந்த மண்டபத்தைப்பற்றி ஒரு புத்தகத்தையும் எழுதியிருக்கிறார்கள். இப்போது வேலூர்க்கோட்டையில் இருக்கிற, மிகச் சிறந்த சித்திரவேலை யமைந்த கருங்கல் மண்டபம் சிற்பக் கலைக்குப் பேர்போனது. இந்த மண்டபத்தை அடியோடு பெயர்த்தெடுத்துக் கொண்டுபோய் இங்கிலாந்து தேசத்தில் அமைக்க ஆங்கிலேயர் சென்ற நூற்றாண்டில் முயற்சி செய்தார்கள். ஆனால், நல்ல வேளையாக, இந்த மண்டபத்தை ஏற்றிக் கொண்டுபோக வந்த கப்பல் கடலில் மூழ்கிவிட்டது. ஆகவே, அந்த முயற்சி கைவிடப்பட்டது. அந்தக் கப்பல் மூழ்கியிரா விட்டால், வேலூரில் உள்ள சிற்பக்கலை மண்டபம் இப்போது இலண்டன் மாநகரத்தில் காட்சி யளித்துக்கொண்டிருக்கும்.

ஒரு பிரெஞ்சுக்காரர் நம்நாட்டுச் சிற்பக்கலைப்பொருள்கள் பலவற்றைப் பாரிஸ்நகரத்திற்குக் கொண்டுபோய்விட்டார். அவர் கொண்டுபோனவை யாவும் பழையகாலத்துச் சிற்பங்களே. தமிழ்நாட்டிலே பேர்போன ஒரு கோயிலிலிருந்த பழைமையான நடராசர் உருவத்தை வெகு தந்திரமாக இவர் பாரிஸ் நகரத்திற்குக் கொண்டுபோய்விட்டாராம். பழைய நடராசர் விக்கிரகத்தைப் போலவே ஒரு புதிய நடராசர் விக்கிரகத்தைச் செய்வித்து, புதிய விக்கிரகத்தைக் கொண்டுபோய் அக் கோயிலில் வைத்துவிட்டுப் பழைய நடராசர் விக்கிரகத்தை அவர் எடுத்துக்கொண்டு போய்விட்டாராம். கைக்கூலி பெற்றுக் கொண்டு அக் கோயில் "பெருச்சாளி" பழைய விக்கிரகத்தைக் கொடுத்துவிட்டுப் புதிய நடராச விக்கிரகத்தை வாங்கிக்கொண்டதாம்! இவ்வாறெல்லாம் நம் நாட்டுச் சிற்பக்கலைப்பொருள்கள் வெளிநாடுகளுக்குப் போய்விட்டன.

நற்காலமாக, நாம் குடிஅரசு பெற்றபிறகு, நம் அரசாங்கத்தார், நமது நாட்டுக் கலைப்பொருள்கள் வெளிநாடுகளுக்கு அனுப்பப்படக்கூடாது என்று உத்தரவு போட்டிருக்கிறார்கள்.

மேல்நாட்டார் கள்ளத்தனமாகவும் நல்லதனமாகவும் கொண்டுபோன கலைச்செல்வங்கள் போகட்டும். பழைய கோயில்களை இடித்துத்தள்ளிப், புதிய கோயில்களை அமைக்கும் நம் நாட்டுப் பெருஞ்செல்வர்கள் செய்த நாசவேலையினால் அழிந்துபோன கலைச்செல்வங்கள் போகட்டும். இவைபோக, மண்ணிலும் கிணறுகளிலும் குளங்களிலும் மறைந்துகிடக்கும் கலைச்செல்வங்கள் போகட்டும். இவையெல்லாம் போனாலும் கூட, இன்னும் ஏராளமான கலைச்செல்வங்கள் இப்போதும் எஞ்சியுள்ளன. பல சிற்பக்கலைப்பொருள்கள் இருட்டறைகளில் மறைந்துகிடக்கின்றன. பல சிற்பக்கலைப்பொருள்கள் பற்பல கோயில்களில் கலைச்சிறப்பு உணராதவர்களால் புறக்கணிக்கப்பட்டுக் கிடக்கின்றன. பல கற்சிற்பங்கள் வயல்களிலும் ஊர்ப்புறங்களிலும் வீழ்ந்துகிடப்பதைப் பல இடங்களில் கண்டிருக்கிறேன். குளங் குட்டைகளின் ஓரங்களில் துணி தோய்க்கப் போட்டிருந்த சில கற்களைப் புரட்டிப் பார்த்தபோது அவற்றில் சிற்பங்கள் அமைந்திருந்ததைக் கண்டிருக்கிறேன். இவையெல்லாம் எதைத் தெரிவிக்கின்றன? நமது நாட்டில் சிற்பக்கலையுணர்வும், சிற்பக்கலைகளைக் கண்டு சுவைக்கும அறிவும் மங்கி மழுங்கி மறைந்துவிட்டன என்பதைக் காட்டுகின்றனவன்றோ? கலை, கலை என்று தாள்களிலும் மேடைகளிலும் எழுதப்படுகின்றன; பேசப்படுகின்றன. கலை என்றால் சினிமாவும் நடனமும் இசையும் நாடகமும்தான் என்று பெரும்பாலோர் கருதிக்கொண்டிருக்கிறார்கள். சிற்பம் ஓவியம் முதலிய கலைகளையும் போற்றவேண்டும்.

நம் நாட்டுச் சிற்பக்கலைப்பொருள்கள் பெரும்பாலும் சமயத் தொடர்புடையவை. சைவ வைணவ பெளதத சைன சமயத் தொடர்பான பல சிற்பங்கள் நமது நாட்டில் கல்லிலும் செம்பிலும் அமைந்து கிடக்கின்றன. சமயப்பகைமை பாராட்டாமல் அக் கலைப்பொருள்களையெல்லாம் செவ்வனே பாதுகாக்கவேண்டும். சமயப்பகையினால் அழிக்கப்பட்ட சிற்பக் கலைச்செல்வங்கள் பல.. எல்லாச் சமயத்துச் சிற்பங்களிலும் கலையழகு உண்டு. ஆகவே, கலைச்செல்வங்களில் சமயப்பகையும் சமயப்பொறாமையும் காட்டல் ஆகாது.

நான் எழுதிய "இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம்" என்னும் நூலில், சிவபெருமானுடைய தாண்டவ மூர்த்தங்கள் (நடராசர் உருவங்கள்) நூற்றெட்டு உண்டென்றும் அவற்றில் சில நமக்குக் கிடைக்கவில்லை என்றும் எழுதியிருக்கிறேன். அந்நூல் வெளிவந்த பிறகு வேறு சில புதிய தாண்டவ உருவங்கள் கிடைத்தன. அண்மையில் மற்றொரு புதிய நற்செய்தியை

அறிந்தேன். அஃதென்னவென்றால், சுமார் ஐம்பது அல்லது அறுபது தாண்டவ உருவங்கள் தஞ்சாவூர்ப் பெரிய கோயிலில் இருக்கின்றன என்பதே. இராச இராசசோழன் கட்டிய தஞ்சைப் பெருடையார் கோயிலிலே (பிருகதீசுவரர் கோயில்) மறைந்துகிடந்த ஒரு இடம் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இந்த இடம் வெளிச்சம் இல்லாமல் மிக இருட்டாக உள்ளது. இங்குக் கருங்கல்லில் செதுக்கியமைக்கப்பட்ட அழகிய திருவுருவங்கள (தாண்டவத் திருமேனிகள்) காணப்படுகின்றன. மற்றும் பல கற்கள் சிற்பம் அமைக்கப்படாமல் கிடக்கின்றன. சிவபெருமானுடைய தாண்டவ உருவங்கள் நூற்றெட்டையும் அமைக்கத் தொடங்கிச சிற்பிகள் வேலைசெய்து கொண்டிருநத காலத்தில் எக்காரணத்தினாலோ அரைகுறையாய் வேலை நிறுத்தப்பட்டிருக்கிறது. இந்தக் கோயிலில மறைவாக உள்ள இந்தக் காபபககிருகம கண்டு பிடிக்கப்பட்டு இரண்டாண்டுகள் ஆகின்றனவாம். ஆனால், இச் செய்தி எக்காரணத்தினாலோ மறைதது வைக்கப்படடிருக்கிறது. கலையழகில் ஈடுபட்டு இன்புறுகிற கலைச் செல்வர்கள் நேரில்சென்று இச் சிற்பங்களைப் படம் எடுத்து உலகத்தாருக்கு வெளிப்படுத்தவேண்டும். இந்த இடம் மிக்க இருட்டாக இருப்பதால் புகைபபடம் எடுப்பது கடினம். தகுந்த வெளிச்சங்களோடு சென்று படம் பிடிக்கலாம். அரசாஙகத்து நிலவியற்பகுதி அதிகாரிகளும் கோயில்அதிகாரிகளும் ஒததுழைத்து, மக்கள் கண்டு மகிழ வழிவகை செய்யவேண்டும.

நமது நாட்டில் கலைச்செல்வங்கள் எல்லாம் எப்படி மறைந்து கிடக்கின்றன என்பதைத் தெரிவிக்கவே இதனை இங்குக் குறிப்பிட்டேன்

நான் சென்ற சில ஊர்களில், சிறிதும் எதிர்பாராத இடங்களில், எதிர்பாராத விதமாகப பழைய சிற்ப உருவங்கள் இருப்பதைக் கண்டு வியப்படைந்தேன். சோழர் காலத்துக்கு முற்பட்ட பல்லவர்காலத்துச் சிற்பங்களை எதிர்பாராத இடத்தில் எதிர்பாராத விதமாகக் காண்பது எவ்வளவு எளிதானது!

எனவே, நம் நாட்டிலே சிற்பக்கலைப் பொருள்கள் இன்னும் ஏராளமாக உள்ளன. அவற்றைத் தேடிக் கண்டுபிடித்து, போற்றிப் பாதுகாத்து வைப்பதோடு, அக் கலைச்செல்வங்களைப் பொதுமக்கள் கண்டு சுவைக்கும்படி பொதுஇடங்களில், அல்லது பொருட்காட்சிச் சாலைகளில் அமைக்கவேண்டும்.

நமது நாடு கலைச்செல்வங்களை ஏராளமாகக் கொண்டுள்ளது. அழகுக்கலைகள் எல்லாம் நமது நாட்டில் நிரம்பியுள்ளன. அவற்றைப் பாதுகாக்கவேண்டுவது நம் கடமையாகும்.

# கிராமம்

[திரு. T. V. சதாசிவபண்டாரத்தார்]

தென்னார்க்காடு மாவட்டத்தில் கிராமம் என்ற பெயருடைய ஊர் ஒன்றுள்ளது. இது விழுப்புரத்திற்குத் தென்மேற்கே பத்துக்கல் தூரத்திலுள்ள திருவெண்ணெய்நல்லூர் ரோடு என்ற புகைவண்டி நிலையத்திற்கு அண்மையில் இருக்கின்றது. இவ்வூரிலிருந்து வடக்கே இரண்டுகல் சென்றால் சுந்தர மூர்த்தி சுவாமிகளை இறைவன் தடுத்தாட்கொண்ட தலமாகிய திருவெண்ணெய்நல்லூரைக் காணலாம். நகரங்களும் பட்டினங் களும் தவிர எஞ்சியுள்ள தமிழநாட்டுச்சிற்றூர்கள் எல்லாம் கிராமங்களென்றே பொதுவாக வழங்கப்படுகின்றன. இந் நிலையில் ஓர் ஊர்மாத்திரம் கிராமம் என்ற சிறப்புப்பெயரால் வழங்கிவருவது வியப்பைத் தருகின்றது. ஆகவே, இவ்வூர் எவ்வாறு இப்பெயர் எய்தியது என்பது ஆராய்தற்குரிய தொன்றாம். தமிழ்நாட்டூர்களின் பழைய பெயர்களையும் அவ்வூர்கள் இடைக்காலத்தில் எய்திய வேறுபெயர்களையும் அவற்றின் வரலாற்றையும் அறிந்துகொள்வதற்குத் தக்க ஆதாரங்களாக இருப்பவை, பன்னிரு திருமுறைகளும் தமிழ் வேந்தர்கள் காலத்தில் வரையப்பெற்ற கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் ஆகும். எனவே, அவற்றின் துணைகொண்டு இவ்வூரின் பழைய பெயரை ஆராய்ந்தறிய முயலுவோம்.

இவ்வூரிலுள்ள திருக்கோயில் சைவசமய குரவர் நால்வருள் ஒருவராகிய திருநாவுக்கரசு அடிகளால் பாடப்பெற்ற பெருமை யுடையதாகும். இவ்வடிகளது திருப்பதிகத்தால் இத்திருக் கோயில் திருமுண்டீச்சரம் என்ற பெயருடையது என்பதும் இதில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் சிவலோகநாதர் என்று அக்காலத்தில் வழங்கப்பெற்றனர் என்பதும் இவ்வூர் தென் பெண்ணையாற்றங்கரையிலுள்ளது என்பதும் நன்கு புலனா கின்றன. இச்செய்திகளை,

'உரிந்தவுடை யார்துவரால் உடம்பைமூடி
உழிதருமவ் வூமரவர் உணரா வண்ணம்
பரிந்தவன்காண் பனிவரைமீப் பண்ட மெல்லாம்
பறித்துடனே நிரந்துவரு பாய்நீர்ப் பெண்ணை
நிரந்துவரும் இருகரையும் தடவா வோடி
நின்மலனை வலங்கொண்டு நீள நோக்கித்
திரிந்தலவு திருமுண்டீச் சரத்து மேய
சிவலோகன் காண்அவனென் சிந்தை யானே'

என்ற அடிகளது திருப்பாடல் இனிது உணர்த்துதல் காண்க.

திருநாவுக்கரசு அடிகளது திருமுண்டீச்சரப் பதிகத்தில் இக்காலத்தில் கிடைத்துள்ளவை ஒன்பது திருப்பாடல்களே யாகும். இவற்றுள் திருக்கோயிலின் பெயரும் இறைவன் திருநாமமும கூறப்பட்டுள்ளனவேயன்றி, ஒன்றிலேனும் ஊரின் பெயர் காணப்படவில்லை. திருஞானசம்பந்த சுவாமிகளும் தம் க்ஷேத்திரக்கோவையில் 'மாட்டூர் மடப்பாச்சிலாச்சிராமம் முண்டீச்சரம் வாதவூர் வாரணாசி' என்ற அடியில் முண்டீச்சரம் என்னுந் திருக்கோயிற் பெயரைக் குறித்துள்ளனரே யன்றி, இக்கோயில அமைந்துள்ள ஊரின் பெயரைக் கூறவில்லை.

இனி, கல்வெட்டுக்களின் துணைகொண்டுதான் ஊரின் பழைய பெயா யாதெனக் காண்டல் வேண்டும். கிராமம் என்னும் ஊரிலுள்ள இத்திருக்கோயிலில் பத்தொன்பது கல்வெட்டுக்கள் உள்ளன. இவற்றுள், மூன்று கல்வெட்டுக்கள் பாண்டியர் ஆட்சிக்காலத்திலும இரண்டு கல்வெட்டுக்கள் விசயநகரவேந்தர் ஆட்சிக்காலத்திலும் வரையப்பெற்றவை. எஞ்சிய கல்வெட்டுக்கள் எல்லாம் சோழமன்னர்களின் காலத்தனவாகும். இக்கல்வெட்டுக்களுள் மிக்க பழைமை வாய்ந்தவை முதற்பராந்தக சோழன்காலத்துக் கல்வெட்டுக்களேயாம். இவற்றுள் ஒன்று, பல வரலாற்றுண்மைகளை நன்கு விளக்குவதாக உள்ளது. இக்கல்வெட்டின முற்பகுதி, மூன்று வடமொழிச்சுலோகஙகளிலும் பிறபகுதி தமிழ்மொழியிலும் அமைநதுளளன. முற்பகுதி, கேரளதேயத்தில் புத்தூரில் பிறந்தவனும் இராசாதித்தனுடைய படைத்தலைவனுமாகிய வெள்ளங்குமரன் எனபான் பெண்ணையாற்றங்கரையிலுள்ள மௌலி கிராமத்தில் மந்தரமலை போன்ற கற்றளி ஒன்று மாதேவர்க்கு அமைத்தனன் என்று உணர்த்துகின்றது. தமிழ் மொழியிலுள்ள கல்வெட்டுப் பகுதியை அடியிற் காண்க :

(1) 'ஸ்வஸ்திஸ்ரீ கலியுக வர்ஷம நாலாயிரத்து நாற்ப (2) த்து நாலு மதுரைகொண்ட கோப் பரகேசரிவன்மற் (3) கு யாண்டு ௩௰௪ ஆவது கலியுக........ன்று நாள் (4) பதினொன்கு நூறாயிரத்து எழுபத்தேழாயிரத்து (5) முப்பதது ஏழுஆக திருமுடியூர் ஆற்றுததளி (6) பெருமானடிகள் உடைய......................ம திரு (7) க் கற்றளியாக அமைப்பித்து இவ்வாட்டைம (8) கர நாயற்றுச் சனிக் கிழமை பெற்ற இரேவதி ஞான் (9) று கும்பதாரையால் (10) மூன்றுச்சி பதினாறு (11) அடியில் ஸ்ரீ ஆற்றுத்தளிப் (12) பெருமானடிகளை (13) த் திருக்கற்றளியினுள் (14) ளே புக எழுந்தருளுவித்து பிரதிஷ்டை செய்வி(15)த்தார் சோழர்கள் மூலப் (16) ருத்யர் ஸ்ரீ பராந்தக தேவரான

(17) ஸ்ரீ வீர சோழப்பெருமானடிகள் (18) மகனர் ராஜாதித்ததேவர் பெரும் (19) படை நாயகர் மலைநாட்டு நந் (20) திக்கரைப்புத்தூர் வெள்ளங் (21) குமரன் இது பன்மாகேஸ்வர (22) ரக்ஷை ரக்ஷிப்பார் ஸ்ரீ பாதம்தலை (23) மேலன'[1]

இக் கல்வெட்டுப்பகுதியால் மதுரைகொண்ட கோப் பரகேசரிவர்மனுகிய முதற் பராந்தக சோழனது ஆட்சியின் 36-ம் ஆண்டாகிய கலியப்தம் 4044ல் திருமுடியூரிலுள்ள ஆற்றுத் தளிப்பெருமானடிகளின் திருக்கோயில கருங்கற்கோயிலாக அமைக்கப்பெற்றது என்பதும் அதனை அவ்வாறு அமைப்பித்தவன், முதற்பராந்தக சோழன் புதல்வன் இராசாதித்த சோழனுடைய பெரும்படைத்தலைவனும சேரநாட்டு நந்திக்கரைப் புத்தூரனுமாகிய வெள்ளங்குமரன் என்பதும் நன்கு வெளியாகின்றன. இதில் குறிக்கப்பெற்றுள்ள கலியுக ஆண்டு, கி. பி. 943 ஆகும். [2]பெண்ணையாற்றங்கரையிலிருத்தல் பற்றி இத்திருக்கோயில் ஆற்றுத்தளி என்று அந்நாளில் வழங்கப்பட்டுள்ளது. அன்றியும், இற்றைக்கு ஆயிரத்துப்பத்து ஆண்டுகளுக்குமுன் இக்கோயில் அமைந்துளள ஊர் திருமுடியூர் என்ற பெயருடன் விளங்கியது என்பது தமிழ்க் கல்வெட்டுப்பகுதியால் தெளிவாக அறியக்கிடத்தல் காணலாம். இக்கல்வெட்டின் முற்பகுதியிலுள்ள வடமொழிச்சுலோகத்தில் இவ்வூர் மௌலி கிராமம் என்று கூறப்பட்டிருத்தல் உணரற்பாலதாகும். எனவே, திருமுடியூர் என்பது மௌலிகிராமம் என வடமொழியில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது என்று தெரிகிறது. மௌலி என்ற வடசொல், முடி என்று பொருள்படும் என்பது கற்றூர் பலரும் அறிந்ததேயாம். சோழமன்னர்களின் ஆட்சிக் காலத்தில் திருமுடியூா என்று வழங்கப்பெற்ற இவ்வூர், பிற்காலததில் மௌலிகிராமம் என்னும் வடமொழிபபெயர் எய்தி இறுதியில் கிராமம் என்று வழஙகப்பட்டுவருதல் அறியத் தக்கது. ஆகவே, திருமுடியூர் எனப்படுவதே இதன் பழைய பெயர் என்பது நன்கு துணியப்படும்.

---

1. Archaeological Survey of India, Annual Report 1905—06, pp. 182—3.

2. Epigraphia Indica, Vol. VIII, p. 261.

# 'உத்தமம் சூழ்ந்த கெங்கயநாயக்கர் பாளையம்'

[திரு. தி. பொ. நாராயணசாமி பாரதி]

(ஒரு செப்பேடு பற்றிய கட்டுரை)

**ஊரும் காலமும்:**

இப்பொழுது 'உத்தமபாளையம்' என வழங்கப்பெற்று வரும் ஊர், ஸ்ரீவங்காரு திருமலைநாயக்கர் தானம் செய்து கொடுத்த செப்பேட்டில், "சுரபிநதி உத்தமம் சூழ்ந்த கெங்கய நாயக்கர் பாளையம்" என்ற பெயர் தாங்கி இருந்தது. கெங்கய நாயக்கர் யார் எனத் தெரியவில்லை; எனினும் அப்பெயர் உடை யார் "பாளையப்பட்டு"டன் இங்குவந்து தங்கி வாழ்ந்திருக்க வேண்டும். அவர் பாளையப்பட்டுத் தலைவராயும் இருந்திருக்க வேண்டும்; அவர் பெயரால் ஊருண்டாயிருக்கவேண்டும்; அவ் வூருக்கு அப்பெயரை வைத்திருக்கவேண்டும். 'சுரபி நதி' என் பது இப்பொழுதும் ஓடிக்கொண்டிருக்கும் சுருளியாற்றின் பெயர். இந்நதி பாய்வதால், "உத்தமம் சூழ்ந்த" என்ற அடை மொழி பெற்று, "சுரபி நதி உத்தமம் சூழ்ந்த கெங்கய நாயக்கர் பாளையம்" என்ற பெயருடன் விளங்கிவந்தது. நாளடைவில் "சுரபி நதி" என்ற பெயரும், "கெங்கய நாயக்கர்" என்ற பெய ரும மறைய எஞ்சி நின்ற "உத்தம பாளையம்" என்றே இப் பொழுது வழங்கப்பெற்று வருகிறது. இது தமிழ்இலக்கணத் தில் 'மரூஉ' என்ற வழக்கை ஒட்டியதே. இக்கட்டுரைக்குக் கிடைதத செப்பேடு, சாலிவாகன சகாப்தம 1655-இல் வெட்டப் பெற்றது. இப்பொழுது சாலி: 1876. எனவே இச்செப்புப் பட்டயம் இன்றைக்குச் சரியாக 221 ஆண்டுகளுக்குமுன் வெட் டப்பெற்றது தெளிவு. கிறிஸதவ அப்தம், சாலிவாகன சகாப் தத்தைவிட 78-ஆண்டுகள் பிந்தியது.

**பட்டயம் பிறந்த காரணம்; தேதி:**

முன் குறிப்பிட்ட 'சுரபி நதி' என்ற சுருளியாறு உத்தம பாளையத்தின் கிழக்கே தென் வடக்காக ஓடுகிறது; இவ்வாற் றின் மேற்குக்கரையில் இவ்வூர் அமைந்துளது. ஊருக்குத் தெற்கேயும், ஆற்றங்கரைக்கு மேற்கேயும் "காளாத்தீசுவரர் ஞானம்பிகை கோயில்" இருக்கிறது. இக்கோயிலை ஸ்ரீவங்காரு திருமலை நாயக்கரோ அவர்தம் முன்னோரோ கட்டியிருக்கவேண் டும். காளாத்தீசுவரர் ஞானம்பிகை 'பல்லக்குச் சேருவை' திருவிளையாடலுக்கு உபய கட்டளையாகக் "கருங்காட்டுக்குளம்" என்ற கிராமத்தை ஸ்ரீவங்காரு திருமலைநாயக்கர், இவ்வூர்

பிச்சக் கணக்கனுக்குத தாரைசாசனப் பட்டயம் பண்ணிக் கொடுத்தார் என்று கூறும செபபுப்பட்டயத்தில தெலுங்கில் கையெழுத்திடப்பட்டிருக்கிறது. அது (தமிழில்) வருமாறு:

"ஸ்ரீபங்காரு திருமலை நாயனிதாரு, கரும் காட்டூர் வாழும் ஞானம்பிகை அமசசாரிக்குத் தாரை வாரத்து எம் சுய எண்ணத்தால் கொடுத்தோம். (கர நரே ஆசநசராம் ரேக்ரா ஆதுப நெங்ப்ர கோகேத ஸ்ரீராசு—இவ்வரிக்குப பொருள் விளங்கவில்லை.)

இவ்வாறு சாசனம் செய்து கொடுத்த தேதி "பிரமாதீச்ச வருஷம் கார்த்திகைமாதம 26-ஆம தேதி பவர்ணமையும் ரோகிணி நட்சத்திரமும் 'கஉ' லவா காணமும் சோமபராக புண்ணிய காலமும சுபயோக சுபகாணமும பெற்ற சுபதினத் தில்" என்று கூறப்பெற்றுளது

ஸ்ரீ பங்காரு திருமலை நாயக்கரும் அவர் விருதுப்பெயர்களும்

இச்சாசனகர்த்தா "ஸ்ரீ பங்காரு திருமலை நாயக்கர்" எனத் தெரிகிறது. "பங்காரு" என்பது தெலுங்குச் சொல்; தங்கம் என்பது அதன் பொருள். இவர் பெரியகுளம் மாகா ணத்துக்கு அரசப்பிரதிநிதி என்பதும், போடிநாயக்கனூர் ஜமீன்தார் என்பதும, ஏழு தலைமுறைக்கு முன்பு போடிநாயக்க னூர் ஜமீன்தாராக இருநதார் என்பதும, தெலுங்கில்தான் கையெழுத்திடுவார் என்பதும, போடிநாயக்கனூர் ஜமீனில் சில காலம் மானேஜராக இருந்த சிவநேசசசெலவர் வித்துவான் திரு. கு. அண்ணாமலைப்பிள்ளை அவர்கள என்னிடம் கூறினார்கள். அவர்கள் கூறியுதவிய இச்செய்திக்கு மிக்க நன்றி. அரசப் பிரதிநிதி என்று சாசனம் குறிப்பிடும் பகுதி வருமாறு:

"ஸஹஸ்ரீன மகா மண்டலெசுரன ராசாதிராசன ராசப் ரமெசரன ராசமார்த்தாண்டன ராச கமபீரன பாஷைக்குப் புவராய கண்டன் அரியதள விபாடனகண்ட நாடு கொணடு கொண்டநாடு கோடாதான மூவராய கண்டன ஒட்டிய தள விபாடன் துலுக்கர் மொகந்த விழததான எம மண்டலமும் திறை கொண்டருளிய ராசநரேந்திரரான அசுபதி நரபதி நவ கோடி நாராயணன் ஆனை கொந்திராயா வெஙகிடபதிராயா விருப்பாட்சிராயா விட்டில்ராயா பிறவுடதேவராய ராமதேவ ராயா இரங்கநாயக்கருக்குப பிரிதிராச்சியம பண்ணுகின்ற சாலிவாகன சகாத்தம் (ஆயிரத்து அறுநூற்று அறுபத்தைந்து) தின மேல விசயநகரத்தில வீத்திருந்து வீர சிம்மாசன ரூடராக க்பிவ்தி சாம்பிராச்சியம் பண்ணி அருளா நின்ற காலத்தில் ஆனை

கொந்தி உழச்சாவடிக்குச் செல்லாநின்ற தாராபுரம் சீமையிலே கிசவனுதனுயகரய்யனவர்கள் திருமலைனுயக்கய்யனவர்கள் சொக்கனுதனுயக்கய்யனவர்கள் ரஙகிஷபடிண முதிவிரப்பனுக்கய்யனவர்கள்வினசாங்க கிஷட்டிண சொக்கனுதனுயக்கய்யனவர்கள் ஸ்ரீ வங்காருத திருமலைனுயக்கனய்யனவர்களுக்கு அமா மாகாணமான தென் மண்டலம் பெரியகுளம் மாகாணத்தில் தென்கரையான அழநாடு பசுமலை............"

என்ற இப்பகுதியால் சீரங்க நாயக்கருக்குப் பிரதிநிதியாகப் பெரியகுளம மாகாணத்தை ஆட்சிசெய்துவநதவர் ஸ்ரீ பங்காரு திருமலைநாயககர் எனத தெரிகிறது. இவர் இருநது ஆட்சி செயத ஊர் போடிநாயக்கனூர் என்பதும் மகாவிததுவான கு. அண்ணுமலைப்பிள்ளை அவர்கள் கூறினுர்களா.

"ஸ்ரீ ராசாதிராசன் ராச பரமேசுரான ராச மார்த்தாண்டன் ராசகம்பீரன் ராசளனு (எம) பயங்கரன் மதுராபுரிவாரரதிசுபான அகண்டிதல்டமிப் பிறசன்னரான மகாராய ஷதிற வங்காரு திருமலை நாயக்கனய்யனவர்கள்" இவை அவருடைய விருதுபபெயர்கள்

சாசன உரிமையும் கடமையும்

"ராயஷத்திறி தளவாயயனவர்கள் விக்கிரபாண்டியன் கால் போக்கில் கருங்காட்டுக்குளம நஞசை, புஞசை சகல சமுதாயமும் மாசயம ஷத்தி கரளாத்திசுபரசுவாமி ஞானம்பிகைக்கு பல்லக்கு செருவை திருவிளையாடலுக்கு உபய கட்டளையிட்டபடிக்கு ஆ(தி) சந்திராற கதாயி ஆய அனுபவித்துக்கொள்ளத் தக்கவும இந்தக் கிறமம் நான்கெல்லையிலும உள்ள பட்டிதொட்டி மாவடை மரவரை தொட்டம தொடிகை நிதி நிஷேபம சகல பொகங்களும அமமன் பல்லக்கு செருவைக் கட்டளைக்கு அனுபவித்துக்கொள்ளத் தகவும் இந்தப்படிக்குத் தாரபூருவமான சாதனம் செய்து குடுத்தபடியினுலே மூ(இ)ந்தானமதுக்கு ஆர் விகாதம் செய்கிறுர்களோ அவர்கள் கெங்கையிலே காராம் பசுவைக் கொண்ண பாவத்திலே பொகடராகவும். கங்கையிலே மாதுருகமனம் செய்த பாவத்திலே பொவராகவும் இத்தானம் பரிபாலனம் பண்ணினவர்களுக்கு சந்தான சமுததியூ சகல அசுவரியமும ராசப் பிறசாதமும் உண்டாவதாகவும் மதுரையிலே சொக்கலிங்க மீனுட்சி அம்மனைச் செவித்த பலன் அடையக் கடவராகவும் + முத்தன் ஆசாரி எழுததது 2"

இவ்வாறுகப் பட்டயம் கூறுவதிலிருந்து உரிமையும் கடமையும் தெரியலாகும்.

பல்லக்கு செருவை

'செருவை' என்பது சேர்வையாயிருக்கலாம். சேர்வை= சேருதல். பல்லக்கிலே சுவாமியும் அம்மனும் சேர்ந்து உலா வருவது விழாவில் ஒரு திருவிளையாடல். இங்ஙனம் சுவாமியும அம்மனும் சேர்ந்து பல்லக்கிலே சேர்நது உலா வருவர் என்பது கையெழுத்துத் தொடரில் உள்ள தெலுஙகுச் சொல்லும் வலியுறுத்துகிறது. "அம்சுஜசாரி" என்பதே அததொடர். அம்சம்=பல்லக்கு, சாரி=சஞ்சரிப்பவா.

கருங்காட்டுக்குளம் கிராமம்

"சின்னமனூர்ச் செப்பேடுகள்" தநத ஊராகிய சின்னம னூரை யடுத்துத தற்பொழுது "கருங்கட்டான குளம்" என்ற பெயருடைய கிராமம் இருககிறது "கருங்காட்டுக்குளம" என்று சாசனத்தில் வந்த பெயரே கருங்கட்டான் குளம் எனறு யிற்று. இக்கிராமத்திற்கு வரும் கால்வாய் ஒன்றுக்கு "ராஜ வாய்க்கால்" என இப்பொழுதும பெயர் உண்டு. சாசனத்தில் வரும் "விக்கிரபாண்டியன் கால் போக்கு" என்பது மேற்கூறிய கால்வாயையே உணாத்தும்.

சாசனம் பெற்றோர்

சாசனத்தில் "பிச்சக்கணக்கன்" என வந்துளது. "கணக்கன்" என்ற சிறப்புப்பெயர், பல்லக்குத் தூக்குவோருக் குக் கொடுக்கவேண்டிய உரிமைகளையும், "பல்லக்கு செருவை" திருவிளையாடலுக்கு ஏற்படும் செலவுகளையும், சாசனம பெற்ற நிலத்திலிருந்து வரும் வருமானத்தைக்கொண்டு திருவிளையாடல் நடத்தும் கடமையையும உணர்த்துவதாக இருக்கலாம். பிச்சக் கணக்கன் வழியினர் உத்தமபாளையததில் வாழ்ந்து வருகின் றனர். இவர்களிடம் உள்ள அச் செபபேடே இக்கட்டுரை எழுத உதவியது.

---

# திருக்குறள் அகவல்

[வித்துவான் திரு. மா வேதாசலம் எம். ஏ., பி. ஓ. எல்.]

## க. கடவுள் வாழ்த்து

1. அகர ஒலிமுதல் அடுத்து நிற்குமால்
எழூஉம் எல்லா எழுத்தும்;
முதலிறை உலகு முதலா உடைத்தே.

2. பன்னூல் கற்றதன் பயன்தான் என்னே
தூய அறிவன் துணைத்தாள்
வாய்மை யோடு வணங்கார் எனினே.

3. பூமேல் நடந்தான் புகழ்சால் பூங்கழல்
இடைவிடா நினைந்தவர் என்றும்
நீடு வாழ்வார் நிலமிசை யானே.

4. விழைவும் வெறுப்பும் விளையா இறைவன்
அடியிணைச சேர்ந்த அன்பர்க்(கு)
என்றும் இலவே இடும்பை தாமே.

5. இருளான் வரூஉம் இருவினை தாமும்
தோன்றுதல் இல்லை தொல்லோன்
பொருள்நிறை புகழைப் புரிந்தார் மாட்டே.

6. பொறியான் எழூஉம புரைசேர் ஐயவா
முற்றக் கெடுத்தான் முறைமை
நெறியில் நின்றார் நீடுவாழ் வாரே.

7. ஒருவாற் றானும உவமை இல்லான்
அடியிணைச் சேர்நதார்க்(கு) அல்லதை
மனத்துக் கவலை மாற்றல் அரிதே.

8. அறக்கடல் ஆய அந்தணன் தாளை
அயரார் நினைவார்க்(கு) அல்லதை
பிறகடல் நீந்தல் பெரிதும் அரிதே.

9. தத்தமக் கேற்ற தன்மை கொள்ளாப்
பொறியிற் பயனில புரையிலா
எண்குணன் தாளை இறைஞ்சாத் தலையே.

10. இறைவன் அடியிணை என்றும் நினைப்பார்
எழுமைக் கடலும் இறப்பர்
நீந்தார் அவனடி நினையா தாரே.

---

(தொடரும்)

# மதிப்புரை

## (க) குறுந்தொகை விருந்து

[ஆசிரியர்: கோம்பை அ. சுருளாண்டிப் பாவலர் அவர்கள்; வெளியிட்டோர்: கோம்பைத் தமிழ் இல்லத்தார்; விலை. ரூ. 1—0—0.]

நம் பழந்தமிழ்க் கருவூலம் சங்கநூல் தொகுதிகள். அவை பழங்கால நம் நாடு, நகர், வரலாறு, நாகரிகம், தமிழர்பண்பாடு இவைகளைத் தெள்ளத் தெளிய விளக்குவன.

அச் சங்கநூல் தொகுப்பில் 'குறுந்தொகை' என்னும் நூலும் ஒன்று. இஃது அந்நாள் காதல்வாழ்வைக் கண்ணாடிபோல் தெள்ளத்தெளியக் காட்டுவது.

ஆசிரியர் இந்நூலின் சில பாடல்களைத் தனித்தனிக் கட்டுரைகளாக்கிப் பட விளக்கத்துடன் தந்துள்ளார். இந்நூல் தன் பெயருக்கேற்பத் தமிழர்க்கு விருந்தாகவே உள்ளதெனலாம்.

இதில் மடல் ஏறல் முதல் அன்றிலும் பேடும் என்பதுவரை இருபத்து நான்கு கட்டுரைகள் வெளிப்போந்துள்ளன.

ஆசிரியர் ஒவ்வொரு தலைப்பினும் துறையின் விளக்கம் எழுதி, அத்துறைப்பாடற்கேற்ற பொருளினைத் தம் தனித்தமிழ் உரைநடையில் விளக்கிக் காட்டியுள்ளார். ஆசிரியர் இவ்விருந்தை விருந்து (புதிய) முறையில் தமிழ்நாட்டுக்குத் தந்த கடப்பாட்டுணர்ச்சியைப் பெரிதும் பாராட்டுகின்றோம். தொடர்ந்து இந்நூல் முழுதுக்குமே வரைந்துதவின் தமிழுணங்கிறகு வாடாத பேரணியாக மிளிரும். இதனை முதன்மையாக வெளியிட்டுதவிய கோம்பைத் தமிழ்இல்லத்தாரின் முயற்சிக்கு மகிழ்கின்றோம். இவ் இல்லத்தார் ஆசிரியரை இது போன்ற புது முறையில் நூல்கள் எழுதத் தூண்டி ஊக்கி மேலும் மேலும் நற்பணி புரிய விழைகின்றோம்.

## (உ) தமிழ்

[ஆசிரியர்: எஸ். சதாசிவம் அவர்கள்; வெளியிட்டோர்: கோவை, இன்பவாழ்வுப் பதிப்பகம். விலை ரூ. 1—0—0.]

தமிழ் என்னுஞ் சொற்கு இனிமை என்பது பொருள். இந்நூல் இனிமை தரும் தமிழ்மொழி பற்றிப் பலபட விரித்து எழுதி விளக்கிய ஆசிரியர் அஃகியகன்ற பேருணர்ச்சி போற்றற் குரியது.

இதில் தமிழ்நாடு என்னும் தலைப்பு முதல் வேண்டுகோள் என்னும் தலைப்பு இறுதியாகப் பத்துத் தலைப்புகளில் விளக்கியுள்ளனர்.

'செந்தமிழ் நாடென்னும் போதினிலே இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே' என்னும் பாரதியாரின் பணபுரைக் கேற்ப ஆசிரியர் தமிழ்நாடு என்னும் தலைப்பைத் துவங்கும்போது வேலியாயிரம் விளையுட்டாகும் மேகத்தை நினைவுகூர்ந்து தமிழ்நாட்டு வளங்கெழு சிறப்பையும், அந்நாடு ஆரியக்கலப்பால் வீழ்ச்சியுற்ற தன்மையையும் விளங்க எடுத்துரைத்துள்ளனர். மொழியைப்பற்றிய தலைப்பில் தமிழ் என்னும் பெயரையே வேற்றுமொழி எனக் கூறுவார் கூற்றை வன்மையாகக் கண்டிப்பது அவர்தம் கரைகாணாத் தமிழ்மொழிப் பற்றுக்கு எடுத்துக் காட்டாக இலங்குகின்றது. தமிழ் மொழிச்சிறப்பைப் பல அறிஞர்களின் அரிய கருத்துரைகளைக் குறிப்புக்களாகக் காட்டியுள்ளது பாராட்டற் குரித்து.

இன்னும் தமிழ்மொழிக் காழ்ப்புக்கொண்ட பேரறிஞர்களின் உரைகளை யெடுத்துக் காட்டி அவர் தம் அறியாமைப் போக்கினை விளக்கிக் காட்டியுள்ளனர். பிற நாட்டறிஞர்கள் தமிழ்மொழி யொன்றே ஏனைய மொழிகளுக்கெல்லாம் அடிப்படையானதென நிலைநாட்டியுள்ளதை ஆங்காங்கே விளக்கிக் காட்டியுள்ளனர்.

இறுதி வேண்டுகோட் பகுதியில் தமிழர்தம் பொறுப்பற்ற நிலையை, தன்னுடு-தன் மொழி - தன் நாகரிகப்பண்பை உயர்த்தாது உறங்கிக்கிடப்பதை மிகமிக உணர்ச்சியோடு விளக்கிக் கடமைபுரியுமாறு வேண்டியுள்ளனர்.

இதுபோன்ற நன்னூல்கள் நம் நாட்டுக்கு இது காலைத் தேவை. மக்களின்பண்பாடு இன்னும் உயரவில்லை. பொழுது போக்குக்காக என்னென்னவாகவோ நடமாடும் சிறுசிறு நூல்களை வாங்கிப் படித்துக் காலத்தை வறிதே கழிக்கின்றனர். இந்நூல் போன்றவற்றை வாங்கிக் கற்று நல்லன செய்தலில் தலைப்படுதல் தமிழ்மாந்தரின் இன்றியமையாக் கடப்பாடாகும்.

ஆசிரியர் இன்னன போன்ற நூல்கள் பல தந்து நாட்டையும் மொழியையும் வளம்படுத்தி என்றும் குன்றாப்புகழுடன் வாழ இறையருளை வேண்டுகின்றேம்.

(ரு) வழிவழி வள்ளுவர்

[ஆசிரியர்: ரா. பி. சேதுப் பிள்ளை அவர்கள், பி. ஏ. பி. எல்., வெளியிட்டோர்: பழனியப்பா பிரதர்ஸ், திருச்சிராப்பள்ளி. விலை. ரூ. 1—8—0.]

வள்ளுவர் என்றாலே தேனினும் இனிக்கும். ஏன்? உலகத்துக்கே ஒளி வழி காட்டித் திகழ்பவர் வள்ளுவராகலான்.

அவர் தம் முப்பானூல் எங்கெங்கே யார் யார்? நூல்களில் ஊடுருவிக் கலந்து நிற்கின்ற தென்பதை ஆடியின் விளக்கிக் காட்டுவது இந்நூல். இதனைக் கைம்மாறு பேணுது ஆக்கியளித்தோர் சொல்லின் செல்வராகிய பேராசிரியர் ரா பி. சேதுப் பிள்ளையவர்கள்.

இதில் **சிலப்பதிகாரத்திலே வள்ளுவர்** என்பது முதல், **பாரதியார் கவிதையிலே வள்ளுவர்** என்பது வரை ஐம்பகுதிகளாக எடுத்து நன்கு திறம்பட விளக்கியுள்ளனர்.

சிலப்பதிகாரம் மணிமேகலை போன்ற பழந்தமிழ்க் காப்பியங்களில் வள்ளுவர் மொழியும் பொருளும் பாலொடு தேன் கலந்த தொப்ப, பொன்னுடு மணிஒன்றுபட்ட தொப்பக் கலந்து இரண்டற நிற்பதை ஆசிரியர் தம் தேனினும் கனிந்து இனித்த செஞ்சொற்களால் அமைத்து 'நான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையம்' என்ற மொழிக்கு இலக்காகத் தந்துள்ளனர். சொல்லின் செல்வரைத் தமிழ்நாடு போற்றுங் கடப்பாடுடையது.

இன்னும் இதுபோன்ற பயன் தரும் பன்னூல்களை ஆசிரியரவர்கள் ஆக்கித் தந்து பொன்றாப் புகழுடன் நன்று வாழ்வார்களாக.

# செய்திகளும் குறிப்புக்களும்

**கோலாலம்பூரில் குறள் இயக்கம் :**

மலேயாநாட்டின் ஒரு பகுதியாகிய கோலாலம்பூரில் 4-10-53-ல் நிகழ்ந்த குறள் இயக்கக் குறள் வகுப்புக் கூட்டத்திற்குப் பார்வையாளராகப் போந்திருந்தபோது ம. இ கா. கல்விக்குழுச் செயலாளர் திரு. வி. ஜே. சோமசுந்தரம் அவர்கள் கூறியதாவது :

"உலகிலேயே தமிழர்பண்பாடு உயர்ந்தது; அதைத்தான் மேல் நாட்டு வரலாற்று ஆசிரியர்கள் கீழ்நாட்டுப் பண்பாடு என்றும் இந்தியப் பண்பாடு என்றும் கூறுகின்றார்கள். வரலாற்று முடிபுப்படி இந்தியா விற்கென ஒரு தனிப் பண்பாடு எப்பொழுதும் இருந்ததில்லை. அது, தமிழர்களின் தனிப் பண்பாக இருப்பதாலதான், சிங்கை (சிங்கப்பூர்)ப் பல்கலைக் கழகத்திலகூட இந்திய மொழித்தொடரில் தமிழ்மொழியின் வாயிலாக இந்தியப்பண்பாட்டைப் பற்றிக் கற்பிக்கவேண்டுமென்று முடிவு செய்துள்ளனர்"

எனத் தம் அரிய கருத்தை வெளிப்படுத்தியுள்ளனர்.

**குறிப்பு:** வள்ளுவர் பெருமையும் அவர் தந்த திருக்குறளும் தமிழ் மொழியும் கடல் கடந்த நாடுகளிலும் சென்று தம் உண்மையொளியைக் காட்டிமிளிர வாய்ப்பளிக்கும் அங்கு வாழும் தமிழன்பர்களைப் பெரிதும் பாராட்டுகின்றோம். சிங்கையிலும் தமிழ்மொழியில் இந்தியப் பண்பாட்டைக் கற்பிக்க வேண்டுமென்று பல்கலைக் கழகத்தார் முடிவு செய்திருப்பது கண்டு இங்கே நம் தமிழ்நாட்டில் அதைப் பின்பற்றுகின்றார்களா?

**திரு. சற்குணர் நினைவு நாள் :**

தமிழ்ப் பெரியார் திரு. ச. த. சற்குணர் மறைவு முதலாண்டு நினைவு நாள் விழா, சென்னைப் புரசை எம் சி. டி முத்தையா செட்டியார் உயர் நிலைப் பள்ளியில் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் திரு. ரா. பி. சேதுப்பிள்ளையவர்கள் சீரிய தலைமையின் கீழ் 23-12-53-ஆம் நாள் மாலை ஆறுமணிக்கு நிகழவுற்றது.

மறைந்த தமிழ்ப்பெரியார் சற்குணரின் வாழ்க்கைக்குறிப்பைச் சென்னை பச்சையப்பரின் அறநிலையச் செயலாளரும் சற்குணரின் மாண வரில் ஒருவருமாகிய திரு. டி. வி. இராமச்சந்திரன் பி. ஏ. பி. எல். நூலாக வெளியிட்டுள்ளனர்.

இதில் அவரைப் பாராட்டிய பல அறிஞர்களின் கருத்துரைகள் அடங்கியுள்ளன.

**குறிப்பு:** இவ்வாறான நினைவுநாட்கொண்டாட்டங்கள் நிகழ்வது தமிழ்மொழிப்பற்றை மிகுவிப்பதாகும். ஆகவே, மகிழ்கின்றோம்.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.

# தமிழகக் வரலாறு மாநாடு — 24-1-1951



இருப்பவர் (இடமிருந்து) 1 பண்டித தா. மாசிலாமணி நாடார், 2 வெள்ளச்சாமி நாடார், 3 ஓ சொரணம் பிள்ளை 4. A. R சண்முகம் பிள்ளை, 5 S A ஐயாசாமி செட்டியார், எம் ஏ, பி எல், 6. கா அப்பாத்துரைப் பிள்ளை, எம் ஏ, எல் டி. 7 சி ச அருணாசலம் பிள்ளை, 8 மு சோமையா பிள்ளை, 9 எஸ் எஸ் பிள்ளை

நிற்பவர் (இடமிருந்து) 4 வ பொன்னுசாமி பிள்ளை எம் ஏ 5 ரெ பேஷாசலம், எம் ஏ, 6 சிவ இராமசந்திரன் பி ஏ, (ஆனர்ஸ்), 7 ஆ செபரத்தினம் எம் ஏ 8 ஞா துரைசாமிப் பிள்ளை எம் ஏ எல் டி.

ஓம்




சிலம்பு ௨௮ } திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௫, தை { பரல் ௬
பிப்பிரவரி, 1954.

# தமிழக வரலாறு மாநாடு*

ஆர். கே எஸ். படத்திறப்பு

தமிழக வரலாறு மாநாடு சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகச் சார்பில நடைபெற்றது. 24-1-54 ஞாயிறு காலை 9-மணிக்கு மாநாட்டு நிகழ்ச்சிகள் தொடங்கின. சுந்தர ஓதுவா மூர்த்தியவர்களின் இறை வணக்கம், தமிழ்த்தாய் வணக்கப் பாடல்களுடன் மாநாடு தொடங்கியது. சென்னைப் பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரைப் பிள்ளையவர்கள் முதலில் இந்திய அரசாங்க முன்னாள் பொருளமைச்சராக இருந்து மறைந்த சர். ஆர் கே. சண்முகம் செட்டியார் அவர்களின் திருவுருவப்படத்தைத் திறந்துவைத்துச் சொற்பொழிவாற்றினார்கள்.

"இந்திய இமயத்தின் சிகரத்தைப்போல நம் நாட்டு அரசின மணிமுடியாக விளங்கியவர் ஆர்.கே சண்முகம் செட்டியார் 'ஆர் கே. எஸ.' என்று 3 எழுத்துக்களைக் குறித்தவளவிலே ஆர் கே சண்முகம் செட்டியார் என்பதை அறியாத மக்கள் உலகிலேயே இல்லை என்று சொல்லத் தக்க புகழின் சிகரத்தை அடைந்திருந்தார் இங்ஙனம் பெயரை எழுத்தால் குறித்த வளவில நாட்டு மக்கள் அறியும நற்புகழ் பெற்றவர் மிகச் சிலரே. திருவள்ளுவரைபபோலத் தமிழகத்திற்குப் பெரும் புகழைத்

*நெல்லையில் நடைபெற்ற தமிழ்த் திருவிழாவில் இரண்டாம நாள் நிகழ்ச்சி.

தேடித் தந்தவர். இந்தியாவின் புகழுச்சியிலும் உலகின் புக ழுச்சியிலும் தாம் விளங்கிய காலத்தும் தாய்மொழியாம் அமு தத் தமிழ்மொழியின் பெருமையை மறக்கவில்லை. அளவற்ற அயல்நாட்டுச் சிறப்புக்களை அடைந்த காலத்திலும் அருந் தமிழை மறந்தாரில்லை. தமிழன்னையின் காலணியாய்த் திகழும் செஞ்சையள்ளும் சிலம்புக்குத் தெள்ளிய உரையெழுதி வெளி யிட்டார் உலகில் நாம் வாழ்ந்து பயனில்லை உலகம் நம் மிடையே வாழவேண்டும் அங்ஙனம வாழ்ந்து காட்டியவர் பொருளியற் பேரறிஞர் சர். ஆர். கே எஸ். அவர்களைப் பின் பற்றி நாமும் உலகறிந்த மக்களாக வேண்டும்," என்று ஆர். கே. எஸ். படத்தைத் திறந்து வைத்த பிள்ளையவர்கள் சொன் ஞர்கள்.

## மாநாட்டுத் தொடக்கவுரை

கா. அப்பாத்துரைப் பிள்ளையவர்கள், தமிழக வரலாறு மாநாட்டுத் தொடக்கவுரையாகக் கூறியன: இவ் உலகைப் படைத்த பெண் ஒரு சிறுமி என்று கற்பனை செய்து பாருங்கள். அவள் சிறு விளையாட்டாகவே இந்த உலகைப் படைத்திருக்க வேண்டும். அவள் முதலில் பல பெண்களைப் படைததாள்-அப் பெண்கள் தமமைப் படைத்த சிறுமியை அக்காள் என்றனர். அதன் பின் படைக்கப் பெற்றவர்கள் தாய் என்றூர்கள். இங்ங னம் தாயாகவும் தமக்கையாகவும் விளங்குவதே நம் தமிழகம்.

ஆறு திருமுகங்கள் கொண்டு உலகைப் படைத்தான் இறைவன் இன்று தமிழுலக வரலாற்றைக் கல்லூரியின் நல் லறிவுத திருமுகங்கள் ஆறு தீட்டிப் படைக்கின்றன. நம் வர லாறு மிகவும நீண்டது. உலகின் முக்காற்பங்குச் செல்வம் இத் தமிழுலகில் இருந்தது. எந்த நாடு தமிழகத்தைச் சார்ந் திருந்ததோ அநத நாடே நாகரிகத்தில் நனிசிறநது விளங்கியது. தமிழகம் நாகரிகவொளி பரப்பும் நற்கதிரோனகப் பண்பாட்டில் மேம்பட்டுத திகழ்ந்தது வள்ளுவர் வகுக்கும நாட்டின் இலக் கணம் அனைத்தும ஒருங்கு அமைநதது நம் தமிழகம் ஒன்றே! உலகில் பெரும்பான்மையான மொழிகள் பிற மொழிச் சார்பு பெற்றவை நம் தமிழ் பிற மொழிச் சார்பின்றித் தனித்தியங் கும் பேராற்றல் பெற்றது. இத்தகைய தமிழகத்திற்குச் சிறந்த

வரலாற்று நூல் இல்லாத பெருங்குறையைப் பேராசிரியர்கள் அறுவர் இந்த நாளில் நீக்கியருளினார்கள். இந்த நூற்றாண்டு தமிழகத்திற்குச சிறப்பாகக் குறிப்பிடத் தக்க பகுதியாகும. பேரறிஞர்களாகிய மறைமலையடிகளார், திரு. வி. க., ஆர். கே. எஸ், பண்டிதமணி ஆகியோர் வாழ்ந்த ஊழியிது. வரலாற்றில் குறிப்பிடத தக்க பல அரிய நிகழ்சசிகளில் நம் தமிழக வரலாற்று நூலின தோற்றமும ஒன்றாகும.

## சொற்பொழிவுகள்

பின்னாத தமிழக வரலாற்றில் 'சங்ககாலம்' என்பது பற்றிப் பண்டிதவிததுவான் தா. மாசில்லாமணி நாடார் அவர்கள் பேசினார்கள 'தமிழ் ஆட்சி மொழியா?' என்பது பறறிக் கழகததாா சிறு உரையாடல் நிகழ்த்தினா. 'பல்லவர் காலம்' பற்றி வ பொன்னுசாமிப் பிள்ளையவர்கள் பி. ஏ., சொற்பொழிவாற்றினார்கள். 'சோழர் காலம்' பற்றி ரெ. சேஷாசலம அவர்கள எம். ஏ, சொற்பொழிவாற்றினர்.

இமமூன்று சொற்பொழிவுகட்குப் பின்னர் நெல்லைமாவட்ட ஒறுப்புமன்றத தலைவர் எஸ் ஏ. அய்யாச்சாமி செட்டியார் எம். ஏ., பி. எல். அவர்கள் 'தமிழக வரலாறு' என்ற நூலை அரங்கேற்றிப் பேசினார்கள. திரு. செட்டியார் அவாகள் தமது அரங்கேறற உரையில், "கழகங்கள் பலவற்றை நடத்திய அனுபவமுடையவன் யான். ஆதலின் இக் கழக நிகழ்ச்சிகள் நிகழும் முறையைக் கண்டவளவில் வியந்து மகிழ்ந்து இம் மாநாட்டை நடததிவைக்கும் அருணகிரி இசைக்கழகததாரைப் பெரிதும் பாராட்டுகிறேன்; இனி, இன்று நமக்கு இன்றியமையாத 'தமிழக வரலாறு' நூலொன்றை வெளியிட்டுதவும், சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழக ஆட்சியாளர் வ. சுப்பையா பிள்ளையின் ஒபபில்லாத திறமையை ஆர். கே. எஸ். அவர்களே பலகால் சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன். காலத்திற்கேற்ற பணியைக் கவனமுடன் செய்பவர்கள் சுப்பையா பிள்ளை. மேல்நாட்டுப் பதிப்பகங்களில் வெளியாகும் கவர்ச்சியான நூல்களைப்போல் தமிழகத்தில் கண்ணைக்கவரும் கட்டடங்களுடன் தமிழ்நூல்களை வெளியிடுவதில் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் திறம்பெறப் பணிசெய்து வருகின்றது. சிறந்த நூல்களைத்

தக்காரைக்கொண்டு எழுதுவித்துப் பழுதற்றமுறையில் பிழையில்லாத வகையில் பேரழகுடன் வெளியிடுவதில் வ சுப்பையா பிள்ளை மிக வல்லவர். அவர்கள் கழக வாயிலாக வெளியிடும அழகிய பதிப்புநூல்களைப் பார்தத பிறகுதான் தற்கால இளைஞர்க்குத் தமிழார்வம பெருகியுள்ளதென்னலாம். தமிழில் எனக்கு மிக்க ஆர்வமுணடு. ஆதலின், தமிழ் ஆட்சிமொழியாக வேண்டும் என்பதை மிகவும் விரும்புகிறேன். எனது இப்போதைய பணி, நூலை வெளியிடுவதாதலின ‘தமிழக வரலாறு’ என்னும் இந்த நூலைப்பற்றிச் சில கூற விருமபுகிறேன.

“இந்த நூல் வரலாற்றுப் பேராசிரியர்கள் அறுவரைக் கொண்டு ஆராய்ச்சித்திறம்பட அமைத்துள்ளனா நலலமுறையில் அழகிய கட்டடத்துடன் அமைநதுள்ளது தற்போதைய தமிழகததிற்கு மிகததேவையான தெளிவான நூல். இதன் விலை சிறிது அதிகம் என்று கருதுகிறேன் அங்ஙனம அமைவதன் காரணம நூலை வாங்குவாரின எண்ணிககையைப் பொறுத்திருக்கிறது. மேனுட்டவர் எவரும ஒருவா வாங்கிய நூலையோ செய்தித்தாளையோ மற்றவர் வாங்கிப் படிப்பதிலலை. தமக்கென்று தனிததவொன்றையே விலைகொடுதது வாஙகுவர். நம் நாட்டிலோ ஒருவா வாஙகியதை நூறுபேர் படிப்பர். வாங்கியவொருவரிடம் அவர் படிததபின்னர் வாங்கிப் படித்துக் கொள்ளலாம என்ற குறுகிய எண்ணம் பெருகியவாகளே பலராக உளர். அந்த நிலை மாறினல் வ. சுப்பையா பிள்ளையவாகளும் கழகப் பதிப்புக்களைக் குறைந்த விலையில பதித்துத் தருவார்கள். சிறந்த நூல்களை எலலோரும் வாஙகும் நிலை நம நாட்டில் மலாநது, குறைந்தவிலைக்கு உயர்ந்த நூல்கள் கிடைக்கும் நிலையேற்படவேண்டும் என்று கூறி, இன்றைய ‘தமிழக வரலாறு’ சொற்பொழிவு நூலை உங்கள் முன்பு வெளியிடுகின்றேன். தமிழ்நாட்டு மக்கள் எல்லோரும் நம் நாட்டு வரலாற்றை நன்கு உணரவேண்டும் என்னும் நல்லெண்ணத்துடன் வாங்கி ஆதரிக்க வேண்டுகிறேன்,” என்று கூறினர்.

இறுதியில் ‘தமிழ் ஆட்சிமொழித் தீர்மானம்’ ஒன்றைக் கழக ஆட்சியாளர் வ. சுப்பையா பிள்ளையவர்கள் கொண்டு வந்து விளக்கிப்பேசினர். அத்தீர்மானம் மேல்சட்டசபையில்

ஓய்வுபெற்ற மாவட்ட நீதிபதி ஆ. கசபதி நாயகர் பி.ஏ., பி.எல்., எம்.எல்.சி., அவர்களால் 5-1-54-ல் அறிமுகப்படுத்தப்பெற்றுச் சென்னை அரசாங்கக் கெசட்டிலும் வெளியிடப்பெற்ற 'தமிழ் ஆட்சிமொழி மசோதா'வை உடனடியாகச் சட்டமாக்கும்படி சென்னை அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ள இம்மாநாடு தீர்மானிக்கிறது. இத்தீர்மானத்தை மாநாட்டில் கலந்துகொண்ட பலலாயிர மக்களும் ஒருமனதுடன் ஆதரித்தனர்.

கடைசியில் அருணகிரி இசைக்கழகத்தாரால் 'வறியவா தலைவர்' என்னும் நாடகம் நடித்துக் காட்டப்பெற்றது. அத்துடன் காலை நிகழ்ச்சி முடிவடைந்தது.

## திரு வி. க. படத்திறப்பு

மீண்டும் தமிழக வரலாறு மாநாட்டு மாலை நிகழ்ச்சிகள் மாலை 5 மணிக்குத் தொடங்கியது. முதலில் நெல்லை அரசினர் ஆசிரியப் பயிற்சிப் பள்ளித் தலைவர் இர. பாலகிருட்டிண முதலியார் பி.ஏ., எல்.டி., அவர்கள் திரு. வி. கலியாணசுந்தரனாரின் திருவுருவப் படத்தைத் திறந்துவைத்து, அப் பேரறிஞரின் சிறப்பியல்புகளையும் தேசத்தொண்டு மொழித்தொண்டுகளையும் விளக்கிப் பேசினார்.

அதன் பின்னர்த் தமிழக வரலாற்றில் 'பாண்டியர் காலம்' என்பதுபற்றி ஞா. துரைசாமிப் பிள்ளை எம்.ஏ. எல்.டி. அவர்களும் 'நாயக்கர்காலம்' என்பதுபற்றி ஆ. செபரத்தினம் எம்.ஏ. அவர்களும், 'ஆங்கிலேயர் காலம்' என்பதுபற்றிச் சிவ. இராமச்சந்திரன் பி.ஏ. (ஆனர்ஸ்) அவர்களும் சொற்பொழிவாற்றினர். இடையே 'மலையாள ஆடையில் தமிழ்' என்ற தலைப்பில் ஆலப்புழை, சூ. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், பழைய மலையாள இலக்கியங்கள் எழுத்துக்களால் பெற்ற வேற்றுமையேயன்றி, ஓசையால்—உச்சரிப்பால் தமிழே என்பதை மலையாளப் பாடல்கள் சிலவற்றின் துணைகொண்டு விளக்கினார்கள். பின் 'கொடைமடம்' என்ற நாடகத்தை அருணகிரி இசைக்கழகத்தார் நடித்துக் காட்டினர். முடிவில் மாநாட்டுத் தலைவர் கா. அப்பாத்துரைப் பிள்ளையவர்கள் தொகுப்புரை வழங்கினார்கள். கழக ஆட்சியாளர் வ. சுப்பையா பிள்ளையவர்களின் நன்றியுரையுடன் மாலை நிகழ்ச்சி முடிவுற்றது.

## இரவு நிகழ்ச்சிகள்

மீண்டும் இரவு 9-30 மணிக்கு மூன்றாவது பகுதி நிகழ்ச்சி தொடங்கியது. முதலில் டாக்டர் மு வரதராசனார் எழுதிய 'நன்மை எங்கே?' என்ற நாடகத்தை அருணகிரி இசைக்கழகத்தார் நடித்துக் காட்டினர். இந்நாடகத்தின்பின் 'கண்ணகி கதை' வில்லுப்பாட்டு நடைபெற்றது நெல்லை வில்லிசைச் செல்வர் ஐயன் பிள்ளையவாகள, அ க. நவநீதகிருஷ்ண பிள்ளையவர்களால எழுதபபெற்று சை. சி. கழகத்தார் வெளியிட்டுள்ள 'கண்ணகி கதை'யைக் கேட்பவர்மனம மகிழ மிக அழகாக வில்லிசையில் பாடிக்காட்டினார் வில்லுபபாட்டு முடிவில் வ. சுப்பையா பிள்ளையவர்கள, வில்லிசைப் புலவர் ஐயன் பிள்ளையவர்கள் திறமையைப் பாராட்டிப் பேசி 'வில்லிசைச் செல்வர்' என்ற பட்டம பொறித்த வெள்ளிப் பதக்கம ஒன்றையும் பரிசாக வழங்கினார்கள். அதன் பின்னா 'கடமை எங்கே' என்ற டாக்டர் மு. வ. அவர்களின் மற்றொரு நாடகத்தை அருணகிரி இசைக்கழகததார் நடித்துக் காட்டினர். இரவு 12 மணிக்குத் திரு. கு அருணாசலக் கவுண்டர் அவர்களின் நன்றியுரையுடன் இரண்டாம் நாள் நிகழ்ச்சிகள் முடிவுற்றன.

—இதழாசிரியர்.

---

## கடவுள் காட்சி

இன்றைய உலகம் கடவுள் நிலையைக கருதாது திரிதருகின்றது. கடவுள் எனற பெயரே 'கடததல' என்னும் பொருளை தருவதாகும். கடததல், எதைக் கடததல்? உலகநிலையை, உலகக் கட்டினுள் அடங்காது மக்கள் முதல் எண்ணிறந்த உயிர்களின தன்மைகட்கு அப்பாற்பட்டு நிற்றலே கடத்தல். இது, அவைகளின மனம், மொழி, உடல் இவைகளைக் கடத்தலாம். இக் கடததல் எனனும பெயருள்ளதொன்றே கடவுள் என்னும் செம்பொருள். இதன தன்மையை நாம கட்புலன் கொண்டோ, செவிப்புலன் முதலியவற்றைககொணடோ அறியமுடியா தொழியினும், நம உயிரினுககு உயிராயக்கலந்து ஒனறிநிற்பதை உயிர் உணர்வால் அறிகின்றேம் அலலமோ? அதுவே, அதன காட்சி. அக காட்சியைக் கருததில் நிலையாகக்கொணடு கருதககருத நம மனத்துள் உள்ளொளி தோன்றும். அவ்வொளியில் தோயந்து இனபுறுதலே 'மக்கள் தாமே ஆறறிவுயிர்' என்பதற்கு எற்ற சான்றும், சான்றாண்மையும் ஆகும்.

—செல்லூர்க்கிழார்.

# கன்னன் கண்ட கனவு[1]

[கோபாலை. திரு. வே. பெருமாள்]

நிலைமண்டில ஆசிரியப்பா

ஓரறி வுயிர்முதல் ஆறறி வுயிர்வரை
ஈரமுள் நெஞ்சுடன இரங்கிக் காக்கும்
பெற்றியை யுடையதோர் பெருங்குணச் சீலன்;
நற்றமிழ் ஓர்ந்த நன்னடைச் செல்வன்;
அறிவால் நிறைந்த அருங்குணச் செயலால்
அந்தணன் என்ன அழைக்கத் தக்கோன்;
கன்னன் என்னும் பெயரை யுடையோன்;
ஒருநா ளிரவு பெருமான் இறைவன்
கருணை நினைந்துபின் கண்துயின் றனனே
நனவுபோற் றோன்றும் கனவினி லொருவன்
கையினி லோலைக் கற்றை யுடையன்
பையினி லெழுதும் ஆணி யெடுத்து
இவன்முகம் நோக்கி யேகுங் காலை
"ஐயா! என்னை யறிந்துசெல் கின்றனை?"
என்றே யிரந்து கேட்டான் கன்னன்.
"ஐய! நானோ இறைவனி டத்தில்
ஓவா அன்பா யுள்ளவர் பெயர்களை
குறித்தே யேகிக் கொடுசெலுங் கூலி"
என்றே கூறி யேகுங் காலை,
"என்பே ருளதோ? நுங்கள் குறிப்பில்"
என்னவும் "இல்லை" என்றறைந் தாரிடம்,
"ஐயா! என்னை இறைவ னிடத்தில்
பொய்யா அன்பு போக்குவ னென்றே
குறியா விடினும் இரியா மல்நான்
அவனரு ளாலே புவனந் தோன்றும்
ஆறறி வுயிரினும் பொருந்திய அன்பினன்
என்று கிலும்நீ குறித்தே கும்மே"

---

1. அறிஞா Leigh Hunt எழுதிய "Abou Ben Adham" என்னும் பகுதியின் பெயர்ப்பு.

ஏனுங்கால் வந்தவர் எங்கோ மறைந்தார்
மற்றோர் சமயம் வந்தனன் அறிஞன்
பற்றோலை தன்னைப் பார்க்கக் காட்டினன்
என்னே! அதிசயம் என்னே! அதிசயம்
பொன்போ லிவன்பேர் பொலிந்தது தலைப்பில்
எய்தற கரிதாம எழின்முதற கண்ட
மகிழ்ச்சியா லவன்கண் மலர்ந்தன மாதோ
இதனா லன்பீர்! இறைவன் படைத்த
எல்லா வுயிரையும கொல்லா தொழிக
தன்னுயிர் போல மன்னுயிர் தம்மை
இன்னுயி ரெனவே இரங்கிக் காக்க
தன்னைக் காட்டிலும் மன்னுயிர் கட்கு
இன்பரு செயல்தான் இறைவன் விழைவே.

கதைச் சுருக்கம் :—மன்னுயிரையும் தன்னுயிர்போல மதிக்கும் தன்மை வாய்ந்தவன் கன்னன் என்ற வொருவன் ஒருநாளிரவில் கண்துயின்றான். அப்போது, ஏடெழுத்தாணியோடொருவன, இவன் முகத்தைப் பார்த்துவிட்டுச் சென்றான். கன்னன, "என்னையா! பார்த்துப்போகிறாய" என்றான். அதற்கு, வந்தவன, "ஐய! நான் கடவுளிடம அதிக அன்புள்ளவர் பெயர்களைக் குறித்துச் செல்லுமொரு கூலியாள்" என்று சொல்லியவண்ணம் புறப்பட்டான் கன்னன, "ஐயா! என்பேருளதா?" என்றான் அவன் "இல்லை" என்று சொல்லிவிட்டுப் புறப்படத் தொடங்கினான். கன்னன மறுபடியும், "அடிகளே! என்னை இறைவனிடம அன்புள்ளவன என்று குறியாவிடினும் இறைவன் படைத்த உயிர்களிடம் அன்புள்ளவன் என்றாகிலும குறித்தல் கூடாதோ?" என்று இரந்து கேட்டான் வந்தவன மறைந்தான. மற்றோர் சமயம் அவ்வடியார் ஏடுங் கையுமாய்த் தோன்றினான் ஏட்டை விரித்துக் காட்டினான். என்னே! அதிசயம். இவன் பெயரே தலைப்பில் காணப்பட்டது. இம் மகிழ்ச்சியின் மிகுதியால் கண்ணை விழித்தான். கண்டது கனவென அறிந்துகொண்டான்

இதனால் நண்பர்களே! எல்லா உயிர்களிடத்தும் அன்போடிருத்தலே, இறைவனிடத்தில் அன்புடனிருப்பதற்கு அடையாளமாகும். என்பதை இதன்வாயிலாய் நன்றாய் அறிந்து கொள்வோமாக. கொல்லா விரதம் நில்லா தோங்குக.

---

# கன்னடமும் தமிழும்

[மயிலை திரு. சீனி. வேங்கடசாமி]

தமிழ் இனத்தைச் சேர்ந்த திராவிட மொழிகளிலே கன்னட மொழியும் ஒன்றாகும். தமிழுக்கு அடுத்தபடியாக மிகப் பழைய இலக்கியங்களைக் கொண்டுள்ள திராவிடமொழி கன்னடமே முன் ஒரு காலத்திலே, மிகப் பழைய காலத்திலே கன்னடதேசத்தில் தமிழ்மொழி வழங்கிவந்தது. மொழிமட்டு மன்று, தமிழருடைய நாகரிகமும் பண்பாடும் பண்டைக்காலத் திலே கன்னடநாட்டிலே வழங்கிவந்தன. இச் செய்திகளைக் கன்னடத்தில் உள்ள பழைய இலக்கியங்களிலும் பழைய கல் வெட்டுச் சாசனங்களிலும் காணலாம்.

முன் ஒரு காலத்திலே தமிழ்மொழி வழங்கிவந்த கன்னட நாட்டிலே, தமிழ்மொழி திரிந்து உருமாறத் தொடங்கிற்று. தமிழ்மொழி திரிந்தது மட்டுமல்லாமல், வடமொழிச் சொற் களும் அதிகமாகக் கலக்கத் தொடங்கின. இதனால், அந்நாட்டில் வழங்கிவந்த தமிழ், கன்னடமொழியாக மாறிவிட்டது. கன் னட மொழியாக மாறியபிறகு அது இலக்கணம் இல்லாமல் இருந்தது. பிறகு இலக்கணம் எழுதத் தொடங்கினார்கள். முதன்முதல் கன்னட மொழிக்கு இலக்கணம் எழுதியவர்கள், அந்த இலக்கணத்தை வடமொழியிலேயே எழுதினார்கள் !

திராவிட மொழியின் சிறப்பெழுத்துக்களில் ழகரமும் ஒன்றாகும். ழகரம் ஒருகாலத்தில் எல்லாத திராவிடமொழி களிலும் வழங்கப்பட்டது. தெலுங்கு மொழியில் வழங்கிவந்த ழகரம் மிகப் பழைய காலத்திலே மறைந்துவிட்டது. கன்னட மொழியில் வழங்கிய ழகரம் சிறிது காலத்துக்கு முன்னர் மறைந்துவிட்டது. மலையாள மொழியிலும் தமிழ்மொழியிலும் ழகரம் இன்னும் வழங்கிவருகிறது.

தமிழுக்கு அடுத்தபடியாகப் பழைய இலக்கிய வளம் உடைய திராவிடமொழி கன்னடம் ஆகும். தமிழர், தாய் மொழியாகிய தமிழை நன்கு கற்றபின்னர்க் கன்னட மொழி யையும் கற்பது நன்மை பயக்கும் ஏனென்றால், பல தூய தமிழ் மொழிகள் இன்றும் கன்னடத்தில் வழங்கப்படுகின்றன. அது மட்டுமல்ல, மறைந்துபோன பல தமிழ்ச்சொற்களைக் கன்னட மொழியில் காணலாம். ஆகவே, தமிழர் கன்னட மொழியைக் கற்பது மிகவும் பயனுள்ளதாகும்.

கன்னட மொழியில் உள்ள வடமொழிச்சொற்களை நீக்கி விட்டால், மிகுந்துள்ளவை தூய தமிழ்ச்சொற்களும், சிதைந்து உருமாறிய தமிழ்ச்சொற்களுமாக இருப்பதைக் காணலாம்.

தமிழில் பகரத்தை முதலாக உடைய சொற்கள் பழைய கன்னட மொழியிலும பகரத்தை முதலாக உடைய சொற்களாக வழங்கிவநதன. பிற் காலததிலே, அதாவது புதிய கன்னடத்திலே பகரத்தை முதலாக உடைய சொற்கள் ஹகரமாக மாறின. ஹலாயுதர் என்பவர் வடமொழியிலே 'அபிதானரத்நமாலா' என்னும் நிகண்டு நூலை எழுதியிருக்கிறார். அநத நிகண்டு நூலுக்கு நாகவாமா என்னும் கன்னட பண்டிதர் கன்னட மொழியில் உரை (டீகை) எழுதியிருக்கிறார் இவர் எழுதிய உரையிலே பழைய கன்னடச் சொற்கள் பல காணப்படுகின்றன. தமிழ்ச்சொற்களின் உருவமாக இருந்த பழைய கன்னடச் சொற்கள், பிற் காலததிலே புதிய கனனடததில் எவ்வாறு உருமாறிவிட்டன என்பதைக் கீழே காட்டுவோம். முதலில், பகரத்தை முதலாகக் கொண்டிருந்த பழங்கன்னடச் சொற்கள் புதிய கன்னடத்தில் ஹகரமுதலாகத் திரிந்து விட்டதைக காட்டுவோம்.

| தமிழ | பழஙகன்னடம் | புதுககன்னடம் |
|---|---|---|
| பசு | பசு | ஹசு |
| புகை | பொகெ | ஹொகெ |
| பகை | பகெ | ஹகெ |
| பால் | பால் | ஹாலு |
| பொன் | பொன் | ஹொன் |
| பெண்ணுய் | பெண்ணுய் | ஹெண்ணுய் |
| பொழுது | பொழ்து | ஹொத்து |
| பாடு (பாட்டு) | பாடு | ஹாடு |
| பல் | பல்லு | ஹலலு |
| பிணம் | பெணம் | ஹெணம் |
| பெருமை | பெர்மெ | ஹெம்மெ |
| புண் | புண் | ஹுண்ணு |
| புழு | புழு | ஹுளு |
| பாம்பு | பாவு | ஹாவு |
| புரை (=பாம்புத்தோல்) | பொரெ | ஹொரெ |
| பூ | பூ | ஹூ |
| பணை (கிளை) | பணெ | ஹணெ |
| பிடி | பிடி | ஹிடி |
| பீலி | பீலி | ஹீலி |

| தமிழ் | பழங்கன்னடம் | புதுக்கன்னடம் |
|---|---|---|
| பக்கி (=பறவை) | பக்கி | ஹக்கி |
| பித்தளை | பித்தளெ | ஹித்தளெ |

மேலும், கன்னடத்தில் பகரம் ஹகரமாகத் திரிந்து வழங்கும் சொற்களைக் காட்டுவோம் :—

| தமிழ் | கன்னடம் |
|---|---|
| பகல் | ஹகலு |
| பகை | ஹகெ |
| பசசென்று | ஹசசனெ |
| பசசை | ஹசசெ |
| பட்டி | ஹட்டி |
| பட்டு | ஹட்டெ |
| படகு | ஹடகு |
| படை | ஹடெ |
| பணம் | ஹண |
| பருததி | ஹததி |
| பதது | ஹதது |
| பனை | ஹனெ |
| பநதி | ஹமதி |
| பநதல் | ஹநதர |
| பனறி | ஹநதி |
| பற | ஹற |
| பலகை | ஹலகெ |
| பசி | ஹஸி |
| பழைய | ஹளெய |
| பெரிது | ஹிரிது |
| பொடி | ஹுடி |
| பூரணிமை (முழுநிலா) | ஹுண்ணிமெ |
| புற்று | ஹுத்து |
| புரி (கயிறு) | ஹுரி |
| பொரி | ஹுரி |
| புலி | ஹுலி |
| புளி | ஹுளி |
| பூட்டு | ஹூடு |
| பூசு | ஹூசு |
| பிணங்கு | ஹெணகு |
| பிணை | ஹெணெ |
| பெற்றவர் (பெற்றோர்) | ஹெத்தரு |
| பெண்மக்கள் | ஹெமமககளு |

| தமிழ் | கன்னடம் |
|---|---|
| பெருமழை | ஹெம்மளெ |
| பெயர் | ஹெஸரு |
| பேடி | ஹேடி |
| புகழ் | ஹொகளு |
| புகு | ஹொகு |
| பொங்கு | ஹொங்கு |
| பொட்டு (வெடித்தல்) | ஹொட்டு |
| புதர் | ஹொதரு |
| பொன்று (=கெடு) | ஹொநது |
| பொன் | ஹொன்னு |
| புறத்தெ (வெளியே) | ஹொரகெ |
| பொறு | ஹொறு |
| புலம் | ஹொல |
| புலையன | ஹொலெய |
| புலைசசி | ஹொலதி |
| போ | ஹோகு |
| போத்து (ஆண் ஆடு) | ஹோத |
| போராடு | ஹோராடு |
| போல | ஹோலிகெ |

தமிழிலே ன்று என்னும ஒலி கனனடத்தில் ந்து என்றாகிறது, உதாரணமாக:

| | |
|---|---|
| ஒன்று | ஒநது |
| மன்று | மநது |
| பொன்று (=கெடுதல்) | ஹொந்து |
| குனறு (=குறைதல) | குநது |
| கன்று | கந்து |
| பன்றி | ஹந்தி |
| இன்றைக்கு | இநதிகெ |
| இன்றிலிருநது | இநதிநிந்த |
| இன்று | இநது |
| என்று | எநது |
| கொன்றை | கொநதெ |
| கொன்றார்கள் | கொநதரு |

இப்போது வழங்கும் கன்னட மொழியில் ழகரம் வழங்குவதில்லை. ழகரத்திற்குப் பதிலாக ளகரம் வழஙகப்படுகிறது. பழைய காலததில் வழஙகிய பழங்கன்னட மொழியில ழகரம் வழங்கப்பட்டது. ஹலாயுதர் இயற்றிய அபிதான ரத்நமாலா

என்னும் நிகண்டிற்கு நாகவர்மா என்பவர் எழுதிய உரையில் பழங்கன்னட மொழியில் ழகரம் வழங்கிய சொற்களைக் காட்டியிருக்கிறார் அவற்றில் சில வருமாறு.—

பழது = பழையது, மழெ = மழை, வாழெ = வாழை, தாழெ = தாழை, கோழி = கோழி, தேழ் = தேள, கூழ் = கூழ் (உணவு), கௌங்குழ் = அகுள், புழு = புழு, அழ்கெ = அழுகை, நீரழ்கெ = நீர்வேட்கை, தொழுத்தின மகம = வேலைக்காரியின் மகள், பழெவாது = ஐதிகம், பழையவழக்கம்.

நாகவாமா, மற்றும பல சொற்களை (ழகர எழுததுள்ள சொற்களைக) கூறுகிறார் அவற்றின் பொருள் விளஙகவில்லை. அறிஞா நுணுகி ஆராயநது பொருளை கணடுபிடிபபாாகளாக. அவா கூறிய சொறகள வருமாறு:—

மரத போழல, மரதபீழல, உரமிழி, ஜேனநோழம், உமித, ஸ்நேஹமாழவவநம, இழியலிக்குவுது, போழிகெ, பழியிகெ, ஸாழெ, புழ, பெழவம, அகழ்தெயநீர், நெகழு, அகழதது, பழிகம, கிழலபட்டுது, போழிஸாஹ, முகுழெமுகுழெ, பழிஸஹ, குழிதெவறு, முய்யம முகுழ்சசுவுது, பிழதது, கிவுழ்ச்சுவுது, உழியதது, அழிகண்ணு, இதிரேழ்வுது, லேஸாமாழ்வுது, எழிசததிரபபுது, நெகழ்கெ.

புதிய கன்னடமொழி பழைய ழகரத்தை மாற்றி அதற்குப் பதிலாக ளகரததை வழங்குகிறது. அவ்வாறு வழஙகும் சில சொறகள வருமாறு:—

அளிவு = அழிவு, அளு = அழு, அளுகு = அழுகு, ஆள ஆளெ = ஆழம, ஆளவாரு = ஆழ்வார்கள், இளி = குழி, இறங்கு தாழ்வு, ஈளு, எளெ = இழு, உழு = உழு, எளெ = இழை, ஊளிகெ = ஊழியன, ஏளு = ஏழு, ஏளு = எழு, எழுந்திரு, ஏளிஸ = எழுப்பு

கீழ்ககண்ட கன்னட சொற்களில் பகரம் ஹகரமாகவும் ழகரம ளகரமாகவும திரிநதுளளன—

ஹளது = பழையது, ஹளதி = பழுப்பு, ஹளமெ = பழைமை, ஹளி = பழி, ஹாளு = பாழ், ஹாள, ஹாளு = புழு, ஹொளெ = புழை, ஆறு, ஹொகளு = புகழ், ஹளெகன்னட = பழய கன்னடம.

தமிழமொழியை நன்கு கற்றுததேர்ந்தவர் கன்னட மொழியையும் நன்கு கற்று ஆராய்ச்சி செய்வார்களானல், இதுபோன்ற பல செய்திகளை அறியக்கூடும். அன்றியும்

தமிழில் வழக்கொழிந்த பல தூயதமிழ்ச் சொற்களைக் கன்னட மொழியில் காணலாம். உதாரணமாகத் திங்கள், தகர் என்னும் சொற்கள் தமிழ் இலக்கியங்களிலே வழங்கப்படுகின்றன. இவை இப்போது மாதம் என்றும் ஆடு என்றும் தமிழில் வழங்கப் படுகின்றன இச் சொற்கள் கன்னட மொழியில் திங்களு என்றும் டகரு என்றும் தினசரி வழக்காக (பேச்சுவழக்காக) வழங்கப்படுகின்றன. திராவிட மொழி ஆராய்ச்சி செய்கிறவர் களுக்குக் கன்னட மொழி பேருதவியாக இருக்கும் என்பதில் ஐயமில்லை. தமிழர் முதலில் தாய மொழியாகிய தமிழை நன்கு கற்றுப் பின்னர் கன்னடம், மலையாளம், தெலுங்கு முதலிய திராவிட இனமொழிகளைக் கற்று ஆராய்ச்சி செய்து தமிழை வளம்படுததுவாராகளாக.

## தமிழ் மகவு தாலாட்டு

[புலவர், திரு. ராம. பெரியகருப்பன்]

ஆராரோ ஆரிரோ ஆராரோ ஆரிரோ !

கன்னித் தமிழில்நீ கடைவாய அமுதூற்ற
அனபே அழகுருவே ஆரமுதே ஏனழுதாய் ?

தணணீா முகம்தழுவும் தாமரைபோல் நின்முகததுக
கணணீரைக் கொட்டிக கதறி அழைததுமேன ?

அல்லிப்பூ வாய்திறந்து அமமாஅ எனவழைதத
சொலலிறகே வந்துவிட்டேன சோாந்தேன் அழுகின்றாய் ?

தன்னைத் தமிழனென்று தான்சொலலக கூசுகின்ற
பினனறிவுத் தமிழரிடைப் பிறந்ததற்கோ நீஅழுதாய் ?

கனனித தமிழுருவே கற்கணடே நீஉன றன்
சினனக கைகொட்டிச சிரிதது விட்டால போதாதோ ?

இனபக கடலாடி எடுததெதொரு நலமுதநதே
அன்புக் கொடிகமழ அலாந்த மலாமணமே !

துன்பந் தொலைந்திடவே தோன்றி வளாவாழ்வில்
அனபை அறமாக்கி அரசாட்சி செயயவநதாய !

கடலசூழ குமரிமுனை காா்தனகு வடமலைககு
இடையே வளாநாடு இன்னுணாவே உனறுடு

தொல்லுலக நலவாழ்வு தொடருமவரலாறும்
பலகலைகள மிகவுயாந்த பணபாடும உன்னது தான !

பெறற்கரிய பேறே பிறர்மனதைத தான்கவரும்
சிறப்புடைய செல்வமே சீரவாழ்வே கணவளராய்!

# வள்ளுவர் காலம்

[திரு. கு பரமசிவன்]

## க. தோற்றுவாய்

மிகவும் முற்பட்ட காலததில் தோன்றியது என்பதற்காக ஒரு நூலை மேன்மையுடையதென்றோ, பிற்பட்ட காலத்தில் தோன்றியது என்பதற்காகப் பெருமையற்றது என்றோ கூறுதல் இயலாது. நூலின் சிறபபுக்களால் நூல் தோன்றிய காலம் சிறபபுறுமே யன்றிக் காலமொன்றே பற்றி நூல் சிறப்படையுமாறு இல்லை ஆயினும இக்காரணம பற்றியே எந்நூலையும் எக்காலததிலும தோன்றியது என்று கூறுதல் அடாது. அவ்வாறு கூறுதல் வரலாற்றுணர்ச்சியையே அழிப்பதாகும்.

திருவாளர்கள் கே ஜி. சேஷ ஐயர்,[1] எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார்,[2] கே ஏ. நீலகண்ட சாஸ்திரி,[3] வி. ஆர். ராமசந்திர தீக்ஷிதர்[4] ஆகியோரைப் போன்ற வரலாற்றாசிரியரும், நாவலர் சோமசுநதர பாரதியார்,[5] கா. சுப்பிரமணிய பிள்ளை,[6] கே எஸ். ஸ்ரீநிவாசபிள்ளை,[7] எம. எஸ். பூரணலிங்கம் பிள்ளை[8] ஆகியோர் போன்ற தமிழறிஞரும் சங்க காலம ஏறத்தாழக், கி. பி இரண்டாம நூற்றாண்டு எனவும இக் காலததில் தோன்றிய நூல்களில் எல்லாம் எடுத்தாளப்படும் திருக்குறள் கி. மு. இரண்டாவது அல்லது முதலாவது நூற்றாண்டில் தோன்றியதாகும் என்றும் கூறியுள்ளனர். இக் கருத்தே யாவராலும் ஏற்றுக்கொள்ளப் பட்டு வநதது. இநநிலையில்தான் எங்கிருந்தோ தோன்றினார் ஒரு தமிழன்பர். புத்தம புதிய கருத்தொன்றைப் புகன்றார். கி. மு. இரண்டாவது நூற்றாண்டிலிருந்த அப்பாவி வள்ளுவரைப் பிடித்திழுத்துக், கி பி. ஆறாம் நூற்றாண்டில் தள்ளினார். அவருக்கு அவரது கொள்கையும், அவரது கொள்கைக்கு அவரும் தாம் சான்று. இலக்கியம் அவரை விலக்கிச் செல்கிறது. வரலாறு அவருக்காக வழக்காட மறுக்கிறது. எனவே கல்லூரி வகுப்புக்களிலும் தமிழ் மேடைகளிலும இவர் கொள்கையை

---

1. Q J. M. S. Vol. XVI, pp. 143 66. Referred to by K. A. N: "The Pandiyan Kingdom"
2. "Beginnings of South Indian History"; "Ancient Indian and South Indian History and Culture"
3. "The Pandiyan Kingdom."
4. "Studies in Tamil Literature and History."
5. "திருவள்ளுவர்."
6. "இலக்கிய வரலாறு." 7. "தமிழ் வரலாறு."
8. "Tamil Literature."

எதிர்த்தனரே யன்றி மறுத்துத் தமிழறிஞர் ஒருவரும் எழுதினரல்லர். உண்மையைப் புரிந்துகொள்ளாத முற்போக்கு எழுத்தாளர் ஒருவர்,[1] அண்மையில் ஒரு கிழமையிதழில் அந்தத் தமிழன்பருக்காகப் பரிந்து வரைந்ததோடு பிற அறிஞர்களை இடித்தும் எழுதியுள்ளார்:

"——அவர்களின் ஆராய்ச்சிதான் காய்தல் உவத்தல் இல்லாத நடுநிலைமையான ஆராய்ச்சி என்பது தீர்மானமான கருத்து. அதனால் என் நண்பரைப் பார்த்து '——அவர்களின் ஆராய்ச்சி தப்பு என்று தக்க ஆதாரங்களுடன் நிரூபித்து நீங்கள் ஒரு மறுப்பு எழுதிக் கொடுங்கள் அல்லது எந்தப் படிப்பாளியை யாவது விட்டு எழுதச் சொல்லுங்கள். அதை என் பத்திரிகையில் பிரசுரிக்கிறேன்' என்றேன். என் நண்பர் அந்தக் காரியத்தைச் செய்யவில்லை இன்று வரையிலும் அவர் மறுப்பு எழுதவில்லை அவர் மட்டுமில்லாமல் எந்த ஒரு ஆராய்ச்சியாளரும் தக்க காரணங்களைக் காட்டி ——யவர்களின் ஆராய்ச்சி தவறு என்று நிரூபிக்கவுமில்லை...."

முற்போக்கு எழுத்தாளர் கூறுவனவற்றில் மூன்று "உண்மை"கள் உள்ளன (1) எழுத்தாளரின் நண்பர் தமிழன்பரின் ஆராய்ச்சியை மறுத்தாரல்லர். (2) தமிழன்பரின் ஆராய்ச்சிதான் காய்தல் உவத்தல் இல்லாதது (3) தமிழாராய்ச்சியாளர் எவருமே இதுகாறும் இந்தத் தமிழன்பரின் ஆராய்ச்சி தவறு என்று காட்டினரல்லர்.

இம்மூன்றனுள்ளும் முதலாவது செய்தி வேண்டுமாயின் உண்மையாக இருக்கலாம். ஏனைய இரண்டன் உண்மை நிலையும் ஐயத்திற்கு இடமானதாகும். ஏற்கெனவே கூறியது போன்று எண்ணற்ற தமிழறிஞர் திண்ணமாக இந்தத் தமிழன்பரின் ஆராய்ச்சி தவறென்று பேசியுள்ளனர். வியப்பான நிகழ்ச்சியொன்றை மட்டும் சுட்டிக்காட்ட விழைகின்றேன். சேரநன்னாட்டுத் திருவனந்தபுரத்தில் நடைபெற்ற செந்தமிழ்க் கூட்டமொன்றில் சிலம்புச் செல்வரும் தமிழாராய்ச்சியாளர் ஒருவரும் இத்தமிழன்பரின் தலைமையின் கீழேயே இவரது ஆராய்ச்சியை மறுத்துப் பேசினர்; இன்றும் பேசி வருகின்றனர் எனவே மறுப்பாரில்லா மன்னனாக இத்தமிழன்பர் உலவுகின்றனர் என்று கூறுதலும் ஒவ்வாது. இவ்வாறே இவரது காய்தல் உவத்தல் இல்லாத பண்பு பற்றியும் பெருமளவுக்கு ஐயப்பாடுகள் எழுகின்றன.

தமிழில் காணப்பெறும் கருத்தொன்று வடமொழியிலும் உளதாயின் தமிழ் வடமொழியிலிருந்துதான் கடன்பெற்றது

1 கு. அழகிரிசாமி: "முழக்கம்" (2-7-42)

என்றுகூற இயலுமா? "....தமிழ்ச்சொல் வடபாடைக்கட் செல்லாமையானும் வடசொல் எல்லாத் தேயத்திற்கும் பொதுவாகலானும்...."[1] என்னும் சேனாவரையப் போக்கு ஆராய்ச்சிக்குப் பயன்படாது. தமிழிலிருந்து வடமொழி கடன்பெற்றுப் பின் வாங்கிற்றென்று என்பதனைக் கால்டுவெல்[2] போன்ற மேனாட்டறிஞரேயன்றித் திருவாளர்கள், P T ஸ்ரீநிவாஸ ஐயங்கார்[3] போன்ற ஆராய்ச்சியாளரும் தெள்ளத் தெளியக் கூறியுள்ளனர்.

"புத்தம் புதிய உண்மைகளை அறிந்து கொள்ளுதலில் ஆரியர் எப்பொழுதும் ஊக்கமுடையராவர். தமிழ் நூல்களினின்றும் பல உண்மைகளைத் தம் வடமொழியில் மாற்றிக் கொண்டுள்ளனர். பிறகு அவ்வட நூலைத் தமிழ்மக்களிடையே பரப்பினர். அப்பாவித் தமிழர்....அவையெல்லாம் தங்களுடையனவென்றறியாமல் வடமொழியினின்று வந்தன என்று கொண்டு மயங்கினர். இவ்வுண்மையை யாவரும் அறிவர்" என்று திரு. பூரணலிங்கம் பிள்ளையவர்கள்[4] எழுதியுள்ளனர். இச்செய்தி

1. தொல். சொல். சூ 401. உரை

2. "I think I shall be able to prove, with respect to one portion at least of the analogies that instead of the Dravidian languages having borrowed them from sanskrit, or both having derived them from a common source, sanskrit has not disdained to borrow them from its Dravidian neighbours"—A COMPARATIVE GRAMMAR OF THE DRAVIDIAN LANGUAGES (1913) p. 42 see also p. 566-575.

3. 'When the speakers of two different languages come in touch with each other, the probablities are that each language will borrow words from the other. Thus the names of articles produced only in South India such as pearls, pepper, cardamom must certainly have been borrowed by Sanskrit from Tamil. Hence Sanskrit maricha, mukta, ela are derived from Tamil miriyal or milagu, muttu, elam; there are other Sanskrit words, borrwed from Tamil wantonly which sanskrit scholars wrongly claim to belong to sanskrit e. g. niram, minam evidently being derived from Tamil nir, min for we cannot imagine that the Tamils were drinking water and eating fish without names for these objects and deferred meaning them till Sanskrit speakers presented them with names for them, many such words can be rescured for Tamil from the bands of Sanskrit Scholars..."—PRE - ARYAN TAMIL CULTURE. p 16.

4. "It is a well known fact that the Aryans, ever anxious to know new truths, embodied them in sanskrit and popularised them. The ignorant Tamilians came in course of time to believe that the truths of the Godhead came to them from the Vedas, Vedangas, and upanishads and that they were none of their ancient heritage."—TAMIL LITERATURE. p. 248.

உண்மையாகலாம் என்பது பிறர்[1] கூற்றாலும விளங்கும். எவ்வாறாயினும ஆகுக, இது பிள்ளையவாகளின் தமிழுணர்ச்சியை விளக்குகிறது. ஆயின் இத்தமிழன்பரோ வடமொழியிலிருந்து தான் தமிழ்நூல்கள் கடன்பெற்றன எனறு சான்று காட்டாமல் கூசாது கூறிவருகின்றனா. உள்ளபடியே காய்தல் உவத்தல் இல்லாதார் இவர் ஆயின், ஒன்றுபட்ட கருத்துக்களை எடுததுக்காட்டி எதனினின்று எது வந்தது என்று கூறவியலாது என எழுதியிருததல் வேண்டும. இவரோ வடநூலாருககுத் தமிழ் நூலார் கடமைப்பட்டவர் என்று துணிநது எழுதுகிறா. வடமொழியிலிருந்து தமிழ் கடன்பெற்றது என்று கூறியதாலேயே இவர் நடுவுநிலைமை பிறழ்நதவா என்றே, தமிழமொழியிலிருந்து வடமொழி கடன் வாஙகிற்று என்று கூறியமையால் பிள்ளையவர்கள் நடுவுநிலைமை பிறழாதவா என்றே கூற முன் வருவாரிலர். யாவராயினும் சான்று காட்டி ஒரு கருததை நிறுவினல் தமிழுலகம அதனை ஒததுக்கொள்ளப பின்வாங்காது. ஆயின் இநதத தமிழன்பரோ வடநூலிலும் தமிழிலும் உளள ஒற்றுமைக கருததுக்களை எடுததுககாட்டி வடவருக்குத் தமிழர் கடமைப்பட்டவர் என்றெழுதியுளளனரேயன்றி வடநூலிலிருந்துதான் தமிழ்நூல் குறிப்பிட்டதொரு கருததைப் பெற்றது என்பதறகுச் சானறு காட்டினரல்லர். இவர் காட்டியவற்றைக் கொண்டே தமிழிலிருநது வடநூல் கடன்பெற்றது என்று ஒருவர் எழுதுவாராயின இவரால் மறுக்க வியலுமா? வள்ளுவருக்கும் வடவருக்கும கருத்தொற்றுமை யுண்டென்று வரைந்து, ஒன்றுபட்ட பகுதிகளை எடுதெழுதி, வடமொழி வாணருக்கு வள்ளுவர் கடமைபபட்டவர் என்று முதன் முதற் கூறிய "புண்ணியம" திரு இராமச்சந்திர தீக்ஷிதரவர்கட்கே[2] உரியது தீக்ஷிதர் அவர்களிடமிருநதே இந்தத் தமிழ் அன்பர் இக்கருத்தைக் கடன்பெற்றார் என்று கூறுவதை இவர் ஒப்புவரா? அன்றி வள்ளுவருககும சாகரட்டீசுககும் காணபபடும

1. "இனனும வடமொழியாய ஆரியததிலும இநநூல மொழி பெயர்ககப் பட்டுளளதென அறிகிறோம் ஆனல் மொழிபெயர்கின்ற பேராசிரியர்கள இந்நூல் வளத்தால தம்மொழியும மேமபடவேண்டுமென்னும் விழுமிய நோக்கததுடன் காம மேற்கொணட தொழிலை செய்ய வேணடுமே யன்றி, இவ்வாறு தமிழ்நூலை மொழிபெயாததுக் கொணடு, சூழ்சசிகள் பல செய்து, இன்னும சில காலததில தமமொழியிலேயே இந்நூல் முதல் நூலாக இயற்றப்பெற்ற தென்றும ஆசிரியா திருவள்ளுவனர் அதனை மொழிபெயர்த்துத் தமிழுலகிற்குத தந்தாரென்றும் நன்றி கொனறு உயிாவாழும் நசசுததன்மை தவிாதது ஙனனேககமே தலைப்படுமாயின தமிழ்நாடு தழைததலோடு ஏனைய நாடுகளும ஏமம உறும."—பேராசிரியா. ரா. பி. சேதுப்பிள்ளை : "திருவள்ளுவா நூல் நயம்" பக். 31—2

2. "Studies in Tamil Literature and History".

கருத்தொற்றுமையைக்கொண்டு [1]வள்ளுவரிடமிருந்து சாக்ரட்டீஸ் கடன் வாங்கினர் என்று கூறுவதை இத்தமிழன்பர் ஒப்புவரா? காலத்தால் முற்பட்ட வள்ளுவரது கருத்துக்கள், பிற்பட்ட வடநூலிலகாணப்பட்டதால் வள்ளுவரது காலத்தைமாற்ற இத்தமிழனபா முற்படுகிருரேயன்றி வடநூல்கள் வள்ளுவரைப் பின்பற்றின என்று கூறத் துணிகின்றாரல்லர். இதைப் பார்க்கும் பொழுது இவரது நடுவுநிலைமையைப் பற்றி ஐயம் எழத்தான் செய்கிறது.

முதலாவது இத் தமிழன்பரின் தமிழ்நடையே இவ்வையத்தை எழுப்புகிறது. கம்பரைப்பற்றி[2] எழுதும்பொழுது, "பன்னெடுங் காலமாக வட-ஆரிய சமுதாயத்தின் உள்ளத்தே ஊறிக்கிடந்து வான்மீகி மஹரிஷியால உருவமைந்த இராம சரிதம இப்பொழுது தன பூர்வகதியை அநுஸரித்துத் தக்ஷிண இந்து சமுதாயத்தின் உள்ளப்பரப்பிலேயும அழுந்திக் கிடந்து ரஸம இனிது ஊறிக் கனிவதாயிற்று. புதுவதாகிய மனோ பாவனையால் புதுக்கோலம புனையப்பெற்றது பாரததேவி அரிதில தெரிநதுகொண்ட புருஷோத்தமனது சிறந்த குண விசேஷங்கள நன்கு புலப்படுமாறு நூதன சமபவங்கள அழகு பெறச் சேர்க்கப்பெற்றன. . ...." என்று வடசொற்களை வட வெழுத்துக்களை நீக்காமலேயே ஆண்டுள்ளார். அதுமட்டு மன்று இவ்வாறு எழுதுவதே உயாவென்றும் கருதுகிருர் என்பதும பிற இடங்களில இவர் எழுதுவனவற்றால் விளங்குகிறது. குமரகுருபரரைப்பற்றி எழுதும்பொழுது, "தற்காலத்தார வடமொழிச் சொற்களை நீக்குதற்குப் பெரிதும் முயன்று வருகின்றார்கள். ஆனல், சுவாமிகள் மிகத் தாராளமாக இச் சொற்களைத் தமது நூலகளில் வழங்கியிருக்கிருர். உதாரணமாக மதுரைக்கலம்பகத்தில் (69),

பால லோசன பாநுவி லோசன
பற்ப லோசன பக்த சகாயமா
கால காலதரி சூலகபாலவே
கமப சாம்ப கடமபவ னேசனே.

இங்கு ஒரு தமிழ்ச் சொல்லேனும காணுமை நோக்கத் தக்கது" என்று வரைகிருர்.[3] இங்குத் தனித்தமிழ் உணர்ச்சி தமக்கு உடன்பாடன்று என்று இத் தமிழனபர் குறிப்பிடுவ தோடு அமையாது தனித்தமிழ் உணர்ச்சியுள்ள அறிஞரையும்

1. ஒன்றுபட்ட பகுதிகளை வெ. சாமிநாத சாமா மொழிபெயர்த்த "பிளேட்டோவின அரசியல" என்ற நூலில் காண்க.
2 "தமிழ்ச் சுடாமணிகள்" 2nd Edition pp. 137.
3. "தமிழ்ச் சுடர்மணிகள்" 2nd Edition. pp. 189.

தாக்குகின்றார் என்பது நோக்கத்தக்கது இதுமட்டுமன்று, பிறிதோரிடத்தில் வள்ளுவரையே தமக்குத் துணைக்கு அழைக்கிறார் திருக்குறளில் உள்ள வடசொற்களைக் காட்டி, "இங்குக் காட்டியவையெல்லாம வடசொற்களை யெடுத்தாளுதலில் வள்ளுவா விரிந்த மனப்பான்மையுடையவா என்பதை விளக்கும்" என்று எழுதுகின்றார்[1] இவையெல்லாம இவரது வடமொழி விருப்புகத்துச சான்று பகரும இவையேயன்றித் தற்கால இந்தி எதிாப்பாளரைப பற்றிய இவரது தூற்றுதலும் (Contemptuous reference) குறிப்பிடத்தக்கது "மேற காட்டியபடி தமிழ் வடமொழி இரண்டிலும மிகப பரந்த கல்வி கேளவியுடையவாகளாயிருந்த சுவாமிகளது வாழ்க்கை வேறோர் அமசத்திலும தறகாலத்தாருக்கு ஒரு லட்சியத்தைக் காட்டுவதாயுள்ளது. இவர் காசிக்குச சென்று பாதுஷாவின தாய்மொழியாகிய இந்துஸ்தானியை விரைவில் கற்று, இவ் வரசாங்க மொழியிலேயே பாதுஷாவோடு நேரில் சமபாஷணைகள நடத்தினா காசியில மடம் ஒன்று அமைத்து, அங்கே இந்துஸ்தானி பாஷையிலும் தமிழிலும புராணப பிரசங்கங்கள் செய்துவந்தனா இது உண்மையே என்பதறகு இவர் காசியில் அமைத்துள்ள குமாரசுவாமி மடமே தக்க சான்றாகும சலாம முதலிய இந்துஸ்தானிச் சொற்களை இவர் ஆண்டிருப்பதும இஙகே கவனித்தறகுரியது இந்தி மொழியைத தமிழ மக்கள கற்கவேண்டிய அவசியம இல்லை யென்றுகொண்டு, 'இந்தி ஒழிக' என்று இக்காலத்துச சிலர் கூச்சலிடுகின்றனர் இககொள்கை சுவாமிகளுககு உடன்பாடன்று என்பது இவாகளது வாழ்க்கை நமக்கு நனகு தெளிவுறுத்துகிறது"[2] இந்தி எதிாப்பாளரைப்பறறிய இவரது தூற்றுதல் பொருந்துமா? இவர்கள் இந்தி மொழியையே கறகவேண்டாமென்று கூறுகின்றனரா, அன்றி இந்தி கட்டாயமாக இளஞ்சிறார்மீது திணிக்கப் படுதலை எதிாக்கின்றனரா என்பனபற்றி ஈண்டு ஆராய்சசியின்று ஆராய்ச்சி தேவையுமன்று, நாடறியும் இவற்றாற் பெறப் படும முடிவு தமிழில இந்திச சொற்களையும கலந்து எழுதுதல் வேண்டும், எழுதககூடாது எனபாா எல்லாம் கூச்சலிடுவோர் என்பதே இவரது எண்ணம் என்னும முடிவு—ஒன்றே வேண்டுவதாகும. இவ்வாறு பிறமொழி விருப்பும தனித்தமிழ் வெறுப்பும் உடைய இத் தமிழன்பரைக் காய்தல் உவத்தல் இல்லாத நடுவுநிலைமையாளா என்று கூறுவதுதான் முற்போக்கு எனின் அம் முற்போக்குத தமிழ்நாட்டுக்குத் தேவையன்று.

---

1 Ibid. pp 72.

2. "தமிழ்ச சுடர் மணிகள்" 2nd Edition. pp. 190.

## ௨. அறத்துப்பால்

இனி இவரது ஆராய்ச்சியை நோக்குவோம் திருக்குறளில் அறத்துப்பாற் கருத்துக்கள் மனுநீதியிலிருந்தும், பொருட்பாற் கருத்துக்கள் கௌடில்யரது அர்த்த சாத்திரத்திலிருந்தும், காமத்துப்பாற் கருத்துக்கள் வாத்ஸ்யாயனர் காமசூத்திரத்தினின்றும் கடன் பெறப்பட்டவை யென்று காட்டி, இவ் வட நூல்களின் காலத்துக்குப் பிறகே குறள் எழுந்ததாகும் என்று கூறுதலே இவரது ஆராய்ச்சியின் போக்காக உள்ளது

மனுநீதியை நோக்கியே அறத்துப்பால் எழுந்தது என்று கூறுதற்குச் சான்றாக இரு நூற்களிலும் ஒற்றுமையுடையவாகத் தோன்றும் சில பகுதிகளைச் சுட்டுகிறார். இவை உண்மையிலேயே ஒற்றுமையுடையனவா என்பது ஐயத்திற் கிடமா யுள்ளது,

“தொடுகருவி கொண்டு பூமியைத் தோண்டுதலால் ஒருவன் நீர்பெறுதல் போலக் குருவினிடத்துள்ள வித்தையை அவர்க்குச் சேவை புரிந்து மாணவகன் பெறுகிறான் (மனு II. 218) என்று வரும் கருத்து ‘தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக், கற்றனைத் தூறும் அறிவு’ என்ற குறளில் மிக்க நயம்பட எடுத்துரைக்கப்படுகிறது,” என்று இத் தமிழன்பர் எழுதியுள்ளார்[1]. மனு கூறுவதெல்லாம் “மண் வெட்டியால் தோண்டுபவன் நீர் பெறுதல் போன்று தொண்டுபுரியும் ஆர்வமுடையவன் ஆசிரியரிடமுள்ள கல்வியறிவைப் பெறுகிறான்” என்பதே[2]. பாஷ்யமெழுதிய மேதாதிதி, “தொண்டினால் பெறலாகும் பரிசை இச் சூத்திரம் விளக்குகிறது. ஆசிரியருக்குத் தொண்டுபுரிவதன் வழியாக வேதத்தைக் கற்கவேண்டுமென்பதே இதன் கருத்து. ஒருவன் மண்வெட்டியாலோ பிற கருவிகளாலோ நிலத்தைத் தோண்டினால் நீரைப் பெறுகிறான். உழைக்காவிடில் அதனைப் பெறுவதில்லை அவ்வாறே ஆசிரியருக்கு ஆர்வமுடன் தொண்டுபுரியும் மாணவன் அவரிடமுள்ள கல்வியறிவைப் பெறுகிறான்” என்று விளக்கம் எழுதிச் செல்

---

1. “தமிழ்ச் சுடா மணிகள்” Second Edition. p. 74.

2. “Manu Smriti” - with the Bhasya of Medhatithi - Translated by Mohamahopadhya Ganganatha Jha M. A., D Litt - vol I. part. II. verse 218; “Just as a man digging with the spade obtains water, even so one who is eager to serve acquires the learning that is in the teacher.”

கிறார்.[1] ஈண்டு மனு, "கருவிகளால் நிலத்தைத் தோண்டுபவன் நீர்பெறுதலைப் போல" எனனும் உவமையை உழைப்பின் சிறப்புக்காக, ஆசிரியருக்குத் தொண்டு புரிவதன் இன்றியமையாமையை விளக்குதற்காகப் பயன்படுத்தியுள்ளார் மனு, பலவிடங்களிலும் மாணவன் ஆசிரியருக்குத் தொண்டு புரிய வேண்டும் எனபதனையும் அவவாறு ஊழியம் செய்யாத மாணவனுக்கு ஆசிரியா கற்பித்தல் கூடாதென்றும்[2] வற்புறுத்திச் செல்கிறா இக் கருத்தை எஙகேனும் வள்ளுவர் கூறியிருக்கின்றனரா? வள்ளுவர் கூறுவதெல்லாம் மக்கட்குக் கற்ற அளவிற்றாக அறிவு பெருகும் என்பதே இவ் விரு கருத்துக்களும் ஒன்றுதல் யாஙஙனம்? முன்னது ஆரியக் குருகுலக் கல்விமுறைக் கருத்து. ஆசிரியாக்கு ஊழியம் செய்யச்செய்ய அறிவு பெருகும் என்பதுதான மனுநீதி வேட்டி துவைத்தலாகவோ மாட்டுமந்தையை ஓட்டிச் செலவதாகவோ ஊழியம் இருக்கலாம், அஙகுக் கற்றலைப் பற்றிய பேச்சேயிலலை. ஆயின் குறளோ கற்ற அளவிற்றாக அறிவு பெருகும் என்றே கூறுகிறது. முன்னது ஒருகுலத்துக் கொருநீதி புகட்டும் கருத்து. பின்னையது எந்நாட்டவரும் எச் சமயத்தவரும் ஏற்றுக்கொள்ளும் பொதுக் கருத்து முரணபட்ட இரு கருத்துக்களிலும் ஒற்றுமை காணும் இத தமிழனபரது ஆராயச்சியை உண்மையிலேயே பாராட்டவேண்டும்! உவமைகளாவது ஒத்தனவா? ஒன்று, 'கருவிகொண்டு நிலத்தைத் தோண்டுதலபோல' என்பது. மற்றது 'மணலினகண் கேணி தோண்டுதல் போல' என்பது. ஆற்று மணலில் ஊற்றுத தோண்டுதல் எளிது, மண்வெட்டியோ கடப்பாரையோ தேவையிலலை, கையாலேயே பெரும்பாலும் தோண்டிவிட முடியும். தோண்டிய அளவில் வற்றாது நீர் ஊறிக் கொண்டிருக்கும் உழைப்புச் சிறிது; பயன் பெரிது. அவ்வாறே கற்றலுக்காகச் செலவிடும் உழைப்புச் சிறிது; விளையும் அறிவாகிய பயன் பெரிது. இவ் விரு உவமைகளும் ஒன்றுமோ?

(தொடரும்)

---

1. Ibid. verse. 218 Bhasya: "This describes the reward in connection with the entire body of injunction bearing upon the service; and it is commendatory of learning the veda by means of serving the teacher.

Just as a certain man digging the earth by a spade or some such implements obtains water, and he does not obtain it without trouble; similarly the pupil who is eager to serve and attends upon him, acquires the learning that is in the teacher

2. Ibid. verses 109, 112, 113.

# கோசர்

[விதுவான், திரு. ஆ. சிவலிங்கனூர், மயிலம்]

கோசரைப பற்றி ஓர் அரிய ஆராயச்சி யெழுதியுள்ளார்கள் காலம சென்ற பாஷாகவி சேகர மகாவித்துவான, திரு. இரா. இராகவ ஐயஙகார அவாகள. இவவாராய்சசி புதிய கருத்துக் களைக கொணடது சஙக இலககியஙகளிற காணப்படும் கோசர் தமிழா அல்லா என்றும, அவாகள் காசுமீர நாட்டிலும் வத்தவ நாட்டுக் கோச நகரததிலுமிருநது வநதவாகள என்றும் ஆதாரங் களுடன் விளககியுளளாாகள இதனைப படிதத காலத்தில் ஆஙகாஙகே சிற்சில ஐயஙகள தோன்றின அவற்றை ஈண் டெழுதின அறிஞாகள கண்ணுறறுப் போககி முடிவு காணுதறகு வாயபபு இருககும என்றெண்ணியே இககட்டுரையினை எழுது கின்றேம.

## (1) நான்மொழிக் கோசா

"கோசா முதலில கொஙகில வதிநதவரெனறும், பின்னர்க் குடகடற பக்கத்து மலை நாட்டில குடியேறியவா என்றும் துணி யபபடும" எனறு கூறி அதறகாதாரஙகள காட்டி வருமிடத தில பின் வருவனவறறை எழுதியுளளாாகள்.

"மதுரைக் காஞ்சியில் இவரை, "நானமொழிக் கோசர் தோன்றியாஙகு' என்றா. இவவிடதது நச்சினாககினியர் "நான்கு வகையாகிய கோசர் வஞ்சின மொழியாலே விளங்கி னாற் போனறு" என வுரைத்தாா. இஙஙனம 'நாறகோசர் மொழித்தோன்றியாங்கு' எனச் சிதைததுக் கூட்டாது 'நான் மொழி நாட்டுக் கோசா தோன்றினாற் போன்று' எனக் கிடநத படியே பொருள் கொள்ளலாம் என்க முற்காலத்து நான் மொழி நாடெனை ஒன்றுணடென்பது சாசன ஆராய்ச்சியாளர் கண்டது. இதனைத "திருவறைக கல்லும நான்மொழி நாடும் உடைய வத்தவராயனை விடுகாதன்" (Topographical List of South Indian Inscription No. 213 - 11 of 1906) என்பத னால் அறியலாம். இதன்கட் கூறப்பட்ட திருவறைக்கல இக் காலத்து நாமக்கல என வழங்குவதென்று துணியபபடுவது. இதனகண் கூறிய நான்மொழி நாடு திருவறைக் கல்லுக்குப் பக்கத்ததாமென்பது பொருந்தும ஈண்டு நானமொழிகளா வன தமிழ, தெலுங்கு, கன்னடம், மலையாளம் என்பனவாகும். இநநானமொழியும வழங்குதற்குரிய எலலையில் இநநாமககற் புறம இருத்தல பறறி இபபெயா எயதியதென்று தெளியலாம்.

இந்நான்மொழி நாடு மழகொங்கின வடக்கண் உள்ளதனல் ஈண்டு முன் வதிந்து பின குடகிற் குடியேறிய கோசர் "கொங் இளங் கோசர், குடகக கொங்கா" எனப்பட்டாா என்று கொள்ளததகும்" (கோசர் பக. ௩)

மதுரைக காஞ்சியில உளள "நான்மொழிக் கோசர் தோன்றியனன" என்ற அடியினை நச்சினுக்கினியா, "நாற் கோசர் மொழி தோன்றியாஙகு" எனச் சிதைத்துக கூட்டியமைக்கு இரண்டு காரணஙகள இருககலாம. முதலாவது கோசர் தமது வஞ்சின மொழியினை நிறைவேறறுங குணத்தினர் என்பதைக் கருதியதாகலாம்

"ஒனறுமொழிக கோசர்" (அகம் ககக.)
"வாயமொழி நிலைஇய சேணவிளககு நல்லிசை
வளஙகெழு கோசர்" (அகம் · உ0௫)
"கோசா நனமொழி போல வாயாகின்றே" (குறுந் : ௭௩.)

என்று கோசர் மொழி, 'ஒன்றுமொழி,' 'வாய்மொழி,' 'நன் மொழி' எனச் சிறப்பிககபபடுதலைக காண்க. இதற்கேற்பவே "நான்மொழிக் கோசர்" என்பதை "நாற்கோசா மொழி" எனக் கொண்டாா எனனலாம்.

இனி இரண்டாவது காரணம் வருமாறு :—

"மழைபொழுக கறஅப் பிழைபா விளையுட
பழையன மோகூா அவையகம விளஙக
நான்மொழிக் கோசர் தோனறி யனன
தாமேஎந் தோனறிய நாற்பெருங குழுவும
(மதுரைக காஞ்சி. 507—10)

இவ்விடத்தில "நாறபெருங் குழு" என்றமைக்கேற்ப "நாற் கோசர்" எனறல் சிறககும என்று நசசினுர்க்கினியா கருதியிருககலாம் என்பது இரண்டாவது காரணம் ஆகும அவர் நாற்பெருங் குழுவாவன யாவை எனக்கூற வந்தவிடததில், "ஐம் பெருங் குழுவில அமைச்சரைப் பிரித்து முற்கூறினமையின ஈண்டு ஏனை நாற்பெருங குழுவையும் கூறினுர்," எனறுகூறி ஐம் பெருங குழுக்கள் இன்னுா என்றற்கு இளஙகோவடிகள கூறறையும் எடுத்துக் கூறினுா. நாற்பெருங் குழுக்கள் புரோகிதர், சேனுபதியா, தூதுவர், ஒறறர் என்போராவர். வெவவேறுபட்ட நாற்பெருங் குழுக்களுக்கு ஏற்ப நாற்கோசர் எனக் கொண்டமையால கோசரும் நான்கு வகையினராவர் என்று கொண்டே "நான்கு வகையான கோசா" எனப் பொருள் கூறினுர் அவர். அநநான்கு வகை யாவை?

திரு. ஐயங்கார் அவர்கள் "நான்குமொழிக்கோசர்" எனக் கொண்டது பொருந்துமோ என ஐயுறவேண்டியிருக்கின்றது. தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய நான்கு மொழியும் வழங்குதற்குரிய எல்லையில் நாமக்கற்புறம் இருததல் பற்றி நான்மொழி நாடு எனற பெயர் எய்தியிருக்கலாம். ஆனல் நாமக்கற்புறம எக்காலத்தில் அப்பெயர் எய்தியிருககலாம என்பதைக் கவனிததல் வேண்டும் அன்றோ? கடைச்சங்ககால முடிவு கி பி. மூன்றாம நூற்றாண்டென்பர் ஆராய்ச்சியாளர். கடைச்சஙக காலததரசன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் என்பதும் அவர்தம் முடிபு. கடைச்சஙக காலததில் சேரரும் நலலமுறையில் பேரரசர்களாக இருந்தனர் என்பதும் உண்மையே. கடைச்சங்க காலத்திலேயே மலையாள மொழி உருப்பெற்றதில்லை. எனவே, தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனிடம் மாங்குடிமருதனா கூறிய பாட்டில், 'நான்மொழிக்கோசர்' என்பதற்கு 'நான்மொழி நாட்டுக்கோசர்' என மலையாள மொழியையும் கொண்டு கூறுதல் ஏற்புடைத்தன்றாம். "மலையாள மொழிக்கு ஏறக்குறைய ஆறு ஏழு நூற்றாண்டு களுக்குமேல் அதிகம் முன்வாழ்வு ஏற்பட்டதில்லை என்று அம் மொழி வலலுநர்களே கருதுகின்றார்கள்" என்பர், திரு க ச. சங்கரராமன் என்பவா. (செந்தமிழே கொடுமலையாளம். பக். ௬௭). அதனால் நசசினார்க்கினியர் "நாற்கோசர் மொழி" எனச் சிதைததது பொருந்தும் என்னலாம்.

"பறைபடப் பணிலம் ஆர்ப்ப விறைகொள்பு
தொன்மூ தாலததுப் பொதியில் தோன்றிய
நாலூாக கோசர் நனமொழி போல
வாயாகின்றே" (குறுந் : ௧௫.)

இப்பாட்டில் "நாலூர்க் கோசர்" என்றது ஈண்டு நினைவு கூர்தற்குரியது. "கோசர் : மோகூர்ப் பழையனுடைய நியாய சபையில இருநத ஒருவகை வீரர். இவர்கள் நான்கு பிரிவி னர்கள எனறு தெரிகின்றது" என்று கூறிச் சான்றாக நச்சி னார்க்கினியர் உரையினைக் காட்டினர், திரு. உ வே. சாமி நாதையா அவர்கள். "நாலூர் ஓா ஊருமாம்" என்றும் கூறினா. நாலூர் என்பதற்கு நான்கு ஊர்கள எனக கோடல் சிறக்குமஎன்னலாம் கோசர் சோழ பாண்டியர்கட்கு உதவி யாக இருநதனர் என்பதைத் திரு ஐயங்கா அவர்கள் நன்கு விளககியுளளாாகள அதனல் கோசா பேரரசர்களின் ஓலக் கததை அலங்கரித்தவர் என்றும் அவாக்காக ஒன்றுமொழிநது உதவியவா என்றும பெறலாம். அன்றியும் குறுநில மன்னர்க்

கும் உதவியவர் என்பதையும் "மோகூர் அவையகம் விளங்க.... தோன்றினயன்" என்பதனுல் உணரலாம் அரசர்கள் கோச மரபினரில ஒருவனை மட்டும தம் பக்கல் கொண்டிலர் என்றும் பலரைக் கொண்டனர் என்றும அறியவரலாம. கோசரைப் பற்றி வரும இடம் எங்கும் 'கோசன்' என ஒருமையில் இன்றிக் 'கோசர்' எனப் பன்மையில் இருப்பதே சான்று பகரும்.

"கோசர் துளுநாடு" (அகம் · கரு.)
"காப்புக் கைந்நிறுதத பல்வேற் கோசா" (அகம்: ககங.)
"துனைகா லன்ன புனைதேர்க் கோசர்" (அகம் · உருக.)
"வென்வேல் இளமபல் கோசா" (புறம் · கசுக)
"வலம்புரிக் கோசா அவைககளம்" (புறம் · உஅங.)

என்பன காண்க. கோசர் பலரைத் துணையாகக்கொண்ட அரசர்கள் அவர்களைப் பல ஊர்களிலிருநதும் தேர்நதுகொண்டிருக்கலாம். கோசர் இருநத ஊர்கள ஒன்றற்கொன்று அண்மையில் அமைந்தனவாகும். ஒரு நாட்டில அல்லது வளநாட்டில் அமைந்த ஊர்களுள் நான்கு ஊர்களிலிருந்து தோந்துகொண்ட கோசர்களை அரசாகள் உதவிக்குக் கொண்டனர் என்னலாம். அவ்வாறு நாலூர்களிலிருநது அமைத்துக்கொள்ளப்பட்ட காரணத்தால் அவர்கள் "நாலூர்க் கோசர்" எனப்பட்டனர் எனக் கொள்ளலாம "பறைபடப் பணிலம்" என்று தொடங்கும் குறுந்தொகைப் பாட்டில், "தொன்மூதாலத்துப் பொதியில்" என்பது மோகூர்க்கு அடுத்துள்ள ஆலம்பலம்—அஃதாவது கள்ளக்குறிச்சிச் சேகரத்துள்ள ஆலம்பலம் என்று திரு. ஐயங்கார் அவர்கள் முடிவுகட்டியுள்ளாாகள் எனவே, மோகூர்க் குறுநில மன்னனும் கோசர்களை நான்கூரிலிருந்து தேர்ந்து கொண்டவனுதலும கூடும். எனவே, குறுந்தொகைப் பாட்டில் வந்த நாலூர்க் கோசர் என்பதற்கேற்ப மதுரைக்காஞ்சியில் நாற் கோசர் என்பதும் பொருந்தும் என்னலாம. (தொடரும்)

# நயவர்

[திரு. பி. எல். சாமி, பி. எஸ். ஸி]

மனிதன் மனவுணர்வுடையவனாக இருக்கவேண்டும். பகுத்தறிவுடையவனாக இருக்கவேண்டும், பண்பாடுடையவனாக வாழ வேண்டும்; சமூகத்தில வாழத் தகுதியுடையவனாக இருக்க வேண்டும்; மனவுணர்வு பகுத்தறிவுக்கு அடிப்படை, பகுத்தறிவுடன் நடந்தால் ஒழுக்கமுடையவனாகிறான், ஒழுக்கத்தால் பண்பாடடைகிறான், பண்பாட்டால் உலகில் வாழத் தகுதி பெறுகிறான், இது பற்றியே மக்களை உயர்திணையென்று தமிழிலக்கணம் கூறுகின்றது

> "மக்கள் தாமே ஆறறி வுயிரே
> பிறவு முளவே அக்கிளைப் பிறப்பே" (தொல் மர. ௩௩)

'பிற பென்றதனால் குரங்கு முதலாகிய விலங்கினுள் அறிவுடையன வெனப்படும மனவுணர்வுடையன உளவாயின அவையும் ஈண்டு ஆறறிவுயிர்,' என்று பேராசிரியர் கூறியிருக்கிறார் ஆதலின மனவுணர்வும் அதனால உண்டான பகுத்தறிவும் இருந்தால் மனிதன் மனிதனாகக் கருதப்படுவான். இலையேல் அவன வெறும் விலங்கு. பகுத்தறிவுடைய விலங்கே மனிதன் (Man is a Rational animal) என்று அளவை நூல கூறும. 'அறிவறிந்த மக்கள்' (௬௪) என்று வள்ளுவர் கூறுவதும் இப பொருட்டே.

மனிதனுடைய மனத்தைக் கிரேககாகள் இரு கூறாகப் பிரித்தனா. ஒரு பகுதி வெறும பசிகளால் (காம பசி, உணவுப் பசி முதலியவை) உந்தப்படுவது. இவைகளைக் கிரேக்க தத்துவ நூலார் 'Hormes' என்று அழைததனர் இப்பசிகள மனிதனை அங்கும் இங்கும அலைக்கழிக்கின்றது; மற்றொரு பகுதி பகுத்தறிவு. இதைச் செய்யலாம, இதைச் செய்யக்கூடாது என்று உணாத்தி, இப்பசிகளை அடக்கி ஆளுகிறது (Vide De offieis. Cicero) இபபகுததறிவுடையதை உயாதிணை யென்றும இல்லாததை அஃறிணை யென்றும் நுண்ணிய, சிறந்த எந்த இலக்கியங்களிலும் எம் மொழியிலும் காணமுடியாத பாகுபாட்டைத் தமிழ் மொழியில்தான் காண்கிறோம்.

> 'பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டொடு
> உருவு நிறுத்த காம வாயில்
> நிறையே அருளே உணர்வொடு திருவென
> முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே'

என்ற மெய்ப்பாட்டியல் நூற்பாவில் 'உணர்வு' என்பதற்கு 'உலகியலால் செய்யத் தகுவது அறிதல்' என்று பேராசிரியர் கூறுவது கூர்ந்து நோக்கத் தக்கது.

'தக்கவின்ன தகாதன இன்ன வென்று
ஒக்க உன்னல ராயின் உயர்ந்துள
மக்களும் விலங்கே'

என்று கம்பர் கூறுவதும் இந்த அடிப்படைப் பாகுபாட்டை எடுத்துக் காட்டும்.

மனவுணர்வின்றி வெறும் பசிகளைத் தணித்து வாழ்வன விலங்குகள். அப்பசிகளிலே, விலங்குகள் உணவுப்பசியை இன்றியமையாததாக வாழ்க்கையில் கொணடுள்ளன. ஆனல் மனிதன் அவைகளைவிட நுண்ணிய உணர்வுகளை நாடி இன்புற்று வாழ்கின்றான். கல்வி கேள்வி உணர்வுகளே ஒருவனை நல்லொழுக்கமுடையவனும், உயர்திணையாய், உலகில் வாழத் தகுதியுடையவனும், பண்பாடுடையவனும் மாற்றுகிறது. வாய்ப பசியால் ஆட்டப்படும் மக்களை வள்ளுவர் 'வாயுணர்வின் மாக்கள்' என்று அழைப்பது இது பறறியே. கேளவி யுணர்வின்றி நூலுணர்வின்றி வெறும் விலங்குப்பசிகளைத(Animal Instincts) தணித்து வாழும் மக்களை வள்ளுவர் 'விலங்கொடு மக்களனையர்' என்று பிறிதோரிடத்திலும் கூறுகின்றார்.

"வானத்திலுள்ள சிறு பறவைகளைப் பாருங்கள்; அவை விதைக்கிறதுமில்லை, அறுவடை செய்கிறதுமில்லை. அவைகள் நாளை என்ன உண்ணலாம் என்று கவலைப்படுவது மில்லை; ஆதலால், மனிதன் உணவினுல் மட்டும் வாழ்வதில்லை" என்று இயேசு கூறியிருக்கிறார்.

உணவிற்காக, உணவினுல், வாழ்ந்தால் மனிதன் மனிதனல்லன் என்பது அவா கருதது உணவுடன் உணாவும் வேண்டும். எலியைபபோல உணவைததேடி உண்பதிலேயே ஆயுளைக் கழிக்காது கல்வி கேள்வியுணாவுடன இன்புற மனிதனுககுப் போதிய ஓய்வு வேளை வேண்டும. அதுவே சோசலிசததின் (Socialism) இறுதிக் குறிக்கோளாக இருக்கவேண்டும எனறு பெர்னாடஷா ஒரு நூலில் கூறியுளளாா

மனிதனை 'சமூக விலங்கு' (Social Animal) என்று சொல்லலாம். 'உலகியலால செய்யத் தகுவது அறிநது' உலகில் வாழ்தலால் சமூக விலஙகு என்கிறோம். ஆனல் அதைவிடச் சிறப்பாகக் கூறவேண்டுமானல் மனிதனைப் பண்பாடுடையன என்று சொல்லவேண்டும். பண்பாடிருந்தால் மனிதன் மனித

ளுவான். (While it may not be an adequate definition to say that he is a *Social animal*, he is sufficiently differentiated if described as *Possessing Culture*—Race and culture - unesco Publication) உலகில் வாழ்வதனால் மொழி, பழக்க வழக்கங்கள், நடையுடை பாவனைகள் ஆகியவைகளின் துணையால் மனிதன் பண்பாடுடையவனாக மாறுகின்றான்.

மனிதரிலும் உயர்ந்த பண்பாடுடையவன் தாழ்ந்த பண்பாடுடையவன் என்று இருவகையாகப் பிரிக்கலாம். இலக்கியம், ஓவியம், இசை இவைகளை உணர்ந்து துய்ப்பவன் உயர்ந்த பண்பாடுடையவன். வள்ளுவரும்,

‘ விலங்கொடு மக்க ளனையர், இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர் ’

என்று கூறுகிறார்

‘ செவியிற் சுவையுணரா வாயுணர்வின், மாக்கள்
அவியினும் வாழினும் என் ’

என்று வள்ளுவர் சினத்தோடு கூறுவதையும் கவனிக்கவேண்டும் அவர்களையே ‘ அவிசுவை யின்றி தமிழ்ச்சுவை தேரீர் ’ என்று ஔவையார் கூறுகிறார் “ சொற்கொண்ட பாவின் சுவை அறிவார் ஈங்கில்லையே ’ என்று கம்பரும் கூறியுள்ளார். ஆதலின் வாய்ச்சுவை யன்றிப் பிற நற்சுவை அறியார் பண்பாடற்றவர். ஆதலின் அவர்கள் விலங்குகளே.

மனவுணர்வு, உலகில் வாழத் தகுதியுடைமை, பண்பாடு ஆகிய மூன்றும் இல்லாதவை ‘அலதிணை’ எனப்பட்டன. திணை எனில் ஒழுக்கம் என்பது பொருள். திணை எனில் சமூகம் என்பதும் பொருள் திணை எனில் இவைகளையெல்லாம் உள்ளடக்கிய பண்பாடு (Culture), நாகரிகம் (Civilisation) என்பதும் பொருள் ஆதலின், உயர்திணை மேற்சொன்ன மூன்றையும் உள்ளடக்கி வைத்திருக்கின்றது. இவை மூன்றையும் இயல்பாகப் பெற்றும், அதை இழந்து மனவுணர்வைக் கெடுத்து வாழும் வன்கணாளர்களையே வள்ளுவர் விலங்கினும் கீழாக மதித்து அவர்களைக் ‘ கயவர் ’ என்றழைக்கிறார் இவர்கள், உயர்திணையுமன்று; அஃறிணையுமன்று; தேவர்களுமல்லர்; நரகருமல்லர், அஃறிணையிலும் தாழ்ந்தவர்; இவர்களே கயவர்கள்.

‘ வாயுணர்வின் மாக்கள்,’ ‘ விலங்கொடு மக்களனையர்,’ என்று கயவர்களை விலங்குகள், மாக்கள் என்றும் சொல்லாமலே சொல்லி வைத்தார் வள்ளுவர். பின்னர் ‘ மக்களேபோல்வர் கயவர் ’ என்றார். ஏனெனில் அவர்கள் மக்களைப்போலக்

காட்டிப் பிறரை ஏமாற்றுகிறார்கள் மக்களைப்போலவே தோற்று வதில் அவர்களை ஒப்பாரைத் தாம் கண்டதேயில்லை என்றும வள்ளுவர் கூறுகிறார். ஆனால் வள்ளுவரே,

"உறுப் பொத்தல் மக்களொப்பு அன்றால் வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம ஒப்பு"

என்ற குறளில் தெளிவாகக் கூறியிருக்கிறார். அவர்கள் மக்களை போலிருந்தாலும் மக்களைவிடத் தாழ்ந்தவர்கள். அவர்கள் "அரம் போலும் கூர்மையரேனும மக்கட் பண்பில்லாவிடில மரம்போல்வர்" என்று வள்ளுவர் விலங்குகளைவிடத் தாழ்வான ஓரறிவுடை உயிர்களான மரங்களுடன் ஒப்பிடுகிறார் 'புறத்துறுப்பெல்லாம் எவன்செயும' என்று வள்ளுவரே பிறிதோரிடத்திலும் கேட்கின்றார். யாக்கைக்கு அகத்துறுப்புத்தான் இன்றியமையாதது என்று விளக்குகிறார்.

விலங்குகளுக்கும் கயவர்களுக்கும் இருக்கும் மற்றொரு ஒற்றுமையும் வள்ளுவர் 'கயமை' என்ற அதிகாரத்தில் காட்டியிருக்கின்றார். அச்சம எனும அடிப்படைத் தடையைத் தவிர, வேறு எந்த உயர்ந்த சிறந்த தடைகளையும அவர்கள் தங்கள் வாழ்க்கையில் கவனிப்பதில்லை அச்சமெனும தடையைத் தவிர வேறொரு தடையையும விலங்குகளும உணர்வதில்லை. கயவரும அச்சமே ஆசாரமாகக்கொண்டு கரும்புபோல கொல்லப்பயன் படுவர்; சான்றோர் போலச் சொல்லப் பயன படார், கயவன சொந்த மனவுணர்வால் உந்தப்பட்டு உலகத்துக்குத் தானாகப் பயன்படான்; சொல்லவும் பயன்படான ; ஆனல, கொல்லப் பயன்படுவான், கரும்புபோல. எவ்வளவு அழகான விளக்கம்!

'ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்கும
கூன்கைய ரல்லா தவர்க்கு'

என்று மேலும இதையே வலியுறுத்துகிறார்.

கயவர்கள் அஞ்சவேண்டாதவற்றிற்கு அஞ்சி அஞ்சிச்சாவர், ஆனால், அஞ்சவேண்டுவதற்கு அஞ்சுவதில்லை உலகம அஞ்சுவது அஞ்சாத பேதைமையை அணிகலமாகப் பூண்டு, அஞ்சாததற்கு அஞ்சும ஆசாரத்தைக் கொண்டு வாழ்பவர் கயவர் அவர்கள மனச்சான்று பிறர் அஞ்சுவதற்கு அஞ்சுமாறு பணிப்பதில்லை. பணித்தாலும் கயவர்கள செவி சாய்ப்பதில்லை ஆதலின வள்ளுவர் கூற்றுப்படி கயவர் 'நெஞ்சில் அவலம இலர்'. நன்மை அறிந்த நல்லவர்களைவிடக் கயவர்கள் 'பாக்கியம்' செய்தவர்கள். ஏனெனின் நெஞ்சில மனச்சான்றால் ஏற்படும் கவலை சிறிதும இல்லை. அதில் நல்லவரையும் விடக் கயவர்கள ஒருபடி உயர்ந்தவர்களாகத் தோற்றமளிக்கிறார்கள்.

அடுத்த குறளில் வள்ளுவர் கயவர்களைத் தேவர்களைப் போன்றவர்கள் என்று ஒருபடி உயர்த்திக் கூறுகிறார். மனம் போன போக்கெல்லாம் போய், மனச் சான்றின் குத்தல் ஏது மின்றி விரும்பியதெல்லாம செய்வதால் கயவா தமது இச்சைப் படி தங்குதடையின்றி நடககும தேவர் போன்றவர் என்று வள்ளுவர் கூறுகிறார்.

"தேவர் அனையா கயவா அவருந்தாம்
மேவன செயதொழுக லான"

என்ற குறள் மிக நுண்ணிய முறையில் புகழ்வதுபோல் பழிக்கின்றது.

கயவரை விலஙகு அனையர் என்றே வள்ளுவர் கருதினர். கயமை என்ற அதிகாரததில் முதற்குறளில் 'மக்களே போல்வர்' என்று சிறிது உயர்ததினா. 'நனறறிவாரில கயவர் திருவுடையார்' எனறு அடுதத குறளில் நல்லவர்களைவிட உயாநத பேறுடையவர்கள் எனறு மேலும் கயவரை உயர்த்தினர். இறுதியில் விலங்குகளைவிட, மககளைவிட, நலலவாகளைவிட உயாநத தேவாகளே போன்றவர் கயவா என மிகமிக உயர்ததினா. ஒருவனைத தரையிலிருநது குன்றிலேற்றி, குன்றிலிருநது மலையிலேற்றி, மலையிலிருநது ஒரே தூககாகக் கொடுமுடியில் வைத்துச் சிறிது தளளிவிட்டாற போல, வள்ளுவா உயர்த்தி உயர்ததி இறுதியில் நிலைகலக்கிக கீழாக்குகிறா இநத நுண்ணிய, நயமான, நாகரிகமான வஞ்சபபுகழச்சியில் வளளுவரை மிஞசினா எவரும் இல்லை.

இதில் மற்றொரு சிறப்பு என்னவென்றால் உலகிலேயே சிறநத அறிவாளிகளில் ஒருவராகக் கருதபபடும அரிஸடாட்டில் (Aristotle) கூட இதுபோன்றே கயவரை 'உலகத்தோடு ஒட்ட ஒழுக முடியாதவா அல்லது தமக்குத தான் போதும், சமூகம் தேவையிலலை என்று கருதுவோா ஒன்று, தேவராய் இருக்க வேண்டும, அல்லது விலங்காய் இருக்கவேண்டும! என்று கூறுகிறா.[1] வளளுவரும் முதலில் விலங்கொடு சேர்ததும கடைசியில் தேவரொடு சோததும கூறி, கயவரை விலஙகினும கீழானவர் என்பதைப் பெற வைத்தார்.

---

1. He who is unable to live in society or who has no need for society must be either a god or a beast'—Aristotle.

# வள்ளுவன் சொல்லே வேதம் *

[பேராசிரியர் கா. பொ. இரத்தினம் எம் ஏ., பி.ஓ எல், கொழும்பு.]

இந்தப் பொருளைப் பற்றிப் பேசுதற்கு முன் வள்ளுவா பெருமானுடைய மதிப்பைக் குறைக்கும் ஔவையார் படததைப் பற்றியும சில கூறவேண்டி யிருக்கிறது இந்தப படததின குறைகளைக் குறிததுப பல அன்பர்கள் ஆவேசததோடு எனக்கு எழுதியிருக்கிறார்கள் "உஙகள் கருத்தென்ன? வள்ளுவரை இழிவுபடுத்தும இந்தப் படத்தைப் பார்ததுக்கொண்டு தமிழ் மறைக் கழகத் தலைவராகிய தாங்கள் ஏன் பேசாதிருக்கிறீர்கள்?" என்றுங் கேட்கிறார்கள். இன்று என்னுடைய கருததுக்களை இங்கு வெளியிடுகிறேன.

ஔவையார் படம் தமிழ்ப்பாடல்களின் சிறப்பையும், தமிழ்நாட்டின் கலைப்பெருக்கத்தையும், இயற்கை வளததையும் நன்கு காட்டுகிறது. எனினும, அதிலே பல குறைகள் காணப் படுகின்றன. ஒரு குடம நிறைநத பாலினுள இடபபட்ட நஞ்சுததுளிகள்போலச் சில செய்திகள் காட்சியளிக்கின்றன. அதனை உருவாக்கியவாகள் தமிழ்பபுலவர்களின் பெருமையினை யும, தமிழ்இலககிய வரலாற்றையும, தமிழ்நாட்டு வரலாற் றுணமையையும் நன்கு அறிநது தமது கடமையைச் செய்ய வில்லை யென்பதை அப் படத்திலுளள பல நிகழ்ச்சிகள் தெளி வாகக் காட்டுகின்றன.

வள்ளுவர் ஓர் ஏழைபோலவும், சங்கப் புலவர்கள் அறிவிலார் கூட்டம் போலவும் அப் படத்தில் காட்சியளிக்கின்றாகள. ஔவையார் பாடிய ஒரு பாட்டின் முதலிரு அடிகளை ஒரு குட்டிப் புலவர் பாடிய தாகவும் இப்படம் அறிவிக்கிறது.

வள்ளுவர் தம் நூலினை அரங்கேற்றியது பற்றி இப்படம் கூறும் கதை எநத நூலில் உள்ளது? அல்லது எநத நாட்டில் வழஙகி வருகிறது? தமது நூலைச சஙகத்துக்குக் கொண்டு சென்று அரங்கேற்ற முடியாத அவ்வளவு கோழையா வளளுவர்? ஔவையார், எழுவென எழுநது, நடஎன நடந்து, சொல எனச் சொல்கிறவர் என வள்ளுவரைக் காட்டவேண்டிய காரணம் யாது?

சங்கப் புலவர்களைப் "பொய்யடிமை இல்லாத புலவர்கள்" எனவும் "மூவர்கட் கரியான் நிற்ப முத்தமிழ்ச் சஙகத்து

* வதுளைச சைவ பரிபாலன சங்கததில் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம்.

சீற்றிருந்த தெய்வப் பாவலர்" எனவும் அறிஞர் போற்றுவர். இத்தகைய பெரும புலவர்களைத் தமிழறிவும பண்பாடும் இல்லாதவாகளாகத் தீட்டிக் காட்டிய மடமைக்கு என்ன சமாதானம் கூறமுடியும்? இக்காலத்தில, தமிழ்ப பேரறிஞர் எனத் தமபட்ட மடிக்கும பலருக்குக் குறள் வெண்பாவைபபற்றிய அறிவுசிறிதும் இல்லையெனபது உண்மையே ஆனல, குறள வெண்பாவைப் பற்றி அறியாதவாகள சங்க காலத்திற புலவாகளாய் இருந்திருப பாரகளா? அரிகண்டம, யமகணடம என்பன புலமைக காய்ச் சலும், போலிப் புலமையும் ஏற்பட்ட இடைக்காலத்தில் படைக் கப பட்டனவனறே! சங்கப புலவர்களின் நாவில்,

"ஐயா வளளுவரே உமக்கு அந்தாதி தெரியுமா?
உமககு இலககணம தெரியுமா?
உமக்கு எமகணடம் தெரியுமா?
உமககு விருத்தம வருமா?"

என்று, இன்னோரன்ன வினக்களைத் திணித்ததால் இப் படத் தின மதிபபும் புனிதமும சிதைக்கப்பட்டனவே!

"நன்றி ஒருவற்குச செய்தக்கால்... ...."

எனுஞ் செய்யுள முழுவதையும், இது தோன்றிய காலம முதல் இன்றுவரை ஔவையாா பாடியதாகவே யாவரும் எழுதியும் படித்தும் போறறியும வருகிறாாகள மரபு வழிவந்த இந்த உண்மைக்கு மாறாகப் படத்தை உருவாககியவாகள அதன் முதலிரண்டடியையும ஊர் போ தெரியாத வேறொரு புலவர் பாடினர் என்று காட்டிப பெற்ற பயன் யாது? இந்த உண்மை யைத் திரித்துக் காட்டியதால் மக்களுள்ளத்திலே புததுணாசசி யும்பேரார்வமும ஏற்பட்டுளவா? பாடசாலைச் சிறாரிடத்துங்கூட இது மயககத்தை உண்டாக்கிவிட்டதே!

சஙககால ஔவையாரையும இடைக்கால ஔவையாரையும் ஒன்றாக இணைத்துக் காட்ட முற்பட்டதால் ஏற்பட்ட பிழை களும் கோளாறுகளும பலவாகும சுருங்கக் கூறின் தமிழ் மூதாட்டியாம் ஔவையாருடைய சரித்திரம் திரைப்படமாக்கப் படவில்லை. ஔவையாரைப் பற்றிய பழங்கதைகளும், புதுக் கதைகளும, கற்பனைக் கதைகளும், புராணக் கதைகளும் கலந்து காட்சியளிககின்றன.

சில ஆண்டுகளுக்கு முன்னாக் கண்ணகி என்றொரு படம் வெளியானது. அதிலே சிலப்பதிகாரம கூறும கண்ணகியைக் காணமுடியவில்லை. இப்பொழுது ஔவையாரைத் தமிழ் மக்களுக்கு அறிமுகம செய்ய ஏழாண்டுகள் அரும்பாடுபட்டுப் பெரும பொருட்செலவில உருவாக்கப்பட்ட படம் பல பிழைக

ளுடன் தமிழ்ப் புலவர்களின் மதிப்பையுங் குறைக்கும் வகையில் காட்சியளிப்பது வருந்தத்தக்கதே. இலகுவில் நீக்கத்தக்க இக் குறைகள் பல இப் படத்தில் இடம் பெற்றிருப்பதை எடுத்துக் காட்டினல்தான் இனிமேல் உருவாகும் படங்களாயினும் சிறப்பாக அமைவுற்ற வாய்ப்பு ஏற்படுமன்றோ?

வாழ்விலே மாத்திரமன்றிப் படங்களினும் இவ்வாறு பல பிழைகளும் முரண்பாடுகளும் ஏற்படுவதற்குக் காரணம் நம் மக்கள் ஆராய்ச்சியும் உணர்ச்சியும் இன்றி எல்லாவற்றையும் நம்பி வந்தமையே ஆகும். "இவையெல்லாம் வேதவாக்குகள்; கடவுளின் கட்டளைகள், முனிவர்களின் முடிபுகள், இவற்றை நம்புங்கள், நம்புங்கள்; ஆராயாதீர்கள், ஆராய்ந்தால்—ஆட்சேபித்தால் நரகத்திலே புகுவீர்கள்!" என்று பன்னிப் பன்னி உரைக்கும் நூல்களுக்கும் நம் நாட்டில் குறைவுண்டா? இன்றும் - இந்த இருபதாம் நூற்றுண்டிலும் சாதி நெறி சமய நெறியே என்று கூறும் அறிவிலாரும், இதற்கும் கடவுள் வாக்குக்கள் என்று சான்று காட்டும் சில பேதையரும் நம் நாட்டில் இருக்கிறார்கள் அன்றோ! இந்த மயக்க நிலைகள் - ஏமாற்றும் வித்தைகள் - அறிவுக் கொலைகள் நீங்க வேண்டுமெனின், மக்கள் யாவரும் வள்ளுவன் சொல்லே வேதமெனக் கொண்டு போற்றல் வேண்டும்; உண்மையை உணரவேண்டும்; திருக்குறள் வகுக்கும் நெறியில் ஒழுக வேண்டும்

(தொடரும்)

## நாணம்

நாணமென்பது ஆடவரிடத்தும் பெண்டிரிடத்தும் சேர்ந்த ஓர் அரும் பண்பு. இது, ஒருவர்க்குப் பொருந்தாத தன்மை தம்பால் உற்ற போது அதற்கு அஞ்சி ஒடுங்கும் உயர்நிலை. இப்பண்பை வள்ளுவப் பெருமான், இவ்விருபாலார்க்கும் ஏற்றியுரைத்து விளக்குவது போற்றற்குரியது.

> 'ஊணுடை எச்சம் உயிர்க்கெல்லாம் வேறல்ல
> நாணுடைமை மாந்தர் சிறப்பு'

என்றும்,

> 'நாணும் மறந்தேன் அவர்மறக் கல்லாவென்
> மாணா மடநெஞ்சிற் பட்டு'

என்றும், முறையே அருளுவது காண்க.

மணிமொழிப் பெருமானும் 'தாயிற் சிறந்தன்று நாண் தையலார்க்கு' எனவும், 'என்னுடைய வள்ளந்த பொற்பார் திருநாண்' எனவும், தலைவி கூற்றாகப் போற்றியுரைப்பர். இத்தகைய உயரிய பண்பை உலகுக்கே எடுத்துக்காட்டி வளர்ப்பது தமிழ்மாந்தர்தம் பெருங்கடமையாகும்.

—செல்லூர்க்கிழார்.

# கலையா, கொலையா?

[பண்டிதர், திரு. சு. சிவப்பிரகாசம் பிள்ளை.]

*கேட்பாரில்லையா? தமிழ் இலக்கிய நலம் அழியவிடுவதா?*

*தமிழின் இலக்கண அழகு சிதையப் பார்ப்பதா?*

சில ஆண்டுகட்கு முன்னர் அறிஞர் டி. கே. சி. அவர்கள் தமது பதிப்பாக வெளியிட்ட கம்பராமாயணப் பதிப்பின் அவலங்கண்டு, தமிழ் மக்கள் பலர் ஆங்காங்கே எதிர்ப்புத் தெரிவித்துச் செய்த கிளர்ச்சிகள் தமிழ்நாட்டில் மறைந்துபோகவில்லை. அவருக்கே அமைந்துள்ள 'தனித்திறம்' என்று தாமெழுதும் கட்டுரைகள்தோறும் அவர் காட்டிவரும் பால்க்காரி, பகல்க்காலம் போன்ற எண்ணற்ற பிழைகள் மலிந்த சொற்களைக் கொண்டு, அதுவும் கம்பராமாயணத்திலே தமது கைத்திறங் காட்டத்துணிந்த திருவாளர் டி. கே. சி. அவர்கள் அந்நாளிலே அடங்கியிருந்தார். இன்று அவர் மீண்டும் வெளிவந்து 'குற்றால முனிவர்' ஆகும் அளவுக்கு அவரது சொற்பிழைகள் அவருக்கு விழாவணி செய்திருப்பது காணத் தமிழன் தலை குனியாதிருக்க முடியாது. இங்ஙனம் சொல்வது அவரது புலமைத்திறம் கண்டு, கொண்ட காழ்ப்பாலன்று, தமிழ்மொழியின் நிலைகுலைவு கண்டு தமிழர் நடுங்கித் துடிக்கும் அவலநிலையினாலேயேயாம்.

திரு டி. கே. சி. அவர்கள் கம்பராமாயணக் கவிநயங்கண்டு 'ரசி'க்கட்டும்; அவர் 'ரசிகமணி' ஆவதைக் குறைகூறுவோர் இல்லை. ஆனால், தமிழின் இனிய நடைவளங் கெடுக்கும் துறைகளிலே சென்று, தமிழுக்கே சிறப்பாயுள்ள இலக்கண வரம்பைக் கடக்கவேண்டாம், கெடுக்கவேண்டாம் என்பது ஒன்றே அவர்க்கும் அவருடைய 'ரசிகர்'க்கும் யாம் கூறும் அறிவுரையாகும்.

இன்று அவரது கம்பராமாயணப் பதிப்பு "இராசாசி" அவர்களால் அரங்கேற்றப்பட்டது என்ற ஒரு காரணத்தால், 'கல்கி'யாருக்கு உகந்தவர் டி. கே. சி. என்பதனால், தமிழ்த் தொண்டர் புத்தனேரி - சுப்பிரமணியமும், கொத்தமங்கலம் சுப்பு அவர்களும், சின்ன அண்ணாமலையாரும், ஏன்? கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையவர்களும் அறிஞர் டி. கே. சி. யின் தமிழ்க் கொலையை, இலக்கணச் செட்டின் குலைவை விரும்பித் துணைநிற்கும் குற்றவாளிகளேயோ? என்னும்படி "அரங்கேற்ற

விழா"வை, அதன் வழியே, சொற்பிழை மல்கிய சிதம்பரநாதரின் பதிப்பைப் பாராட்டியிருப்பது, இனித் தொல்காப்பியம், திருக்குறள் முதலிய இலக்கண இலக்கிய நூல்களையும் சிதைத்து அழிக்கவும புதுப்பிக்கவும் தொடங்கியதாகும் என்று கண்டு அஞ்சுகின்றோம்.

'இங்ஙனம் தமிழ் இலக்கியப் பண்பாடு அறியாத சிலாகூடிப் பெருவிழா எடுப்பது, தமிழறிவுக்கு, தமிழ் இலக்கண வளர்ச்சிக்குக் குழிதோண்டிவரும் பல எதிர்ப்புச் சக்திகளுக்கு ஆக்கந் தருவதாகிறது என்பதை மூடிவைக்க முடியாது.

கதைப்போக்கை வெறுப்பதனாலேயே 'காவிய நயமும வேண்டாம, தமிழா பண்பாடு பற்றியும கவலையில்லை, அறிவுரைத் திட்பமும வாழ்க்கைக் குறிக்கோளாகக் காட்டப்பெறும் இனபத் திறனும் அழிந்துபோகட்டும்' என்று ஒரே மண்டையடியாகக் கமபராமாயணத்தைச் சாடியும் சுட்டெரிக்கவும் துணிநதுளள தமிழர் ஒரு சாரார்; தமிழாசிரியர்களில் 'இலக்கிய நயமும் இலக்கணச் சுவையும் சோறுபோடா' என்று கருதிவிட்டு, மாணவர்களுக்கு இந்நலனகளைக கறபிக்க வாய்ப்புப் பெறுதவர் ஒருசாரார்; 'நமக்கென்ன, புலவர் பெருமககள் பார்த்துக் கொள்வார்கள்' என்று ஒதுஙகிநிற்கும் பெருமக்கள ஒருசாராராகப் பிரிந்து பிரிந்துபோனால், இனித் தமிழ்ச்செலவஙகளையெல்லாம கரையான்கள் புற்றெடுத்து மூடிவிடவும் அவற்றினூடே கருநாகங்கள் குடிபுகவும அன்றோ நேரும்?

"குற்றால முனிவர்" டி. கே சி யின் புலமைநயம் பாராட்டுந்திறம ஒருவாறாக, அவரது பதிப்புக் கருதித் தமிழ்ப்பெரும புலவாபெருமக்களாயுள்ள இராவ்சாகிபு கே கோதணடபாணி பிள்ளை B A., முதுபெரும புலவர், புலவரேறு. அ வரத நஞ்சையனார், டாக்டர் மு. வரதராசனார், இளவழகனார், வ. சு. செங்கல்வராய பிளளை M A., போன்ற தமிழ்ப் பேராசிரியர்கள் எல்லோரும இந்த நிலைமை குறித்து என்ன சொல்லுகிறார்கள், என்ன செய்கிறார்கள்? என்பதொன்றே எமது நெஞசத் துடிப்பாக இஃது எழுதலானேம். அறிஞர்கள் தமிழ்மொழி வளங்காக்கத் தக்கது விரைந்து செய்க! உடனடியாக ஓர் அறிக்கை வெளியிடுக! என்று மிகவும் பணிவுடன் வேண்டிக் கொள்ளுகிறோம். வாழ்க நற்றமிழ்!

# தமிழ்க் கலைச் சொற்கள்

[திரு. பெ பொ. சிவசேகரம், திருவள்ளுவர் கழகம், திருக்கோணமலை]

பலபடப் பரந்து கிடக்குங் கலைகளை மேனாட்டார் Arts என்றும் science என்றும இருபெரும் பிரிவுள அடக்கியுள்ளார்கள். அவர்கள் இலக்கியம் சரித்திரம் போன்றவைகளை Arts என்றும் கணிதம் வேதிநூல் போன்றவைகளை science என்றும் பாகுபடுத்தி வைத்துள்ளார்கள். இவ்வாறு கலவியை இரு கூறு படுத்தி வழங்கும் வழக்கு தமிழ்மொழியிலும காணக்கிடக்கின்றது. மக்கள வாழக்கைக்கு இருகண் போனறு விளங்குபவை எண்ணும் எழுத்துமாகும. 'எண்ணும எழுத்தும் கண்ணெனத் தகும' என்னும முதுமொழியைக் கொணடு இவ்வுண்மையை உணரலாம். கல்வி கேள்விகளில் தலைசிறந்த புலமையாளராய் விளங்கிய வள்ளுவர்,

> "எணணென்ப ஏனை எழுதலென்ப இவ்விரணடும்
> கணணென்ப வாழும் உயிர்க்கு."

என்று குறிப்பிட்டிருத்தல் இங்கு கவனிக்கத் தக்கது. வள்ளுவர் கலையை இரண்டாக வகுத்துக் காட்டுகின்றார். எண் என்றும் எழுத்தென்றும் வள்ளுவர் பாகுபடுத்திக் காட்டும் நுட்பத்தை இன்றைய கலையுலகம் கண்டு மகிழும் என்பதில ஐயமில்லை. இன்று மேனாட்டினர் பகுத்துக் காட்டியுள்ள கலையின் பாகுபாட்டைப பலநூறு வருடஙகளுக்கு முன்னிருந்த வளளுவர் தம புலமைக் கண்கொண்டு வகுத்துக் காட்டியிருப்பதைத தமிழுலகம் போற்றுதிராது. எண், எழுத்து என்னும இவ்விரண்டிலும் எணணிற்கு வள்ளுவர் முதலிடத்தைத் தந்துள்ளார். எண்ணிற்கு அடுத்தபடியே எழுத்தைக் குறிப்பிட்டுள்ளார். மேனாட்டுக் கலைப பாகுபாட்டினபடி வளளுவர் எண் என்று குறிபபிட்டது அறிவியற்கலையாகிய science என்பதும் எழுதலென்று கூறியுள்ளது, arts என்று மேனாட்டார கொண்டதையுமேயாகும. ஆனால், இனறு எண் என்பது கணிதத்தையும் எழுதலென்பது இலக்கண இலக்கியங்களையும் மட்டும குறிப்பிடுவதாக வழக்காற்றில் எடுத்தாளப்பட்டு வருகின்றது. உண்மையில் எண் என்பது அறிவியற் கலைகளையும எழுதலென்பது உணர்வியற் கலைகளையும் குறிபபிடுவதாகும.

science என்னும ஆங்கிலச் சொல்லிற்கு இணையான தமிழ்ச்சொல் இல்லாக் குறையை நீக்கக் கருதிய அறிஞர்கள் தொடக்கத்தில் 'விஞ்ஞானம' என்ற சொல்லினை குறிப்பிட்ட-

னர். 'விஞ்ஞானம்' என்பது வடமொழி யாதலினால் தனித் தமிழில் அதற்கு ஒருசொல் ஆக்குதல் வேண்டும் என்று முயன்று 'அறிவியல்' என்னும் சொல்லைப் பெற்றார்கள் இம் முயற்சியின் பயனாக இன்று science என்னும் ஆங்கிலச் சொல் லைக் குறிப்பதற்கு இருசொற்கள் கிடைத்துள்ளன இவ்விரு சொற்களோடு ஏற்கனவே தமிழில் வழங்கி வந்துள்ள 'எண்' என்னும் சொல்லும் உள்ளது வடமொழி வழி வந்த 'விஞ்ஞான மும்,' தனித்தமிழாளர் ஆக்கித்தந்த 'அறிவியலும்', வள்ளுவர் குறளில் வகுத்துக் காட்டிய 'எண்ணும்' என science என்னும் ஆங்கிலச் சொல்லைக் குறித்துக் காட்டும் சொற்கள் மூன்று தமிழ்மொழியில் பயின்று வருகின்றன. கலைச் சொல்லாக்க முயற்சியிலே ஈடுபட்டுழைக்கும் அறிஞர்களால் ஆங்கிலத்தில் ஒருசொல் வழங்கிவரும் பதங்களுக்குத் தமிழில் இரண்டு மூன்று சொற்கள் ஆக்கப்பட்டு வருகின்றன வளர்ந்து வரும் நிலையிலுள்ள எம்மொழிக்கும் இவ்வாறு சொற்கள் பல அமை வது தவிர்க்க முடியாத தொன்றாகும்.

அறிவியற்கலைச் சொற்களுக்கு ஏற்ற தமிழ்ச்சொற்கள் இல்லையே என்று இடர்ப்பட்டிருந்த நிலை நீங்கி இன்று ஒரு சொல்லுக்குப் பல சொற்கள் உள்ளனவே என்று எண்ணக் கூடிய நிலை வந்துவிட்டது. ஒரு சொல்லுக்குப் பல பொருளும் பல பொருளுக்கு ஒரு சொல்லும் தமிழ்மொழியில் மட்டுமன்றி ஏனைய பிறமொழிகளிலும் உள்ளன. இவ்வாறு ஏற்படுவது மொழி வளர்ச்சிக்குப் பெரிதும் உதவிபுரிவதாகும்.

பிறநாட்டிலிருந்து நம் நாட்டிற்குத் தருவிக்கப்படும் பொருள்களை அப்படியே அம்மொழிச் சொற்களால் அழைப் பதும், அதனைத் தமிழ்ஒலி முறைக்கு முரண்படாமல் திரித்துத் தமிழோசை கொடுத்து வழங்குவதும், வடமொழியினுதவி கொண்டு ஆக்கி வழங்குவதும், தனித்தமிழில் மொழிபெயர்த்துப் பயன்படுத்துவதும் ஆகிய பலமுறைகள் காணப்படுகின்றன. உதாரணமாக Bicycle என்னுஞ் சொல்லைக் கவனித்துப் பாருங்கள் அதனை 'பைசிக்கிள்' என்று அப்படியே உபயோ கிப்போர் பலர். அப்படிக் கூறியவுடன் அது இலகுவில் விளங்கி விடுகின்றது. கவிஞர் தேசிகவிநாயகம் பிள்ளை என்பார் தமது குழந்தைக் கவியில் இச்சொல்லை சைக்கிள் வண்டி என்று வழங்கியுள்ளார்.

"தங்கையே, பார்! தங்கையே பார்!
சைக்கிள் வண்டி இதுவே பார்!
.............................. .........

"........ ........... .. ...... ..
ஒன்றன்பின் ஒன்றாக
உருளும்பை தாககளைப் பாா!
....... ....... ..................... .."

இச்சொல்லை மொழிபெயர்க்கப் புகுந்தவர் வடமொழியில் சொற்றேடித் தமிழில் புகுத்தினர். துவிசக்கர வண்டி என்பது அது. ஐயோ! இதென்ன, தமிழ் மொழிபெயர்ப்புக்குப் பதிலாகச் சமஸ்கிருத மொழிபெயர்ப்பாயிற்றே என்று கருதிய தமிழ் அறிஞர்கள் அதனை 'ஒற்றைச்சுவட்டு வண்டி' என மொழிபெயர்த்தனர். இன்னொரு சாரார் 'மிதி வண்டி' என்று பெயரிட்டனர். இம் மொழிபெயர்ப்புகளில் சிறந்த கருத்தமைதி காணப்படுகின்றது. ஆனால், இதெல்லாம் எற்றுக்கு! இதனை அப்படியே மொழிபெயர்த்துவிடுவோம் என்று சிலர் இரு சில்லு வண்டி எனப் பெயர்த்தெழுதினர். மற்றுஞ் சிலர் இப்பெயர் சிறிது நீண்டுவிட்டது, இதனைக் குறைக்க வழியில்லையா என்று பார்த்தார்கள். அக் குறைக்கும் முயற்சியால் 'இருசில வண்டி' 'இருசில்லி'யாய்விட்டது. பிறநாட்டுப் பொருள்களையும், அறிவியற்கலைச் சொற்களையும் தமிழாக்கப் புகுந்த முயற்சியில் ஒரு பொருளைக் குறிக்கப் பல சொற்களும், ஒரு சொல்லைக் குறிக்கப் பல சொற்களுமாகக் கலைச்சொற்கள் இன்று விரிந்துகொண்டுபோவதை நாம் காணலாம்.

தமிழர்களோடு வடமொழியாளர் கலப்புற்ற காலத்திலே பல வடசொற்கள் தமிழில் வந்து சேர்ந்துவிட்டன. அச் சொற்களைப் புலவர்களும் மற்றவர்களும் பன்னெடுநாட்களாக வழங்கி வந்ததன் காரணமாக அச் சொற்கள் தமிழ்மொழியில் நிலைத்துவிட்டன. புராண இதிகாசம் போன்ற தமிழ் இலக்கியங்களிலும் சமய நூல்களிலும் பல வடசொற்கள் இடம்பெற்று விட்டன. அப்படி நிலைபெற்றுள்ள வடசொற்களிற் பல திரிந்து தமிழோசை பெற்று வடமொழிச் சொற்கள் என்று அவைகளைப் பார்த்த மாத்திரத்தே கூறிவிட முடியாதபடி இன்று காணப்படுகின்றன. இஃது அன்று நடந்த வடமொழிக் கலப்பு. இன்று மேனாட்டுக் கலைகளை மொழிபெயர்க்கப் புகுவோர் வடமொழிச் சொற்களால் பிறமொழிச்சொற்களைத் தமிழில் மொழிபெயர்த்து எழுதி வருகின்றனர். இம் முறை தவறானது என்று கருதித் தனித்தமிழ் அறிஞர் பிறமொழிச் சொற்களுக்கு வடமொழியில் சொற்கள் தேடுவதை விடுத்துத் தமிழிலேயே சொற்களை ஆக்கித் தருகின்றனர். பிறமொழிச் சொற்களை, மக்கள் வழங்கி ஆட்சிப் படுத்தி விட்டனரே என்ற காரணத்தால்,- விளங்குவதற்கு எளிதாய் இருக்கும் என்று கருதி,-

அவற்றை அப்படியே வழங்கி வருகின்றனர் சிலர். இம் முறையினால் பிறமொழிச்சொற்கள தமிழொலி வரமபைமீறித் தமிழில் வழஙகி வருகின்றன. அநதப பிறமொழிச் சொற்களுக்குப் பதிலாகத தனிததமிழ்ச் சொற்களைய பெய்து உரைபபினும் அவை முன்னமே ஆட்சியில் இருககும பிறமொழிச் சொறகளோடு போட்டியிட முடியாது வழக்கிழந்து வருகினறன இது மட்டுமன்றி பிறமொழிச் சொற்களின் பயிறசி நிலைதது நிறகுமிடத்து ஓர் புதிய தனித்தமிழ்ச சொல்லையோ அல்லது வடமொழிச் சொல்லையோ வழங்குமபொழுது அதனை நகைபபுக்கும் பழிப்புககும் இடமாக்கியும் வருகின்றனர். இத்தகைய இடர்ப்பாடுகளை மேற்கொண்டு தனிததமிழ்ச் சொற்களை வழக்கிற்குக் கொண்டுவர வேண்டியதாக உளளது கலைச்சொற்களைப பிறமொழிச் சொற்களாலோ அல்லது வடமொழிச் சொற்களாலோ வழஙகுவதை விடுத்து அச சொற்களுக்குரிய உயர்நத தமிழ்ச் சொல்லால் வழங்குவதே பொருததமானதாகும். தமிழில் கலைச் சொற்கள் ஆக்குவதோடு மட்டும் நின்றுவிடாமல அச சொற்களைத் தமிழ்மக்கள் யாவரும் வழக்கிற்குக் கொண்டுவரச் செய்தலும் வேண்டும். அறிஞர்கள் அரிதில முயன்று ஆக்கிய கலைச் சொற்களை வழக்கிலே கொண்டுவருவதில் பல இடர்பபாடுகள் நேருதல் கூடும். அவைகளைப் பொருட்படுத்தாமல் முயன்று வந்தால் அவை நிலைத்துவிடும் அறிஞர்களின் ஆக்கமுயற்சியோடு அரசினா, வணிகர், விளமபரஞ செய்வோா, செய்தித்தாள வெளியிடுவோா, பொதுமக்கள் ஆகியோரின் ஒத்துழைப்புஞ் சேர்ந்து செயலாற்றின் தமிழ்க்கலைச் சொற்கள் தமிழ்மக்களின் வழக்கில் நிலைபெற்று விடும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

பிறநாட்டிலிருந்து தமிழ்நாட்டில் இறக்குமதியாகும் புதிய பொருட்களுக்கு இறக்குமதியாகும பொழுதே அவ்வப பொருட்களுக்குரிய தமிழ்ப் பெயர்களோடு இறககுமதி செய்ய அரசினர் ஏறபாடுகள் செய்தல் வேண்டும். வணிகர்களும் விளமபரஞ் செய்வோரும் செய்தித்தாள் வெளியிடுவோரும் அபபொருட்களை விளம்பரஞ் செய்யும்பொழுது அபபொருட்களுக்குரிய தமிழ்ப் பெயரினாலேயே விளம்பரஞ் செய்தல் வேண்டும. இம் முறையினால் பிறமொழிச் சொற்கள் தமிழ்மொழியில் கலவா வண்ணம் காத்துக் கொள்ளலாம. அறிவியல் நூல்கள ஆக்குவோம், அறிவியற்கலையைத் தமிழில் கற்பிக்கும் ஆசிரியரும் தமிழ்க் கலைச்சொற்களை வழககில் கொண்டுவரும் முயற்சியில் கண்ணுங கருத்துமாய் இருந்து உறுதுணை அளிததுவரின் சிறிது காலத்துள் தமிழ் நாடெங்கணும உயரிய செந்தமிழ்ச் சொற்கள் வழக்காற்றில் நிலைபெற்று விடுதல் திண்ணம்.

அறிஞர்கள் ஆங்காங்கு ஆக்கியமைத்துச் சென்ற கலைச் சொற்களை அகரவரிசைப படுத்தி, ஒரு பொருள் குறிக்கும் பல சொறகளையும் எடுத்துக் காட்டிக் கலைச்சொற்களுக்குப் பண்டைய நிகண்டுபோல் ஓர் சிறந்த தொகுப்பகராதி வெளியிடுதல், தமிழில அறிவியற்கலை வளர்ச்சியில் அறிஞர் செய்யக்கூடிய பெருநதொண்டாகும்.

அரசினரால் நடததப்படுந் தேர்வுகளில் அறிவியற்கலைப் பாடங்களில் தனித்தமிழ்ச சொற்களுக்கு முதலிடம அளித்து வருதலும் தமிழ்க கலைச்சொற்கள் வழக்காற்றில் நிலை பெறுவதற்குப் பேருதவி அளிக்கும். இதுவரையில பிற மொழிச சொற்களையும் வடமொழிச் சொற்களையும் கையாண்டு அறிவியல் நூல்களை ஆக்கிததநத அறிஞர்கள், இனிவரும பதிப்புக்களில் பிறமொழிச் சொற்களையும், வடமொழிச சொற்களையும் நீக்கி அவைகளுக்குரிய தமிழ்ச்சொற்களைப் பெய்தும், நூலின் இறுதியில ஓர கலைச்சொல் நிரலை ஆக்கித் தமிழ்ச்சொற்களுக்குரிய பிறமொழிச்சொல, வடமொழிசசொல் ஆகியவற்றை எடுத்துக்காட்டியும் நூலகளை வெளியிடுவாராயின் கலைச்சொல் வடிவில் தமிழில் புகுநது இடம்பெற்றுள்ள பிறமொழிச் சொற்களை அறவே நீக்கிவிடவும், உயரிய தனித் தமிழ்ச்சொற்களை உரிய இடங்களிற் பயன் படுத்தவும் பெரிதும் துணை செய்தவராவா

அறிவியறகலையை மாணவர்களுக்குப புகட்டுவதற்குப் பொருத்தமான கலைநூல்கள் தமிழ்மொழியில் படி முறையாக அமைக்கப்படாதிருபபது அறிவியற்கலை வளர்சசிக்குப் பெரிதும் தடையாய் அமைந்துள்ளது கலையாக்கங் கருதியுழைக்கும் தமிழ் அறிஞர்கள் இத்தடையை மேற்கொள்வதற்குப் படிமுறையாகத தனித்தமிழில் சிறந்த அறிவியற்கலைநூல்களை ஆககித் தருதல வேண்டும் இன்று இலங்கை அரசினர் அறிவியற்கலைகளை ஏழாம வகுப்பு வரை தமிழிலும் சிங்களததிலும் கற்பித்தல் வேண்டும் என அறிக்கை விடுததுள்ளனர். அடுத்த அடுத்த ஆண்டுகளில் உயர்தர வகுப்புகளிலும் அறிவியற்கலைகளை நாட்டு மொழிகளில் கற்பிப்பதற்கு இலங்கை அரசினர் முயற்சி செய்து வருவது பாராட்டற்குரிய தொன்றுகும. இந்நிலையில் படிமுறையாக அமைக்கப் பெற்றுள்ள கலைநூல்களின் இன்றியமையாமையை உணர்ந்து அதற்கு ஆவன செய்தல் தமிழ்க்கலை வளர்ச்சிக்குப் பேருதவி அளிக்குந் தொண்டாகும்.

தமிழ்க் கலை வாழ்க! தமிழ் மொழி வாழ்க!!

---

# பண்டிதமணியின் சொல்லின்பம்

[வித்துவான் செ. வேங்கடராமச் செட்டியார்,
துணைத் தமிழ்ப்பேராசிரியர், S. V. O கல்லூரி, திருப்பதி.]

நேரிசை யொத்தாழிசைக்கலி

அன்புருவா மரன்றுளில் அழுந்துமனங் கசிந்துருகி
முன்புதிரு வாசகத்தை மொழிந்தமணி வாசகனார்
என்புருக்குந் தமதுமொழிக் கேற்றபொரு ளறியாமல்
துன்புறுமிவ் வுலகினிலே தோன்றவுறிந் ததுவிளக்கப்
பின்புகதி ரேசனெனும் பெயரினராய்ப் பிறந்தாரென்
றுன்னுதற்காம் பெருமையுடை யுயர்பெரும்பே ராசானை
இன்பறிவு பயனுறச்சொல் எழிலார்பண் டிதமணியை
நன்னெஞ்சே! யறிதியவர் நயவுரையுங் கேட்டறிவாய்;

ஊனென்ற உண்ணுபொழு துறுசுவையைத் தருமியல்பின்
தேனென்றால் பாலென்றால் செல்லுமவர் சொல்லுவமை
ஊனென்று முயிரொன்றி யுள்ளுதொறு மினிகருமியல்
தேனின்கண் பாலின்கண் திருத்தமுற வியைந்தக்கால்;

கைம்மாறு கருதாது கரையிலுல குயிர்வாழப்
பெய்ம்மழைதா னென்னிலோ பெறுமவாசொற் பொழிவுவமை
பெய்யவிழை வார்க்கக்கால் பெயுமியல்பை யுடையதுவாய்
மெய்யறிவை விளைவிக்கு மேன்மைமழைக் கெய்தியக்கால்;

உண்பார்தம் பிணிமூப்பை யொழிக்குமியல் புடையதுவாம்
விண்ணவர்த மின்னமிழ்தம் மேவுமவா மொழிக்குவமை
உண்ணுவார்க் கெளிமையதாய் உலகுடைய சிவன்றுளில்
நண்ணுவிக்கும் பெருமையையக் நல்லமிழ்தம் நணணியக்கால்;

அதனால்,

தேனும் பாலும் மழையு மமிழ்தும்
மானு முவமையோ வல்லவச் சொல்வலோர்
விசய ஐப்பசி விளங்குகார்த திகைநாள்
இசைநதனர் இறையடி யெனுமொழி கேட்டும்
மாழ்கிலே மடிகிலே யிருந்திவ்
வாழ்வில் மயஙகினே வலியையால் நீயே.

# செய்திகளும், குறிப்புக்களும்

## நெல்லையில் தமிழ்த்திருநாள்

தருமைபருள்பெறு நெல்லை அருணகிரி இசைக்கழகத்தின் எட்டா வது தமிழ்த்திருநாள் அணிசெயயப்பெற்ற கழக முதததமிழரங்கததில் 23 1-54 சனி மாலை 6 மணிககுத தொடஙகியது இசைவாணா திரு. குற்றாலலிஙகம பிள்ளையவாகளின இறைவணககம தமிழ்த்தாய வணக்கப் பாடல்களுடன நிகழ்சசி ஆரமபமாயிறறு. கழகத தலைவா எஸ். எஸ். பிள்ளையவாகள் வரவேறபுரை வழஙகினாகள. பின்னர் இலஞ்சிச செல்வா I A. சிதமபரம் பிள்ளையவாகள் விழாவைத தொடஙகிவைத்துச சொற்பொழிவாற்றினாகள். அவாகள தமது தொடககவுரையில் தற்காலத தமிழகத்தில் தமிழாாவம பெருகியிருப்பது பாராட்டததக்கதென்றும் அது சமயததிற்குப் புறமபாக வரமபுகடந்து செலவதைத தடுககவேண்டு வது இன்றியமையாததெனறும் பணடுதொட்டுச சமயமும் தமிழும் கலந்தே வளாநதுவநதனவெனறும அததகைய சமய வுணாசசியுடன் கூடிய தமிழ்ப்பற்றே நாட்டிற்கு நலம் பயககும எனறும வலியுறுததிப் பேசினாகள்.

விழாவின் முதல்நாள் வளளுவா விழாவாதலின், விழாவினை வாழ்த் தவும், வள்ளுவா விழாச சொற்பொழிவுகள அடஙகிய 'வழிகாட்டும் வள்ளுவர்' எனற, அருணகிரி இசைக கழக வெளியீட்டு நூலை அரங கேற்றி வெளியிடவும் விருதை வளளுவவேள் ச. வெள்ளைசசாமி நாடாா அவாகள் வந்திருந்தனா அவாகள் திருவளளுவரின தெயவப் புலமை யையும் திருககுறட் சிறப்பையும பற்றிப் பல நூல் சான்றுகளுடன் எளிய நடையில தெளிவுறப் பேசி 'வழிகாட்டும வள்ளுவா' என்ற நூலை வெளியிட்டருளினர் அனறைய வளளுவா விழாச செலவிற்கென்றும் நூல் வெளியீட்டிற்கென்றும தனிததனி நூறு வெணபொற்காசுகள் அன்பொடு வழஙகியருளினாகள் அவ்வள்ளலுடைய திருக்குறட் பற்றைககண்ட நெல்லை நனமக்கள் பல்லோரும் மனமாரப் பாராட்டி னாகள. பினனா வள்ளுவர்—அறநெறியாளர், அரசியலறிஞர், பொருளியற் புலவர், பெருந்தகையாளா, மெய்பறிஞர், கவிஞா என்ற ஆறு தலைப்புக களில முறையே திருவாளர்கள ச கணபதி முதலியார், அர. சு. நாரா யணசாமி நாயுடு, சிவ. இராமச்சநதிரன், ஆ. அருளப்பன், ந. சேதுரகு நாதன், ஆ. செபரததினம் ஆகியோா சொற்பொழிவாற்றினர் அ. இ. கழகததாா குறளிசை நிகழ்த்தினா கு. அருணாசலக் கவுணடர் அவர்கள், 'வழிகாட்டும் வள்ளுவா' என்னும நூலைத் தருமையாதீன மகாசந்நிதானம் அவாகளின் மலரடிகட்குக காணிக்கையாகச சோப்பிதது, மகாசந்நிதானத் தின கருணையை வியந்து போற்றினாகள். இறுதியில் புலவா அரசு எழுதிய 'கவரிமானை' என்ற சிறு நாடகம் கழகத்தாரால் நடிககப்பெற்றது. இரணடாம் நாள் நிகழ்சசிகள் தலையஙகத்தில் காண்க.

**மூன்றும் நாள்—சமய விழா**

25-1-54 திஙகள் மாலை 6 மணிக்குச சமயவிழா நிகழ்சசிகள் தொடங் கின. இசைவாணர் குற்றாலலிங்கம் பிள்ளையவர்கள இறைவணக்கம் தமிழ்த்தாய் வணக்கப் பாடல்கள் பாடினர். டாக்டர் அணணாமலைப் பிள்ளையவர்கள், அணமையில் மறைந்த தூத்துக்குடி, சைவசித்தாந்தப் பேராசிரியர் சிவகுருநாத பிள்ளையவர்களின் திருவுருவப்படத்தைத் திறந்துவைத்து, அவாகளது சித்தாந்தப் பெரும்புலமையைப் பாராட்டிப் பேசினர். நம் சைவ சமயாசாரியராகிய நாவுக்கரசர் பெருமானைப்போல்

எண்பத்தொரு ஆண்டுகள் வாழ்ந்து சைவப்பணியாற்றியவர்கள் சிவகுருநாத பிள்ளையவர்கள். மாணவர்கட்குச் சித்தாந்த நுண்கருத்துக்களை எண்மையாகப் புகட்டும் திண்மையான பேரறிவாளர் அவர்கள். தமிழகத்தில் சைவசித்தாந்த வல்லார் என்றால் அவர்கள் ஒருவரையே குறிக்கலாம். அவர்கள் என் குருநாதனுமாவர். அன்னாரது மறைவு தமிழகத்திற்கும் சிறப்பாகச் சைவ சமயத்திற்கும் பேரிழப்பு என்று கூறினர்.

இச்சமய விழா, நெல்லை அப்பரடிகள் அருட்பணிக் கழகச் சார்பில் நடைபெற்றது. அக்கழகத் தலைவரும், சங்கர கணபதிப் பஞ்சாலைகளின் அதிபருமாகிய ச. அருணாசலம் பிள்ளையவர்கள் விழாவுக்கு முதலில் வாழ்த்துரை வழங்கினார்கள். தற்காலத் தமிழகத்தில் இளைஞர்களிடையே சமயவுணர்ச்சி குன்றி நாத்திகம் வளர்ந்துவரும் இந்த நாளில் இதுபோன்ற விழாக்களும் சமயப் பேரறிஞர்களின் பேருரைகளும் இளைஞர்க்கு நல்லறிவூட்டும் என்று நம்புகிறேன். இத்தகைய சமய விழாவினைத் தமிழகத் திருநாளில் அமைத்த அருணகிரி இசைக்கழகத்தாரைப் பாராட்டுகிறேன். 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்றருளிச் செய்த நாவுக்கரசர் பெருமானுடைய குறிக்கோளை எல்லோரும் உள்ளத்திற்கொண்டு சமயப்பணி செய்தல்வேண்டும். இன்றேல் உலகத் துன்பங்கள் ஒழியா என்று கூறினார்.

பின்னர்க், காசிவாசி ஈசான சிவாச்சாரிய சுவாமிகள் சைவசமயத்தில் ஆகம நூல்கள், தோத்திர நூல்கள் என்னும் இரு பொருள்களையும் பற்றி ஒருமணி நேரம் அரியதொரு விரிவுரை வழங்கினார்கள். உயிர்கட்குப் பயன்தர வந்த நூல்களே ஆகம நூல்கள் என்றும், அவை பதி பசு பாசம் என்னும் முப்பொருளுண்மையைப் பேசுவன என்றும், அவற்றை ஆன்மாக்களின் தகுதிக்கேற்ப இறைவன் அவ்வவ்வெல்லையில் வந்து அறிவிப்பர் என்றும் கூறினர். தோத்திர நூல்கள் என்பன சமய குரவர்கள் நால்வரும் இறைவனைத் தோத்தரித்துப்பாடிய தேவார திருவாசகங்கள் என்றும், அவற்றை உண்மையாகவே ஓதியுணர்பவர்க்கு உறுபயன் விளைவது உறுதியென்றும், அத்தோத்திரங்களின் துணைகொண்டுதான் இறையருள் பெறுதற்கு முயலவேண்டும் என்றும் கூறினர்.

'மெய்கண்ட நூல்கள்' என்னும் பொருள்பற்றிச் சித்தாந்த பூஷணம் வே. மாணிக்கவாசகம் பிள்ளையவர்கள் பேசினார்கள். பண்டார நூல்கள் என்ற தலைப்பில் 'சிவபோக சாரம்' என்னும் நூலைப்பற்றித் தருமையாதீனம் சிவத்திரு மாணிக்கவாசகத் தம்பிரான் அவர்களும், 'முத்தி நிச்சயம்' என்னும் நூலைப்பற்றிச் தண்டபாணி தேசிகர் அவர்களும் சொற்பொழிவாற்றினர். இடையே காருகுறிச்சி அடுக்குமொழி பி. ஆவுடையப்பன் செட்டியாரவர்கள் 'அடுக்குமொழியின்பம்' என்னும் தலைப்பில் அடுக்குமொழிகளைப் பேசிக் கூட்டத்தை மகிழ்வித்தனர். இறுதியில் தருமையாதீனத்தை நிறுவிய குருஞானசம்பந்தரைப் பற்றித் தண்டபாணி தேசிகர் அவர்கள் பேசினர். அதன் பின்னர் 'வீட்டில் சமயவுணர்ச்சி' என்ற தலைப்பில் காசிவாசி ஈசானசிவாச்சாரியார் அவர்கள் சைவ சி. கழக வெளியீடாகிய 'திருவிளக்கு வழிபாடு' என்னும் நூலைப் பற்றிப் பாராட்டிப் பேசினர். கு. அருணாசலக் கவுண்டர் அவர்களின் நன்றியுரைக்குப்பின், அருணகிரி இசைக்கழகத்தாரால் அ. க. நவநீத கிருஷ்ணன் அவர்கள் எழுதிய 'திலகவதியார்' என்னும் நாடகம் நடித்துக்காட்டப்பெற்றது.

### நான்காம் நாள்—புலவர் விழா

26-1-54 செவ்வாய் மாலை 6 மணிக்குப் புலவர் விழாத் தொடங்கியது. இசைவாணர் குற்றாலலிங்கம் பிள்ளையவர்கள் இறைவணக்கம் தமிழ்த் தாய் வணக்கப் பாடல்கள் பாடினர். மறை. திருநாவுக்கரசு அவர்கள், பண்டிதமணி கதிரேசச் செட்டியார் அவர்கள் திருவுருவப்படத்தைத் திறந்துவைத்துப் பண்டிதமணியவர்களின் இருமொழிப் புலமையையும் பாராட்டிப் பேசினர். பின்பு, புலவர் இளங்கண்ணனார் அவர்கள், கவியரசு-வேங்கடாசலம் பிள்ளையவர்கள் திருவுருவப்படத்தைத் திறந்து வைத்துக் கவியரசின் புலமையைப் பாராட்டிப் பேசினர். பின் நெல்லை அரசினர் ஆசிரியப் பயிற்சிப்பள்ளித் தலைவர் இர. பாலகிருட்டிண முதலியார் B.A., L.T., அவர்கள் விழாவிற்கு வாழ்த்துரை வழங்கினார்கள். தமது வாழ்த்துரையில் சங்க இலக்கிய மாண்பினையும் வள்ளுவர் பெருமையையும் குறித்துப் பேசினர். பின்னர்ப் புலவர் பெருமக்களில் தொண்டைநாட்டுச் சேக்கிழார் பற்றி மறை திருநாவுக்கரசு அவர்களும், சோழநாட்டுக் கம்பர் பற்றி சேர பாகீரதியம்மையாரவர்களும், பாண்டி நாட்டு வடமலையப்பரைப்பற்றி ச. சகந்நாதன் அவர்களும், உமறுப்புலவரைப்பற்றி அப்துர் ரகுமான் B. A., B. L., அவர்களும், சேரநாட்டு இளங்கோப்பற்றி அ. க. நவநீதகிருட்டிணன் அவர்களும், கொங்குநாட்டுக் கொங்குவேளிரைப் பற்றி நெ. சுப்பையா பிள்ளை M. A. அவர்களும் பேசினர். கு. அருணாசலக் கவுண்டர் அவர்கள் நன்றியுரை கூறினர். தி. அ. சொக்கலிங்கம் B. A. Hons. அவர்களால் எழுதப்பெற்ற 'மாணவி' என்ற சிறு நாடகமும், 'அருள் உள்ளம்' என்ற சிறு நாடகமும் அ. இ. கழகத்தாரால் நடித்துக் காட்டப்பெற்றன.

### ஐந்தாம் நாள்—விஞ்ஞான விழா

27-1-54 புதன் மாலை 6 மணிக்கு இறை வணக்கம் தமிழ்த்தாய் வணக்கத்துடன் விழாத் தொடங்கியது. நெல்லை மாவட்டக் கலவித்துறைத் தலைவர் வேத. அ. மரியசூசையவர்கள் M.A., L.T., விழாவுக்கு வாழ்த்துரை வழங்கி அன்றைய சொற்பொழிவு நூலாகிய 'இந்திய விஞ்ஞானிகள்' என்ற நூலை அரங்கேற்றி வெளியிட்டார்கள்.

இவ்விஞ்ஞான விழா, சென்னை அலைடு பதிப்பகச் சார்பில் நடைபெற்றது. இந்திய விஞ்ஞானிகளில் ஐவரைப்பற்றிய ஐந்து பேராசிரியர்களின் பேருரைகளை அப்பதிப்பகத்தார் நூலாக அச்சிட்டுள்ளனர்.

### ஆறும் நாள்—திருவாசக விழா

28-1-54 வியாழன் மாலை 6 மணிக்குத் திருவாசக விழா தொடங்கியது. இசைவாணர் குற்றாலலிங்கம் பிள்ளையவர்களின் இறை, தமிழ்த் தாய் வணக்கப் பாடல்கட்குப்பின், தென்காசி நீதிபதி B. S. சோமசுந்தரம் பிள்ளை B.A., B.L., அவர்கள் வாழ்த்துரை வழங்கினர். திருவாசகத்தில் எழுச்சி, பாவை, பணிலை, பத்து, அகவல் என்னும் ஐந்து பொருள்களைப் பற்றி ஐந்து சொற்பொழிவுகள் நடைபெற்றன. இரவு 9-30 மணிக்குக் காருகுறிச்சி நாதசுர இசைச்செல்வர் ப. அருணாசலம் அவர்களின் இனிய நாதசுர இசையரங்கு நடைபெற்றது.

இத் தமிழ்த் திருநாள் தொடர்பில் 7-2-54 ஞாயிறு இரவு 9 மணிக்குக் கழக அரங்கத்தில் 'புகழேந்தி' என்னும் இலக்கிய நாடகம் அ. இ. கழகத்தாரால் நடித்துக் காட்டப்பெற்றது.

**திரு. மகா மகாமாரியம்மன் கோவில்**

**சமயப்பிரசார சபை. 177, ஹைஸ்திரீட் கோலாலம்பூர்.**

இச் சபையினர் செய்துவரும் அரும்பெரும் பணிகள் போற்றற்குரியன. நாடும் மொழியும் நன்னெறியும் ஈடும் எடுப்பும் இல்லாப் பீடுற்றுவிளங்கப் பெருந்துணைபுரிவன பொதுமைய. 1953 நவம்பர் வெளியீடு வரப்பெற்றேம். அதன் வாயிலாகச் சபையினர் ஆற்றி வரும் திருமுறை ஓதலும், சிவநெறி பேணலும், மெய்யடியார்களின் திருவரலாற்றுடன் திருநாட் கொண்டாட்டங்களும் பலவாம். தற்காலத்துப் பெரியார்களின் கொண்டாட்டச் சிறப்புக்களும் பல. நல்லிசைப் புலமையும், நல்லொழுக்கமும், தெய்வ நாட்டமும் வாய்ந்த பெரியார்களைப் பெருமுயற்சியும் பெரும்பொருட்பிணையும் செலவும் ஒரு சிறிதும் நோக்காது பேரார்வமுடன் அவ்வப்பொழுது வரவழைத்துச் செந்தமிழ் மாண்பும் சிவநெறிச் சிறப்பும் கடல்கடந்த வெளிநாட்டினகணும் பரப்பிவரும் பான்மை மிகவும் போற்றற்குரியது.

மாணவ மாணவியர்க்கு ஊக்கமும் ஆக்கமும் ஒருங்கு உணர்த்தும் முறையில் சொற்போட்டிகளும் பரிசுகளும் நிகழ்வன கண்டு பெரிதும் மகிழ்கின்றேம். திருக்கோவில் வழிபாடு, கூட்டுவழிபாடு, கூட்டு வேண்டுகோள் (பிரார்த்தனை) அதற்கு வாயிலாகச் 'சிவபுராண' மலிந்த விலை வெளியீடு முதலிய தொண்டுகள் உலகத்துக்கு எடுத்துக்காட்டாவன. பெரியோர் பயிலும் சிறந்த வகுப்புக்களாக 'திருக்குறள் வகுப்பு' 'சிவ ஞானசித்தியார் வகுப்பு' 'திருமந்திர வகுப்பு' முதலியன. இத்துணைப் பேரன்பு தாயகத்தாரும் செய்வராயின் நாடும் மொழியும் நன்னெறியும் மிகுவிரைவில் பண்டைய நிலைமையினும் மிகுப் புதுமைமிளிர எல்லாத் துறைகளிலும் முன்னேறும் என்பதற்கு ஐயமில்லை. இச்சபை நீடுவாழ்ந்து பீடுபல பெற்றுப் பிறங்குமாறு பெரும்பொருளை வழுத்துகின்றேம்.

**திருவள்ளுவர் திருநாள் 18-5-1954**

இத்திருநாளை வழக்கம்போல் இவ்வாண்டிலும் கொண்டாட வேண்டுமென்று கொழும்பு தமிழ்மறைக் கழகத் தலைவர் பேராசிரியர் கா. பொ. இரத்தினம் எம். ஏ., பி. ஓ. எல். அன்புடன் அறிவிக்கின்றார்கள். செய்யவேண்டிய முறைமைகளைச் சென்ற ஆண்டுச் செல்வியில் விளக்கமாகக் காணலாம். புதிதாகச் செய்யவேண்டிய சிறந்த ஆக்கப்பணி :

“திருக்குறளைப் பிறநாட்டு மக்களும் நன்கு படித்துப் பயனடையச் செய்தற்காக அதனை உலகத்திலுள்ள சிறந்த மொழிகள் பலவற்றிலும் செவ்வையாக மொழிபெயர்த்து வெளியிடுதல் வேண்டும்.”

**தெரிந்த அளவில் இப்பொழுதுள்ள மொழி பெயர்ப்புக்கள்**

க. ஆங்கிலம்: ஜி. யு. போப், எம். எஸ். பூரணலிங்கம்பிள்ளை, வ. வே. சு. ஐயர், டபிள்யு எச். டிரூஉம்—ஜே. லாசரஸும், வி. ஆர். ராமச்சந்திர தீச்சதர், ஆ அரங்கநாத முதலியார்.

சிற்சில பகுதிகளை மொழிபெயர்த்தோரும் பலராவர். அவர்களுள்ளே பின்வருவோர் குறிப்பிடத்தக்கவர்கள் :

ச. இராசகோபாலாச்சாரியார், எவ். டபிள்யு. எல்லீஸ், ஈ. ஜே. ராபின்சன், திருநாவுக்கரசு அம்மையார், சி. ஈ. கவர், சபாரத்தின முதலியார், எச். ஏ. பொ.

௨. இலத்தீன்: சி ஜெ. பெஸ்கி (வீரமாமுனிவா) [இருபால்கள் மாத்திரம்]. டாக்டா கிரௌல் (ஒரு பகுதி)

௩. ஜெர்மன் ஏ. எப் காமெராஸ், டாகடா கிரௌல் (ஒருபகுதி); பிரடரிக் ருககாட் (சில அதிகாரஙகள்).

௪. பிரஞ்சு எம். லெம்ரேஸ, எம். எரியல், பி. ஜி டி. டுமாஸ், லூயி, ஜே கோலியோ (சிலபகுதிகள்), ஜி. பாரிகோ பாண்டெடேனு (காமததுப்பால).

௫. சமக்கிருதம்: (அறததுப்பால—நீதிகுசும்மாலா) அப்பாதீசசிதா.

௬. இந்தி: க்ஷேமானந்த ராஹத், பி டி. ஜெயின்.

௭. மலையாளம்: திவான் பகதூர் கோவிந்தபிள்ளை.

௮. தெலுங்கு. கனுப்பர்த்தி வேஙகடராம ஸ்ரீ வைததியநாதா.

௯ மராட்டி: சாநேகுருஜி.

௧0 வங்காளம் ....... .. ......... ..... .

---

# மதிப்புரை

**இறைவனின் உறைவிடங்கள்**

[ஆசிரியரும, பதிப்பாளரும் திரு. காளததி, நடேச முதலியார் அவாகள; கிடைக்குமிடம் 107, துளசிஙகப் பெருமாள் கோயில தெரு, திருவலலிக்கேணி, சென்னை-5; விலை, ரூ 2-1-0.]

இந்நூல் திருநெறியாகிய சிவநெறிச செலவாகளுககுச, சிததாந்த சைவாகட்கு அருடபேறனைய பெருநூலாகும ஏனையார்கடகுத தமிழகக தொனமைக கலையுணாவும கடவுள உணாவும் பெருகி நன்னெறியெய்தி இனபுறறு வாழ உணமைத துணை செயயும எழில்நூலாகும ஒரு நாடடின பழமை உணாந்தாலனறி அந்நாடடின் கிழமை கொணடாடி முனனேற முடியாது. வெளிநாடடவாகளும் அழியா நாகரிகக கருவூல மாக விளஙகும தமிழகத திருககோவிற் கலைகளின உணமை உணாதற்கு இநநூல அனைய நூலகள இனறேல் வேறு வழிகளிலலை இந நூலின அரும பெறல் ஆசிரியா திரு. காளததி, நடேச முதலியார் அவாகள் ஆவா இவாகள சிவநெறிப் பற்றும நலலொழுககமும வாய்த்த பெருந் தகையாா. திருவலலிக்கேணி, திரு நடராச கலவிக்கழகத தலைவர், லாயல அச்சக உரிமையாளர், நிழல ஓவியம எடுககும திறலர். இத்தகைய வாயபபுககளால் இவாகள் இந்நூலை மிகவும அழகுபெற அமைத்துள் ளாாகள்

இவர்கள் கருததுஒதத கற்புறுமனைவியார் ஞானமபாளுடன் 1949-ஆம ஆணடுமுதல் இனறுகாறும பற்பல திருவூாகளும் சென்று திருக் கோவில வழிபாடு சீரபெற இயற்றியுள்ளாாகள். இவர்கள் சென்றுள்ள திருக்கோவிலகள் இருநூற்றுககுமேல எனத தெரிகின்றது. அத்திருக் கோவில் முறைகளை அகரவரிசையில் அழகுற அமைத்துள்ளார்கள்.

ஒவ்வொரு திருக்கோவிலின் சிறப்பும், சிறப்புமிக்கவற்றின் அழகிய நிழலுருவப் படமும், படவிளக்கமும, இறைவன் இறைவியர் திருப்பெயர்களும திருமுறைத் திருப்பாட்டுக்களும அமைத்துள்ளார்கள்.

புகைவண்டி நிலையங்கள், சந்திப்புக்கள், அவ்வவற்றுக்குள தொலைவுகள், வழிகள, கட்டணங்கள் எல்லாம் செவ்வையாகக் காணப்படுகின்றன. அதுபோலவே நிலப்பொறியூர்தியாகிய பஸ்ச வசதிகளும் குறிக்கப்பட்டுள்ளன திருவூர்ச சிறப்பு, திருக்கோவில விளக்கம, ஆங்காங்குள்ள அரிய திருவரலாறுகள் ஆராய்ச்சிக் குறிப்புடன் அமைத்துள்ளார்கள். பொதுவாக நோக்கின் இந்நூல பெரும்பான்மையான தமிழகத்தின் தொன்மையொடு பொருந்திய தற்காலமவரையுள்ள நன்மை வரலாறென்றே கூறலாம. திருமுருகன் திருவூர்களும் வேறு பல சிறந்த திருவூர்களும் கிளந்தெடுத்துக் கூறப்பட்டுள்ளன. இந்நூலைச் செந்தமிழன்பர்களும பிறரும் வாங்கியும் வாங்குவித்தும வாங்கிப் பெரும் பயன் எய்துவார்களாக ஆசிரியரவர்கட்குத் தமிழகமும சிறப்பாகச் செந்நெறிச் செல்வர்களும் பெரிதும் கடமைப்பட்டுள்ளார்கள். அவர்கள் காட்டிய நன்னெறியைப்பற்றி எல்லாரும் ஒழுகுவராயின் நாடும் மொழியும நன்னெறியும் பீடுறும்; வேற்றுமை அகலும்; ஒற்றுமை பெருகும; வாழ்வு சிறக்கும.

திருமந்திர விளக்கம்

[ஆசிரியர் யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்; வெளியிட்டோர் 'சுத்தானந்தப் பதிப்பகம;' கிடைக்குமிடம: 60, டலஇடம, கொழும்பு, 3· விலை, ரூ 2 சதம், 50, (2-8-0) ]

எளிய இனிய நடை, திருப்பாட்டுக்களின் பொருள்களை ஆற்றொழுக்காகக் கட்டுரைபோல் அமைத்துக்கூறி வேண்டுமிடத்துச் சிறந்த திருப்பாட்டுக்களை முழுவதுமாகவும், வேண்டிய அளவாகவும் எடுத்துக்காட்டிக் கற்பாரை இன்புறச் செய்யும் எழில் வாய்ந்தது. சிறந்த பல யோகக் கருத்துக்களும் செந்நெறி மாண்பும தெளிவுபடுத்தப்பட்டுள்ளன. 'மூல மந்திரமுதல, ஓம சிவம்' என்பது ஈறாக (சுகு) அறுபத்தைந்து தலைப்புக்களில மிக விளக்கமாகத் திருமந்திரத் தமிழ்ப் பிழிவு தரப்பட்டுள்ளன. பொதுவாகப் பார்த்தால் திருமந்திரப் பிழிவாயத் திருமந்திர முழுவதும் கற்பார்க்குச் சிறந்த வழிகாட்டியாயத் திகழ்கின்றது இந்நூலைத் தமிழகத்தார் வாங்கியும் வாங்குவித்தும பழந்தமிழ் ஓம்புவதுடன் பதிப்பகத்தார் ஆக்கமுற ஊக்குதலும செய்வார்களாக. பதிப்பகத்தாரும் இம முறையில் திருமந்திரம் முழுதும முற்றுவிப்பார்களாக. பிற நூல்களையும் வெளிப்படுத்திப் பெரும்பயனுற பெரும்பணி புரிவார்களாக. அழகிய பதிப்பு

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பா அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.



இரசிகமணி

டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள்

தோற்றம்
1882

மறைவு
16-2-1954




சிலம்பு உஅ | திருவளளுவா ஆண்டு ககூஅரு, மாசி
மார்ச்சு, 1954 | பரல் எ

# இரசிகமணி, டி. கே. சி. பிரிவு

போதும பொன்னும் உந்தி அருவியிறங்கி வற்றுவளங் கொழிப்பது, திருக்குற்றாலம். அக்குற்றாலம தமிழ் தழீஇய சாயலுடையது, தமிழ்ப பாட்டிசைக்கும வண்டுகள் வாழ் பன்மலர்களையும மேலேயெடுத்துத் தாங்கிவருவது தண்பொருநதம் என்னும தனியாறு இவ்வளங் கொழிக்கும திருக்குறறுலத்திலே தமிழை தம இருகண்களாகக்கொண்டு, கம்பர் திருப்பாட்டிலே—காவியத்திலே—அவ் ஓவியத்திலே திளைத்துத் திளைத்து வாழ்ந்துவந்த பெரியார், திரு டி. கே சிதம்பரநாத முதலியாரவர்கள. அவாகள், சென்ற பிப்பிரவரித் திங்கள் கசு-ஆம் நாள் காலை அ-மணிக்குத் தம் பருவுடல் நீத்துப் பொன்றுப் புகழுடம் பெயதினார்கள். அவாகள் பிரிவு, தமிழ் நாட்டுக்கு—கலைச் சுவைஞா உலகுககு—ஈடும் எடுபபுமற்ற பேரிழப்பாகும். அவர்கள் பிரிநதகாலததில் அவர்கட்கு அகவை எழுபத்து மூன்று. இம் முதிாநத எழுபான் அகவைக் காலததினும் அவர்கள் தமிழ் மொழியை—கம்பர் காவியததை—முத்தொள்ளாயிரம் போன்ற அழகிய பொருள் மிக்க நூல்களை மறந்தனரில்லை. இவர்கள் ஆங்கிலங் கற்று, அதில் துறைபோன பெரும் பட்டம் தாங்கியிருந்தபோதினும் அதில், அம்மொழியில் மோகங்கொள்ளாது தமிழ் மொழியில் அளவுகடநத பற்றுக் கொண்டு பற்பல மேடைகளில் ஏறித் தமிழ்க் கவிகளின் ஏற்றத்தையும, அதில் அமைந்திருக்கும் சொல், கருத்து, பொருள் நயங்களையும், எடுத்தெடுத்துக் கேட்டார்ப்பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப விரிவுரை நிகழ்த்துவதில் மிக வல்லுநராய் இலகினார்கள். இவர்களின் சொற்பொழிவைக் கேட்ட தமிழ் அறியாதோரும் தமிழ்ப் பண்பில் ஈடுபாடுற்றுத் தமிழ்

மொழியில் ஆரா அயராக் காதலராய்க் கம்பர்தரும் காட்சியில் ஈடுபாடுடையராய்ப் போதருவாராயினர்.

இவர்கள் கலைத்துறையில் வேரூன்றி உலகெலாம் செழிப்ப அறிவு விருந்தளித்தலோடு, தம்மை நாடிவருவார் யாவர்க்கும் நாச்சுவைகொள்ளத் தம் இல்லத்தை அடையா நெடுங்கத வுடையதாக ஆக்கி விருந்து புறந்தந்த அரியபெரிய தமிழ்ப் பண்பாடுடையவராவர். இவர்கள் விருந்தினரைப்பேணும் மேன்மையையும், அறிவுத் திறனையும் பாராட்டி,

> 'தமிழக குலத்தின் பண்பாட்டிற்கு ஓர் எடுத்துக்காட்டு வேண்டுமானால், டி. கே. சி. என்று ஒருதலையாகக் கூறலாம். விருந்தளித்தல் என்பது அவர்களிடம் ஒரு கலையாக விளங்கிற்று; குற்றாலத்தில் அவர்களைக் காண நற்றமிழ் அறிஞர்கள் வருவார்கள், பெருஞ்செல்வர்கள் வருவார்கள், மந்திரிகள்—அதிகாரிகள் வருவார்கள், பிறநாட்டு நல்லறிஞர்களும் வருவார்கள். இவர்கள் எல்லோரையும் நல்விருந்தாலும் சொல் விருந்தாலும் மகிழ்விக்கும் சிறப்பு, டி. கே. சி. அவர்களிடம் நிகரற்றமுறையில் அமைந்திருந்தது. நண்பர்களுக்குக் குற்றாலம் ஆவியகன்ற கூடுபோலவே தோன்றும். மலையிருந்தென்ன! மந்தமாருதம் இருந்தென்ன! அருவிதான் இருந்தென்ன! அறிவுக்களஞ்சியத்தை இழந்து விட்டோம்'

என்று, பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளையவர்களே வானொலியில் வாய்விட்டுக் கதறுவார்களானால், அறிஞர் டி. கே. சி.யின் பண்பாட்டை என்னெனப் பகர்வது?

இவர்களின் புகழ் நம் செந்தமிழகமன்றி மொழிபெயர் தேயங்களினும் சென்று பரவி ஓங்கலாயிற்று. வங்கப் பெருங் கவிஞராகிய ரவீந்திரநாத் தாகூரின் சாந்தி நிகேதனத்தினும் நம் டி. கே. சி.யின் கொஞ்சும் தமிழ்—இளந்தமிழ்—வீறுபெறுவதாயின், அவர்கள் தமிழ்க்காதலை எச்சொல்லில் இயம்பிப் போற்றுவது!

'கல்கி' இதழ்களில் கிழமைதோறும் தவறாது 'கம்பர் தருங்காட்சி' என்னும் தொடரில் பல தலைப்புகளில் கம்ப ராமாயணப் பெருங்கடலிலிருந்து மொண்டு மொண்டு அறிவு மாரி பொழிந்து தமிழ்மாநில மக்களினப் பயிர்களுக்கு அறிவு வேட்கை தணித்த அரும் பண்புடைய மேகமன்றோ நம் டி. கே. சி. அவர்கள்? ஏடு தொடாது நாடோடியாகத் திரிந்தார் பலரும் கம்பரைக் கற்க—இலக்கியச் சுவைகாண— அறிவுப்பசி ஆற்ற-அலைந்து அலைந்து ஊணும் உறக்கமுங்கூடப் பெரிதெனக் கருதாது இவர்கள் சுவைகாணச் செல்வார்களாயின், டி. கே. சி.யின் அரும்பெறற் பண்புதான் என்னே! என்னே!

'ஒருநாள் உறைந்திசினோர்க்கும் வழிநாள் பண்பின் மறக்கும எமபதி' என்றார் அனறோர் தமிழ்ப்புலவர்; 'உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல் அனைத்தே புலவர் தொழில்' என்றார் வளளுவப் பெருந்தகையார்; 'தவலரும் தொல்கேள்வித தன்மை யுடையார், இகலிலர் எஃகுடையாா தம்முட் குழீஇ நகலின் இனிதாமோ.......உம்பா உறைவார் பதி' என்றார் சமண முனிவர்

இவ்வெல்லா மொழிக்கும் இலக்காகத் திகழ்நதது, அவர் இல்லம்; அவா பண்பாடு, அவர் இரசிகத்தனமை. அவர் காலமெல்லாம கற்றே கழிததார், கேட்டே மகிழ்நதார்; கேட்கவே மொழிந்தாா டி. கே. சியின் புகழ் யாண்டும் இன்று மண்டிக்கிடக்கின்றது 'தோன்றிற் புகழொடு தோன் றுக' என்னும் பொனமொழிக்கு இலக்கியா, நம் டி. கே சி.

இத்தகைய திசையனைத்தும புகழ்பரபபி வாழ்ந்த டி கே. சி. பிறந்த ஊா, 'பாண்டிநாடே பழம்பதி' என மணிமொழிப் பெருமான் வாயில் வளமபெற்ற பாண்டிநாட்டில, தென்காசியை அடுத்த களஙகாடு எனப பெயரியதாகும். இவா தந்தையாரின பெயர் தீர்ததாரப்ப முதலியார். 1882-ல் பிறந்தார்; முறை யாகத தமிழ்மொழிக் கல்வியும் ஆங்கிலமொழிக் கல்வியும் கற்றாா. ஆஙகிலத்தில் பி. ஏ, பி. எல். பட்டம் பெற்றார். இநதுமத தாபன போாடில் ஆணையாளராக இருநது பல நறறொண்டுகள் புரிந்துள்ளனர். 1924-ல் இவர் திருநெல் வேலியில் இலக்கியச் சஙகம் ஒன்றை நிறுவினார். கமபராமா யணததை நனகு கருததூன்றிக் கற்றாா; அதில் பல இடைச் செருகல் உண்டெனக் கருதினார். அதில் ஈடுபாடுற்றார். என்றும் அவர் கம்பரை மறந்ததில்லை. இவர் தாம நன்கு அனுபவித்துப படித்த கருத்துரைகளை உலக மக்கட்கு வெளி யிற்காட்டவேண்டி, இதய ஒலி, கம்பா யார்? என்னும் நூல்களும் முத்தொள்ளாயிர உரையும், வேறு நூல்களும் இயற்றியுள்ளனர். ஆண்டுதோறும் காரைக்குடியில் கம்பர் திருநாள் கொண்டாடு தற்கு முதற் காரணராக இருநதவர் இவரே.

இத்தகைய சிறப்புக்குரிய, டி. கே. சி. அவர்கட்குப் பேரர் கள் இருக்கின்றனர்.

டி கே சி. அவர்கட்குக் கம்பராமாயணப் பாடல்களில் மிக்க சுவைக்குரிய பாடல்கள் பலவுண்டு. அவற்றுள் ஒன்று, இராம பிரான் முடிசூடுதற்குத் தடஙகலாகித் தன்னந்தனியனாய்த் தன் தாய் கோசலையைக் காணச் சென்றபோது நிகழ்ந்த உருக்கமான நிகழ்ச்சி. அதை அவர்கள் அடிக்கடி பாராட்டிப் பேசிச்

சுவைத்து மகிழ்வார்கள். அதில் மன்னா கோலத்தில் இராமன், ஏவலர் முதலியோர் புடைசூழ, இருமருங்கும் வெண்சாமரை இரட்ட, வெண்கொற்றககுடை பிடிததுப் பக்கலில் வர, தலையில மணிமுடி தரித்து அழகுடன் வருவானென எண்ணித் தன் மகன் வரவை எதிர்நோககி யிருநதாள் கோசலை. அதுகாலை இராமன் சென்ற காட்சி,

‘குழைககின்ற கவரி யின்றிக கொற்றவெண்
குடையும் இன்றிக
இழைக்கின்ற விதிமுன் செல்லத தருமம்பின்
இரங்கி ஏக
மழைக்குன்றம் அனையான் மௌலி கவிததனன்
வருமென் றென்று
தழைககின்ற உள்ளத் தன்னாள் முன்னொரு
தமியன் சென்றான்’

என, அவள் நினைந்ததற்கு மாறாகத் தனியனாய்ப் பக்கத்துணை எவருமின்றி வந்ததே அவள் உள்ளமுருக்கும் காட்சியாக இருந்தது. இந்நிலையை டி. கே. சி அழகுற விளக்கி விளக்கிப் பலநயமும தோன்றக் கூறுவார்கள்.

இக்காட்சி நிலையில் அறிஞர் டி. கே. சி. அவர்கள், தம் இல்லந்துறந்து, தனக்குரிய அறிஞர் சூழலை மறந்து, என்றுமுள தென்றமிழ் ஏற்றத் தொண்டினையும் நெகிழ்த்து, எல்லாம் வலல இறைவன் திருவடிப் பேறெய்தியமை குறித்து அவர் கொண்ட உயர் காப்பியமாகிய கமபராமாயண அப்பாட்டினைக் கொண்டே எம் மனமாழகிய வருத்ததததைக்கூறி, அவரைப பிரிந்து கரை காணாப் புன்கணில் மூழ்கியிருக்கும் அவர்தம் மனைத்தக்க மாண் புடையராகிய இல்லக்கிழத்தியாருக்கும் அவர்தம் பெயரர்கட்கும் ஆறுதலுடன் கூடிய எம் உளமார்ந்த வருத்தத்தைத் தெரி வித்துக்கொள்கின்றோம் அவர் நல்லுயிர் இறையடிப பேறுற்று இன்புறுவதாக.

ஆசிரியர்.

# திங்களைப் போற்றுதும்

[திருவாட்டி, மாசில்லாமணி அம்மையார்]

'நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம்' என்று பாடிவைத்தனர் பாரதியார். சிலப்பதிகாரம் சொல்லிய கதை மாத்திரமா நெஞ்சை யள்ளுகிறது? இளங்கோ, கதையைச் செவ்விய முறையில் ஓட்டிச் செல்லுதற்கு உதவிய செய்யுள் நடையும் நெஞ்சையள்ளுகிறது. பொருள், செய்யுள்நடை என்ற இரண்டையும் பொருந்திய தன்மையில் கலந்து நம் நெஞ்சையள்ளுகின்றார், ஆசிரியர். 'பொருளை அழகுறுத்திக் காட்டுவது செய்யுள்நடை' எனகிறார், ஆங்கிலப் புலவர் பேக்கன் (Bacon).

இளங்கோவடிகள் தாம் இழைத்த காப்பியத்தில், கதையை ஓட்டிக்கொண்டு செல்கையிலேயே உரிய இடங்களில், கதைத் தொடர்ச்சியைச் சிறிது ஒதுக்கி, இசைப்பாட்டுக்களில் இறங்கி விடுகின்றார். ஆற்றுவரி, கானல்வரி, வேட்டுவவரி முதலிய கூறுகள் இதற்குச் சான்றாயமைகின்றன. இளங்கோவடிகளின் செய்யுள் நடையில் வெவ்வேறுபட்ட இத்தகைய கூறுகளை இடையிடையே கண்டு உள்ளங்களிக்கின்றோம். சிலப்பதிகார நூல் முழுவதையும் தொடர்ச்சியாக ஒருமுறை படித்துக்கொண்டு செல்லும் ஒருவன், நூலில் காணும் பலதிறப்பட்ட செய்யுட் கூறுகளும் இயல்புகளும் மனத்துக்குக் கிளர்ச்சியையும் ஊக்கத்தையும் ஊட்டிக்கொண்டு செல்வதை உணருகின்றான். வாழ்க்கைக்கு இனிமையளிப்பன பல்வேறு திறப்பட்ட கூறுகளே (Variety is the spice of life). இளங்கோவடிகள் அவ்வுண்மையை வரலாற்றிலும், செய்யுள்நடையிலும் பொதிந்து வைத்து நம்மை மகிழ்விக்கிறார். இந்த முறையில் ஆராய்ந்து பார்த்தால் அவர் காப்பியம் ஒரு நாடகக் காப்பியமாயமைகிறது. கதைத் தொடர்ச்சியிலும், செய்யுள்நடையிலும் வெவ்வேறு கூறுகளையும் பாக்களையும் அவர் வலிந்து கலந்து கோத்து நூலாக்கவில்லை அவர் காப்பியத்தைப் பாடிக்கொண்டு செல்லும் விரைவில், அவை தாமே வந்து சேர்ந்து அமைகின்றன. சிற்சில வேளைகளில் பழம் புலவர்களோ, நாட்டு மக்களோ கூறியிருந்த பாடல்வரிகளே அவர் நினைவில் வந்து குறுக்கிட்டிருக்கலாம். அவைகளையும் அவர் உரிய இடத்தில் சேர்த்து அமைத்துக் கொண்டார். ஆகவே, அவர் காப்பியத்தில் வந்துள்ள இசைப் பாடல்களிற் சில, பழங்காலப் பாடல்களாயிருத்தல் வேண்டும். இதுவரை கூறவந்தது யாதெனில், இளங்கோ தமது உள்ளக்

கிளர்ச்சியில் ததும்பிவந்த சொற்களை அள்ளியெறிந்து அழகு கொடுத்து வரைகின்றார். அவர் நூலைத் துவங்கும்போதே அப்படித் துவங்குகின்றார். மங்கலவாழ்த்துப் பாடலின் பொருள், செய்யுள் நடை என்ற இவற்றைச் சிறிது பார்ப்போம்.

ஆங்கில ஆசிரியர் ரஸ்கின் (Ruskin) ஸெஸமும், லில்லீஸும் (Sesame and Lilies) என்ற தமது நூலில், "சிறந்த ஆசிரியனொருவன் மனக்கிளர்ச்சியில் அள்ளிவீசும் சொற்கள் பயனற்ற வெற்றுச சொற்களாயிராமல், நயத்துடன் கூடி ஒவ்வோரிடத்திற்கும் இன்றியமையாச் சொற்களாயமைகின்றன" என்கிறார் இளங்கோவடிகள் மங்கலவாழ்த்துப் பாடலில்,

"திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்
கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
அங்கண் உலகளித்த லான்,

ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்
காவிரி நாடன் திகிரிபோற் பொற்கோட்டு
மேரு வலந்திரித லான்,

மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்
நாமநீர் வேலி உலகிற் கவனளிபோல்
மேனின்று தான்சுரத்த லான்,

பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்
வீங்குநீர் வேலி உலகிற் கவன்குலத்தோ(டு)
ஓங்கிப் பரந்தொழுக லான்"

என்று பாடுகையில ஓசை நயமும், இனிமையும், பொருட்செறிவும நிறைந்த நான்கு சிந்தியல் வெண்பாக்களைக் கேட்டு மகிழ்கிறோம 'திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்' என்பன போன்ற நான்கு அடுக்குத் தொடர்களைக் கூறியதில் தொனிக்கும சந்தத்தையும் கேட்டும் உணர்ந்தும் களிக்கிறோம. உலகளிக்கும திங்களை முன்வைத்து, மேருவலந் திரியும் ஞாயிற்றை அடுத்து வைத்து, மேனின்று சுரக்கும் மாமழையை அதனபின் வைத்துப பின இவற்றுடன் சேர்த்து முறையாய்க் கூறக்கூடாததாகிய புகார்நகரைக் கடையில் வைத்து, சோழன் குலத்தைப் புகழ்வோர், இதனையும புகழ்வார் என்று கருதத்தப்பட 'பூம்புகார் போற்றுதும' என்றார். கதையைக் கூறக் காத்திருக்கும புலவர், திங்களையும், ஞாயிற்றையும், மாமழையையும் கூறியபின் கதை நிகழுமிடமாகிய பூம்புகாரையும் இவ்விடத்துப புகுத்தி இணைத்ததில் ஒருநயம் காண்கிறோம். மேலும பூம்புகாரைப் போற்றிய புலவர், அந்நகர்ச்

சிறப்புக்குக் காரணம் கூறுகிறார் பொதியம், இமயம், பூம்புகார் இம்மூன்று இடங்களிலும் உயர்ந்தோரிருப்பதால் இவை எக்காலத்தும் நிலைபெற்று நின்றன என்றார்.

இதன்பின் வரும் பகுதி செய்யுள் நடையில் மாறுபடுகிறது 'திங்களைப் போற்றுதும' என்று பாட்டு இசையில் (Lyric Charm) முழங்கி, புகாரின் சிறப்பை அடிகோலிக்கொண்டு, இப்பகுதியில் ஆசிரியர் கதையை விரைவில் கூறிக்கொண்டு போகிறார். இடையிடையே தனிச்சொல் வரப்பெற்று நாற்சீரடிகளமைந்த நான்கு நான்கு அடிகளால், புகார்நகரில் மாநாய்கன் குலத்தில், பன்னிரண்டு அகவையுடைய கண்ணகி என்னும் பெண்ணிருந்தாள் என்றும், மாசாத்துவான் என்பானுக்குப் பதினாறு அகவையுடைய கோவலன் என்னும் மகனிருந்தானென்றும, கண்ணகியையும கோவலனையும் நல்லதோர் நாளில் மணம் செய்துவைக்கத் தாய்தந்தையர் விரும்பினரென்றும் சுருங்கக்கூறி விளங்கவைத்து நயம்பட முடித்தார். முதற்பகுதியிலிருந்த முழக்கமும, பாட்டு ஓசையும மனத்தை இன்புறுத்தும அடுக்குத்தொடரும் இங்கில்லை. கதையைச் சுருக்கமாய்க் கூறிக்கொண்டு செல்லும் இப்பகுப்பில் சொற்கள் சந்தத்துடன் கோக்கப்பெற்று, ஆற்றொழுக்குடன் சென்று கதையைத் தட்டுத் தடங்கலில்லாமல் நாம சுவைக்கும்படி செய்கின்றன.

மூன்றும் பகுப்பு ஒரு தனிப்பொருளைக் கொண்டது. இங்குக் கோவலனுக்கும் கண்ணகிக்கும நடந்த திருமணத்தைக் கூறிப, பின் அவர்களை ஏத்தி, அவர்கள் நாட்டரசனாகிய கரிகாலன் நீண்டகாலம வாழும்படி வாழ்த்தி முடிக்கிறார் ஆசிரியர்

"முரசியம்பின முருடதிர்ந்தன
முறையெழுந்தன பணிலமவெண்குடை
அரசெழுந்ததொர் படியெழுந்தன
வகலுண்மங்கல வணியெழுந்தது"

என்று துவங்கும்பொழுதே மங்கல நிகழ்ச்சியைச் சுட்டிய முழக்கமிருக்கிறது. இவ்வடிகளில ஒருவகை ஒலிக்குறிப்பு (Sound echoing sense) தொனிக்கிறது. 'முரசியம்பின முருடதிர்ந்தன' என்று நாம படிக்கும்போதே இசைக் கருவிகளின் முழக்க ஒலியைக் கேட்கிறோம். பின்வரும அடிகள் ஒரேதன்மையாய் நாற்சீரடிகளாய்ச் செலலுகின்றன. மணநிகழ்ச்சியை வருணிக்குங்கால் ஆசிரியர், எந்த மணவினையை எடுத்துச் சொனனாலும், எந்த ஆசிரியரும் இங்குக் கூறப்பட்ட

நிகழ்ச்சிகளையே கூறுவர். என்றாலும், இளங்கோவடிகள் எடுத்துக்கோக்கும் சொற்களில் எல்லையற்ற சந்தமும் (Cuphony) இன்பமும (Pleasure) காண்கிறோம். அவரது தெள்ளிய நடையைச் சுவைத்துக்கொண்டே செல்கையில் முச்சீரடியாகிய ஈற்றுக்கு அயலடியைக் கண்டு, இந்த மயங்கிசைக் கொச்சகக்கலிபபா முடிவுக்கு வருகிறதென்றறிகிறோம். ஒரு நாடகம் முடிவுக்கு வருதல்போன்ற உணர்ச்சி நமக்கு வருகிறது.

நாடகக் காப்பியம், முத்தமிழ் நூல் எனறெல்லாம சிலப்பதிகாரததிறகு வேறுபெயர்கள வழஙகிவருகின்றன. அப்பெயர்கள் இந்நூலுக்குப் பொருததமானவை யென்று இவவாழ்த்துப் பாடல் நேரடியாய்க் காடடவில்லையெனினும, நாடகச் சுவையும், இசைத் தமிழ்ச் சுவையும் இயற்றமிழாயமைநத இப்பகுதியிலும் கலநதிருப்பதைதக காணலாம. பாடலடிகள் அளவிலும், ஓசையிலும் ஆங்காங்கே மாறுபடுகின்றன. இங்ஙனம மாறுபடுவதால் நமக்குப் புதுபபுது உணாசசிகள் வருகின்றன

“ திஙகளைப் போற்றுதும திஙகளைப் போற்றுதும்
கொஙகலாதாாச செனனி குளிர்வெண் குடைபோன்றிவ
அஙக ணுலகளித்த லான் ”

உலக மக்கள் மனத்து உவகையைக் கிளபபும திஙகள், மாலையிருள் மறைநதோடச் செய்யும் திங்கள், வெயிலால் வாடிய உலக மக்களுக்கு விரும்பிய குளிாசசியை அளிக்கும திஙகள், சோழமன்னன் மாலையணிநத வெண்கொற்றக் குடைபோன்று உலகிற்கு அருள செய்கிறது என்று கூறிச், சொல்லும் பொருளும் சிறநதுவிளஙக மங்கலமாய்த் துவங்கினர் இளங்கோவடிகள. இவவாறு தொடக்கததிலேயே நம் நெஞசை அள்ளி விடுகின்றாரன்றோ?

# கோசர்

[வித்துவான், திரு. ஆ. சிவலிங்கனார், மயிலம்.]

(செல்வி, சிலம்பு உஅ, பரல் கூ, உகூ0 ஆம் பக்கத் தொடர்ச்சி)

## (2) பெயர்க் காரணம்

(1) வடக்கே வத்தவ நாட்டின் தலைநகரா யிருந்த கோசாம்பி என்ற நகருக்குக் 'கோசம்' என்னும் பெயர் உண்டு. அக்கோச நகரிலிருந்து பஞ்சம், பூகம்பம் முதலிய காரணங்களால் தென்னாடு போந்தவராதலின் கோசர் எனப்பட்டனர்.

(2) கோசர் இலக்கியங்களில் 'இளங் கோசர்' எனப்படுகின்றனர். வத்தநாட்டுக் கோசத்தை 'இளன்' என்பான் ஆண்டனன். அவன் வழியினர் 'இளங்கோ வழியினர்' எனப் பட்டனர் அதனால் தென்னாடு போந்தவரும் 'இளங்கோசர்' எனப்பட்டனர். இளமை காரணம் அன்று.

(3) 'வத்ஸ' என்ற ஆரியச் சொல்லுக்கு 'இளமை' என்பது பொருள். வத்ஸ தேசத்துக் கோசர் 'வத்ஸ கோசர்' ஆவர். அவரை 'இளங் கோசர்' என மொழி பெயர்த்துக் கூறினர் தமிழர்.

இம் மூன்று வகையில் காரணம் காட்டுவர் திரு. ஐயங்கார் அவர்கள். இனி இவற்றைக் காண்போம்.

(1) பஞ்சம் பூகம்பம் காரணங்களால் கோச நகரத்தினின்றும் வெளிப்பட்ட மக்கள் தென்னாடு வந்தார்களாயின், வத்த நாட்டிற்கும் தமிழகத்திற்கும் இடைப்பட்ட நாடுகளில் வேறெங்கும் தங்கி யிரார்களோ? தங்கிவந்திருக்க வேண்டுமாதலின் அவ்வந் நாடுகளில் அவர் தமக்கிருக்கும் பெயர் 'கோசர்' என்பதா? அல்லது கோச நகரத்தைக் குறிக்கும் நிலையில் வேறு பெயரா? இதனைக் கண்டால் கோசத்திருந்து வந்தவர் என நினைக்கலாம். இடைப்பட்ட நாடுகளின் சரிதம் அறிந்தோர் இதற்கு முடிபு கூறுக.

கோசரைக் கூறியவிடங்களில் அவர்தம் நாடாகிய வத்சம் உடன்சேர்த்துக் கூறப்பட்டிலது. நகரத் தொடர்பால் கூறப்பட்டவர் நாட்டுத் தொடர்பாலும் கூறப்பட்டிருத்தல் வேண்டுமன்றோ? எவ்விடத்திலும் சங்க இலக்கியங்களில் 'வத்சகோசர்' என்பது கூறப்பட்டிலாமை காண்க.

(2) கோசததிருந்து ஆண்ட அரசன் 'இளன்' என்பான் மரபினர் 'இளஙகோ' எனப பெயர் சிறப்பர்; ஆதலின் அவர் வழிவந்தவர் 'இளஙகோசர்' எனப் பெயர் பெற்றார் என்றால், "ஊர்முது கோசர்" என்றவிடத்து முதுமைக்குக் கூறலாம் காரணம என்னே ?

"மெய்மமலி பெருமபூட் செம்மற கோசா" (அகம்· கடு)
"கருங்கண் கோசா" (அகம் : கூ0)
"காப்புக் கைநிறுத்த பல்வேற் கோசா" (அகம்: ககடு)
"ஒனறு மொழிக் கோசா" (அகம் .ககூ)

எனப் பல்லிடங்களில் பொதுவில் கோசர் எனவும்,

"வென்வேல் இளம்பல கோசா" (புறம்: கசுக)
"கடநதடு வாயவாள் இளமபல கோசா"
(மதுரைககாஞசி எஎடு)
"கொஙகிளங கோசா" (சிலப்பதிகாரம உரைபெறுகட்டுரை)

எனச சில்லிடங்களில் 'இளங கோசா' எனவும, உசுஉ-ஆம் அகபபாட்டில "ஊர்முது கோசர்" எனவும இருத்தலைக் காணுமிடததுப பொதுவாகக் கோசரைபபறறிக் கூறுமபோது, 'கோசா' எனவும வீரரைக் குறிததுக் கூறும்போது "இளங கோசர்" எனவும முதியவரைபபற்றிக கூறும்போது "முது கோசா" எனவும கூறினர் பண்டைப புலவர் என்னலாம. புறப்பாட்டு கசுகூ-ல் விளங்குபடை கற்கும் கோசரையும், மதுரைக் காஞசியில் பாண்டியனிடம் நட்புக்கொண்டு துணையாக இருநதவரையும் "இளம்பல் கோசா" என்று கூறியிருத்தலைக் காணின் அரசரிடததுப் படைத்துணையாக இருநதவர்களையே அவ்வாறு கூறினா புலவர் என்னலாம் சிலமபினும் செஙகுட்டுவன் எடுத்த கண்ணகிக் கோட்டததிற்கு வந்து அத் தெய்வத்தைத தங்கள் நாட்டிலுமே எழுந்தருள வேணடிச் சென்று அவ்வாறே எழுநதருளுவித்து வழிபட்டவருள் கொங் கிளங் கோசரும ஆவா என வந்துளது. ஆஙகு வநதவரும் அரசராகிக் கொங்கினை ஆண்ட கோசரேயாவா. அவரும் இளஙகோசா என்றே கூறப்பட்டனர் பண்டைப் புலவர் அரசர்க்குத் துணையாக இருநதவரை "இளங்கோசா" என்றனராயினும அவரை இளங்கோசர் என்றுதான் கூறவேண்டும் என்ற நியதியைக் கொண்டிலர் என்க. மதுரைக் காஞ்சியில்,

பழையன் மோகூர் அவையகம் விளஙக
நான்மொழிக் கோசா தோன்றி யனன"

எனவும், அகப்பாட்டொன்றில்,

"வாய்மொழி நிலைஇய சேண்விளங்கு நல்லிசை
வளங்கெழு கோசர் விளங்குபடை நூறி
நிலங்கொள வெஃகிய பொலம்பூண் சென்னி"

எனவும் வீரர்களைக் குறிக்குமிடங்களில் வாளா 'கோசர்' என்றமை காண்க.

இனி 'இளன' என்பான் மரபினர் எனத் தங்களைச் சொல்லிக்கொண்டமையால் இளங்கோசர் எனப்பட்டார் எனின் யாண்டும் அவ்வாறு விளக்கமாகக் காணப்படாவிட்டாலும் அவர் இளன்வழிக் கோசர், இளங்கோக் கோசர், இளமரபுக் கோசர் என்பனவாகவேனும் கூறப்பட்டிருக்கவேண்டும் அவ்வாறின்றி இளங்கோசர் என்றே இருத்தலின் திரு ஐயங்கார் அவர்களின் கூற்று, பொருந்துமோ என ஐயுறவேண்டியுள்ளது.

(3) இனி 'வத்தசகோசர்' என்பதன் மொழி பெயர்ப்பு 'இளங்கோசர்' என்பதிலும் ஐயம் உளது என்னலாம் 'வத்தச' என்ற சொல்லை 'இளமை' என மொழி பெயர்த்ததற்கேற்பக் 'கோசர்' என்பதையும் மொழிபெயாததிருக்கலாம 'வத்சம' என்ற நாட்டின் பெயர்ச் சொல்லை இளமைப் பொருளை உணர்த்தும் சொல்லாகக்கொண்டு பின் அதனைத் தமிழில் பெயர்த்தனர் என்பது சிறந்ததாகத் தோன்றவில்லை சங்க இலக்கியங்களிலும் 'வத்தசகோசர்' அல்லது 'வத்தகோசர்' என்றேனும் காணப்படவில்லை. வத்தநாட்டுக் கோச நகரத்தார் எனக் கொள்ளுமாறு யாதோர் குறிப்பும் காணப்படவில்லை

வேட்டொழிவ தல்லால் வினைஞர் விளைவயலுள
தோட்ட கடைஞர் சுடுநந்து—மோட்டாமை
வன்புறத்து மீதுடைக்கும் வச்சத் திளங்கோவை
இன்புறுத்த வல்லமோ யாம் (வீரசோ அலங்: கக. மேற்)

இவ் வச்சத் தொள்ளாயிரப் பாட்டில "வச்சத்திளங்கோ" என வந்தமையைக் காட்டலாம். வச்சத் தொள்ளாயிரம் பிற்காலத்திய நூல் என்பதைத் திரு ஐயங்கார் அவர்களே கூறினர். ஆதலின் ஈண்டு அது பயன்படாதென்க. இதுபற்றிப் பின்னர் ஆராயப்படும்.

இனிக், "கோசர் என்பவர் வத்தநாட்டுப் பழங் குடியினர் அல்லர்; கோச நகரத்து வந்தேறிய குடிகள். அங்கு வருதற்கு முன்னரே 'கோசர்' என்ற பெயருடன் இருந்தவர் எனக் கொள்ளலாம்," என்று கோசர் பெயர்க் காரணத்தை வேறாகவும் கூறினர் ஆராய்ச்சியாளர் அவர்கள் கூற்றின் சுருக்கம் வருமாறு.—

"காச்மீர தேச சரித்திரமாகிய இராச தரங்கணியில் நட்பிற் பிழையாமைக்கு அந் நாட்டு மக்கள் 'கோசம்' என்ற ஓர் சூள முறையை மேறகொண் டொழுகியது கேட்கப்படுவது........ ...... நட்பிற் பிழையாத பெருவாய்மைக்குக கோச முறையை மேறகொளபவராதலின் இவர் கோசா எனபபட்டார் இக் கோசா முதலில் வததநாட்டில் குடியேறி யிருததல்வேண்டும. பின்னாக காச்மீரத துவாராபதியை விட்டு வேளிர் தென்னாடு புகுமபோதே அவர் கூடவே ஆண்டிருந்த கோசமுறை வீரரும் வந்தனராவர் எனக் கொள்வது பொருநதும. எனவே, கோச வீரர் காச்மீரததிலிருந்து முனனரே தென்னாட்டிற குடியேறி யிருந்தனர் என்றும, பின்னர்த தம் இனத்தவர் இருக்கும் அத் தென்னாட்டே வததநாட்டுக கோசரும வநதுறைநதனர் என்றும் தெளிவது பொருத்தமாகும"

இனி இககூற்றைக் காண்போம் கோசர் தெனனாடு புகுதற்கு முன்னரே காச்மீரததிருநது வத்தநாட்டிற் குடியேறி னவராயின் அந நாட்டில அவாகருக் 'கோசர்' என்று பெயா வழங்கி யிருத்தல்வேண்டும அன்றோ? அவ்வாறு வழஙகிய தாகச் சான்று காட்டின் நன்றாம காசுமீரக கோசா வநத பின்னர் வததநாட்டுக கோசர் வநதனரெனின் கோசருள இரு பிரிவினா தென்னாட்டில் இருந்திருக்க வேணடுமென்றோ? அஙஙனம் இலக்கியங்களிற கூறபபடவில்லையே? வேளிா தென்னாடு போநதமைககுக் கதையுண்டே தவிரக் கோசர் போநதனர் என்றற்குக் கதையும் இலலை. காசுமீரத்தில் சூள் முறைக்குக் 'கோச முறை' என்றிருத்தற் கேற்ப அக கோச முறையினைக் கொண்டவர் 'கோசா' எனபபட்டனரா அந் நாட்டில என்பதும் தெரியவில்லை அந நாட்டிலேயே 'கோசர்' என வழஙகி யிருந்தால் தென்னாடு போந்த காலத்தில தமமை அவர்கள 'கோசர்' எனச் சொல்லியிருப்பர் எனனலாம. ஒரு நாட்டிலிருந்து பிறிதொரு நாட்டிற்கு வருபவர் தம்மைத் தம் நாட்டின் பெயராலேயே கூறிக்கொள்வரே யன்றிச் சாதிபற்றியோ, கொள்கைபற்றியோ கூறிக்கொளளார் அன்றே? ஒன்றனை உறுதிபபடுத்தவேண்டிச் சூளுற்றுக கூறுதல் நம்மிடததிலும உண்டன்றோ? சூளுறுமபோது ஒன்றைத் தொட்டுச் சூளுறுதலும உண்டு. வீராகள சூளுற்றுக் கூறும் மொழியினை, "நெடுமொழி' என நம நூல்கள் கூறும் காசுமீர நாட்டினர் சூளுற்றுக் கூறும் முறைக்குக் கோசமுறை என்றனர். நம் கோசரும் வாய்மொழியினர், ஒன்றுமொழியினர் என்றெல்லாம் கூறப் படுதலின் இவர்க்கும் காசுமீரக் கோசமுறையினர்க்கும் பொருத்தம் காட்டுதல் எவ்வகையில் பொருந்தும்? "வாய்

மொழிக் கபிலன" எனக் கபிலரைக் கூறுதலின் அவரும் கோசர் ஆவரோ? அவரே "மன்னும் அந்தணன்" (புறம். உ00) எனத் தம்மைக் கூறிக்கொள்ளுகின்றாரன்றோ?

## (3) வச்சத்தோள்ளாயிரம்

வச்சத் தொள்ளாயிரம் பிற்காலத்து நூலாதலின் அந்நூற் பாக்களிற் காணும் 'வச்சத்தார்,' 'வத்தவர்' என்பன கொண்டு வத்தநாட்டவரே நம இலக்கியங்களிற் காணப்படும் 'கோசர்' என்பது பொருந்துமோ என்ற ஐயம் தோன்றுகின்றது. ஆராய்ச்சியாளர் அவர்கள் வச்சத் தொள்ளாயிரப் பாட்டையும் ஆதாரமாகக் கொண்டனர். அஃது ஆதாரமாகாமைக்கு ஈண்டுச் சில காண்போம்.

சங்க இலக்கியங்களில் வத்தர்—வச்சர் என்ற சொற்கள் இல்லை. பிற்கால நூல்களிலேயே காணப்படுகின்றன. பெருங்கதைத் தலைவன் உதயணன் வத்தநாட்டினன் ஆதலின், அவன் 'வத்தவன்' எனப்படுகின்றான். கி பி 1012 முதல் 1044 வரை ஆண்ட முதலாம் இராசேந்திர சோழன் வடக்கே படையெடுத்துச் சென்ற காலத்தில் 'சக்கரக் கோட்டம்' என்ற இடத்தைக் கைப்பற்றினான் என்று அவன் கல்வெட்டுக் கூறும். இச் சக்கரக் கோட்டம் என்பது விசாகப்பட்டினம் சில்லாவுக்கு வடமேற்கே மத்திய மாகாணத்தில் வத்ச ராச்சியத்தில் இருந்த ஒரு நகரம் ஆகும். இக் காலத்தில் சித்திர கோட்டம் என்று வழங்குகின்றது.

> "விளங்கு சயமகளை யிளங்கோப் பருவத்து,
> சக்கரக் கோட்டத்து விக்கிரமத் தொழிலால்
> புதுமணம் புணர்ந்து மதவரை யீட்டம்
> வயிரா கரத்து வாரி" (S I. I. VOL. 3. No. 72.)

என முதலாம் குலோத்துங்கன் கல்வெட்டுக் கூறுதலால் அவனும் வத்ச நாட்டில் படையெடுத்து வென்றவன் என்பது அறியலாம்.

> "விருதராச பயங்கரன் முன்னொரு நாள்
> வென்ற சக்கரக் கோட்டத்திடைக் கொழும்
> குருதியும் குடரும் கலந்தட்ட வெங்
> கூழ் தெறித்தொரு கணக்குரு டானவும்." (க. பரணி. 6. 14.)

> "மாறுபட் டெழு தண்டெழ வத்தவர்
> ஏறுபட் டதும் இம்முறை யன்றோ" (க பரணி 11. 73.)

எனக் கலிங்கத்துப்பரணி கூறுதல் காண்க. இவன் மகன் விக்கிரம சோழனும் வென்றான் என்றும் தெரிகின்றது. குலோத்துங்கனால் வெல்லப்பட்ட வத்ச அரசன் தாராவர்ஷன் என்பான். குலோத்துங்கன் காலம் கி. பி. 1070—1120 என்று தெரிகின்றது.

தமிழரசர்கள் வடநாட்டுப் படையெடுப்பில் வெற்றிகொண்டமைக்கறிகுறியாக அவ்வந் நாடுகளின் பெயர்களைத் தம் பெயர்களுடனே தம் படைத்தலைவர்களின் பெயர்களுடனே வைத்துச் சிறப்பித்துக் கொண்டனர் என்னலாம். வென்ற நாடுகளின் பெயர்களையும் தம் நாட்டு ஊர்களுக்கிட்டு வழங்கியும் இருந்தனர். இவ் வகையில் வத்சநாட்டை வென்றமைக்கேற்ப வத்தநாடு எனவும் குறிப்பிட்ட ஓர் இடத்துக்கு வைத்திருக்கலாம் வென்ற நாடுகளில் தம் படை முதலிகளைத் தலைவர்களாக்கி அவ் விடங்களில் இருக்கும்படியும் ஏற்படுத்தினர். [1]அரையன் மதுராந்தகனான குலோத்துங்க சோழ கேரள ராசன் என்ற படைத்தலைவனைக் கோட்டாற்றில் நிறுவப்பட்ட நிலைப் படைக்குத் தலைவனாக்கியதும், வாணகோ வரையன் சுத்த மல்லனுக்கு உத்தமசோழனாகிய இலங்கேசன் என்ற பட்டம் ஈந்து சிறப்பித்ததும் முடிகொண்டான் என்பவனுக்கு வத்தராயன் என்ற பட்டம் ஈந்து வத்சநாட்டுக் கதிபதி யாக்கியதும் முதலாம் குலோத்துங்கன் செயல்கள் என நாம் கல்வெட்டுக்களின்மூலம் அறிகின்றோம்.

இத் தமிழ்த் தலைவர்களாலும் இவர்தம் வழியினராலும் தமிழகத்தில் வடநாட்டு ஊர்களின் பெயர்களும், அரசர்களின் பெயர்களும் நிலவின என்னலாம். கொங்குநாட்டில் வத்தராயன், வத்தவன் முதலிய பெயர்கள் காணப்படற்கு இதுவே காரணம் என்க. வச்சத் தொள்ளாயிரம் என்ற நூலும் இத்தகைய படைத் தலைவன் ஒருவனைப் பற்றியதாகவே யிருத்தல்வேண்டும். அவன் யாவன்? திரு. T. V சதாசிவ பண்டாரத்தாரவர்கள் கஞ்சாறன் பஞ்சநதி முடிகொண்டானான வத்தராயன் என்பவனாக இருக்கலாம் எனக் கருதுகின்றனர். அவர்கள் கூற்று வருமாறு :....

[2]"கஞ்சாறன் பஞ்சநதி முடிகொண்டானான வத்தராயன்: இவன் சோழ மண்டலத்தில் திருவிந்தளூர் நாட்டிலுள்ள கஞ்சாறு என்னும் ஊரினன்; பஞ்சநதி வாணன் என்பவனுடைய புதல்வன்; முடிகொண்டான் என்னும் இயற்பெயர் உடையவன்; குலோத்துங்க சோழன் படைத்தலைவர்களுள்

1. பிற்காலச் சோழர் வரலாறு பகுதி II பக் 60-62.
2. ஷை ஷை 62, 63.

ஒருவன், இவ் வேந்தனால் அளிக்கப்பட்ட 'வத்தராயன்' என்ற பட்டமுடையவன். இது வத்சராஜன் எனவும் வச்சராயன் எனவும் வழங்கப்பெறுவதுண்டு. வச்சத் தொள்ளாயிரம் என்னும் நூல் இத் தலைவன்மீது பாடப்பெற்ற ஒரு பிரபந்தமாயிருத்தல் வேண்டும்."

[1]வாடை குளிர மருந்தறிவா ரில்லையோ
கூட வினியொருகால கூடாதோ—ஓடை
மதவா ரணதநுதயன் வத்தவாகோ னட்டிற்
கதவான தோதமியேன் கண.

இப் பாடல் வச்சத் தொள்ளாயிரப் பாடல் ஆகும்.

இதன்கண் காணப்படும் 'உதயன்' என்ற பெயர் வத்த நாட்டின் அரசர் பெயரேயாம். வத்தநாட்டுக் கௌசாம்பியை ஆண்ட உதயணனுக்கும் இது மற்றோர் பெயர். அவனுக்குப் பின் வத்சநாட்டைத் தன்னகத்துக்கொண்ட அவந்தி நாட்டை உதயன் என்பான் ஆண்டனன் எனவும் அறிகிறோம்; (இந்தியர் வரலாறு பக. 82. by S. K கோவிந்தசாமி பிள்ளை அவர்கள்.) எனவே அவ் 'வுதயன' என்ற பெயர் வத்ச நாட்டரசர்கள் தமக்கு வழங்கிவந்திருக்கலாம் அதனால் வத்சநாட்டுத் தலைவனாக அமர்ந்த கஞ்சாறன வத்தராயனுக்கும் உதயன் என்ற பெயர் இருந்திருக்கலாம்.

பெருங்கதைப்பதிப்பாசிரியர் டாக்டர் திரு. உ. வே. சாமிநாதையர் அவர்கள் வச்சத்தொள்ளாயிரம் உதயணன் திறத்ததோ வேறோ தெரியவில்லை என்பார்கள. உதயணன் திறத்ததாகாது என்னலாம.

உன்னுயிரும் என்னுயிரும் ஒன்றென்ப தின்றறிந்தேன்
மன்னுபுகழ் வச்சத்தார் மன்னவா—உன்னுடைய
பொன்னாகத் தெங்கையர்தம் பொற்கைநகச சின்னங்கண்
டென்னாகத் தேயெரிகை யால.

இப்பாடலும அந்நூலதே. இதன்கண் "வச்சத்தார் மன்னவா" என விளித்திருப்பது கூர்ந்துநோக்கற்குரியது. வத்தவநாட்டில் கௌசாமபியிலிருந்து சிறித்து பிறபபதற்கு முன்காலத்தில் ஆண்ட உதயணனை நோக்கி அவ்வாறு விளித்துள்ளது என்றல் எள்ளளவும் பொருந்தாது. இப்பாட்டில் 'சின்னம்' என்ற வடசொல்லும், "வாடைகுளிர" என்ற பாட்டில் 'வாரணம்' என்ற வடசொல்லும் வந்தமையாலும் இந்நூல் மிகப் பிற்காலத்ததென்னலாம், "உன்னுயிரும் என்னுயிரும் ஒன்

1. பெருங்கதை முகவுரை. பக். 9.

றென்ப தின்றறிந்தேன்", அதன் காரணம் "உன்னுடைய பொன்னுகத தெங்கையாதம பொற்கைநகச் சின்னங்கண்டு என்னுகத்தே யெரிகையால்" என்று கூறிச் சின்னங்கண்டமை கூறியமையாலும, "வச்சத்தார மன்னவா" என்று விளித்தமை யாலும இந்நூல பாடப்பட்ட காலததே பாட்டுடைத் தலைவனும இருந்தான என்னலாம. திரு. பண்டாரததார அவர்கள கருது வதுபோல கஞசாறன் வததராயனே பாட்டுடைத் தலைவனுக இருக்கலாம் அவன வததநாட்டுத தலைவனுக ஆனமையின் அவன் அந்நூலில் வத்தவாகோன், வச்சத்தார் மன்னவன் எனக் கூறப்பட்டான் என்னலாம்

ஆனுல், "வேட்டொழிவதல்லால்" என்ற பாட்டில் "வச்சத் திளங்கோ" என்றுள்ளமையால இந்நூல் தலைவன் வத்தநாட் டரசன் தம்பியாவனே என்றும் ஐயுறலாம். திரு. ஐய்யஙகார் அவர்கள் கோசாமபியை ஆண்ட அரசரே 'இளன' என்னும் திங்கட்குலத்து வேந்தன் வழியினர் என்றும் அதுபற்றியே அவன் வழிவேந்தர் "இளஙகோ" எனப் பெயர் சிறப்பர் என்றும் இவர் வடநாட்டில் ஐலர் எனவும அயிரர் எனவும் பெயர் சிறந்தனர் என்றும, இவருள ஒருவன்தான் காரவேலர் என்னும் கலிங்கவேநதன் என்றும கருதுவாரும உண்டு" என எழுதியதறகேற்ப முதலாம் குலோததுங்கன் படை முதலியான வததராயனே அநநாட்டுத் தலைவனுனமையின் "இளங்கோ" எனப் பெயர் சிறநதான் போலும் எனக் கொள்ளலாம எனவே, கி. பி 1070 முதல் 1120 வரையிருநத குலோத்துங்கன் காலத் தில் இயற்றப்பட்ட வச்சததொளளாயிரம் சஙககாலக் கோசர் ஆராய்ச்சிக்குப் பொருததமாக இராது என்னலாம.

## (4) சில முரண்பாடுகள்

(1) கோசரது பெயர்க்காரணத்தை அடைவாகக், கோசத் திலிருந்து வந்தமையால் கோசர் என்றும், வததநாட்டிலிருந்து வந்தமையாலும், கோசநகரத்து இளன் மரபினரானமையாலும் வத்சகோசர், இளங்கோசர் எனப்பட்டனர் என்றும், வதத நாட்டுக் கோசர் ஆதற்குமுன் காசுமீர நாட்டில் கோசமுறை கொண்டமையால் கோசர் எனப்பட்டு அங்கிருந்தே வத்த நாட் டிற்கும் தென்னுட்டிற்கும் போந்தனா என்றும் ஆராய்சசி யாளர் கூறினர்கள். பின்னரும் குறுந்தொகைப் பாட்டிற் கண்ட "நாலூர்க்கோசர்" என்பதற்கும வேறொருகாரணம் கற்பித்தனர். "வால்மீகி இராமாயணம் 32-ம் சருக்கத்து பிர்மற்கு மகனுகிய குசர் என்பவர் மக்கள் நால்வர் எனவும், அவர்கள் நான்கு ஊர்களைப் படைத்தனர் எனவும்

கூறப்பட்டுள்ளதாதலின், குசர் வழியினர் கௌசர் எனப்பட்டு அவரே கோசர் எனப்பட்டனர் எனவும், முதல்முதல் நாலூரி னின்றும் பெருகியதனால் நாலூரகோசர் எனப் பெயர் சிறந் தனர் எனவும் கருதுவது மிகவும் பொருந்தியதாகும் என்றும் கூறினர் (கோசர் பக். 48) 'நாலூர்க்கோசர்' என வந்த மைக்காக வலிய, குசர் மக்கள் நால் ஊர் படைத்ததனால் 'நாலூர்க் கோசர்' எனப்பட்டனர் என்னின், முதற்கண் கூறிய காரணங்கள் யாவும் என்னும்? நாலூர்க் கோசர் என்ற முறையில் வடமொழிப் பெயர் உண்டோ? அறியேம்.

அன்றியும் குறுந்தொகை 15-ஆம் பாட்டில் 'நாலூர்க் கோசர்' என்பதற்குப் பதில் 'நல்லூர்க்கோசர்' என்பதும் பாடம் எனத் தெரிகின்றது; ஆதலின் அதற்கேற்பவும் ஓரிடத் துக்கூறினர் அவர்கள் "இக்கோசர் ஒருதிரளாகச் சபதம் செய்துகொள்பவர் என்பது இவ்வூரை அடுத்துள்ள 'குழுவாணை நல்லூர்' என்ற பெயரான் ஊகிக்கப்படுவது. இக் குழுவாணை நல்லூர்க் கோசர் தாம் குறுந்தொகையில் 'நல்லூர்க்கோசர்' என வழங்கப்பட்டனரோ என ஐயுறுகின்றேன்." (கோசர் பக். 52) 'கழுகுமலைப்புறத்தது நாலூர்பற்றி 'நாலூர்க்கோசர்' எனப்பட் டனர் எனினும் பொருந்தும் (பக். 52) என்றும் கூறினார்கள். இவ்வாறு பெயர்க் காரணங்கள் பல எழுப்பினரேயன்றித் துணிபாக ஒன்றும் கூறிற்றிலர்.

(2) "தென்னிந்திய சிலாசாசனத் தொகுதி நான்கில் 388-ஆம் எண்ணிலுள்ள கருவூர்ப்பக்கத்துச் சிலையிலுள்ள வட்டெழுத்துச் சாசனத்தில்,

"ஸ்ரீ கூற்றருதை கொல்லி நிறுவன்
களகார்த்தி கோசமுடைக் கோசமும்,
ஐம்பெருங் குழுவும் சங்கமும்
இவை காத்தானடி என்தலை மேலன"

என வருதலான் வலியுறுதல் காண்க. 'கூற்றருதை' என்பது 'கூற்றகுதை' எனவும் 'கொல்லிநிறுவன்' என்பது 'கொல்லி நிருபன்' எனவும் கொள்ளலாம். பொறித்தார் பிழைப்பும் படித்தார் பிழைப்பும் இவையாகும். இதன்கட் களகார்த்தி கோசமுடைக் கோசம் என்பது கோசர்குலம் எனப் பொருள் படும்" (கோசர் பக். 32).

"இவ்வாறு முதற்கண் எழுதியவர்கள், பின் ஓரிடத்தில், "கருவூர்க்குக் கீழ்பால் மூன்றுகல் தூரத்தில் வண்டிவழியின் பக்கத்துக் கிடக்கும் வட்டெழுத்துள்ள ஒரு சிலையில்,

ஸ்ரீ "கூறறருதை கெல்லி நிருபன் களகா
.. .. . த்திகோச முடைக் கோசமு . . .
.... ...ஐம்பெருங குழுவு சங்கமிவை காத்தான்
"அடியென் றலேமேலன"

என்ற ஓர் சிதைநத வெண்பா உள்ளது சாசன வெளியீட்டால் அறியபபடுவது. இதன்கட் 'கூற்றருதை' என்பது 'அருதை எனபவன் கூற்று' எ-று சங்ககாலத்துச் செஙகுட்டுவனுக்கு நண்பினனுய், மோகூா மன்னற்குப் பகையாயிருந்த 'அறுகை' யைத்தான் இப்படிப் பிழைக்க எழுதினரோ என நினைபபுவருகிறது. பின்னே 'கெலலிநிறுவன்' என்பது 'கெலலிநிருபன்' என்பதாகும. கொல்லிநிருபன் சேரன் எனபது தெளிநதது.

"கொல்லியாண்ட குடவர் கோவே" என்பது சிலப்பதிகாரம். இதன்மேல் 'களகார'—'கழகரா' என்பதாகும்; 'கழகத்தவராக' என்பது பொருளாம். இதன்பின் இரண்டோரெழுத்து விடுபட்டிருக்கவேண்டும. அஙஙனம விடுபட்டாலும் (அ)ததி கோசமுடைக் கோசமும என்னும் தொடரை இவவிரண்டாமடி நன்கு தெளிவிபபதேயாகும் (கோசர் பக் 49, 50)"

இவ்வாறு எழுதியுளளார்கள். சாசனத் தொடர்கள் இரண்டும் ஒன்றே என என்றெண்ணுகின்றேம முதற்கண் 'கூற்றருதை' என்பதைக் 'கூற்றகுதை' எனவும், பின்னர்க் 'கூற்று அருதை' எனவும் கொண்டதன் காரணம் விளங்கவில்லே. 'அகுதை' வரலாறு எழுதியவிடத்தில் 'கூறறகுதை' என்றும், பின்னா 'அறுகை' என்றும் மாறுபட்டுக் கூறினர். முதற்கண் 'களகார்த்தி கோசம்' எனக்கொண்டு பின்னர் (எழுததில்லாதிருக்கவும பொருத்தமுற நிரப்பி) 'களகார' எனக் கொண்டதும் எதனுல் என விளங்கவில்லே.

இம் மாறுபாடுகளுக்குக் காரணம், ஆராய்ச்சியாளர் கோசர் வரலாறு பற்றிய குறிப்புக்களைக் குறித்த செப்பம் செய்தற்குமுன் காலம் கடந்தமையாக இருக்கலாம்.

(தொடரும்)

---

# மருட்கை

[புலவர், திரு. பொ. வே. சோமசுந்தரனார்]

அண்மையில் எமதூர்க்கு அணித்தாக உள்ள ஒரு கிராமத்தின்கண் நிகழ்ந்த தமிழ்க்கழக ஆண்டுவிழாவிற்குச் சென்றிருந்தேம். அவ்விழாவின்கண் சொற்பொழிவாற்றிய நண்பர்களுள் ஒருவர், இக்காலத்தே புதுவதாகத் தோன்றி உலகெங்கும் பரவிவருகின்ற பூதநூலறிவினையும், அதன் வியத்தகு சாதனைகளையும், பாரித்துப் பேசி நம் நாட்டினர் அப்புதிய அறிவினை ஆர்வத்துடன் வரவேற்று நன்கு பயின்று ஐரோப்பா அமெரிக்கா முதலிய மேலைநாட்டினரைப் போன்று முன்னேற்றம் பெறுதல் வேண்டும் என்றும், நாம் பகுத்தறிவோடு பொருந்தாத நம் பண்டைப் புராண முதலியவற்றில், நமது அருமந்த காலத்தைக் கழித்தல் கூடாதென்றும், மேலும் இக்கால விஞ்ஞான அறிவு நம் பண்டைக்காலத்துச் சான்றோருடைய, கடவுள், மறுபிறப்பு, கட்டு, வீடு என்பனபோன்ற நம்பிக்கைகளைத் தளர்த்தி வருகின்றதென்றும், பகுத்தறிவோடு பொருந்தாத மூடநம்பகங்கள் நம் நாட்டில் மலிந்து கிடக்கின்றன என்றும், அவற்றைப் புறக்கணித்தொதுக்கிப் பயன்மிகவுடைய விஞ்ஞான அறிவினைப் பெருக்கிக்கோடலே நாம் எதிர்காலத்தே இன்புற்று வாழ ஏதுவாம் என்றும், இன்னோரன்ன முறையில் நீண்டதொரு சொற்பொழிவாற்றினர்.

அந்நண்பர் கூறியபடி, மிகப்பழைய காலத்தே விலங்குகளோடு விலங்காய்க் காட்டினூடே குகைகளில் வாழ்ந்த மக்கள், இன்று விண்ணளாவிய பன்னிலை மாடங்களில் வாழ்வதும், சிறகா இல்லாதிருந்தும், வானிடை விரைந்து பறந்துபோதலும், பலவாயிரங் காவதத் தொலைவின்கண் உள்ளாரோடு வானொலியின் வாயிலாய் நொடிப்பொழுதில அளவளாவுதலும், நொடிப்பொழுதின்கண் எண்ணிறந்த மக்கள் வாழுமொரு கோனகரத்தை அழிக்கவல்லராதலும், விண்ணிலே சேய்மைக்கண் உள்ள செவ்வாய் மண்டில முதலிய அயல் மண்டிலங்கட்குச் செல்ல முயலுதலும், இன்னோரன்ன பிறவும் செய்யவல்லராதலை எண்ணுந்தோறும் அறிவுடையோர் வியப்படைவர் என்பது வாய்மையே. நாம் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் அப்புத்தறிவு உலகெலாம் பரவித் தனது நன்மை அல்லது தீமைகளைப் பயந்தே விடுதலும் தப்பாது. இப்புதிய பூதநூலறிவினைப் போற்றிப் புகழ்கின்ற அந்நண்பர் போன்றே, யாமும் அதனைப்

போற்றுவோம். அவர் ஆ! ஆ!! என வாயங்காந்து வியக்குமாறு யாமும வியபபோம். சிற்சில செவ்விகளில் வியப்பினால் நாம மதிமயங்கி ஒன்றனை மதிக்குமளவிற்குமேல் மதிததலும, மதித தற்குரியவற்றை மதியாமல் விடுதலும நம்மை யறியாமலே செயதுவிடுகின்றோம். மருட்கையின் இயல்பு அததகையது. புதுமையால் ஒரேலென உண்டாகும மருட்சியினால மதி கெடாதிருக்கும வன்மை, நுண்மாணுழைபுலமுடைய சான் றோாககு மட்டுமே கைவநததாம. ஏனையோர் புதுமை மருட்சி யில மதிமயஙகுதலே இயலபாகும்.

முன்னா நாம் கூறிய நண்பா, புதிய விஞ்ஞான அறிவின் சாதனைகளிலே—அவற்றின் புதிய ஆரவாரங்களிலே—மருண் டவராதல வேண்டும அஙஙனம மருண்டமையால், புதிய இவ் விஞ்ஞான அறிவு, நம பழைய சான்றோாகளின கடவுள் நம்பிககை முதலியவற்றை இக்காலத்தே தளாததி வருகின்ற தென்றும, நாம இன்பமுறறு எதிாகாலத்தே வாழவேணடு மாயின் இப்புதிய விஞ்ஞான அறிவினை வரவேற்றுப பெருககிக் கோடல் வேண்டும் என்றும மதிமைசாலா வறுமொழிகள் பலவும் வழஙகினார்.

ஒல்காப பெருமபுகழ்த தொல்காப்பியனாா, தமது தொல காப்பியத்தே மெய்ப்பாடு கூறுமிடத்து மருட்கை என்னும மெய்பபாட்டிற்குப் பிறபபிடம் கூறுவார்,

"புதுமை பெருமை சிறுமை யாககமொடு
மதிமை சாலா மருட்கை நான்கே" (மெய்ப்-சூ எ).

என நுண்ணிதிற் சூததிரம் செய்திருத்தலைக கற்ற மேலவர் யாரும உணாவர். அதன்கண் மருட்கைக்குப் புதுமை பிறப் பிடமாகக கூறியதோடன்றி, அம் மருட்கைதானும "அறிவினை உலக வழக்கினுள நின்றவாறு நிலலாமல் திரிதது வேறுபடுத்து வரும் இயலபிற் றென்பார் 'மதிமைசாலா மருட்கை' என நுண்ணிய அடைகொடுத்தோதியதும ஈண்டு நினைவுகூாந்து மகிழறபாலது. புதிய விஞ்ஞான அறிவின்கண் ஆற்றவும் மருட்கைகொண்ட இந் நண்பரின் சொற்கள் மதிமைசாலா மடமைச் சொற்களாதலை இனிச் சிறிது ஆராய்ந்து காட்டுதும்.

உலக மகா கவி என அறிஞர் எல்லாம் போற்றிய புலவர் பெருமகன் இரவீந்திர நாத தாகூர் என்பார், புதுவையிலிருநத அரவிந்த அடிகளாரைப் பற்றி வரைந்த கட்டுரையொன்றனில், "இக்காலத்தே மேலை நாட்டிற் றேன்றி வளர்ந்து வரும் பூததூலறிவு நம்மைக் கடவுளின் கருப்பக கிருகத்திற்கு அழைத்துச் செல்கின்றது,"

என நுண்ணிதின் வியந்துரைத்திருத்தலை யாம ஓதியுள்ளேம். ஒபபற்ற இவ் வறிஞர் பெருமானும, நம் நண்பர்போன்றே இப் பூதநூலறிவினை வியக்கின்றாராயினும, அவ் வியப்பு, அவர்தம் கூாதத அறிவினை நிலைதிரிதது மயககிவிடவில்லை மயங்காமை யோடன்றி அப்பூத நூலறிவின்கண்ணும, பிறர் அறிவிற்குத தெறறென விளஙகாத பெரு நன்மை ஒனறுளதாதலை அப் பெருமகன் நுண்ணிதின் எடுததுக்காட்டும போதோ அவ ருடைய நுண்மாண் நுழைபுலனின் கூாமைகண்டு எற்றோ இவர் திறம என யாம வியககவும வியக்கினறோம இனி இபபூத நூலறிவு நம்மைக கடவுளின் கருபபக கிருகத்திறகு அழைத் துச செல்கின்றதெனனும இப் பெரியார் சொலலின் விளக்கம் யாதென இஙகு யாம ஆராயவேண்டா. ஒரு பொருளைபபற்றி இருவா கொண்ட கருததுககள ஒன்றனை ஒன்று முரண்பட் டிருததலமட்டும யாம இவவிடதது உணாதல போதியதாம

இனி, மனிதனுககு வெளிபபுறத்தே விரிநது கிடக்கும் மண முதலிய இப் பூதஙகளின் இயலபுகளை நுண்ணிதின் ஆராய்வதாகிய இபபூத நூலறிவு, மனிதனின் அகததகாகிய உயிா இயலபினையும, அவ்வுயிர்க்கும அபபாலாகிய இறையியல் பினையும ஆராயநது கண்ட நம முனனையோா காட்சிகளை எவவாறு தவறுடையன எனறு காட்டவியலும்? ஒரு பொரு ளின் இயல்பினைத் தனிததனி ஆராய்வாருடைய கொள்கைகள தமமுள முரண்படுமாயின அவறறுள் சரியானதொன்று, தவ றான கொளகையைப பொய்பபடுததல் இயலபாம் இருவேறு பொருளகளைத தனித்தனி ஆராய்வாருடைய ஆராய்சசி முடிவு கள, ஒன்றை ஒன்று முரணபடுவ தெஙஙனம? அகக் கண் கொணடு ஆராய்ந்து நம பணடைச் சான்றோர் தம தெய்விக உணர்சசி வனமையாலே உணாநது கூறிய கடவுளியல், உயிரியல் முதலியன அவ வகக் காட்சித துறையில் சிறிதும கண் விழித் திராத பூதக காட்சிப புறவிழியாளரால தளர்ததப்படுகின்றன என்னும கூறறுப பொருளில் வறுங் கூற்றேயாம.

இக்கால விஞ்ஞானத திறவோர்களில் பலர் அகக் காட்சி அறிவினைப பொதுமுறையினும் ஒரு சிறிதும பெற்றிலாப் பெறறியர் ஆதலை கூர்நதுணாவாா நனகுணரலாம் இனி இவர்தம வியததகு சாதனைகள் தாமும், வெறும ஆரவார நீாமையுடையனவன்றி, உயிர் வேண்டும் இன்பததை அதறகு நல்கும ஆற்றலுடையனவும் ஆகமாட்டா இவற்றைப பரிநது வளாத்துக கோடலால் மக்கள் இன்புற்றமர்நது வாழ்தல் கூடும என எண்ணுவதும் மதிமைசாலா மருட்கையாலுண்டாய மடமையே யாகும. எற்றாலெனின், மெய்க்காட்சிததிறவோர்

கள், மக்கள் எய்தும் துன்பத்திற்கெல்லாம் ஏதுவாவது அவாதம் அகத்துறையும் பேராசையே ஆகலின், துன்பம் இல்லாது இன்புற்று வாழ எண்ணுவோர் எல்லாம், அப் பேராசை தூண்டியவழிப் புறப்பொருள்களின் நிகழும் பற்றினை ஒருவித் தமக்குத் தாமே அடங்கி அமைதல் வேண்டும் என நன்கு விளக்கிக் கூறியுள்ளனர்! அகக் காட்சித் திறவோருள் தலை சிறந்த நந் தெய்வப் புலமைத் திருவள்ளுவனார்,

"அவா வில்லார்க்கு இல்லாகும் துன்பம் அஃதுண்டேல்
தவாஅது மேன்மேல் வரும்,"

என்றும்,

"இன்பம் இடையறா தீண்டும் அவாவென்னும்
துன்பத்துள் துன்பங் கெடின்."

என்றும்,

"பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு"

என்றும் ஓதியுள்ள, இப் பொன்மொழிகள் மனிதன் துன்புறுதற்குரிய காரணத்தையும், அவன் அத் துன்பத்தினின்றும் தப்பி உய்தற்குரிய வழியையும் மிகவும் நுணுக்கமாக விளக்குகின்றன. இன்பம் வேண்டும் என்றும், துன்பம் ஒழிகவென்றும் விரும்பும் ஒவ்வொரு மனிதனும் இப் பொன்மொழிகளை உளத்திற்கொண்டு அவை கூறும் வழியே ஒழுகுதல்வேண்டும் இவை உண்மை என்பதில் ஐயுறுவார் அறிவிலிகளன்றி வேறிலர். இந் நெறி மறுக்கவியலா உண்மை நெறியெனின், புதிய விஞ்ஞானத் திறவோர் சாதனைகள் மனிதர்க்கு இன்பம் தருந் தகுதியுடையன அல்லவென்பதும் உண்மையே யாகும். ஏனெனில் அச் சாதனைகள் அனைத்தும் மனிதனுடைய பேராசையை மிகுவிக்கும் சாதனமாவதல்லால் அவாவறுத்தற்கு உதவுவன அல்லவே.

இனி, இவ் விஞ்ஞானம் இக்காலத்தே செய்திருக்கும் சாதனைகள் அனைத்தும் மனிதர்கள் தொழில் செய்வதற்குரிய கருவிகளாந்துணையே அன்றிப் பிறிதில்லை. இவ் வுலகியல் வாழ்விற் கருவிகள் இன்பத்தைமட்டும் விளைப்பனவுமல்ல. யாதாமொரு சிறந்த கருவியும் அதனைக் கையாளும் கருத்தாவினது மனநினைவிற்கேற்ற பயனையே விளைவித்தல் இயல்பு. கருவி சிறந்ததாகும்பொழுது கருத்தாவின் மனநினைவு விரைவில் செயற்பட்டு அதன் பயனும் மிகுதியாகலாம். ஆகவே, நன்மை தீமைகள் செய்யும் கருத்தாவைப் பற்றியதாக இருப்பதன்றிக்

கருவியைப் பற்றியனவாகாமை காணலாம். கருத்தா மனநலம் வாய்நதவனுயிருநது அவன் நல்ல செயலைச் செய்யுங்கால் சிறந்த கருவி அவனுக்கு நனமையை விளைவிக்க உறுதுணையாய் அமைநது பெரிதும் நன்மை தருவதாகலாம அதனைத தீயவன் கையாளின எனனும! பண்டைநாட் சானறோா மக்களினத்திற்கு நன்மை விளைவிக்கவேண்டின் அவரை மனநலம் உடையராக்குதலே முதற் கடமையாம எனக் கண்டு, அம் முயற்சியிலேயே பெரிதும முயன்றுவநதனா எனபதை, வரலாறுகளானும நம பண்டை நூல்களானும உணரலாம் அம் முயறசியின் பயனுக மக்கடகூட்டம சிறநத பண்பாடு பெறறு உயர்நதும் வந்தது. இற்றைநாள இம் முயற்சியே பெரிதும் புறக்கணிக்கப் பட்டு வருகினறது கடவுள நமபிக்கை போன்றவைகளே மக்கள் மனததுயரை மாற்றவல்லன இதனை,

"தனககுவமை யில்லாதான் தாள் சோநதாாக கல்லால்
மனககவலை மாற்றல் அரிது"

என்னும மெய்ம்மொழியானும உணரலாம் பூதஞானம் மிக்குப் பெருகி உளள அமெரிக்கா முதலிய மேலைநாடடின்கண் வாழும் மக்கள எல்லாம அவ் வறிவினபயனுக இன்புற்றமாநது கவலையின்றி வாழுகின்றுர்கள என்று யாரே கூறவல்லார்! அந நாடடினகண் ஆண்டுகளதோறும தமககுறற மனக்கவலையை மாற்ற வழியறியாது அதனைத் தாஙகி வாழவுமபொறுது தூக்கிட்டுத் தற்கொலை செய்வாா தொகை பெருகி வருகினறது என்னும் செயதியையும் யாம் செய்தித தாளகளிற் காண்கினறோம் அணுக்குண்டு முதலிய கருவிகள் மாநதர்க்கு இன்பம விளைபபது எவவாற்றுன? அண்மையில நிகழநத போர் காரணமாக, சப்பான நாட்டில் மக்கள் வறுமையுறறுக் கிழமை ஒன்றிற்கு நானூறுபோ வீதம் தற்கொலை செய்துகொள்கின்றனர் என்று ஒரு செய்திததாள் கூறக் கண்டுள்ளேம. இங்ஙனமெல்லாம் ஆராயநது காணுங்கால் இப புத்தறிவு மக்கள வாழ்க்கையில் இன்பததைச சோக்கும என்பது பொய்மமை என்றே தோன்றுகின்றது.

பண்டைநாள் உரோமாபுரியில, வாழ்ந்திருநத ஞானமுனிவராகிய சாககிரட்டீசு என்பவரின அடக்கமுடைமை கண்டு, அவரை உலகியலறியாதவர் என்றெண்ணிய சிலா, அந் நகரததே நிகழ்ந்த பொருட்காட்சிச் சாலைக்கு அழைத்துச் சென்று, ஆஙகுளள வியததகு பொருள்களைக் காட்டினராம். அக் காட்சியில, அம் முனிவர் பெரிதும் வியப்படைந்திருப்பர் என்று கருதிய அவர்கள், பெரியீர்! இப பொருள்களைப்பற்றித் தாங்கள்

யாது கருதுகின்றீர்கள்? என்று வினவியபோது, அம்முனிவர் "அம்மம்ம! வியப்பு! வியப்பு!! இவ்வுலகில் எனக்கு வேண்டாத பொருள்கள் எத்துணை ஆயிரம் இருக்கின்றன" என்று மறுமொழி கூறினாராம். சாக்கிரட்டீசின் இம் மறுமொழியின் கருத்து, உண்மையான இன்ப நாட்டமுடைய மனிதனுக்கு இவ்வறிய ஆடம்பரப் பொருள்களுள் ஒன்றேனும் வேண்டற்பாற்றன்று என்பதேயாகும். இன்றும், இப் புதிய விஞ்ஞானக் கருவிகளைப்பற்றி யாரும் அவர் மெய்யுரையையே மீண்டும் கூறிக்கோடல் மிகையன்று. உண்மையான மெய்வாழ்வு தலைப்படும் மனிதனுக்கு அவன் உடலோம்பிக்கொள்ள இறைவனால் அவனுக்கு அளிக்கப்பட்ட கால் கை முதலிய உறுப்புகளே சாலும். இன்பத்தின் இயல் கண்டு—அதனை எய்தும் நெறி கண்டு—ஒழுகி அதனைப் பெற்று மகிழ்வோர் எனில், நம் தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் திருவாய் மலர்ந்தருளிய தெய்வத் திருக்குறளாகிய மெய்ந் நூலொன்றே அமையும். மற்று இப் புதிய விஞ்ஞானிகளின் கருவிகளில்—குண்டூசி முதல் அணுக்குண்டிறுதியாகக் கிடந்தவற்றுள்—யாதொன்றும் அந் நல்லோனுக்கு வேண்டவே வேண்டா.

---

## ஆட்சி நிலை

[நெல்லை. திரு க சுப்பிரமணியன்]

நோய்வாய்ப் பட்டோன் யாக்கையின் நிலையைத்
திருத்தமா யறியா மருத்துவ னொருவன்
உயிர்வதை செய்தல் ஒப்ப, நம் ஆள்வோர்
அனைவரும் வினைபுரிந் துலகினில் வாழப்
பகுத்துண வளித்துப் பண்பொடு சிறக்க
இயற்கைச் செல்வம் எல்லாம் பொதுவே!
தனிமனி தற்கில இனியெப் பொருளும்
புதுமை உலகினில பொதுமை பேண
வழிவகை எண்ணித் துணியார்
அழிவும் பழியும் அடைகின் றோரே!

---

# குருகுல வாழ்க்கை

[வித்துவான், திரு. செ. வேங்கடராமச் செட்டியார்,
S. V. O. கல்லூரி, திருப்பதி.]

குருகுலம் என்பது ஆசிரியரின் இருப்பிடம் என்னும் பொருளது 'ஊராண்ணோர் தேவகுலம்' என்புழியும் 'குலம்' என்பது இருப்பிடம் எனனும பொருளில் வநதுளது காண்க. தேவகுலம - தேவாலயம. அககாலததுக குருவின் வீடே கலை பயில் கழகமாக அமைந்தமையின் 'மாணவா கலைபயிலும பள்ளி' என்ற பொருளில் 'குருகுலம' என்ற சொல் வழஙகிவந்துளது. நம் நாட்டுப் பழங்கால மக்கள், இக் குருகுல முறையில்தான் கல்வி பயின்றாகள் இக்காலக் கலவி முறையோடு அக்காலக் குருகுலமுறையை ஒப்பிட்டுப்பாாததால் மலைக்கும் மடுவிற்கு முளள வேறுபாடு காணப்படும.

கல்வி பயிலுமுறை நாளுக்குநாள முன்னேறிக்கொண்டு வருவதாக நாம எண்ணுகின்றோம. வானொலிமூலம கலவியைப் பயிற்றுவதே சிறந்தமுறை என்றும் நமப நேரலாம் ஆசிரியாகள் பலர் தேவையின்றி—அவாகட்குத தரும ஊதியமாகிய பணச்செலவுமின்றிச சுருங்கிய செலவில் வானொலிமூலம் கல்வி கற்பிககமுடியும் என்று காட்டுவார் உளராயின் நாம் நம்ப வேண்டியதுதானே! இப்பொழுது காணபபடும் கல்விமுறையில் ஆசிரியர்க்கும் மாணவர்க்கும் நெருங்கிய தொடர்பில்லை. குறிதத காலததில குறிப்பிட்டதோரிடத்தில் மாணவாகளும் ஆசிரியர்களும ஒருங்கு சோவர் குறிப்பிட்ட பாடஙகளை ஆசிரியர் பயிற்றுவா. மாணவருள் சிலர் பயிலவர், சிலர் வேறு சிந்தையிலோ உறக்கத்திலோ ஆழ்ந்துவிடுவார்கள். குறித்த காலமுடிந்தவுடன் அவரவாகள் இருபபிடம் நோக்கிச் செல்வார்களா. மாணவர்களா ஆசிரியர்களிடத்தில் ஆழ்நத அன்பும் அடக்கமும் உடையவராக இருக்கவேண்டுமென்ற கட்டுப்பாடு இல்லை ஆசிரியர்களும் மாணவர்க்குத் தநதைபோல் அன்பு காட்டி அறிவூட்டும நெறியுமில்லை கல்லூரி வகுப்புகளில் ஓராசிரியர் நூற்றுக்கணக்கான மாணவர்கட்குப் பாடம் கற்பிக்கும் நிலை ஏற்படுவதால் அவர்கள் எல்லாரிடமும் ஆசிரியர் அன்புகாட்டி அவர்கள் ஒழுக்கத்தை யுயர்த்துவது இயலுவதா யில்லை. அத்துணை மாணவர்களும் ஆசிரியர்பால் அன்பும் அடக்கமுமாக இருந்து பழகவேண்டிய நிலையும் தேவைப்படவில்லை; இயலவுமியலாது.

மாணவர்களுள் சிலர் ஒழுக்கத்தில் உயர்ந்தவராக விளங்கினால் அந்நிலை ஆசிரியரால் வந்ததாகக் கருதமுடியாது. மாணவர்களில் சிலர் தீயொழுக்கமுடையவராகத் திகழ்ந்தாலும் அதற்கு ஆசிரியர்கள் காரணமாகமாட்டார்கள். மாணவர்கள் ஆசிரியர்களோடு தொடர்புடையராயிருப்பது ஒருநாளில் சில மணிநேரமே. அவர்கள் பலமணி நேரத்தை இப்பரந்த வுலகில் விரும்பியாங்குச் செலவிடுகின்றனர். எத்துணையோ தொடர்புகள்—எத்துணையோ பழக்கவழக்கங்கள்—எத்தனையோ சூழ்நிலைகள் அவர்கட்கு உண்டாக வழியுண்டு. செய்தித்தாள்களும் சஞ்சிகைகளும் சினிமாக்களும் வானொலிகளும் மாணவர்கள் கருத்தைக் கவர்ந்து வேறுவழியில் திருப்ப வழியுண்டு. சூழ்நிலை நல்லதாக வாய்க்கப்பெற்ற மாணவர்கள் நல்லொழுக்கமுடையராய்—நல்லறிவினராய்த் திகழ்கின்றார்கள். தகாத சூழ்நிலையில் பழகுகின்றவர்கள் ஒழுக்கங்கெட்டு அறிவுகெட்டு அல்லலுறுகின்றனர். குறிப்பிட்ட கல்வியைக் கற்குமிடமாகமட்டில இக்காலக் கல்வி நிலையங்கள் அமைகின்றனவேயன்றி ஆசிரியர்க்கும் மாணவர்க்கும் நெருங்கிய தொடர்பை யுண்டாக்கி மாணவர்க்குக் கல்வியொடு ஒழுக்கத்தையும் கற்பிக்கும் உயர்நிலையங்களாகத் திகழவில்லை. இது இக்காலக் கல்விமுறை.

பழைய குருகுல வாழ்க்கை இத்தகையதன்று. ஓராசிரியரிடத்தில் ஒருசில மாணவர்களே பயிற்சி பெறுவார்கள். அம்மாணவர்கள் வாழ்க்கை ஆசிரியரையே நோக்கிநின்றது. மாணவர்கள் ஆசிரியரிடமே ஒப்படைக்கப்பெற்றார்கள். மாணவர்கள் ஆசிரியரது நிழலைப்போல நீங்காது உடனுறைந்தார்கள். ஒரு மாணவன் பிறந்த சூழ்நிலை கெட்டதாக இருப்பினும் அவன் கல்வி பயின்ற குருகுலத்தால் சிறந்தோனாவான். புலால் உண்ணும் குடும்பத்தில் பிறந்த ஒரு மாணவன், தன் ஆசிரியர் புலவுநீக்கிய உணவினராக இருத்தலைக் கண்டு அவர் போலவே புலாலுணணாது தூயவனாக மாறிவிடுவான். பிற்காலத் தன் குடும்பத்தையும் அங்ஙனமே திருத்துவான். அரசர் குடியிற் பிறந்தவரும் ஆண்டி வயிற்றில் பிறந்தவரும் குருகுலத்தில் ஒரு தன்மையராகவே மதிக்கப்பட்டனர். பிறப்பு காரணமாகவோ செல்வச் சிறப்புக் காரணமாகவோ வரும் உயர்வு தாழ்வுகட்கு அங்கு இடமில்லை. எல்லோரும் ஆசிரியர்க்குத் தொண்டுபுரிய வேண்டும். கல்விகற்கும் நேரமேயன்றி மற்றை நேரங்களிலும் ஆசிரியரை அகலாது தொடர்ந்திருந்து அவரது பண்பு ஒழுக்கங்களில் பயிற்சிபெற்றனர்.

ஆசிரியர்க்குத் தொண்டுசெய்வதைத் தெய்வத்தொண்டாக மதித்தனர். 'எழுத்தறிவித்தவன் இறைவனாகும்' என்பது

மாணவர்களுடைய திடமான நம்பிக்கையாக இருந்தது. 'உலகத்து உயர்ந்த தகுதியுடையவர் ஆசிரியரே; அவரால் ஆகாத செயல் யாதுமில்லை' என்பது அம்மாணவர்கள் எண்ணமாக இருந்தது. இத்தகைய நம்பிக்கையால் மாணவர்கள் கல்வியாலும் ஒழுக்கத்தாலும் சொல்லாலும் செயலாலும் ஆசிரியரைப்போலத் திகழவேண்டும் என்று ஆர்வங்கொண்டு முயன்றனர். ஒரு கதை சொல்வதுண்டு: கடலைக் கண்டுவந்த ஒருவன், 'கடல் மிகப் பெரியது; அதை யாரும் கையால் நீந்திக் கடக்கமுடியாது' என்று ஒரு மாணவனை நோக்கிக் கூறினனும். அதைக்கேட்ட அம்மாணவன், 'எங்கள் ஆசிரியரால் கூடவா கடக்கமுடியாது?' என்று கேட்டானும் இந்தக் கதை ஒரு வகையில் எள்ளி நகையாடத் தக்கதுபோல் தோன்றினும் ஒரு பெருஞ்சிறப்பு அதில் அமைந்துள்ளதை யாருங் காணமுடியும் அம்மாணவன் ஆசிரியர்பால் அளவற்ற நம்பிக்கையுடையவனுக இருந்தான் என்பதுதான் அச்சிறப்பு. இத்தகைய நம்பிக்கை அம்மாணவனை உயர்த்துந்தகையதே ஆயின், ஆசிரியர் சிறந்த தகுதியினர் ஆதல்வேண்டும். ஆசிரியர், அறிவாலும் ஒழுக்கத்தாலும் பிறவற்றாலும் உயர்ந்தவராயின் அவ்வாசிரியரை நம்பி ஒழுகும் மாணவனும் உயர்நிலையடைவது திண்ணம். அறிவொழுக்கங்கட்குத் தந்தை ஆசிரியரே என்பது அக்கால மாணவர் கொள்கையாக இருந்தது. ஆசிரியர் ஒழுக்கநிலையை அப்படியே பின்பற்றி வாழ்க்கை நடத்துவது அம்மாணவர் சிறப்பாக இருந்தது.

இத்தகைய குருகுல வாழ்க்கையிலிருந்து குருவைப்போல் ஒழுக்கத்தில் சிறந்துவிளங்கின மாணவர்க்கு எடுத்துக்காட்டு வேண்டுமாயின் இராமபிரானைக் கூறலாம் கம்பர், இராமபிரானுடைய குருகுல வாழ்க்கையைச் சுருக்கமாகத் தக்கவிடத்தில் விளக்கியுள்ளார்.

இராமபிரான், தசரதச் சக்கரவர்த்தியின் தவப்புதல்வன். வசிட்டமுனிவரையே குருவாகக்கொண்டு கலைபல கற்றுக் கலைநலத்தாலும் ஒழுக்கநலத்தாலும் சிறந்து விளங்கினவன். அவன் வசிட்ட முனிவன் கட்டளையின்படியே கௌசிக முனிவன் வேள்வி காக்கத் தம்பியொடு கானம் நண்ணிக் கௌசிகமுனிவர் வேள்வியை இடையூறொழித்து முற்றுவித்தான். பின் அக் கௌசிகமுனிவர் விரும்பியவண்ணம் மிதிலையை நண்ணினன் அம் முனிவரொடு. மிதிலையில் கன்னிமாடத்தில் இருந்த சீதையின் எழிலைக் கண்ணுற்றுக் காதல் கொண்டான். பின்னர் சனகனைக்காண முனிவரொடு தம்பியுடன் சென்றான். சனகன், இளைஞராகவுள்ள இராம இலக்குவர்களைக் கண்டு அவர்

முகத்தழகைத் தன்னிரு கண்களால் பருகுவான்போல ஆர்வ மொடு பார்த்து, 'அவ் வெழில்வாய்ந்த அரசிளங்குமரர் யாவர்?' எனக் கௌசிகமுனிவரை வினவினன். அம் முனிவரும் 'இவர், பெருந்தகைமைத் தயரதன புதல்வர்' என்று சுருங்கச்சொல்லிப் பின் சூரியன் முதலாகவந்த அவர் குலமுறையை விளக்கிக் கூறுகின்றார்

அங்ஙனம் கூறுகின்றவர், சீதையைப் பெற்ற சனகன் உள்ளத்தில் எழுகின்ற எண்ணங்கள் எவையென வுணர்ந்து அவன் மனம் நிறைவுறும் வகையில் சில சொல்லுகின்றார். நீண்ட காலமாக மணமின்றி இருக்கும் சீதை இராமபிரானுக்கே மனைவியாகத் தக்கவள் என்பதையும், அவள் பொருட்டாக வைத்துள்ள வில்லை வளைக்கத்தக்க ஆற்றலுடையவன் இராமனே என்பதையும் நன்குணர்ந்தவர் கௌசிகமுனிவர். இக் கருத்தினாலேயே தம் வேள்வி முடிந்தும் இராமபிரானை அயோத்திக்கு அனுப்பாது மிதிலைக் கழைத்துவந்தார். தம் குறிப்பைச் சனகனிடத்தும், 'விருந்தினர்கள் நின்னுடைய வேள்வி காணிய வந்தார் வில்லுங் காண்பார்' என்று முதலில் குறிப்பிட்டுள்ளார்.

சனகன் தன்னொரு மகளை இராமபிரானுக்குக் கொடுக்க வேண்டுமாயின், இராமபிரான் வில்லை வளைத்தாக வேண்டும். வில்லை வளைத்தாலும், சிறந்த குலத்தில் பிறந்தவனாய் ஏகதார விரதத்தைக் காக்கவல்ல குடிப்பிறப்பு உடையவனாய இராமபிரான் இருந்தாலதான் சனகன் தன தவப்புதல்வியை மன முவந்து மணஞ்செய்து தருவான் சீதையை மணக்கும் இராமபிரான் காதலைப் பகிர்ந்துகொள்ள வேறெவரும் இலராதிருக்க வேண்டும் என்று பெண்ணைப்பெற்ற சனகன் உள்ளம் நினைப்பது இயற்கைதானே! 'இராமபிரான் வில்லை வளைத்தாலும் சூரிய குலத்தில் பிறந்து சிறந்தோன ஆனாலும் பல மனைவியரையுடைய தசரதனுக்கு மகன்தானே! 'தந்தை யறிவு மகனறிவு' என்பார்களே! தந்தையைப்போலவே இராமபிரானும் பல மனைவியரை மணக்கும் எண்ண முடையனாயின் நம் செல்வப் புதல்வி சீரழிவாளே! என் செய்வது?' என்று சனகன் உள்ளம் ஏங்குவது இயற்கைதானே? இதையெல்லாம் எண்ணிப் பார்த்து அநுபவமிக்க கௌசிக முனிவர், சனகன் மனநிறைவு பெறும்வண்ணம் சூரியகுலத்தின் சிறப்பையெல்லாம் சொல்லித் தயரதனைப்பற்றிக் கூறமிடத்து,

"திறையோடு மாசிறைஞ்சுஞ் செறிகழற்கால் தயரதனும்
பொறையோடு தொடாமனத்தான் புதல்வரெனும் பெயரேகாண்
உறையோடு நெடுவேலா யுபநயன விதிமுடித்து
மறையோடு வித்திவரை வளர்த்தானும் வசிட்டன்காண்."

என்று கூறிச் சனகன் ஐயத்தைப் போக்கிவிட்டார் முனிவர்.

'உறையோடு நெடுவேலாய்' எனச் சனகனை விளிக்கின்றார் முனிவர். போர் இல்லாமையால் உறையின்கண் தங்கிய வேலை யுடையவன் எனச் சனகன் திண்மையை விளியிலேயே விளக்கி விட்டார் முனிவர். சனகனைக் காட்டிலும் தயரதன் சிறந்தவன் என்பதைத் "திறையோடு மாசிறைஞ்சும் செறிகழற்கால் தயரத னும் பொறையோடும் தொடர் மனத்தான்" என்ற தொடரால் விளக்கினர். திறைப் பொருளோடு அரசர் பலர் வணங்கத்தக்க கால்களையுடைமை, எதிரின்றி மன்னரையெலாம் வென்றடக்கிய தயரதன் போர்த்திண்மையை விளக்குதல் காண்க. மன்னர் பலர் பகைத்திறம் பூண்டு மிகைத்திறஞ் செய்தாராயினும் தயரதன் வலியறிந்தபின் திறைப்பொருளோடு அவர்கள் வணங் குவாராயின் அவர் பழைய தவற்றை மனங்கொள்ளாது பொறுமை பூண்டு மன்னித்தருளுவான் என்பதை விளக்கவே 'பொறையோடுந் தொடர் மனத்தான்' என்று கூறினர். இனிச் சனகன், தன் மகள் புக்ககம் மன்னர் பலர் வணங்கத்தக்க செல் வச் சிறப்புடையதெனவும் தன் மகளை மருமகளாகப் பெறுதற் குரிய தயரதன், சீதை அறியாமையால் செய்யுங் குறைகளைக் கண்டு சினவாது பொறுமை காட்டிப் பெருமைபடுத்தத்தக்கடிய வன் எனவும் நினைந்து உளம் பூரிக்கவேண்டி இங்ஙனம் கூறினர் எனினும் அமையும். இவ்வாறு கூறியதால் வீரத்தாலும் செல் வத்தாலும் பொறுமையாலும் தயரதன் சிறந்தவன் என்பது பெறப்பட்டதேயொழிய பல மனைவியரையுடையன் தயரதன் என்னும் குற்றத்திற்குக் கழுவாய் யாதும் விளம்பப்படவில்லை. ஆகவே, அத்தகைய தயரதன் புதல்வனாகிய இராமபிரானும் செல்வத்தால் வீரத்தால் பொறுமையால் தந்தையைப் போன் றவனுதல்போலவே பல மனைவியரை மணப்பதிலும் அவனை யொத்து விளங்கினால் என் செய்வது என்ற சனகன் ஐயத்தைப் போக்கவே, 'தயரதனும் பொறையோடும் தொடர் மனத்தான் புதல்வரெனும் பெயரேகாண்' என்று கூறுகின்றார் முனிவர். இவ்வாறு கூறியதால் இராம இலக்குவர்கள் தயரதன் புதல்வர் என்பது பெயரமாத்திரையே யாதலும் உண்மையில் வேறு யார்க்கோ புதல்வராதலும் பெறச் செய்தார்.

உண்மையில் இவர்கள் யார்க்குப் புதல்வர்கள் என்பதை 'உபநயனவிதி முடித்து மறையோதுவித்திவரை வளர்த்தானும் வசிட்டன் காண்' என்ற தொடரால் விளக்கினர். முகத்தி லிருக்கும் ஊனக் கண்களினும் சிறந்ததாய் அகக்கண்ணுய ஞானக்கண்ணைத் திறப்பதையே உபநயனம் என்பர். 'இத்தகைய உபநயனச் சடங்கினை இராம இலக்குவர்க்கு முடித்துவைத்து வேதங்களை யோதுவித்து வளர்த்த தந்தை

வசிட்டனே' என்பது பொருள். இங்ஙனம் கூறினமையால் சனகன் ஐயம் எவ்வாறு நீங்கும் எனின்? கூறுவேன்

ஒருவர்க்கு ஒழுக்கம் சிறப்பது பிறப்பாலும் உளதாகலாம்; சூழ்நிலையாகிய சிறப்பாலும் உளதாகலாம் "தந்தை யொப்பான் மகன்" என்பது உண்மையாக வேண்டுமாயின் அம் மகன், தன் தந்தையை நீங்காதிருந்து அத் தந்தையின் சூழ்நிலையில் வளர்ந்திருத்தல் வேண்டும் இங்ஙனம் வளரும் குழந்தைகள் தந்தையின் தன்மையைப் பெறுதல் இயல்பே இளம்பருவத்தில் தந்தையைப் பிரிந்து வேறொரு சூழ்நிலையில் வளர்ந்த குழந்தைகளிடம் தந்தையின் தன்மை படிதல் இயலாததே. இத்தகைய குழந்தைகட்குத் 'தந்தை யறிவு மகனறிவு' என்பது பொருந்தாது. வள்ளுவரும், "நிலத்தியல்பால் நீர் திரிந்தற்றாகு மாந்தர்க், கினத்தியல்ப தாகு மறிவு" என்று, சூழ்நிலையின இயல்பால் மாந்தர்க்கு அறிவு வேறுபடும் என்பதை விளக்கியுள்ளார்.

இராம இலக்குவர்க்குத் தந்தை தயரதன் என்பது பெயரளவில்தான் என்றது, அவர்கள் வளர்ச்சி தயரதனுடைய சூழ்நிலையில் உருவாகவில்லை என்பதையே யுணர்த்திற்று. இராம இலக்குவர்கள் வசிட்ட முனிவருடைய வீட்டில்—அவர் சூழ்நிலையில் வளர்ந்தார்கள். வசிட்ட முனிவரே ஒழுக்கத்திற்கும் அறிவிற்கும் தந்தையாவார். எனவே பல மனைவியரையுடைய தயரதன் போல அவன் புதல்வனாகிய இராமபிரானும் பல மனைவியரை மணக்கும் பண்பினனாகான் அறிவுத் தந்தையாகிய வசிட்டர்போல ஒரு மனைவியேயுடையனாவான் என்பது விளங்குமன்றோ? இராமபிரான் வசிட்டர்போல ஏகதார விரதமுடையனாவான் என்பதால் அவனுக்கு மனைவியாகப்போகும் சீதையும் வசிட்டர் மனைவியாகிய அருந்ததிபோலக் கற்பிற் கரசியாய் கற்புடை மாதரால் வணங்கத்தகும் கற்புத்தெய்வமாய் விளங்குதற்கு வாய்ப்புண்டு என்பதும் விளங்குமன்றோ?

இராமபிரான், பெற்ற தந்தையின் பெற்றியையடையாது வளர்த்த தந்தையாகிய வசிட்டரின் பண்பினையே மேற்கொள்வான் எனக் கௌசிகனார் குறிப்பால் பெறவைத்ததற்கேற்பவே, வில்லை வளைத்துச் சீதையை மணக்குங்கால் அவ்விராமபிரான்,

"இந்த இப்பிறவிக் கிருமாதரைச் சிந்தையாலுந் தொடேன்"

என்ற செவ்வரத்தைத் தந்ததாகச் சீதை அநுமானுக்குக் கூறிய வாற்றான் அறியலாம். அங்ஙனம் சீதைக்குக் கூறியதோடமையாது இராமபிரான் தன் வாழ்க்கையில் சீதையல்லாத பிற மாதரை மனத்தாலும் நினையாமல் வாழ்ந்தான் என்பதைக்

தம்பராமாயணத்தால் நன்கு தெளியலாம. சூர்ப்பனகை அழகிய உருவந்தாஙகி வந்து இராமபிரானிடம் தன் காதலைப் புலபபடுத்தவும, அதற்கவன இசையாது வெறுத்தமையால் அவ்விராமபிரானின் ஏகதார விரதததையறியலாம். மேலும் சீதையை இராவணன எடுத்துச்சென்று பத்துத்திங்கள்காறும் அசோகவனததில் சிறை வைததிருநதபோதும இராமபிரான் அச்சீதையை நினைநது புலம்பினன் அன்றி வேறொரு மாதினை மணக்க எண்ணமையும, இராவணனைக் கொனறு சீதையை மீட்டு அயோததியில அரசாணடபொழுது வண்ணன் கூறிய இழிசொலலாற்றாது சீதையைக் கருபபததுடன் காட்டிற்கு அனுபபியபின்னும வேறொரு பெணணைத தனக்குரிய அரசியாக்கிக் கொளளாமையும காணக. அககாலத்து அரசன் ஒருவன பல மனைவியரை மணப்பது தவறாகக் கொள்வதில்லை. அஙஙனமாகவும் மன்னர்க்கு மனனனாய் பெருஞ்செல்வத்தில் வாழ்நத இராமபிரான் சீதையைப பிரிந்து வருநதாது வேறொரு மஙகையை மணநது மகிழச்சியான வாழ்க்கை நடத்தியிருக்கலாம் அஙஙனம செய்துகொள்ளாமைக்குக காரணமென்னை? குருகுல வாழ்க்கையால் பெறற ஒழுக்கமுறையன்றோ காரணமாகின்றது. பல மனைவியரை மணநத தயரதன் மகனாயிருநதும் வசிட்டராகிய குருவின இலலததில பயின்ற பயிற்சியால் இராமபிரான் ஏகதாரவிரதனாகவே வாழ்நதான் எனறால் குருகுல வாழ்க்கையின் பெருமையை எனனென்று புகழ்வது?

நம் நாட்டில இத்தகைய குருகுலங்கள் இதுபோழ்து இருப்பின் நாடு சிறக்கும; ஒழுக்கம உயரும்

---

## தமிழ் மகவு தாலாட்டு

[புலவர், திரு. ராம. பெரிய கருப்பன்]

(முன் இதழ் உஎஅ-ஆம் பக்கத் தொடர்ச்சி)

வெல்லம் இனிககுமென்றும் வேம்பு கசக்குமென்றும்
சொல்லப் பழகவில்லை சுவைததுப் பழகிவிட்டாய!

தாய்ப்பால் அமுதுணவோ தகுமுணவைச் சுவைப்பதற்கோ
வாய்ப்பாகு ஊற்றெடுதது வடிய முகமபார்த்தாய்!

தாலாட்டித் தூஙகவைததுத் தளிர்முகத்தைப் பார்க்கையிலே
மேலான தாய்பதற மெல்லச சிரிததுமேன்?

கண்வளராய என்றன் கருததை வளர்த்திடுவாய்,
பண்வளர்க்கும் பசுந்தமிழே, பாலவடிவே, தாலேலோ!

---

# திருக்குறள் அகவல்

[வித்துவான். திரு. மா. வேதாசலம், எம் ஏ., பி ஓ எல்]

(சிலம்பு - உ அ. பரல் - ரு, பக்கம் உ௬க தொடர்ச்சி)

## உ. வான் சிறப்பு

1. வானம் என்றும் வழங்கி நிற்ப
வையம் நன்கு வருதலான்
அமரர் அமிழ்தம் அன்ன தகைத்தே

2. உண்பார்க்(கு) உறுசுவை உணவுகள் உறுவித்(து)
உண்பதூஉம் உண்ணும் உயிரார்க்(கு)
உணவா உதவும உயர்புகழ் உறையே.

3. பெய்யுங் காலைப் பெயாது நிற்பின்
உய்யும் உயிரை உடற்றும
மாக்கடல் சூழ்ந்த மாநிலப் பசியே.

4. உழுதொழில் ஆற்றும் உழவர் தாமும்
உழுதல் செய்யா(து) ஒழிவர்
மாரி எனும்பயன் மன்னுக் காலே

5. கெடுத்தல் செய்வது கெட்டார்த் துணையாய்
எடுத்தல் செய்வ(து) எல்லாம
வல்ல(து) என்ப வான்வீழ மழையே

6. விசும்பு நீர்த்துளி வியன்நில மருங்கின்
அசும்பல் செய்யின் அல்லதை
பசும்புல் தலையும பார்த்தல் அரிதே

7. அளவில் கடலும் அதனியல் குறையும்
வளமழை தரூஉம் வான்புயல்
புனலை முகந்து பொழியா தெனினே.

8. விண்ணோர்க் காக வேற்றோர் எடுக்கும்
சிறப்பும பூசையும் செல்லா
பெருநிலத்(து) எழிலி பெய்யாக் காலே

9. தானம் என்று தவம(து) என்று
ஆயவை இரண்டும் அசையா
வானம் உலகில் வழங்கா தெனினே.

10. எனைத்துணை மேம்பா(டு) எய்ந்தார் தமக்கும்
நீரின்(று) உலகியல் நிலவா(து)
ஆயின் வானின்(று) அமையா தொழுக்கே.

## ௩. நீத்தார் பெருமை

1. தமக்குரித் தாய தகைமைக் கண்ணே
பிறங்கி நீத்தார் பெருமை
விழுமிய விரும்பும் வியனூல் துணிவே.

2. நீத்தார் பெருமை நெஞ்சொடு படுத்து
வரையறை செய்யின் வையத்(து)
இறந்தார் எல்லாம் எண்ணி அற்றே.

3. இருமை வகையினை இருளற நாடி
இம்மைத் துறவறம் ஏற்றார்
பெருமை ஒன்றே பிறங்கிற்(று) உலகே.

4. திண்மை என்னும் தீதுதீர் தோட்டியான்
ஐம்பொறி யானை அடக்குவான்
வரன்எனும் வைப்பின் வளம்பெறு வித்தே.

5. ஐம்புலன் செல்லும் அவாஅ அடக்கியோன்
வன்மைக்(கு) அகன்ற வானுறை
சான்றோர் இறைவன் சாலும் கரியே.

6. செய்தற்(கு) எளியன செய்யா ராகி
அரியவை ஆற்றுவார் ஆன்றோர்
அல்லார் அவற்றை ஆற்று தாரே.

7. ஒளியும் சுவையும் ஓசையும் ஊறும்
நாற்றமும ஆகிய நற்புலக்
கூற்றினை ஆய்வான் குறிப்பிற்(று) உலகே.

8. நிறைமொழி உடைய நீத்தார் பெருமை
மானிலம் வழங்கும் மறைமொழி
கண்கூ டாகக் காட்டி விடுமே.

9. நற்குணம் என்னும் நன்மலை ஏறி
விளங்கி நீத்தார் வெகுளி
கணமே யானும் காத்தல் அரிதே.

10. அந்தணர் என்போர் அறவோர் ஆவர்
எல்லா உயிர்கள இடத்தும்
மல்லல் தண்ணளி மணந்த லானே.

## ச. அறன் வலியுறுத்தல்

1. செய்தற் கரிய சிறப்பும் செல்வமும்
அடையத் தருமால்; அதனால்
அறத்தின் மிக்க ஆக்கம் எவனோ ?

2. ஆன்றோர் புகழும் அறத்தின் மிக்க
ஆக்கம் இல்லை; அதனை
நீக்கி நிற்றலின் நெடுங்கே டின்றே.

3. தத்தமக் கியலும் தகையான் நின்றே
எத்திறத் தானும் என்றும்
ஒத்த நல்லறம் ஓவாச் செயலே.

4. மனத்துக் கண்ணே மாசிலன் ஆதல்
அனைத்தே அறமென்(று) அறைப;
ஆகுல நீர அஃதல பிறவே.

5. அவாசினம் கடுஞ்சொல் அழுக்கா றென்னும்
நான்கும் கடிந்து நன்கே
ஆற்றுதல் அஃதே அறமெனப் படுமே.

6. இளையம் ஆகலின் இறக்குங் காலத்(து)
ஆற்றுவம் அறமென் றது
போற்றிச் செய்க பொன்றாத் துணையே.

7. அறத்தா(று) இஃதென்(று) ஆக மத்தான்
செப்பல் வேண்டா சிவிகை
பொறுத்தான் ஊர்ந்தான் பொருந்திய சான்றே.

8. அறம்செய் யாமல் அழியுநாள் இன்றி
என்றும் ஒருவன் இயற்றின்
அஃதால் வாழ்நாள் அடைக்கும் கல்லே.

9. இல்லறத் தானே இயன்று வரலே
இன்பம் ஆகுமற் றெல்லாம்
புறத்த வாகும் புகழும் இலவே.

10. செய்தற் பாலது செம்மை யாய
நல்வினை என்றே நவில்ப
அல்வினை என்ப(து) அழிதற் பாற்றே.

---

# யாரால் மழை பெய்கிறது ?

[மயிலை. திரு. சீனி. வேங்கடசாமி]

மழையின் பெருமையையும் இன்றியமையாமையையும் உலகத்திலே எல்லா மக்களும அறிநதிருக்கிறாகள். மழையின் சிறபபை ஏனையோர் அறிநததைதவிட மிக நன்ருக அறிந்தவர் தமிழரே. ஏனென்ருல், தமிழ் வேதம எழுதியருளிய திருவள்ளுவ நாயனுா வான் சிறப்பு என்னும ஒரு அதிகாரம் வகுத்து அதில மழையின் சிறபபை எடுததோதினர் சிலப்பதிகாரம் எனனும் ஆதித் தமிழ்க காவியததை எழுதிய இளங்கோ அடிகள்,

> "மாமழை போற்றுதும மாமழை போற்றுதும்
> நாமநீா வேலி யுலகிற் கவனளிபோல்
> மேனின்று தான்சுரதத லான"

என்று மழையைப் போற்றினர். இவ்வாறு மழையைப் போற்றிச சிறப்பிததவர் தமிழரைத தவிர வேறு எமமொழியாளர் உளா? யாமறிநதவரையில் ஒருவரும் இலா.

பறவை விலங்கு மககள முதலிய எல்லா உயிர்களும் உலகத்திலே உயிர்வாழ வேண்டுமானல், புல் பூண்டு செடி கொடி மரம் ஆகிய தாவரங்கள் உலகத்தில் செழித்து வளர வேண்டும. ஓரறிவுயிராகிய மரம செடி புல் பூண்டுகள் இல்லையானல், ஈரறி வுயிா முதல் ஆறறிவுயிர் வரையில் எந்த உயிரும் உலகததிலே உயிர்வாழ முடியாது. உலகம் முழுவதிலும் உளள தாவரங்களாகிய மரம செடி கொடி புல் பூண்டுகளை ஒரேநாளில் முழுவதும் அழித்து விடுவோமானல், அப்பொழுதே உலகத்தில் வாழும ஏனைய உயிர்களள எல்லாம் மாய்ந்து உலகததில உயிாகளே இலலாமற் போகும் எனவே ஓறறி வுயிராகிய தாவரஙகளை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது ஏனைய உயிர்களின் வாழ்க்கை எல்லா உயிர்களுக்கும் ஆதரவாக உள்ள தாவரங்களை உண்டாக்கி அவற்றை நிலைபெறச் செய்வது மழை. இதனல் அன்றே,

> "விசும்பின் துளிவீழி னல்லால் மற் ருங்கே
> பசும்புல தலைகாண் பரிது." (திருக்குறள் : கசு)

என்றும்,

> "விண்ணின்று பொய்ப்பின விரிநீர் வியனுலகத்
> துண்ணின் றுடற்றும் பசி." (திருக்குறள் : கங)

என்றும் திருவள்ளுவர் கூறினர். அன்றியும், தாவரங்களை உண்டாக்கிஅவற்றின்மூலம் உயிாகளுக்கு உணவைக் கொடுப்பது

மட்டுமல்லாமல், உயிர்களுக்குத் தானே உணவாகவும் இருப்பது மழை (நீர்) இதனைத் திருவள்ளுவர்,

"துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை." (திருக்குறள் கஉ)

என்று அழகாகக் கூறினர்.

தொன்றுதொட்டு நமது நாட்டின் முக்கியத் தொழிலாக உள்ளது — முதுகெலும்பு போன்றது — உழவுத் தொழில். ஆகவே, நம்மவர் மழையின் இன்றியமையாமையை நன்கறிவர். ஆனால், மழை எப்படிப் பெய்கிறது என்பதைப் பண்டைப் பெரியோர் அறியார். நமது நாட்டிலமட்டுமல்ல, ஏனைய நாட்டிலும் பண்டைக்காலத்தில் இருந்தவர் மழை பெய்வதன் காரணத்தை அறிந்திலர். இந்திரன் என்னும் தெய்வம் மழையைப் பெய்யச் செய்கிறது என்றும், வருணன் என்னும் கடற்றெய்வம் மழையை அனுப்புகிறது என்றும் அவர்கள் கருதிவந்தனர். வெண்மேகங்கள் சென்று கடலில் படிந்து வயிறுநிறைய நீரைக் குடித்துக் கருமேகமாகி வானத்திலே வந்து மழையாகப் பெய்கிறது என்று காவியப் புலவர்கள் பாடிய பாட்டுக்களிலே, சூரியன் கதிரின் சூட்டினுலே நீர்நிலைகளில் உள்ள நீர் ஆவியாகச் சென்று ஆகாயத்திலே மேகமாகி மழையாகப் பெய்கிறது என்கிற 'சயன்ஸ்' என்னும் விஞ்ஞானத்தின் சாயல் காணப்பட்டாலும், அதை நம முன்னேர் காவியப் புலவரின் கற்பனை என்று கருதினர்களேயல்லாமல் உண்மை என்று கொள்ளவில்லை.

நமது நாட்டுப் பண்டைப் பெரியோர் மழை எப்படிப் பெய்கிறது என்று கருதினர்கள் என்பதைப் பார்ப்போம். அரசரும் மகளிரும் முனிவரும் மழை பெய்வதற்கும் பெய்யாமல் இருப்பதற்கும் காரணம் ஆவர் என்று அவர்கள் கருதினர்கள மகளிர் கற்புடன் இருந்தால் மழை பெய்யும்; கற்புத் தவறினுல் மழை பெய்யாது என்றும், அரசர் செங்கோல் செலுத்தினுல் மழை பெய்யும், கொடுங்கோல் செலுத்தினுல் மழை பெய்யாது என்றும், துறவிகளாகிய முனிவர் பிழையின்றித் தவம் செய்தால் மழை பெய்யும்; பிழைபடத் தவம் செய்தால் மழை பெய்யாது என்றும் அவர்கள் கருதி வந்தார்கள்.

கி. பி. இரண்டாம் நூற்றுண்டில் காஞ்சிபுரத்தை அரசாண்ட இளங்கிள்ளி என்னும் அரசன் காலத்தில மழை பெய்யாமல் வற்கடம் உண்டாயிற்று. அப்போது மணிமேகலையார் அந் நகரத்திற்கு வந்தார். வந்தவரை அரசன் வரவேற்றுன்.

வரவேற்று, மழை யில்லாமல் நாடு அல்லல் படுவதன் காரணத்தைக் கூறுகிறான் :

"செங்கோல் கோடியோ செய்தவம் பிழைத்தோ
கொங்கவிழ் குழலார் கற்புக் குறைபட்டோ
நலத்தகை நல்லாய்! நன்னா டெல்லாம்
அலத்தற் காலை யாகிய தறியேன்" (மணி. 28 · 188 - 91)

அரசன் செங்கோல் செலுத்தினால் மழைபெய்யும், கொடுங்கோல் செலுத்தினால் மழை பெய்யாது என்பதைத் திருவள்ளுவரும் கூறுகிறார்.

"இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் நாட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு." (திருக்குறள் ௫௪௫)

என்றும்,

"முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல்"

என்றும் அவர் கூறியது காண்க.

கற்புடைய மங்கையரால் நாட்டில் மழை பெய்கிறது என்பதையும் திருவள்ளுவர் கூறுகிறார் :

"தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை." (திருக்குறள் ௫௫௬)

"வறனோடின் வையகத்து வான்தருங் கற்பினாள்"

என்பது கலித்தொகை.

"புண்ணிய முட்டாள், பொழிமழை தரூஉம்
அரும்பெறன் மரபிற் பத்தினிப் பெண்டிர்"

என்பது மணிமேகலை.

"நாடு மூறும் நனிபுகழ் தேத்தலும்
பீடுறும் மழை பெய்கெனப் பெய்தலும்
கூட லாற்றவர் நல்லது கூறுங்காற்
பாடு சான்மிகு பத்தினிக் காவதே"

என்பது வளையாபதிச் செய்யுள்.

கற்புடைய பெண்கள் இருக்கும் நாட்டில் மழை தவறாமல் பெய்து நாடு வளம்படும் என்றும் அரசனுடைய ஆட்சியும் செங்கோலாக நடைபெறும் என்றும் சிலப்பதிகாரம் கூறுகிறது.

"வானம் பொய்யாது வளம்பிழைப் பறியாது
நீணில வேந்தர் கொற்றஞ் சிதையாது
பத்தினிப் பெண்டிர் இருந்தநாடு" (சிலப்பதி, 15 : 145 - 8)

இதுபோன்றே அரசனுடைய செங்கோலினாலேதான் மகளிர் கற்பு நிலைபெறுகிறது என்று சிலப்பதிகாரம் கூறுகிறது.

"அருந்திறல் அரசர் முறைசெயின் அல்லது
பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச்சிறவாதெனப்
பண்டையோர் உரைத்த தண்டமிழ் நல்லுரை"
(சிலப்பதி, 28. 207 - 9)

தவசிகள் தவம் செய்யாவிட்டால் மழை பெய்யாது என்று நான்மணிக்கடிகை என்னும் நூல் கூறுகிறது.

"மழையின்றி மாநிலத்தார்க் கில்லை, மழையும்
தவமிலார் இல்வழி இல்லைத், தவமும்
அரசிலார் இல்வழி யில்லை, யரசனும்
இல்வாழ்வான் இல்வழி இல்" (நான்மணிக் கடிகை - ௪௮)

இவையன்றிப், பார்ப்பனர் அழல் ஓம்புதலினாலேயும் மழை பெய்கிறது என்னும் கருத்தும் பண்டைக்காலத்தில் இருந்தது. இதனை, "மழைவளந் தரூஉம் அழலோம் பாளன்" என்னும் மணிமேகலையினால் அறியலாம்.

இவர்களாலேதான் பண்டைக் காலத்தில் மாதம் மும்மாரி பெய்தது என்று பிற்காலத்து நூலாகிய விவேக சிந்தாமணி கூறுகிறது

"வேதமோதிய வேதியர்க் கோர்மழை
நீதிமன்னர் நெறியினுக் கோர்மழை
காதல் மங்கையர் கற்பினுக் கோர்மழை
மாதமூன்று மழையெனப் பெய்யுமே."

என்பது அது மாதம் மும்மாரி பெய்தது எந்தக் காலத்தில் என்பது தெரியவில்லை. ஆனால், வேதியரும் மன்னரும் மங்கையரும் தத்தம் அறநெறியில் இருந்து தவறியபடியால் ஆண்டில் மூன்று மழை பெய்தது என்று அந்நூலே கூறுகின்றது.

"அரிசி விற்றிடும் அந்தணர்க் கோர்மழை
வரிசை தப்பிய மன்னருக் கோர்மழை
புருடனைக் கொன்ற பூவையர்க் கோர்மழை
வருடம் மூன்று மழையெனப் பெய்யுமே"

என்பது அது. "என்ன ஐயா! இந்த விஞ்ஞான காலத்தில், அணுக்குண்டு யுகத்தில் பழைய புராணங்களைப் புரட்டுகிறீர்" என்று வாசகர் கருதுவர் என்று தோன்றுகிறது. இப்படியெல்லாம் மழையைப்பற்றிப் பண்டைக் காலத்தவர் கருதிவந்தனர் என்பதை நாம் தெரிந்துகொள்ளவேண்டும் அல்லவா? அதற்காகத்தான் இதனை எழுதினேன்.

# சிற்றெறும்பும் சிள் வண்டும்[1]

[திரு கோபாலை. வே. பெருமாள்]

ஒண்மாண் நாட்டில் உதித்தளம் தமிழீர் !
வீணாள் போக்கா விழுமிய ராகுமின்
கொடுவெயி லெறிக்குங் கோடைக் காலம்
இடரறு உயிர்கள் இரையைத் தேடிக்
கூடுகள கட்டிக் குவித்து வைக்கக்
கடுங்குளிர் வீசுங் கார்கா லத்தைக்
கனவிலும நினையாச் சிள்வண் டொன்று
தனஞ்சேர்க் காது தினமுந் தின்று
மகிழ்ந்து பாடி மாய்த்தது கோடை
இமிழ்துளி வழியும் இருண்மழைக் காலம
வந்துபார் மக்களை வாட்டத் தொடங்க
சந்துகள் தோறும தண்ணீர் ஓடவும்
பந்துகள் தம்மனை பதுங்கி வாழவும
முந்திய நாளில் முனைந்து சேர்த்த
தம்பொருள் தின்றுயிர் தங்கி வாழ்ந்தன
இருப்பிடம் இரைகள் எதுவு மில்லாச்
சிறுவண்டு மழையால் சிறகை யிழந்து
இரையை வேண்டி யிரந்து திரியப்
பறக்க முடியாது பதறிக் கிடந்து
அண்மை யிருந்த அரும்புற் றொன்றைக்
கண்டது மகிழ்ந்து உண்ணணைந் துபுகவே
சிற்றெறும் புகள்தாம் சேமித்த உணவைப்
பற்றி யுண்டு பதுங்கி வாழ,
"அன்ப ! நண்ப ! ஆருயிர்த் தோழ !
இன்றே நீதான் இரைகொடா விடிலோ
இன்னற் பட்டு இறப்பேன் மழையால்
கொன்னே கழிந்தன கோடைக் காலம்
மன்ன ! அறிந்தேன் மாரியின் கொடுமை"
என்றே யிரந்து இழிந்து கேட்க,
"சோம்பித் திரிந்தாய் தேம்பித் திரிவாய்

1. "The ant and the cricket" எனும் ஆங்கிலச் செய்யுளின் மொழி பெயர்ப்பு.

எம்போல் நீமுன் இரையேன் சேர்த்திலை?
முன்வீண் கழித்த பின்னேன் களையாய்?
என்னே முன்நீ பின்னை உன்னிலை
செல்க வெளியே சாவுக மழையால்"
என்றே துரத்தி இருந்தன எறும்பே
வெளியே வந்து வெதும்பிய வண்டும்
துளிமிகு மழையால் உயிர்துறந் ததுவே
எந்நாட் டதிலும் ஏற்ற முடைய
நன்றமிழ் நாட்டீர்! நாட்களை வீணில்
போக்கா வழியிரு பொருளசேர்ப் பீரே.

கதைச் சுருக்கம்: ஒரு சிள வண்டு கோடை நாளில் குதித்து விளையாடி வீணே காலத்தைக் கழித்தது. மழைக் காலம் வந்தது. வண்டோ! குளிரால பலமற்றது; மழையால் சிறகிழந்தது; உணவின்றி மயங்கிக் கிடந்தது அருகிலோர் எறும்புப் புற்றைக் கண்டது, அதனுள்ளே புகுந்தது. அங்கு எறும்புகள் தாம் கோடைநாளிற் சேர்த்த பொருள்களை உண்டு நலமாயிருந்தன. இதைப் பார்த்த வண்டோ! "காலத்தின் அருமையைக் கவனியாதிருந்தோமே" என்று ஏங்கியது. எறும்புகளை நோக்கி, "அன்பர்களே! யான் அறியாமையால் வீணே கோடையைக் கழித்தேன் இப்போது மழையால் வருந்துகின்றேன். காலத்தின் அருமையை இப்போது நன்றாய் உணர்ந்தேன்; புத்திவரப் பெற்றேன்; நீவிர் உதவாவிடில் உறுதியாய் இறப்பேன் கடனாகவாவது சிறிது உணவு கொடுங்கள்," என்று இரந்து கேட்டது உடனே, அங்கிருந்த ஓர் எறும்பு, "நீ பின்காலத்தைக் கருதாது சோம்பித் திரிந்தாய்; ஆதலின் நீ சாவுக; வெளியே செல்க" என்று சிள் வண்டைத் துரத்திற்று. வண்டோ! மழையின் கொடுமையால் உயிர் நீத்தது. இதனால் மக்களே! காலத்தி னருமையைக் கருதுங்கள். கல்விப் பொருளையும் செல்வப் பொருளையும் சேமித்துக் குவியுங்கள். நன்னிலை எய்துங்கள். இறைவன் அருள் சுரப்பான்.

"பின்னை உன்னி முன்னே நடக்க"

---

# வள்ளுவர் காலம்

[திரு. கு. பரமசிவம்]

(சிலம்பு: உஅ, பால்: கூ, உஅச-ஆம் பக்கத் தொடர்ச்சி)

இனி, "இம் மனுஸ்மிருதியில் அங்கங்கே காணப்படும் உவமைகளும் திருக்குறளில் காணப்படுகின்றன. உதாரணமாக,

உவர்நிலத்தில் இட்ட வித்தானது பயன்படாதவாறுபோல என மனுவில் (III, 142) வரும் உவமை

"உளரென்னும் மாத்திரைய ரல்லாற் பயவாக
களரனையா கல்லா தவர்" (406)

என வந்துள்ளது" என்று இத்தமிழன்பர் எழுதியுள்ளார்.[1] மனுகூறும் உதாரணத்தை நன்கு புரிந்துகொள்ள அஃது எடுத்தாளப்படும் இடத்தையும் நாம் அறிந்துகொள்ளுதல் வேண்டற்பாலதாகும். சிரார்த்தம் பற்றிய பகுதியில் ஒரு சூத்திரத்தில் மனு இவ்வுதாரணத்தை எடுத்தாண்டுள்ளார். "உவர்நிலத்தில் விதைத்தவன் அறுவடையாகிய பயனைப் பெறமாட்டான். அவ்வாறே வேதமறியாத ஒருவனுக்குக் கொடுத்தாலும் கொடுப்பவன் பயன்பெறுதல் இல்லை" என்பதே அச் சூத்திரம்.[2] அஃதாவது சிரார்த்தம் கொடுக்கும்பொழுது வேதமறிந்தவனைக் கொண்டே கொடுத்தல்வேண்டும்; அறியாதவன் வழியாகக் கொடுத்தால், கொடுத்தலாகிய தொழிலைச் செய்தாலும், கொடுப்பவன் அதற்குரிய பயனைப் பெறமாட்டான் என்பதே இதன் கருத்தாகும்.[3] இதற்கு உதாரணமாக உவர்நிலத்தில் விதைத்தவன் பயன்பெறுதல் இல்லை என்பதைக் கூறியுள்ளார். உவர்நிலத்தில் விதைத்தவன் விதைகளைச் செலவிடுகிறான்;

---

1. "தமிழ்ச்சுடர்மணிகள்" Second Edition, pp. 74.

2. 'Manu Smriti'—Translated by Ganganatha Jha, M A. D Litt. Vol II Part 1, Verse 142· "Just as having sown the seed in the barren soil, the sower reaps no harvest—even so having given the offering to one ignorant of the Veda, the giver obtains no reward."

3. Ibid. Verse 142—Bhasya: "'Barren soil'—unproductive ground. That plot of land is called 'barren' on which if seed is sown, it does not sprout; there the 'sower reaps no harvest.'

"Even so 'to the person ignorant of the Veda'—'having given the offerings'—made to Gods and ancestors—'the giver obtains no reward.'"

ஆயின் பயன்பெறுதல் இல்லை என்பதே மனு கையாண்ட உதாரணமாகும்; தமிழன்பர் மொழிபெயர்த்தவாறு "உவர் நிலத்தில் இட்ட வித்தானது பயன்படாதவாறுபோல" என்பதன்று. இனிக் குறட்கருத்தைப் பரிமேலழகர் வழியாகவே நோக்குவோம்: "கல்லாதவர், காணப்படுதலான இலரல்லர் உளரென்று சிலர் சொல்லுமளவினராதலன்றித் தமக்கும் பிறர்க்கும் பயன்படாமையால் விளையாத களர் நிலத்தோடொப்பர். களர் தானும் பேணற்பாடழிந்து உயிர்கட்கும் உணவு முதலிய உதவாததுபோலத் தாமும் நன்கு மதிக்கற்பாடழிந்து பிறர்க்கும் அறிவு முதலிய உதவாரென்பதாம்."[1] இங்கு வள்ளுவர் உவமித்த பொருள் களர்நிலம். மனுவால் உதாரணமாகக் கூறப்பெற்றது வித்தினும் பயன்பெறுதான் நிலை. இவ்வாறு பொருளால் வேறுபடும் இவை ஒன்றா? அன்றியும் முறையாலேனும் ஒன்றா? வள்ளுவர் ஆண்டது உவமை. மனு கொண்டது உதாரணம். இரண்டும் ஒன்றா?[2]

மேற்கூறிய இரண்டும் பொருட்பாலில் வருவன. மனுவுக்கும் அறத்துப்பாலுக்குமிடையே ஒற்றுமையுடையதாகத் தமிழன்பர் சுட்டிய பகுதி ஒன்றேயொன்றாகும். அதனை நோக்குவோம். "மனுஸ்மிருதியில் இல்லறத்தில் நிற்பவன் ஏனை மூன்று நிலைகளினும் உள்ளவர்களுக்கு உணவு ஈந்தும் வேதஞானம் உதவியும் அவர்களை ஓம்புதலால், அவனே நால்வகை நிலையினருள்ளும் தலைமை பெறுகின்றான்" (மனு III, 78) என்று வரும் கருத்து திருக்குறளில்,

> "இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
> நல்லாற்றின் நின்ற துணை" (41)

எனவும்,

> "இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
> முயல்வாருள் எல்லாம் தலை" (47)

எனவும் வருவனவற்றில் அமைந்துள்ளமை காணலாம்"[3] என்று இவர் எழுதியுள்ளார். இரண்டுக்கும் ஒற்றுமை இருக்கிறதா என்றறிய மனுவின் கருத்தை நன்கு விளங்கிக்கொள்வது இன்றி

1. குறள், 406. பரிமேலழகர் உரை.

2. உவமை வேறு; உதாரணம் வேறு. "திருவள்ளுவர் நூல் நயம்"—ரா. பி. சேதுப்பிள்ளை B.A., B.L.,—pp. 143-4. (ஒருண்மையை மற்றோருண்மையால் விளக்குவது உதாரணம். "அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன் றில்லை ..")

3 "தமிழ்ச்சுடர்மணிகள்" Second Edition, p.

பழமையானது. பிரமசரியம், கிரகத்தம், வானப்பிரத்தம, சன்யாசம என்னும் நான்கு நிலையி லுள்ளாரிலும இல்லறத்தை மேற்கொண்டவனே ஏனை மூவருக்கும வேதம ஓதுதற்கும், அவர்கட்கு உணவு ஈதற்கும் வாய்ப்புடையவனாகலின் அவனே இந்நாலவரிலும தலையானவன என்பதே மனுவின் கருத்து. ஏனை மூன்று நிலையிலுள்ளாராகரு இவ்விரண்டனுள் (வேதம் ஓதல், உண்வு ஈதல்) ஒன்றோ இரண்டுமோ இயலாதன என்பதும் இல்லறத்தானே இவ்விரண்டையும் இயற்றுதற்குரியவன் என்பதும உரை வகுத்த மேதாவியால் நன்கு விளக்கப்பட்டுள்ளன[1] இவற்றால நால்வகை நிலையினா உளர் என்பதும் அவர்களுள் இல்லறத்தானே தலையானவன் என்பதும மனுவின் கருத்தெனபது போதரும். வள்ளுவர் இவ் வருணசிரம முறையினை எங்கேனும கூறியிருக்கின்றனரா? பரிமேலழகா தாம,

"இல்வாழவான் எனபான் இயலபுடைய மூவாக்கும
நலலாற்றின் நின்ற துணை" (41)

எனனும் குறளின் உரையில் ஏனை மூவராவர் பிரமசரிய ஒழுக்கத்தானும், தவஞ்செய்யும ஒழுக்கத்தானும, முற்றுந்துறந்த யோகவொழுக்கத்தானும என, இவர் எனறெழுதிச் செல்கிறார். "வளளுவா கருதாதனவற்றையும் நுழைக்கிறோமே! பிரமசரிய ஒழுக்கத்தானையும் தவவொழுக்கத்தானையும பற்றி வள்ளுவர் கூறினரல்லரேயென்னும ஐயம் பரிமேலழகருக்கே தோன்றுகிறது. எனவே, "இவருள முன்னையிருவரையும பிறா மதம் மேறகொணடு கூறினர்" என்று எழுதி மழுப்புகிறா. இதனால் நாலவகை நிலைபற்றிய கருத்து பரிமேலழகருடையதேயன்றி வளளுவரதன்று என்பது விளங்கும இனி,

"இயலபினான் இல்வாழ்க்கை வாழபவன் என்பான்
முயல்வாருள் எல்லாம தலை" (47)

என்னும் குறளுரையில் 'முயல்வாருள் எலலாம் தலை' என்னும் தொடருக்குப் 'புலன்களைவிட முயல்வார் எல்லாருளளும் மிக்கவன்' என்று உரைகூறி, 'முற்றத் துறந்தவர் விட்டமையின் முயலவார் என்றது மூனறும் நிலையில் நின்றாரை, அந்நிலைதான் பல வகைபபடுதலின் எல்லாருளளும் எனவும், முயலாது வைத்துப் பயன எயதுதலின் தலையெனவும் கூறினர்' என்று விளக்கம் எழுதுகிறார். இதனால் வானப்பிரத்த நிலையிலுள்ளார் எல்லாரினும் இல்லறத்தான் தலையானவன் என்று பரிமேலழகர் கருதுகிறா என்பது விளங்கும். இவற்றால் வள்ளுவர் நால்வகை நிலையினைக்கூறினரல்லர் என்பதும, பரிமேலழகரேகூறினர் என்பதும்,

1 "Manu smriti"—Ganganatha Jha—Vol II Part I - Verse 78.

பரிமேலழகரும் வானப்பிரத்த நிலையினுள்ளாரினும் இல்லறத்தான் மிக்கவன் என்றே கூறினர் எனபதும் தேற்றம. மனுவின் கொள்கையும், வள்ளுவா கருத்தாகப பரிமேலழகர் கூறியதும ஒன்று? ஒனறென்றே விவாதத்திற்காகக் கொணடாலும் ஒற்றுமை பரிமேலழகருக்கும் மனுவுககுமிடையே காணபபடுகிறதேயன்றி வளளுவருககும மனுவுக்கும் இடையேயனறு. பரிமேலழகர்தாம் இஙகு வருணச்சிரம முறைமையைப் புகுத்தியெழுதியவா. பரிமேலழகருககு இநதப பண்பு உண்டென்பதனை இததமிழனபரே ஒததுககொணடுளளாா: "அவா தமது கல்வியிலும, தமது அறிவாறறலிலும, தம் கொள்கைகளிலும் பெருநமபிககை யுடையவா. வளளுவர் கருத்துககளைத தம கருததுககளாலனறி உரிய பிற கருவிகளகொண்டு ஆராய்ந்து துணியவேணடும எனனும நெறியில செலலாதவா சரித்திர உணாச்சியும சூழநிலை உணாசசியும அவரால் பெருமபாலும போறறபபடவில்லை. வளளுவா கருததுக்களையே எலலாவிடங்களிலும அவா விளக்குகிறாா என்று நாம கொளளவதறகிலலை."[1] இது பரிமேலழகரைப பறறிய இததமிழனபரின் எணணம. எனவே, பரிமேலழா கூறறை வளளுவா கூற்றாகக் கொண்டு வள்ளுவரை மனுவுககுக கடனாளியாககுவது அடாதசெயல.

இனி, திருவளளுவ மாலையில் ஒரு செய்யுளில்,

> " . . . மனு, பணடைமறை
> நோவனமற் றில்லை நிகா"

என்று கூறியது, இங்குக காடடியவை போன்ற கருத்தொற்றுமைகளை நோக்கியேயாகும" எனறு இவர் எழுதியுள்ளார்[2] உள்ளபடியே பாாததால இவா இததிருவள்ளுவமாலைச செய்யுளை மேற்கோளாககக காட்டியதே தவறு. ஏனெனில் இஃது இவாது கட்சிக்கு எதிரான சான்றாகும்

> "எப்பொருளும் யாரும் இயல்பின அறிவுறச
> செப்பிய வள்ளுவா தாம் செப்பவரும்—முப்பாற்குப்
> பாரதமசீ ராம கதைமனுப் பணடைமறை
> நோவனமற் றில்லை நிகர்"

என்னும் இச்செய்யுள திருக்குறளுக்கு நிகராகக்கூறும தனமை மனுநீதிக்கு மட்டுமேயன்றி அதன 'தாத்தா'வான வேதததுக்கு

---

1. "தமிழச்சூடாமணிகள்"—First Edition—pp 98. இப்பகுதி என்ன காரணம் பற்றி இரண்டாம் பதிப்பில் நீக்கப்பட்டதென்று தெரியவில்லை.

2. "தமிழ்ச்சூடாமணிகள்"—Second Edition—pp. 74.

மில்லையென்றே கூறுகிறது[1] தமிழன்பர் தம் கட்சிக்கு வழக்காடுதலை மறந்து இங்கு எதிர்க்கட்சிக்காக வழக்காடியுள்ளார். மேறகண்ட நூற்கள்—சிறப்பாக மனுநீதி—குறளுக்கு நிகராகாமைக்குக் காரணததை அச்செய்யுளின் ஆசிரியராகக் கருதப்படும் பாரதம பாடிய பெருநதேவனா கூறினரல்லரேனும பிறர் கூறியுள்ளனர். மனுவாதி நூலகள் வருணாசிரம முறையினைக் கூறுவன என்பதும, ஒரு குலத்துக்கொரு நீதி கூறுவன என்பதும அறிஞர் கண்ட முடிபாகும. சான்றாக ஒனறுமட்டும் காணபோம. ஐந்தாண்டுப பருவத்தானாயினும பாாப்பனச் சிறுவன எழுபதாண்டுப பார்ப்பனரல்லாதானை லகரமிட்டோ டகரமிட்டோ அழைத்துப பேசிவருதலை இன்றும காணகிறோம். இம்முதியோனும் அச்சிறுவனை 'சுவாமி' எனறு அழைததுப் பணிதலையும காண்கிறோம். இவ்வாறுதான் இருக்கவேண்டும் என்று மனு கூறியுள்ளாா[2] இதுபோனறு பல பகுதிகளைச் சுட்டிக்காட்டமுடியும. இவற்றையெல்லாம நோக்கியே பேராசிரியர் சுந்தரம பிளளையவர்கள,

"வள்ளுவாசெய் திருக்குறளை மறுவற நன்குணர்ந்தோாகள்
உள்ளுவரோ மநுவாதி ஒருகுலததுக கொருநீதி"

என்று பாடிச் சென்றாாகள்.

இதுகாறும் குறளும் மநுநீதியும் அடிப்படையிலேயே முரணானவையென்றும், இவறறுள் ஒற்றுமையுடையனவாக இததமிழன்பா காட்டுவன உண்மையில் வேற்றுமையையோ முரண்பாட்டையோதான் உணாததுகின்றன எனறும் கண்டோம்.

(தொடரும)

1. இதுவே பொருளாதல்· "திருக்குறள்" கழகப் பதிப்பு (1939) p. 539 - 540.

2. "Manu Smriti"—Ganganatha Jha—(Vol I, Part II) Verse 135 "The Brahmana of ten years and the Kshatriya of a hundred years should be known as father and son, and of the two the Brahmana is the father" ('Even when the Kshatriya is very old and one Brahmana very young in years, the former should rise to meet and salute the latter')

# செய்திகளும் குறிப்புக்களும்

முந்திரிக்கொட்டை

ஏறக்குறைய 400 ஆண்டுகட்கு முன்னர் பிரேஸிலிலிருந்து நம் நாட்டிற்கு முந்திரிக்கொட்டை கொண்டுவரப்பட்டது. தற்போது நம் நாட்டில் ஆண்டுதோறும் 7 கோடி ரூபாய் மதிப்பிடத்தக்க 60,000 டன் முந்திரிக்கொட்டை விளைகிறது. உலகிலேயே பெரும்பான்மையாக முந்திரி விளையுமிடம் நம் இந்தியாவாகும். முந்திரிப்பருப்பு உடல் வளர்ச்சிக்கேற்ற நல் உணவுப் பொருளாகும். இதில் நூற்றில் 21.2 பங்கு புரதமும் 46.9 பங்கு கொழுப்பும் 5.0 பங்கு இரும்புச் சத்தும், உயிரூட்டியும் உள்ளது. முந்திரிப்பழச்சாறு வாந்தியைத் தடுப்பதற்கேற்ற மருந்தாகப் பயன்படுத்துகின்றனர். முந்திரிக்கொட்டையினின்று எடுக்கும் எண்ணெய் படகுகளுக்கு வண்ணந்தீட்டவும், மீன் பிடிக்கும் வலைகளின்மேல் தடவவும், பூச்சு எண்ணெய்கள் செய்யவும் மிகவும் பயனுடைத்தாகின்றது. இந்தியாவில் பம்பாய் மாகாணத்தைச் சார்ந்த இரத்தினகிரி, வடகன்னடம் முதலிய மாவட்டங்களிலும், சென்னை மாகாணத்தில் திருச்சி, தஞ்சை, திருநெல்வேலி, தென் ஆர்க்காடு, கோதாவரி, விசாகபட்டினம் முதலிய மாவட்டங்களிலும், திருவாங்கூர், கொச்சி ஆகிய இடங்களிலும் மிகுதியாக விளைகிறது. இந்தியாவில் விளையும் முந்திரியில் சென்னை மாகாணத்தில் மாத்திரம் சரிபாதி விளைகிறது.

தேயிலை

இந்தியாவில் நடைபெறும் பெருந் தொழில்களில் தேயிலைத் தொழிலும் ஒன்று. இது வெளி நாடுகட்கு ஏற்றுமதி செய்வதின் வாயிலாக ஆண்டுதோறும் 100 கோடி ரூபாய் இந்தியாவிற்கு வருவாய் கிடைக்கிறது. தேயிலை பெரும்பான்மையாகச் சென்னை மாகாணம், திருவாங்கூர், கொச்சி, மைசூர், குடகு முதலிய இடங்களில் ஏறக்குறைய 170,000 ஏகரா நிலங்களில் பயிரிடப்படுகிறது. 1846-ல் தென்னிந்தியாவில் முதன் முதலாக வணிகநோக்கத்துடன் தேயிலை பயிரிடப்பட்டது. கடந்த 100 ஆண்டுகளில் தேயிலைத் தொழில் பெரும்பான்மையாக வளர்ந்திருந்தாலும், முதல் உலகப் போருக்குப் பின்னரே மிக வருவாய் தரக்கூடிய அளவிற்கு இத்தொழில் வளர்ச்சியடைந்தது.

காப்பிக்கொட்டை

அராபியாவிலிருந்து இந்தியாவிற்கு வந்த பாபா புதின் என்னும் வழிப்போக்கர் ஒருவரால் 17-ம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் காப்பிக்கொட்டை இந்நாட்டிற்குக் கொண்டுவரப்பட்டது. ஏழு வகையான காப்பிக்கொட்டைகளை இவர் கொண்டுவந்து மைசூர் மாநிலத்தைச் சார்ந்த ஒரு மலைச்சரிவில் முதன்முதல் பயிர்செய்தார். உலகில் மிகுதியாகக் காப்பிக்கொட்டை விளையுமிடம் தென்னமெரிக்காவிலுள்ள பிரேஸில் ஆகும். எனினும், இந்தியாவிலுள்ள கண்ணனூரிலிருந்து 1695-ல் ஜாவாவிற்கும், 1760-ல் ஜாவாவிலிருந்து பிரேசுக்கும் காப்பிக்கொட்டை எடுத்துச்செல்லப்பட்டது என்பதற்குத் திட்டவட்டமான சான்றுகள் உள்ளன. தற்போது நம் நாட்டில் திருவாங்கூர், கொச்சி, மைசூர், குடகு முதலிய இடங்களில் 2,30,000 ஏகர் நிலங்களில் காப்பி

பயிராகிறது. ஆகவே, பிரேஸில் காப்பிக்கொட்டை இந்தியாவினின்று கொண்டு செல்லப்பட்டே பயிரிடப்பட்டது என்று தெரிகிறது.

**பேராசிரியர், திரு. பூவராகம்பிள்ளை நினைவு நாள்**

அண்ணாமலைப் பல்கலைக்கழக மண்டபத்தில் டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார் தலைமையில் 6-3-54-ல் ஓர் கூட்டம் தொடங்கியது. அதில் அறிஞர் பேராசிரியர் காலஞ்சென்ற திரு. ஆ. பூவராகம் பிள்ளையவர்கள் தமிழ்த்தொண்டுகள் குறித்துப் பல அறிஞர்களால் பாராட்டிப் பேசப்பெற்றன. அவர் திருவுருவப் படமும் திறந்து வைக்கப்பட்டது.

**நாவலர் சோமசுந்தர பாரதியார்க்குப் பட்டம்.**

மதுரை திருக்குறட் கழகத்தில் கடந்த சனவரித் திங்களில் பாரதியவர்கள் தமிழுக்குச்செய்த தொண்டு குறித்துப் பாராட்டுக் கூட்டம் நிகழ்ந்தது. அதில் பாரதியின் அரும்பெரும் தமிழ்த்தொண்டு குறித்துப் பலர் பேசினர். திரு. கருமுத்து. தியாகராசச் செட்டியார் பாரதிக்குப் பொன்னாடைபோர்த்திப் பாரதியின் சிறப்புக் குறித்துப் பாராட்டிப் பேசினார். ஷை கழகத்தார் பாரதிக்குக் '**கணக்காயர்**' என்னும் பட்டத்தைச் சூட்டி வழங்கி மகிழ்ந்தனர்.

**குறிப்பு** தமிழ்ப் புலவர்களின் நினைவுநாட் கொண்டாடலும் புலவர்கட்குப் பட்டம் முதலியன வழங்கிச் சிறப்பித்தலும் மொழிக்கும், நாட்டுக்கும் ஆற்றும் பெருந்தொண்டாகும் என, மகிழ்கின்றோம் —**ஆ-ர்.**

---

# மதிப்புரை

(க) தமிழ்க்கலை : பக்கம் - சஅ. விலை அணா. 8

[**ஆசிரியர் :** திரு. வி. க. **வெளியிட்டோர் :** இலக்கிய மன்றம் 104, டெமல்லஸ்ரோடு, சென்னை - 12.]

இந்நூல் தமிழ்ப்பெரியார் திரு. வி. க. அவர்கள் பல அறிவியல் நிலையங்களில் நிகழ்த்திய சொற்பொழிவுகள். திரு. வி. க. அவர்கள் பேசசென்றால், எழுதவென்றால் அதற்கு ஓர் தனிமதிப்பும் வேண்டுங் கொல்? பொன்னேபோற் போற்றத்தகுந்த இந்நூலில் '**தமிழ்க்கலை**' என்பது முதல் '**வ. உ. சிதம்பரனார்**' என்பது இறுதியாக ஆறு சொற்பொழிவுகள் அடங்கியுள்ளன.

தமிழே திரு. வி. க, திரு. வி. க. அவர்களே தமிழெனின் மிகையாகாது அவர்கள் உள்ளக்கிடக்கைகள் இந்நூலில் பொங்கித் ததும்பிப் பொலிவுறுகின்றன. அவர்கள் ஏனைய நூல்களோடு ஒப்ப வைத்துத் தமிழமக்கள் யாவரும் பயிலற்கேற்ற சீரிய கூரிய நூல். சொல்லின் செல்வர் திரு. க. அன்பழகனார் முன்னுரையுடன் திகழ்கின்றது. இதனை நாட்டுக்குத் தொகுத்துதவிய இலக்கியமன்றத்தார் அரிய முயற்சியைப் பாராட்டுகின்றோம்.

(உ) பொய்யாமொழிப் பூஞ்சோலை: பக்கம் - ௧௬௨. விலை ரூ. 2

[ஆசிரியரும் பதிப்பாளரும்: திரு. A. முத்துசாமிப்பிள்ளை பி. ஏ. ஓய்வுபெற்ற ஆவணப்பதிவாளர், ஆனையப்பபிள்ளை சந்து, கீழரதவீதி, பெரியகுளம், மதுரைமாவட்டம்.]

பொய்யாமொழிப் பூஞ்சோலை என்னும் இந்நூல் **முல்லைத்தேர்** என்பது முதல **அருளாட்சி** என்பது இறுதியாக முப்பது கட்டுரைத் தொகுதிகள் அடங்கிய நன்னூல் ஆகும். பொய்யாமொழி பொய்படாத மொழி. அஃதாவது உண்மையான மொழியினையுடைய நூல் என ஆகிச் சிறப்பால் திருக்குறட் பெருநூலை உணர்த்தி நிற்கும். ஆசிரியர் இக்கட்டுரையைத் தம் ஆழ்ந்து அகன்ற நுண்ணிய அறிவுத்திறனால் ஆய்ந்து ஆய்ந்து எழுதி, அவைகளின் முடிபைத் திருக்குறளோடு இணைத்துப் புதுவழிகோலி விருந்தின முறையில் அமைத்துதவிய சிறப்பு மகிழ்வுக்குரித்து. இது பூஞ்சோலையாகவே மணங் கமழ்கின்றது.

ஆசிரியர் ஆங்கிலமொழியறிவுச் செல்வத்தோடு தமிழ்மொழி ஆய்புலச் செல்வமும் ஒருங்கேபெற்ற பேரறிவுச் செல்வராதலின் முல்லைக்குத் தேர் என்பதில் 'பூத்தலை அறாஅப்புனைகொடி முல்லை, நாத்தழும்பிருப்பப் பாடாதாயினும், கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த,' பிறர் புன்கண் அஞ்சும் மென்கட் செல்வம்பெற்ற பாரி வரலாறு கட்டுரைத்து, அதனை விளக்குமுகத்தான் மேல்நாட்டுக் கவிஞர் மில்டன் அரியவுரையையும் வள்ளுவப்பெருமான் 'அன்பிற்கு முண்டோ' என்று துவங்கும் அரிய குறள் மணியையும் அமைத்துக் காட்டியிருப்பது, பழமை கண்டு களித்தற்கு ஏற்றதாக அமைந்துளது. **போலீஸ் சேவகன், வைசிராய் மாளிகை, வின்ஸ்டன் சர்ச்சில்** போன்ற கட்டுரைகள், புதுமையிற் பழமைகண்டு இன்புறத் துணை புரிதலோடு, அவை தற்கால வரலாற்றுண்மைகளை அறிந்துகோடற்கும் வழிகாட்டியாகவுள்ளன. இதன்கண், தற்காலப் பெரியாராக இலங்கி காந்தியடிகள் மேகத்திடையே மின்னலெனப்போதருவது பெரு மகிழ்வுக்குரியதாக அமைந்துள்ளது.

பிறபிற கட்டுரைகள் யாவையும் தனித்தனி எடுத்து விளக்குவதாயின் இவ்வேடு போதா. ஆகவே, ஒரு பானைச் சோற்றுக்குப் பதம் ஒன்றே காண்பதுபோல எடுத்துக்காட்டுக்காக ஈங்கே இரண்டொன்று காட்டப்பெற்றன.

ஆசிரியரவர்கள் அளவுகடந்த தனித்தமிழ்க் கனிவையும், முயற்சியையும் பாராட்டுகின்றோம். ஆங்கிலங்கற்றோர் அம்மொழிக்கே அடிமையாகாது இவர்கள் போன்று தம் தாய்மொழித் துறையில் மனம் ஊன்றுவராயின், அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல்வழக்கின் துறை வென்று மேலோங்குமெனக் கூற விழைகின்றோம். ஆசிரியர் இத்தகைய துறையில் இன்னும் மொழித்தொண்டு செய்யவேண்டுகின்றோம்.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.



திருவாளர், சி. உ. சுப. உடையப்பா அவர்கள்

தோற்றம்
4 - 1 - 1903

மறைவு :
11 - 3 - 1954




| சிலம்பு ௨௮ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௫, பங்குனி<br>ஏப்ரல், 1954 | பரல் ௮ |
|---|---|---|

# உடையப்பா பிரிவு

மன்னுலகத்து மன்னுதல் குறிக்கும் நாட்கள் சில. மன்னா ஆண்டுகள் பல. இவ்வாண்டு அறிஞருலகுக்கும் நாட்டுக்கும் பேரதிர்ச்சியை—புன்கண்ணை நிறுத்திய—பல நல்லோரை விழுங்கிய—பொல்லாத புல்லாண்டாகும்.

**பாகனேரி சி. உ. சுப. உடையப்பா அவர்கள் இவ் விசய யாண்டு மாசித் திங்கள் ௨௮ (11-3-54) ஆம் நாள் மாலை ஏழு மணிக் கால எல்லையில் தம் இல்லத்தில் உளதாகும் புகழுடல் பெற்றார்கள்**

அன்று, அவர் இல்லமும் பாகனேரி நகரும் ஒளி மழுங்கித் தோன்றின. அறிஞர்கள், செல்வர்கள், தேசியத் தலைவர்கள், அரசியல் தலைவர்கள், ஏழை எளியவர், அஞ்சல் வானொலி நிலையங்கள் முதலிய யாவரும் வாய்விட்டுக் கதறினர், சென்னைச் சட்டசபை, நாட்டாண்மை, நகராண்மைக் கழகங்கள், ஆசிரியப் பெருமக்கள், நெல்லை, சென்னைச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகச் செயலகத்தினர் யாவரும் கண்ணீர் மல்கி வடியக் கலுழ்ந்தனர் இக் கழகம் தன் அலுவலை நிறுத்திற்று; சட்ட அவைமன்றம் கூடி வருந்திக் கலைந்தது.

பாண்டி நாட்டையே தன் நாடாகக்கொண்ட நம் தமிழன்னை தன் அரும்பெறற் புதல்வனை இழந்து அலமந்தாள்; தமிழ்நாடு, இந்திய தேயம் ஓர் தொண்டரைத் தலைவரை இழந்தன! அவர் தோன்றிய பெருங்குலம் புகழ்மகனைப் பறிகொடுத்தது! அவர் இல்லம் தலைவன் ஒருவனைத் தணந்து கொதித்தது!

உடையப்பா அவர்கள் அரசியல்வானில் ஞாயிறாகத் திகழ்ந்தவர். அஞ் ஞாயிறு இன்று காலவேக மேகத்தால் மறைப்

பூண்டது. வேற்றுமையில்லா விழுத்திணைப் பிறந்து வீற்றிருந்தவர், நம் உடையப்பர்! உரையும் பாட்டும் உடையவர் நம் உடையப்பர்! புலவர் பாடும் புகழுடையார் நம் உடையப்பர்! இன்று வலவன் ஏவா வானவூர்தியில் மேவுலகு எய்தினர் உடையப்பர்! வாகை சூடிய உடையப்பர் இன்று வஞ்சி சூடினர். அந்தோ! இன்னது தம்ம இவ்வுலகம்! 'நெருநல் உளன்ஒருவன் இன்றில்லை யென்னும் பெருமை உடைத்திவ் வுலகு' என்று பேசினர் பெருநாவலர்! அதற்கு இலக்காக உடையப்பர் மறைந்தார். நண்பர்கள் இங்கே கண்டேம்; அங்கே இருந்தார்; உங்கே விருந்துண்டார் எனக், கூறிக் கூறிக் கதறினர்! பதறினர்! விழுந்தனர்! எழுந்தனராய் ஏமம் எய்தினர்.

உடையப்பர் உள்ளம், உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளும் பெற்றியது அவர் சீரியர், நேரியர், நடுநிலையாளர், பொய்யாமையை மெய்யணியாகப் பூண்டவர் அவர்பால், தமிழர்க்கென அமைந்த பண்புகளான, நகை, ஈகை, இன்சொல், இகழாமை என்னும் நற்குடிமைப் பண்புகளும், அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம், தூங்காமை, கல்வி, துணிவுடைமை எனனும் அரசர்க்கென அமைந்த அருங்குணங்களும் இயற்கையாவே அமைந்திருந்தன. அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மையும், நவில்தொறும் நூல்நயம் ஒத்த நல்லார் குழுவும் எக்காலும் சூழ, பன்மீன் நடுவட் பானமதிபோல இலகி யொளிர்ந்தனர்.

இவர்தம் பிரிவு, நம் தேயத்துக்கு, தமிழ் நாட்டுக்கு—பாகனேரி நகருக்கு—அவ்வூர் ஏழைமக்கள் செல்வத் தோன்றல்களுக்கு ஈடு எடுப்பற்ற பேரிழப்பே யாகும்.

இவரை இளம்பருவ காலத்தே முற்று முதிரா அமையத்தே இழந்து அலமரும் அவர்தம் மனைவி மக்கட்கும் விருப்புறுச் சுற்றத்தவர்கட்கும் எம் ஆழ்ந்த வருத்தத்தை உள்ளம் உருகித் தெரிவித்துக் கொள்ளுகின்றோம் அவர்தம் ஆருயிர் இறை திருவடி இன்பில் திளைத்தின்புறுவதாக.

நாடும் நகரும்

இராமநாதபுர மாவட்டத்தில் பாகனேரி எனப் பெயரிய நகரும் ஒன்று. இந் நகர் நிலந்தரு திருவும் கலந்தரு திருவும் ஈட்டும் நசைமேழி உழவரும், தமவும் பிறவும் ஒப்பநாடும் வணிகப் பெருமக்களும், கண்ணுள் வினைஞர் முதற் பல்வகைக் கைத்தொழில்வினைஞர்களும் கலந்திருந்துறையும் கடியுடை வியனகர்.

குடிமை

இவ்வூரில், கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே முன் தோன்றி வாளோடு மூத்த வீரக்குலமாகிய கள்ளர் மரபு கவின்

பெறத திகழ்வது, அக் குலத்தில் பண்டைக் காலத்தே சிக்கன் என்பார சிறபபும் செல்வமும் அறப்பண்பும் மிகத திகழ்ந்தனர். அவர்தம் வழி, வாழையடி வாழையாக வளர்நது வரலாயிற்று. அக் குடிக்குச சிக்கன் புறம என்னும சிறபபுப் பெயா வழக்காக வளர்நது வரலாயிற்று.

தந்தை தாயர்

அவர் குடிமை சிறபப ஒப்பில் ஒருவரெனத் தக்க 'சுப்பிர மணியன' என்பார தோனறினா. அன்னா கல்வி அறிவு ஒழுக்க மிககாராய்க் கடவுட் பேரன்புடையராய் விளங்கி, 'இடனின்றி இரந்தாாக கொனறீயாமை இழிபு' என்னும் கருத்துடைய ராய்ச செல்வம ஈட்ட இலங்கை சென்று அத் துறையில் பொருள்வளம காண முயன்றார். அவாககு மணபபருவம் எயதுற அவ்வூரில் மாணபுமிக்க ஒத்த கிழமைபெற்ற குலத்தைச் சாரநத 'உடையம்மை' என்னும உயா பண்புமிக்க அமமை யாரை இல்லறக் கிழததியாராக மணம் புரிந்தனா.

காலம பல சென்றன; இவர்தம இல்லறககடமை செம்மை பெற இன்பததோடு வாழ்நதனர் ஆனால், 'இன்னடிசில் புக் களையும தாமரைக்கைப பூநாறும செய்யவாய் மக்கள்' இல்லாது பன்னாள மாழ்குறறனர், முநதித் தவம்பல செய்தனா; இறை வழிபாடியற்றினா, உண்ணா நோன்பு உறறனா; இவை ஓர் பெண் மகவைத தநதன அம்மகவுக்குப் 'பலமுடிச்சி' எனப பெயர் சூட்டி மகிழ்நதனர் சில்லாண்டு மகண்மையன்பில் பெற்றோர் மூழ்கி மகிழ்வுறறனா. பின் மகவு தோன்றிறறில்லை.

பில்லபபா பிறபபு

அப்பால் உடையம்மை அமமையாரின் தஙகையாகிய 'பழனியாயி' என்னும் நங்கையாரை இரண்டாம மனைவியாராக மணநதனர். அவாக்கும் தவம்பல ஆற்றி அவவூாப் புல்வாய் நாயகியம்மை திருவருளால் 'கருங்கதிர் விரிக்குமேனிக் காமரு குழவி'யாக ஓா ஆண்மகவு பிறந்தது. அம்மகவுக்கு அம்மை அருளால் பிறந்த காரணத்தால் 'பில்லப்பன்' எனப் பெய ரணிநது மகிழ்நதனர். அமமகிழ்வில் திளைதது வாழ்ந்தனர். குழநதைக்கு அகவை நான்காயிற்று.

உடையப்பா தோற்றம்

திசைய னைததின் பெருமை யெல்லாம்
தென்றிசையே வென்றேற
'வண்டமிழ செய்தவம் நிரம்ப'

தாய்மை யன்புமிக்க வாய்மையுடைய உடையம்மை மணி வயிற்றில் பலமுடிச்சிக்குப்பின் தம்பியராக—பில்லப்பாவின்

பிற்பிறந்த நம்பியாராக சுபகிருது ஆண்டு மார்கழித்திங்கள் உ௧ (4-1-1903) ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை நன்னாளில் உடைப்பா அவர்கள் பிறந்தனர்.

இம்மூன்று மக்களையும் தாய் தந்தையர் மிடியன் ஒரு செய்யாளன அச்செய் விளையக்காக்குஞ் செயல்போல, முற்கால மாணவர் பாடம் போற்றிப் படிக்குந் தன்மைபோலத் தாம் தவஞ்செய்தீன்ற மக்கள் மூவரையும் போற்றி வளர்த்தனர். அப்பால் தந்தையார் மண்ணுலகை மக்கட்களித்து விண்ணுடுற்றனர்.

பின்னர்த் தாய்மாரிருவரும் தம் மக்களைப் பேணிவளர்க்க மக்கள் மணப்பருவமெய்தினர். ஆண்மக்கள் இருவரும் அக்காலக் கல்வி முறைப்படி ஏட்டுக்கல்வி கற்று எழுத்தறியும் திறனுக—கணிதமுறையில் வல்லுநராக இலங்கினர்.

திருமணமும் மக்கட்பேறும்

பாகனேரிக்குத் தென்மேற்குத் திசையில் காளையார்மங்கலம் எனப் பெயரிய ஊரில் வைரப்பன் அம்பலம் என்பார் பெருஞ்செல்வர். அவர்க்குச் செல்வப்புதல்வர் சிதம்பர அம்பலம் என்பார், இவர் தோற்றத்தாலும் நடைஉடைச் சிறப்பாலும் கண்கவர் வனப்பினர். அவர்தம் அருந்தவப் புதல்வியார் திருவனைய அரிய நல்லார் 'சிகப்பி' என்னும் திருப்பெயரினர். இவரை நாடெல்லாம் மதிக்கவரு நலனுடையப்பருக்கு மணந்தக்க மாண்புடை மனைவியாகப் பிங்கள ஆண்டு தைத்திங்கள் ௧அ-ஆம் நாள் மணமுடிப்பித்தனர் இவ்வம்மையார் கற்புக்கடம்பூண்ட பொற்றொடியார், வருவிருந்தோம்பு ஊட்டும் திருவினர், கொண்கன் நினைப்பறிந்தொழுகும் நீரர். இவர்க்குக் கான்முளையாக இருவகை மக்களும் தோன்றினர். அவர்களுள் ஆண்மக்கள் நால்வரும் பெண்மக்கள் இருவரும் நலத்துடன் வாழ்கின்றனர். இவர் முறையே (௧) சுப்பிரமணியன், (௨) பில்லப்பன், (௩) இராசேந்திரன், (௪) காசிவிசுவநாதன், (௫) கஸ்தூரி, (௬) இலக்குமி என்னும் பெயரினராவர்

செல்வ வளம்

உடையப்பாவுக்குத் தம்முரிமையாக உள்ளூரில் விளைநிலங்கள் பலவும், கட்டிட இடங்களும், 50,000 ஆயிரம் வெண்பொன் செலவில் கட்டிய திருமகள் நிலையப் பங்களா ஒன்றும், கொட்டகுடிக் கிராமம் என்னும் தண்ணடை மிக்க சிற்றூர் ஒன்றும், மதுரை மாவட்டம் கோம்பை மலையுச்சியில் ஏலக்காய் விளையும் தோட்டமும், இலங்கைக் கொழும்பிலும், மலேயாச் சிங்கப்பூரிலும் கொடுக்கல் வாங்கற் கடைகளும் உள்ளன.

மண்டபப்படித் திருநாள்

பாகனேரிக் கண்கண்ட தெய்வமான புல்வாய் நாயகியம்ம னுக்கு ஆண்டுகள்தோறும் ஆனித்திங்களில் நிகழும் திருவிழா வில் எட்டாந் திருநாள மண்டபபபடியைப் பெரும்பொருட் செலவில சிவகங்கை அரசர் கௌரிவலலபத தேவரவர்களிடம் உரிமைபெறறு வாஙகிப், புகழ்பெற்ற நாதசுர விததுவான்களை அழைதது இசையரஙகு கூட்டிப புல்வாய் நாயகியமமையை யெழுநதருள்விதது ஊாவலம வரச்செய்து தாமும தம் தலைமய னும நடத்திவநதனா. அதற்கென மணடபபபடிக் கட்டிட மும, குதிரை ஊர்தியும அமைததுள்ளனர்

பொதுநலத் தொண்டு

உடையபபாவுக்கு அறிவறிநத காலமுதலே நாடு மொழி கலை முதலியவறறில அளவறற பற்றுண்டு. தாம் பிறந்த குடி மரபின சமயமாகிய சைவசமய நெறியிலும் மிகப பற்றுதலுடன் திருநீறு உருததிராககம அணிநது நாளதோறும் பெரிய புராணம ஓதிப பாட்டுககளை மனப்பாடஞ் செயவாா. புலால் உணவை நீததுச சைவ உணவு (மரக்கறி உணவே) பலஆண்டு கொண்டு கடைப்பிடிததுவநதார். பின் பதவிக் கூட்டுறவால் சைவ உணவை நீகக மனம நெகிழ்நதது. பினனா அவ்வூரில் கதா இயக்கம, தீண்டாமை ஒழிபபு, நூல் நூற்றல், வழககுத் தீாத்தல் முதலிய பலவகைகத தொண்டுகளில ஈடுபட்டு அரிய பெரிய தொணடு செய்துவரலானார்.

நாடடு விடுதலை இயக்கம்

அநநாள நம நாடு ஆஙகிலப் பேரரசின்கீழ் அடிமைப்பட்டுத் துவக்குண்டு கிடநதபோது, அதன் விடுதலைக்காக அல்லும் பகலும பாடுபட்டு ஓயாது உழைததுவந்தார் அதறகாகத தம் செலவததை வாரிவாரிவழங்கினார். அரசினரின் பெரிய அடக்கு முறைச சட்டததையும மீறித் தம் குடும்பத்தாரின் வேண்டு தலையும கடநது சவகா வாசகசாலை என்னும் ஒரு நிலையததைத் தம நண்பா திரு ஆர். வி சுவாமிநாதன் முதலியவர்களுடன் கூடி நிறுவினார். தமிழ்ப்பெரியார் திரு வி க. அவாகளை முதலமுதல பாகனேரிககுக் கூட்டிவந்து தமிழொலி முழக்கம் வீதியிலும மணம்பெறச் செய்தவர் உடையபபாவே. 1930-ல் காந்தியடிகளால் உபபுவரி குறித்துச் சட்டமீறல் இயக்கம் தொடங்கியபோது தாம் செனறு கலந்துகொள்ளவேண்டு மென்பது பேரவா. ஆனால், குடும்ப முதியவர்கள் விருப்பமின் மையால் தாம செல்லாது பல தொண்டர்களைப் பொறுக்கி உப்புப்போருக்கு அனுப்பினா. அப்போது காரைக்குடிக் காங்

கிரசுக் கமிட்டித் தலைவராக இருந்த திரு பொ திருகூடசுந்தரம் அவர்களை ஊர்தோறும் அழைத்துச் சென்று சொற் பொழிவாற்றுவித்தும் தாம் சொற்பொழிவாற்றியும் தொண்டு பல செய்ததுடன், சத்தியாக்கிரக இயக்கத்துக்கு நன்கொடை யாகப் பணங்கொடுத்தும் நிதி திரட்டியும உதவினர். தாம் தவறாது கதிராடை அணிந்தும, பிறரைப் பலரை அணியச்செய்தும் வந்தார்

1941-ல் தனிமக்கள் சத்தியாக்கிரகத்தில் பங்குகொண்டு, இரண்டாவது உலகப போரில், 'ஆங்கில மன்னருக்கு ஆளுதவி யாவது, பொருளுதவியாவது செய்வது கூடாது' என்று எடுத் துரைதத குற்றத்துக்காக ஆயிரரூபா ஈடுகாணம கட்டி ஆறு திங்கள் சிறைத்தண்டனையேற்று அலிப்புரம சிறையிலிருந்து கால எல்லை கடந்தபின வந்தார.

தமிழ்க் காதல்

தம் தாய்மொழியாகிய தமிழில் அளவற்ற பற்றுதலுடை யவர். அதனால், பண்டித, ந மு வேங்கடசாமி நாட்டாரவர் களிடம் பெருநட்புக கொணடிருந்தார, கல்லல, கு க மணி வாசக சரணாலய சுவாமிகளையும உரிமைமிக்க அன்புடையா ராகக் கொண்டு இலங்கினர். அவாகள் இருவரும் தம் நட்புக்கெழு தகைமை தோன்றத் 'தமபி!' என மகிழ்வுற அழைப்பா.

ஏறக்குறைய இருபதாண்டுகட்கு முன்னரேயே திருநெல் வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக உறுப் பினராகி, அதில் ஏறக்குறையப் பத்தாண்டுகள் வரை நிறை வேற்றுக்கழக உறுப்பினராக இருந்து தம் பிரிவுகாலம வரை தொண்டாற்றினர். தம அலுவலாளராகவும் நண்பராகவும் இருந்த தற்காலம் கழகப்புலவராக இருந்து வரும் செல்லூர்க் கிழார் செ ரெ. இராமசாமி பிள்ளையுடன் பலவாண்டுகள் அள வளாவி இருந்ததுடன் அன்னாரால ஆக்கிய 'காந்தி முதுமொழி வெண்பா' என்னும் நூலைச் சவகா வாசக சாலைச் சார்பில் அச்சிட்டு அரங்கேற்றினர். இன்னும் தனித்தமிழில் எழுதவும் பேசவும் பயின்று அவைகளில சிறந்து திகழ்ந்தார. இன்னும் தமிழுக்காகப் பல கடமைகள் புரிந்தார். சென்ற சட்டசபைத் தேர்தலில் சேது மன்னரவர்களை எதிர்த்துப் போட்டியிட்ட முகவை இராசமாணிக்கம், தற்கால அரிசன நலக் கண்காணிப் பாளரான திரு. ஆர். எஸ். மலையப்பன் போன்றார்க்குக் கல்லூ ரிப் படிப்புக்காகப் பொருளுதவி புரிந்தனர். பல ஏழை மாண வர்க்கும் காலங்கருதிக் கைம்மாறு புரிந்துள்ளனர்.

தந்நலத் துறவு

இலங்கையில் ஆண்டுதோறும நூறாயிரம் வெண்பொன் வருவாய் தரத்தக்க கள்ளுக்கடைக் கூட்டுறவுக் குழுமததில் தமக்கு இருந்த தொடர்பை நீக்கிவிட்டதுடன் தம் தமையனாரையும மைததுனரையும் விட்டுவிடச் செய்த சிறப்பும் திரு. உடையப்பாவின் சிறநத தந்நலமற்ற நிலையே ஆகும். மேலும் பெரியார் விேைனாபாபாவே அவாகளின் நிலக்கொடை வேள்விக்குத தம் நன்கொடையாக 8000 வெணபொன் மதிப்புள்ள 5 ஏக்கர் நிலங்களை அளிததனர்

அரசியலாரால், சமீன் ஒழிப்புத் துவங்கிய காலத்தேயே தமக்கு உரிமையுளள 200 ஏககா நிலபபரப்புள்ள தண்ணடையான கொட்டகுடி எனனும கிராமததின் மேலவார உரிமையை ஏற்றுககொள்ளுமாறு தாமே மாவட்டத் தண்டலாளருக்கு எழுதி உரிமைப்படுததிக்கொள்ள வேண்டினா. சிவகஙகை நகரில் பாற்பண்ணை வைதது நடத்திவந்தனா. இவ்வெலலாம தந்நலந துறநத தகைசால பண்பனறோ ?

பதவித் தொடர்பு

1932-ல் சிவகங்கைத தாலூகா போர்டு, இராமநாதபுரம் மாவட்டக் கழகத்துக்கு உறுப்பினராகத தோநதெடுக்கப் பெற்றா. 1936-ல நீதிக்கட்சிச் சாாபில் நிகழ்நத போட்டிக் கிடையிலும மிக்க வாககுகளால் தேர்நதெடுககபபெற்று இராமநாதபுரம் மாவட்டக்கழக உறுப்பினரானர். 1937-ல் அதன் துணைத்தலைமை யேற்றார் மீண்டும் 1949-ல அதன் தலைவராகத் தோநதெடுக்கப்பெற்று 1953 சூன் திங்கள் வரை அக் கழகம தலைக்கபபடுமகாறும பல அருநதொண்டுகள் புரிநதார். அவற்றுள், பரமக்குடி வையை யாறறுக்குக் கட்டப்பெற்ற 'உடையப்பா பால'மும, முததுஉல. உலகபப செட்டியாா பாலமும், பேரையூர்ப் பாலமும, சிவகஙகை மகப்பேறில்லமும், பாகனேரி திரு உ. இரு மு முத்தையா அம்பலம உயர்நிலைப் பள்ளியும் முதலிடம பெறத்தககன.

சென்னைச் சட்ட அவை உறுப்பினா பதவி

1952-ல் தென்பகுதி மாவட்டப பொதுக்கழகத் தொகுதியிலிருநது மேல்சபை உறுபபினராக மிகுதியான வாக்காளர்களால் தோநதெடுக்கப்பட்டார். இறுதிக் காலம்வரை உறுப்பினராக இருந்து தொண்டுகள் பல செய்தார் சிவகங்கைச் சமீன் உழவா சங்கத்தின் தலைவராயிருந்து பிரகாசம் விசாரணைக் குழுமுன தக்க சான்றுகளை கூறிச் சமீன் ஒழிப்புக்குப் பாடுபட்டார். இன்னும் அன்னார் ஆற்றிய தொண்டுகள் பல.

மறைதல்

இவர்தம் பொதுநல வாழ்வுக்குத் துணையாக இருந்து உடல் பொருள் ஆவி மூன்றாலும் தோள்போல் உதவினோர் இவர்தம் முன் தோன்றல் பில்லப்பா அவர்கள். அன்னார் கடந்த ஆண்டில் தம் பருவுடல நீத்து மறைந்தார அவர பிரிவால் ஏஙகினார். 'உடற்பிறப்பால் தோள்வலி போம்' என்பதை உணாநதார. அவர்ப் பற்றிய கவற்சி, அவர் இலலப் பொறுப்பு, பிறவெலலாம ஒன்றுபட்டு இவர்தம் மனத்தை அலைத்தன; வாட்டின; அந்தோ கண்ணறையான காலனும் நண்ணினன்.

13—3—54 காலைப்போது வந்தது; கதிரவனும் இவர் மறைவுக்கு வருநதுவான்போல் கணணைச் சுருககி விழிததுக் கொண்டு சென்று மறைநதான் மாலை நங்கை வநது மலர்க் கண்ணீா மல்க, வாய்விண்டு நடுககமுற்றழ, மாலை எ-மணிககுத் தம நல்லுயிா மாரடைபபால் வானேக, யாக்கை நமாக்கொழிய விட்டு மறைவுற்றார்.

நன் காட்டில் உடையப்பா

அப்பொழுதே கமபிச் செய்திகள் பல்லிடங்கட்கும் பறந்தன. உடையபபாவின் முதன் மகனார் திரு சுப்பிரமணியன் அவாகள் இலஙகைகக கொழுமபுவில் உறைந்துவந்தாா. கம்பி எட்டியதும மனந் துடிதுடிதது வருந்தினாா, மாழ்கினர். மற்றைநாட் காலை ௧௦-மணி அளவில வானூாதியில் பறந்து, நிலவூர்தியில் ஊர்ந்துவந்து, தம அரிய தந்தை — நாட்டுத் தநதை—தமிழ்த் தந்தை—பொதுமக்கள் தந்தையின் பொன்னுடல கண்டு மிக வருநதிக கண்ணீர் உகுத்தனர். வெளியூர்களிலிருநதும உள்ளூரிலிருந்தும் மக்கட்கூட்டம் யாண்டும் குழுமித் தம இறுதிககடனை ஆற்றித் தெருமரலெய்தியது.

மலர்களால் அணி செய்யப்பெற்ற திருத்தேர் ஒன்றில் நாட்டுக் கொடி பறந்து ஆடி நடுங்க, உடையப்பாவின் திருவுடல் மலர்களால் அணிவித்து ஏற்றித் தம் முன்னோர்களால் அமைத்த சிறு விளாக் கண்மாய்த் திடலில் கொணர்ந்து வைத்தனர். பல அன்பர்கள அந் நன்காட்டில் இவர் புகழ்மாலைபற்றிப் பேசினர்.

மக்கள் நால்வரும் அகங்கரைநது இறுதிக்கடன் ஆற்ற நடுகல்லில அமர்நதனா, நம் உடையப்பர்.

வாழ்க உடையப்பா வண்புகழ் !

# [1] திருக்குறளில் சங்க இலக்கிய மணம்

[டாக்டர், திரு. மு. வரதராசனார்]

திருக்குறளில் சங்க இலக்கிய மணம் கமழ்கின்றதா? அல்லது சங்க இலக்கியத்தில் திருக்குறள் மணம் கமழ்கின்றதா? என்று ஆய்வு நிகழ்வதுண்டு. ஆய்வு என்பதே பல இடங்களிலும் இழுத்துச்செல்லும் ஓர் பேராற்றல். அது செல்லச் செல்ல எல்லையற்ற நல்லின்பந் தரவல்லது இஃது உண்மை கண்டுணர்ந்த அனுபவம். எப்போதும் எவரும் அனுபவத்திற்குப் பெருமை தரவேண்டும். இலக்கிய மதுவை அருந்தும் இன்பம் எண்ணற்றது. குயிலும் மயிலும் நிறைந்த குளிர்பூஞ் சோலையிலே கருத்தொருமித்த காதல் இளைஞர் எய்தும் இன்பம்போல—தாயின் அணைப்பில் மகிழும் அன்புக் குழந்தையின் அளவற்ற இன்பம்போல—இலக்கியத்தை ஆராயும் இன்பமும் அளவற்றதாகும்.

பல்லாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட பழமையான மொழிகள் உலகில் பலவுள. ஈபுரு போன்ற பழமையான மொழிகள் இன்னும் இலக்கியவளம் பெறவில்லை நம் நாட்டில் வழங்கும் தென்மொழியும் வடமொழியும் இலக்கிய வளமும் இலக்கண வரம்பும் பெற்றவை. இவ் இருபெரு மொழிகளுள் தென்மொழியாகிய நம் தீந்தமிழ் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே நல்ல இலக்கிய வளத்தைப்பெற்று மிளிர்ந்தது. வடமொழியோ இயற்கையோடு பொருந்திய திருந்தாத காரணத்தால் பேச்சு வழக்கை யிழந்தது. இயற்கையோடு பொருந்திய திருந்திய அருந்தமிழ் இன்றும் கன்னித் தன்மையுடன் நின்று நிலவுகின்றது. நம் தமிழ்மொழியில் சங்க இலக்கியம் தோன்றிய காலம், உலகத்திலே பல மொழிகள் எழுதப்பெறாத காலம்; பல பேச்சையறியாத மிகப் பழங்காலம்; பல மொழிகளில் கவியோ காவியமோ தோன்றாத தொன்மையான காலம்; அத்தகைய பழமையான காலத்தில் சிறந்த இலக்கிய வளத்தைப் பெற்று விளங்கியது நம் தமிழ்.

சங்க இலக்கியம் ஏற்பட்ட காலத்திலே முப்பது பெண்பாற் புலவர்கள் வாழ்ந்து பெருங்கவிதை பாடியுள்ளார்கள். சிறந்த கலைவளம் மிகுந்த காலம் சங்க இலக்கிய காலம். திருவள்ளுவர்

---

1. 21-3-54-ல் நெல்லை அருணகிரி இசைசகழக அரங்கத்தில் டாக்டர். மு. வரதராசனார் ஆற்றிய சொற்பொழிவின் சுருக்கம். வித்துவான், திரு. அ. க. நவநீத கிருஷ்ணபிள்ளை குறிப்பெடுத்தெழுதியது.

வாழ்ந்து திருக்குறள் இயற்றிய காலம் சங்க இலக்கியங்கட்கு இடைப்பட்ட காலம் என்பர் சிலர். சிலர் சங்க இலக்கியங்களின் இறுதிக்காலம் என்பர். சங்க இலக்கியங்கள் திருவள்ளுவர்க்கு முந்திப் பெரும்பான்மையும் பிந்திச் சிறுபான்மையும் எழுந்தனவென்னலாம். ஆதலின், திருக்குறளில் சங்க இலக்கியம் கமழ்கின்றதென்றாலும் சங்க இலக்கியத்தில் திருக்குறள் மணம் கமழ்கின்றதென்றாலும் கருத்தொன்றே.

சங்க இலக்கியங்களை அகம், புறம் என்ற இருவகையாகப் பிரிக்கலாம். அகம் - உள்; புறம் - வெளி இவற்றை வீட்டு வாழ்வு, நாட்டு வாழ்வு எனச் சொல்லுதலும் பொருந்தும். நாட்டு வாழ்வு பரந்த இடத்தையுடையது, அரசனோடு தொடர்புடையது; வீட்டு வாழ்வு குறுகிய இடத்தையுடைது; தலைவன் தலைவியோடு கூடியது, இதனை அகம் என்பர் அது இன்பத்தின்பாற்பட்டது 'ஊடுதல் காமத்திற்கு இன்பம்' என்பார் திருவள்ளுவர் கணவனுக்கும் மனைவிக்கும் ஊடல் நிகழ்வது இருபதாம் நூற்றாண்டில் மட்டுமன்று. உலக வாழ்வு தொடங்கியநாளிலேயே ஊடல் தோன்றியதுதான் உணவுக்கு உப்பைப் போலக், காதலர் மனையற வாழ்வில் ஊடல் இருக்கவேண்டும், அது, தலைவன் தலைவியைப் பிரிந்தபொழுது எழுவது; தலைவனது தவறை மறைமுகமாகக் கண்டிக்கும் நோக்குடன் எழுந்த வெறுப்புணர்ச்சியே அந்த ஊடல், அதனைக் காட்டுதற்குத் தலைவிக்கு வாய்ப்புக் கிடைத்தது, அவள் அதனைப் பயன்படுத்தும்போது, எண்ணிப்பார்க்கும் ஆற்றலிருந்தால் கடுங்கோபக்காரனும் தணிந்து பணிந்து கனிந்து நிற்பான்.

தலைவி, ஊடலைக் கையாளும் திறத்தைக் காணுங்கள். தலைவனைப் பிரிந்த தலைவி, அவன் வீட்டுள் வரும் வேளையில் தன் குழந்தையோடு கொஞ்சுகிறாள். கணவனது அடாத செயலை இடித்துக் கூறுபவள்போல, அவனது செயலைப்பற்றி ஏதேதோ குறும்பாகத் தன் குழந்தையுடன் இன்ப உரையாடிக்கொண்டிருக்கிறாள் கணவன் வந்த வரவையே கவனியாதவளைப் போல, அவனுக்கு மலர்ந்த முகத்தாலோ புன்முறுவலாலோ வரவேற்பளிக்காமல் அந்தக் குழந்தையுடன் கொஞ்சுகிறாள். தலைவியின் கோபத்தைத் தலைவன் உணர்ந்துகொண்டான். தானும் குழந்தையின் பக்கம் நெருங்கினான் குழந்தையுடன் தானும் கொஞ்சத் தொடங்கிவிட்டான். 'யாமும் காதலம் அவற்கு' என்று கூறிக் கொஞ்சுகிறான் தலைவன்.

பலமுறை உழுது காயவிட்ட காரணத்தால் நிலம் மெல்லிய புழுதியாக மாறிக் கிடக்கிறது. அதிலே மழை பெய்தவுடன்

நிலம் நெகிழ்ந்து கூழாய்க் கிடக்கின்றது. அதுபோல எனது நெஞ்சமும் நெகிழ்ந்து அழைபோகியது; ஆதலின், 'யாமும் காதலம் அவற்கு' என்று சொல்லிக் கொள்ளுகிறான் தலைவன். இது சங்க இலக்கியத்தில் காணும் ஒரு காட்சி. இதனைத் திரு வள்ளுவர் தமது திருக்குறளில் காட்டும் திறனைக் காணுங்கள்.

"நிணம்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ
புணர்ந்தூடி நிற்பேம் எனல"

மாலைக்காலம் பொல்லாத காலம்; இளங்காதலர்க்கு இன்பந் தருங்காலம்; மணந்தார்க்கு இன்பமும் தணந்தார்க்குத் துன்ப மும் தருங் காலம்; மாலை என்பதே மயக்கம்; அறிவை மயக்கும் காலம் அது. மாலையில் நமக்கு உடலிற் குழைவு உண்டாகும்; நோயாளிகட்கு மாலையில்தான் நோய் மிகும், கவலைகொண்ட நெஞ்சினார்க்கு மாலையில் அக்கவலை பெருகுவது கண்கூடு. பிச்சைக்காரன் துன்பம் இரவில்தான் பெருகக் காண்கிறோம். பிரிவுத் துன்பத்தை அகற்ற இந்தக் காலத்தில் எத்தனையோ சாதனங்கள் உண்டு. சங்க காலத்தில் எந்தச் சாதனமும் கிடையாது. அந்தப் பழங்காலத்தைக் கற்பனை செய்து காண வேண்டும். கணவனைப் பிரிந்திருக்கும் மனைவி, இந்தக் காலத் தில் இடையிடையே கணவன் கையெழுத்தைக் காணமுடியும் அவனது குரலைக் கேட்க விரும்பினால் தொலைபேசியின் வாயி லாகப் பக்கத்திலிருந்து உரையாடுவதுபோல உரையாடி உள மகிழ்ந்துகொள்ள முடியும் ஆனால், அந்தப் பழங்காலத்தில் பிரிந்து சென்றால் திரும்பவந்து பொருந்துமவரையும் பெருந் துன்பந்தான்.

தலைவனைப் பிரிந்த தலைவியொருத்தி தோழியிடம் சொல்லி வருந்துகிறாள்: "யாது சொலவேன்கொல தோழி; கொலை குறித்தன்ன மாலை என்னை வாட்டி வருத்துகின்றதே; இந்த வேளையில் கல்லாத கோவலர் ஊதும் புல்லாங்குழல தரும எல்லையற்ற துன்பந்தான் என்னே! குழலிசையும் மாலைவேளையும் கூடி என்னைக் கொலை செய்வதுபோல் நிலைகுலையச் செய்கிறதே," என்று ஏங்கித் துடிக்கிறாள் இது சங்க இலக்கியத்தில் கமழும் மணம்.

இந்த மணத்தைப் பொதிந்து கமழச் செய்யும் திருக்குறள் மலரைக் காணுங்கள்!

"அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்
குழல்போலும் கொல்லும் படை."

தலைவியைப் பிரிந்து சென்ற தலைவனை உள்ளி, அவனிருக் கும் இடந்தேடித் தலைவியின் நெஞ்சம் விரைந்து செல்கிறது.

உடலைவிட்டு உயிரே நீங்கிச் செல்வதுபோலச் செல்கிறது. தலைவன் உயிராகவும் தலைவி உடலாகவும் அமைய வாழும் வாழ்வில் தலைவனைப் பிரிவது, உயிரை இழப்பதுபோல இருக்கிறது தலைவிக்கு. அந்த உயிர், வானில் பறவை விரைந்து பறந்து செல்லுதல்போலச் செல்கிறது என்று சொல்கிறாள் தலைவி இது சங்க இலக்கியத்திற் காணும் கருத்து. இதனைப் பொதிந்து காட்டும் வள்ளுவர் குறளைப் பாருங்கள் !

"பொருள்மாலை யாளரை யுள்ளி மருள்மாலை
மாயுமென் மாயா உயிர்"

உயிர், உடலைவிட்டு நீங்கிச் செல்வதை முட்டையினின்று வெளிப்படும் பறவைக் குஞ்சுக்கு ஒப்பிட்டுரைப்பார் வள்ளுவர்,

"குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு"

காதலர் வாழ்விற் பிரிவு ஏற்பட்டால் அது சாதல் துன்பத்தைத்தான் தரும் என்பதைப் பாரதியாரும் கூறுவார்.

"காதல் காதல் காதல், காதல் போயிற் சாதல்"

என்பார் பாரதியார். தலைவன் தலைவியரது நட்பு, உயிரும் உடம்பும் போன்ற இன்றியமையாத தொடர்புடையது இதனைச் சங்க இலக்கியத்திற் பல இடங்களில் காணலாம்

"யாக்கைக் குயிரியைந் தன்ன நட்பின்
அவ்வுயிர் வாழ்தல் அன்ன காதல்
சாதல் அன்ன பிரிவரி யோம்."

என்னும் சங்க இலக்கியம் இக்கருத்தைத் திருக்குறள்,

"உடம்பொ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையொடு எம்மிடை நட்பு."

என்று கூறும் அதனையே மற்றோர் இடத்தில்,

"வாழ்தல் உயிர்க்கன்னள் ஆயிழை சாதல்
அதற்கன்னள் நீங்கு மிடத்து."

என்று கூறுவார் வள்ளுவர்.

திங்களைப் பெண்கள் முகத்திற்கு ஒப்பாகப் பேசுவர். தன் மனைவியின் முகம் எங்ஙனமிருப்பினும் திங்களைப் போன்ற திருமுகமுடையாள் என் மனைவி என்று நினைப்பவன், தனது வாழ்வில் தனிப்பேறு பெற்றவன். மனைவியல்லாத மற்றவர் மதிமுகந்தான் அழகுடையது என்று எண்ணுபவன் வாழ்வில் ஏமாற்றமடைந்தவன் தன் வீட்டு உணவு இனியது; தன் குழந்தை நல்ல குணமுடையது என்றெல்லாம் எண்ணி மகிழ்பவன் உண்மையாகவே வாழ்வில் இன்பம் பெற்றவன்.

தலைவன் ஒருவன, மலைமுகட்டில் தவழ்ந்து செலலும் மதியதனை நோக்கிக் குறை கூறுகிறான. என் மனைவியின் திலகமிட்ட திருநுதலையுடைய முகததைபபோன்ற அழகு உன்பால் உணடோ? என்று கேட்டுத, தன் காதல மனைவியின் தண்மதி முகததை நினைநது கனிநது இனபூறினான இநதக கருததைத் திருவள்ளுவர் பல குறட்பாககளில பலவேறு முறையில் காட்டிக் களிப்பூட்டுகிறார

இறுதிக் குறளில தலைவன் திங்களுக்கு அறிவுரை கூறுகிறான் கற்புடைய என தலைவியின் முகததை நீ ஒததிருக்க விருமபினால் வான வெளியில பலா காண வருவது முறையாகுமா? பெண்ணியல்புக்குப் பொருத்தமற்ற செயலாகுமே அஙஙனம பலர் காணத் தோன்றாதே என்று கூறுகிறான்.

"அறுவாய நிறைநத அவிர மதிககுப் போல
மறுவுணடோ மாதா முகதது."

"மாதா முகம்போல ஒளிவிட வல்லையேல்
காதலை வாழி மதி"

"மலரன்ன கணணாள் முகமொததி யாயின்
பலாகாணத தோன்றல் மதி"

தலைவன கனவொன்று கண்டான், கனவு ஆற்றலுடையது; இறநதவனையும் எழுப்பவலலது, அததகைய கனவில தலைவி, தலைவன்முன தோன்றினாள அவளுடன பலவேறு வகையில இன்பநதுய்த்து மகிழ்ச்சி மிகுநது நிற்கையில் கனவு கலைந்தது. அந்தக் கனவைப் பழிபபதா? பாராட்டுவதா? அநத இனபக் கனவைத் தலைவன் எணணிப போற்றுகிறான்

"நுணபூண மடநதையைத் தநதோய போல
இன்துயில எழுப்புதி கனவே
எள்ளா ரமம துணைபுரிந் தோரே."

என்று சஙக இலக்கியத்தில் தலைவன் கனவைப் புகழ்ந்ததைக் காண்கிறோம இதனைத் திருக்குறளில் வள்ளுவர் சொல்லும விதம் மிக்க அழகியதாகும் எனனைப பிரிநது சென்ற காதலரைப்பற்றி ஏதுமே அறியமுடியாதபடி யிருந்த எனக்கு, அவர் அனுபபிய தூதுடன் வநத கனவுககு யான் என்ன விருந்தளிப்பேன் என்று எண்ணுகிறாள தலைவி.

"காதலர் தூதொடு வந்த கனவினுக்கு
யாதுசெய வேன்கொல் விருந்து."

என்பது திருக்குறள் இதுகாறும் அகத்துறைக் கருத்துக்களை நோக்கினோம. இனிப் புறததுறைக் கருத்துக்கள் சிலவற்றை நோக்கியமைவோம்

உலகில் இயமனுக்கு ஆளாகாமல் பிறர்க்கு ஆளானவர்கள் தான் பெருமையுற்றவர்கள். பிறர்க்கென வாழ்ந்து பிறர்க்கென்றே தமதுயிரையும் தியாகம் செய்த சிலர்களே ஞாலத்தில் சிறந்தவரெனப் பேசப்பெறுவர்.

“நோற்றோர் மன்ற தாமே
கூற்றம் கோளுற விளியார்
பிறர்க்கென விளிந்தோர்.”

என்பது சங்க இலக்கியம். இதனைத் திருவள்ளுவர்,

“ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து.”

என்பார்

ஈரநெஞ்சம் படைத்தோர் ஏனையவர் துன்பங்கண்டு பெரிதும் வருந்துவர். அத்தகைய பண்பு, மிக அருமையானது, அஃது ஒரு பெருஞ்செல்வம் என்பார் ஒரு சங்ககாலப் புலவர்.

“நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும்
செல்வ மன்றுதம் செய்வினைப் பயனே
சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர்
புன்கண் அஞ்சும் பண்பின்
மென்கட் செல்வம் செல்வமென் பதுவே.”

இதனைத் திருவள்ளுவர்,

“அருட்செல்வம் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள.”

என்பார். அருளைச் செல்வமென்றும், அது செல்வத்துட் செல்வம் என்றும் போற்றுவார்.

நன்மனம் படைத்த பேரறிஞர் பெர்னாட்ஷா, காலை ஒருமுறை நக்கிய நாயை என்னால் எட்டியுதைக்க மனம் வராது என்றார். மானின் மருண்ட பார்வையைக்கண்டு மனம் நெகிழ்ந்த நம் தேசத்தலைவர் நேருபெருமான், வேட்டையாடுதலை அன்று முதல் விட்டொழிந்தார். நன்றியுணர்ச்சியுடன் நோக்கும் அன்புகலந்த பார்வை, வன்மனத்தையும் மென்மையாக்கி விடுகிறது.

தோழி, தலைவனுக்குக் கூறும் அறிவுரையில்,

“முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சு முண்பர் நனிநா கரிகர்.”

என்றாள். இது நற்றிணையென்னும் சங்க இலக்கியத்திற் காண்பது. இதனைத் திருவள்ளுவர்,

"பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்"

என்ற குறட்பாவில் கமழச் செய்கிறார்.

புறநானூறுப் பாடலொன்றில் அரசன் ஒருவனுக்கு அற மொழி கூறும் புலவரொருவர், ஆன்முலை யறுத்த அறனில்லோர் முதலாய தீவினை செய்தார் பலர்க்கும் அத்தீவினையை யொழிக்கக் கழுவாயுண்டு ஆனால் ஒருவன் செய்த நன்றியை மறந்த பாவத் திற்குக் கழுவாயே யில்லை

"செய்தி கொன்றோர்க்கு உய்தியில்லென
அறம்பா டிற்றே ஆயிழை கணவ."

என்று கூறினார் இக்கருத்து,

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

என்ற திருக்குறளில் கமழக் காணலாம். அறம் என்று குறிப் பதே திருக்குறளைத்தான் என்பர் அறிஞர்

வள்ளல்களைப் புகழ்ந்துபாடிப் பரிசுபெற்று வாழும் பரிசில் வாழ்க்கையையுடைய புலவரொருவர், 'ஈயென இரத்தலோ அரிது, நின் கொண்பெருங் கானம் பாடலோ எளிது' என்று இரப்பின் இழிவை வலியுறுத்திப் பாடினார் இந்தக் கருத்தை,

"ஆவிற்கு நீரென் றிரப்பினும் நாவிற்கு
இரவின் இளிவந்த தில."

என்ற திருக்குறட் பாவில் கமழக் காணலாம். இதனையே மற்றொரு சங்கப்புலவர்,

"ஈயென இரத்தல் இழிந்தன்று, அதனெதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று."

என்று பாடினார்.

கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி என்னும் பாண்டிய மன்னன் ஒருவன், இளமையிலேயே பேரறிவுபெற்று விளங்கிய வன்; பகைவருடன் கடலிடையே கப்பற்படையைச் செலுத்திக் கடும்போர் புரிந்து மாய்ந்தவன்; இந்த உலகம் அழியாது நிலைத் திருப்பதற்குக் காரணங்கள் யாவையென ஆராய்ந்து அறுதி யிட்டுக் கூறினான். தேவர்கட்குரிய தேவாமுதம் கிடைத்தாலும் இனிதென்று தனித்துண்ணார், பகுத்துண்பார். கோபமோ வெறுப்போ கொள்ளமாட்டார். பிறர் அஞ்சத்தக்கவற்றிற்குத் தாமும் அஞ்சிச் சோம்பியிரார். புகழ் வருவதாயின் உயிரையும் உவந்து கொடுப்பர். பழி வருவதாயின் அதற்குக் கைம்மாறாக

உலக முழுதுமே பெறுவதாயிருந்தாலும் விரும்பமாட்டார்கள். அத்தகைய சிறந்த இயல்புகளையுடையவராய்த் தமக்கென்று முயலாது பிறர்க்கென்று முயலும் வலிய முயற்சியுடையார் சிலர் உலகில் வாழ்வதாலேயே உலகு நிலைபெற்றுள்ளதெனக் கூறினன் இதனையே திருவள்ளுவர் திருக்குறள் மலரில்,

"பண்புடையார்ப் பட்டுண் டுலகம் அதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன்"

என்று மணம் கமழக் காண்கிறோம். இன்னும் எத்தனையோ சங்க இலக்கியக் கருத்துக்கள் திருக்குறளில் மணம் வீசுவதைக் காணலாம்.

---



பாகனேரி உயர்திரு. சி. உ. சுப. உடையப்பர் அவர்கள், எம். எல். சி. பிரிவு குறித்து இரங்கிக் கூறிய

## 'உடையப்பக் காஞ்சி'

அருந்தவங்கள் பலவாற்றி அன்னைஉடை யம்மைபெற்ற
இருந்தவனே! உடையப்ப எந்தலே! நீ ஏகினையோ?
பெருந்தகைமை உறுபழனி யாயிபில் லப்பனாற்றுய்
மருந்தென்ன வளர்ப்புற்ற மாமகனே! மறைந்தனையோ? (௧)

வற்றாத அன்புடையாய்! மாற்றலர்க்குப் போரேறே!
கற்றோர்தம் கண்ணனையாய! காவலர்க்குக் காவலனே!
அற்றோர்தம் அருமணியே! ஐயகோ! யாண்டுற்றாய்
உற்றோர்க்கும் மற்றோர்க்கும் உடையப்பன் எனுமதகையே! (௨)

தாமரையை வென்றமுகம் தண்ணிலவின புன்சிரிப்பு
காமருவு பீடுநடை கனிவுநிறை உள்ளன்பு
ஆமிவைகள் என்னெஞ்சை அள்ளூறித் துன்புறுத்த
நீமறைந்தாய் என்செய்கோ! நிலையாமை நெறியிதுவோ! (௩)

செல்லூர்க்கிழார்,
**செ. ரெ. இராமசாமிபிள்ளை,**
கழகப் புலவர்.

# மறைவுற்ற தமிழ் நூல்கள்

[மயிலை திரு. சீனி வேங்கடசாமி]

முற்காலத்தில் இருந்து இப்போது மறைந்துபோன நூல்கள் எவை என்று ஆராய்ந்துபார்க்க எண்ணங்கொண்டு அவற்றை ஆராய்ந்து பார்த்தேன். எமது ஆராய்ச்சிக்கு இது வரையில் அகப்பட்ட, மறைந்துபோன நூல்கள், நூற்றுநாற்பத்தைந்து என்று அறிந்தபோது வியப்படைந்தேன். அந்நூல்களைத் தமிழ் உலகத்துக்குக் காட்டவேண்டுவது கடமை என்னும் எண்ணத்தினாலே, செந்தமிழ்ச் செல்வியில் வெளியிட முற்பட்டேன். தமிழ் இலக்கிய வரலாற்றிற்கு இந்த ஆராய்ச்சி பயன்படும் என்று நம்புகிறேன்.

## 1. காரிக் கோவை

காரிக்கோவை என்பது காரி என்பவரால் செய்யப்பட்டது. இந்தக் காரியார், பெரியபுராணத்தில் கூறப்படுகிற காரி நாயனார் ஆவார். இவர் திருக்கடவூரில் இருந்த சிவபத்தர்; தமிழ்ப் புலவர். இவர் சிவபெருமான்மீது செய்யுள் பாடினார் என்று நம்பியாண்டார் நம்பி தாம் இயற்றிய திருத்தொண்டர் திருவந்தாதியில் கூறுகிறார் :

"புல்லன வாகா வகையுலகத் துப் புணர்ந்தனவுஞ்
சொல்லின வுநய மாகச்ச சுடர்பொற் குவடுதனி
வில்லினை வாழுதி விளங்குங் கயிலைபுக் கானென்பரால்
கல்லன மாமதில் சூழ்கட வூரினிற் காரியையே."

இவர் சிவபெருமான்மேல் இயற்றிய செய்யுளுக்குக் காரிக் கோவை என்பது பெயர் என்றும், சொல் விளங்கிப் பொருள் விளங்காத முறையில் இஃது இயற்றப்பட்டதென்றும், சேர சோழ பாண்டிய அரசர்களிடம் இக்கோவையைக் கொண்டு போய் ஓதிப் பொருள் உரைத்து அவர்கள் வழங்கிய பொருளைக் கொண்டு காரியார் சைவத்தொண்டு செய்துவந்தார் என்றும் சேக்கிழார் அடிகள் தமது பெரியபுராணத்தில் கூறுகிறார் :

"மறையாளர் திருக்கடவூர் வந்துதித்து வண்டமிழின்
துறையான பயன்தெரிந்து சொல்விளங்கிப் பொருள்மறையக்
குறையாத தமிழ்க்கோவை தம்பெயரால் குலவுமவகை
முறையாலே தொகுத்தமைத்து மூவேந்தர் பாற்பயில்வார்."

"அங்கவர்தாம் மகிழும்வகை அடுத்தவுரை நயமாக்கிக்
கொங்கலர்தார் மன்னவர்பால் பெற்றநிதிக் குவைகொண்டு
வெங்கண்அரா வொடுகிடந்து விளங்கும் இளம் பிறைச்சென்னிச்
சங்கரனார் இனிதமருந் தானங்கள் பலசமைத்தார்."

என்பன பெரியபுராணம், காரிநாயனார் புராணச் செய்யுள்கள்.

காரிநாயனார் இயற்றிய இந்தக் காரிக்கோவை இப்போது கிடைக்கவில்லை. ஆகவே மறைவுற்ற தமிழ் நூல்களில் இதுவும் ஒன்று

கி பி 9-ஆம் நூற்றாண்டில் இருந்த சுந்தரமூர்த்தி நாயனார் தமது திருத்தொண்டத் தொகையில காரிநாயனாரைக் குறிப்பிடு கிறபடியினாலே, இவர் காலம 9-ஆம நூற்றாண்டிற்கு முறபட்ட காலம் எனக் கொள்ளவேண்டும

## 2 குமாரசேனாசிரியர் கோவை

இப்பெயரையுடைய ஒரு நூல இருநதது என்பது யாப் பருங்கல விருததியினால் தெரிகிறது. குமாரசேனாசிரியர் என் னும புலவரால் இயற்றபபட்டதாகலின இபபெயா பெறறது போலும யாபபருங்கல விருததியுரைகாரா இந்நூலைபபற்றி இவ்வாறு குறிப்பிடுகிறா —

"குமாரசேனாசிரியர் கோவையும தமிழ முததரையர் கோவை யும் யாபபருங்கலக காரிகையும போன்ற சநதத்தால வருவன வற்றின் முதறகண் நிரையசை வரின் ஓரடி பதினேழெழுத்தாம். முதற்கண் நேரசை வரின் ஓரடி பதினாறெழுததாம. இவ்வா றன்றி மிக்கும் குறைநதும் வாரா. அவை எணணுகின்றுழி ஆய்தமும் ஒற்றும ஒழிதது உயிரும் உயிர்மெயயும குற்றிய லிகரமும குறறிய லுகரமுங்கொண்டு எண்ணபபடும"

இவ்வாறு எழுதிய உரையாசிரியா கீழ்ககண்ட கலித்துறைச் செய்யுளை உதாரணமாக மேற்கோள காட்டுகிறா .

"இருநெடுஞ் செஞ்சுட ரெல்கமொன் றேந்தி யிரவின்வந்த
வருநெடுங காதற்கன றேதரற் பாலதல லாதுவிட்டால்
கருநெடு மால்கட லோதிய கோன்கயல சூடுநெற்றிப்
பெருநெடுங குன்றம் விலையோ கருதிலெம் பெண்கொடிக்கே."

இந்தச் செய்யுளை இவ்வுரையாசிரியர், யாப்பருங்கலம் சீரோதது 15-ஆம் சூத்திர உரையிலும, ஒழிபியலில் இரண்டி டங்களிலும் மேற்கோள் காட்டியிருக்கிறா. ஆனால், இச் செய்யுள் எந்த நூலைச் சேர்நதது என்று கூறவில்லை என்றாலும், குமாரசேனாசிரியர் கோவையைச் சேர்ந்தது இந்தச செய்யுள் என்று கருதபபடுகிறது.

குமாரசேனாசிரியர் கோவையைப்பற்றி வேறு ஒரு செய்தி யும் தெரியவில்லை. இதுவும் மறைவுற்ற தமிழ்நூல் ஆகும்.

## 3. தமிழ் முத்தரையர் கோவை

இப்பெயரையுடைய ஒரு நூல் இருந்ததென்பது, தண்டியலங்கார உரையாசிரியர், யாப்பருங்கல விருத்தியுரைகாரர் ஆகிய இருவரும் கூறுவதிலிருந்து தெரிகிறது.

தண்டியலங்காரம், பொதுவணியியல் 7-ஆம் சூத்திர உரையில் அதன் உரையாசிரியர், 'கோவை என்பன தமிழ முத்தரையர் கோவை முதலாயின' என்று கூறுகிறார்.

யாப்பருங்கலம் ஒழிபியலில் அதன் விருத்தியுரைகாரர் இந்நூலைக் குறிப்பிடுகிறார். அவர் கூறுவது இது :

"குமாரசேனாசிரியர் கோவையும் தமிழ் முத்தரையர் கோவையும் யாப்பருங்கலக் காரிகையும் போன்ற சந்தத்தால் வருவன வற்றின் முதற்கண் நிரையசை வரின் ஓரடி பதினேழெழுத்தாம். முதற்கண் நேரசை வரின் ஓரடி பதினாறெழுத்தாம் இவ்வா றன்றி மிக்கும் குறைந்தும் வாரா. அவை எண்ணுங்கால் ஆய்தமும் ஒற்றும் ஒழிந்து, உயிரும் உயிர்மெய்யும் குற்றிய லிகரமும் குற்றியலுகரமுங் கொண்டு எண்ணப்படும்."

இவ்வாறு எழுதிய உரையாசிரியர் கீழ்க்கண்ட செய்யுளை உதாரணங் காட்டுகிறார் .

"காய்ந்துவிண் டாரைநையக் காமரு கூடலிற் கண்சிவந்த
வேந்துகண் டாயென்ன வெள்வளை சோரக் கலைநெகிழப்
போந்துகண் டாரொடும் போந்துகண் டேற்கவன் பொன்முடிமேற்
போந்துகண் டானென்று போந்ததென் மாட்டோர் புறனுரையே."

இதே செய்யுளை, யாப்பருங்கலம் தொடையோத்து 53 ஆம் சூத்திர உரையிலும் மேற்கோள் காட்டுகிறார். இச்செய்யுள் இன்ன நூலைச் சேர்ந்தது என்பதை இவர் குறிப்பிடவில்லையாயினும், இது தமிழ் முத்தரையர் கோவையைச் சேர்ந்த செய்யுள் என்று கருதப்படுகிறது.

தமிழ் முத்தரையர் கோவை இப்போது கிடைக்கவில்லையாகையினால், இது மறைவுற்ற தமிழ நூல்களின் ஒன்றாகும். இதைப்பற்றி வேறு செய்திகள் தெரியவில்லை.

## 4. வாசுதேவனா சிந்தம்

வாசுதேவனார் சிந்தம் என்னும் இந்நூலை இயற்றியவர் குடமூக்கிற் பகவர் என்றும், இஃது ஆரிடச் செய்யுள் (இரும்வாக்கு) என்றும் தெரிகிறது. இந்நூலைப் பற்றியும் இந்நூலாசிரியரைப் பற்றியும் யாப்பருங்கல விருத்தியுரையினால் நாடி

அறிகிறோம். யாப்பருங்கலம் செய்யுளியல் 40-ஆம் சூத்திர விருத்தியுரையில் கீழ்க்கண்டவாறு உரையாசிரியர் எழுதுகிறார்:

"...... இதற்தொடக்கத்துப் பொய்கையார் வாக்கும் குடமூக்கிற் பகவர் செய்த வாசுதேவனார் சிந்தம் முதலாகிய ஒருசார் செய்யுட்களும் எப்பாற்படுமோவெனின், ஆரிடச் செய்யுள் எனப்படும். ஆரிடமென்பது உலகியற் செய்யுட்கோதிய உறுப்புக்களின் மிக்கும் குறைந்தும் கிடப்பன எனக் கொள்க."

குடமூக்கு என்பது கும்பகோணத்தின் பழைய பெயர். அங்கிருந்த பகவர் என்னும் பெரியாரால் இந்நூல் இயற்றப் பட்டது. இந்நூலைப்பற்றி வேறு செய்திகள் தெரியவில்லை

## 5. அறிவுடை நம்பியார் சிந்தம்

யாப்பருங்கல விருத்தியுரைகாரர் இந்நூலைக் குறிப்பிடு கிறார். யாப்பருங்கலம், செய்யுளியல் 40-ஆம் சூத்திர விருத்தியுரையில் இவர் எழுதுவது வருமாறு —

"அறிவுடை நம்பியார் செய்த சிந்தம் எப்பாற்படுமோ வெனின், தூங்கலோசைத்தாய்ச் சுரிதகத் தருகு தனிச்சொ லின்றித் 'தாழிரும் பிணர்த்தடக்கை' என்னும் வஞ்சிப்பாவே போல வந்தமையாற் றனிச்சொலில்லா வஞ்சிப்பாவென்று வழங்காமோவெனின் வழங்காம், செவியறிவுறூஉவாய் வஞ்சி யடியால் வந்து பொருளுறுப் பழிந்தமையால் உறுப்பழிசெய்யுள் எனப்படும், புறநிலை வாழ்த்தும், வாயுறை வாழ்த்தும், அவை யடக்கியலும், செவியறிவுறூஉம் என்னும் பொருண்மேற் கலியும் வஞ்சியுமாய் வரப்பெறா என்றாராகலின்."

இந்நூலைப்பற்றி வேறு செய்திகள் தெரியவில்லை

## 6. மூவடி முப்பது

மூவடி முப்பது என்னும் ஒரு நூல் இருந்ததென்பதைப் பேராசிரியர் உரையினால் அறிகிறோம். தொல்காப்பியம், பொருளதிகாரம் செய்யுளியல் 236-ஆம் சூத்திர உரையில் பேராசிரியர் இந்நூலைக் குறிப்பிடுகிறார். அவர் கூறுவது இது:

"மற்று மூவடி முப்பது முதலாயின அம்மையெனப்படுமோ அழகெனப்படுமோவெனின், தாய பனுவலின்மையின் அம்மை யெனப்படாவென்பது. இவற்றுள்ளும் ஓரோர் செய்யுட் கண்ணே மாத்திரை முதலாகிய உறுப்பும் ஏற்றவகையான் வருவன அறிந்துகொள்க."[1]

---

1. குறிப்பு: சில ஆண்டுகளுக்குமுன் அச்சாகி வெளிப்போந்த இந்நூல் இப்பொழுது அரிதாயிற்று.

## 7. கவிமயக்கறை

யாப்பருங்கல விருத்தியுரைகாரர், ஒழிபியலில், "மாலை மாற்றே சக்கரஞ் சுழிகுளம" என்னும சூத்திர உரையில் ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி, என்னும் நான்கு வகைக் கவிகளைபபற்றி எழுதியபின், "ஒழிந்த விகற்பங்கள் கவிமயக்கறையுள்ளும் பிறவற்றுள்ளுங் கண்டுகொள்க" என்று எழுதுகிறார்.

இதனால், கவிமயக்கறை என்னும் ஒரு நூல் இருந்ததென் பதும, இது செய்யுள இலக்கண நூல் எனபதும் தெரிகிறது. இந்நூலைப்பற்றி வேறு செய்திகள் தெரியவில்லை.

## 8 பெரிய முப்பழம்

யாப்பருங்கலம், ஒழிபியல், "மாலை மாற்றே சக்கரஞ் சுழிகுளம்" என்னும் சூத்திர உரையில், பாடுதன் மரபு என்ப தற்கு உரை கூறுகிற விருத்தியுரைகாரர் பெரிய முப்பழம் என்னும் நூலைக் குறிப்பிடுகிறார். அவர் எழுதுவது இது:

"பாடுதன் மரபு—என்பது, குலனும் விச்சையும் ஒழுக்க மும பருவமும் என்றிவற்றிற்குத் தக்க வகையாற் பாட்டுடைத் தலைமகனையும அவன் சின்னங்களையுமே பாடுதலும் கிளவிப் பொருளல்லவற்றோடு பாட்டுடைத தலைமகனைப் பெயரும் ஊரும முதலிய உறுப்புகளைச சேர்த்துப் பாடுதலும், தீயன வற்றை அவன் பகைவரைச் சாத்திப் பாடுதலும் என, இரண் டாம. அவையெல்லாம் பெரிய முப்பழம் முதலாயினவற்றுட் கண்டுகொள்க."

இதிலிருந்து பெரிய முப்பழம் என்னும் பெயரையுடைய ஒரு நூல இருந்தது என்பதும, அது செய்யுளிலக்கண நூல் எனபதும் தெரிகிறது. இந நூலின் ஆசிரியர் முதலிய செய்திகள் தெரியவில்லை.

## 9. மாடலம்

இப் பெயரையுடைய நூல் ஒன்றிருந்தது என்பது தக்க யாகப் பரணி உரையினால் தெரிகிறது. மாடலனார் என்பவர் இயற்றிய படியினால் இந் நூலுக்கு இப் பெயர் வாய்த்தது என்று கருதலாம். தக்கயாகப் பரணி, காளிக்குக் கூளி கூறியது 13-ஆம் தாழிசை உரையில், உரையாசிரியர் இந்நூற் செய்யுள் ஒன்றை மேற்கோள் காட்டுகிறார். அது:

"கழிந்தவளர் கிழமையி லொழிந்த வூழி
யொன்பதிற் றிரட்டி யொருமுறை செல்ல
நன்கென மொழிவன நான்கே—நான்கினு

முதலது தொடங்கிய நுதல்விழிப் பெரியோன்
கடகக் கஙகணப் படவரவு
பூட்டு மசிலை வளைத்த பொழுதே
இது, மாடலம்."

இந் நூலைப்பற்றி வேறு செய்திகள் தெரியவில்லை.

## 10. பெரிய பம்மம்

பெரிய பம்மம் எனனும் இலக்கண நூல் ஒன்று இருநத தென்பது யாப்பருஙகல விருத்தியுரையினல் தெரிகிறது. எழுத்தோத்து 2-ஆம் சூததிர விருததியுரையில உரையாசிரியர் பெரிய பம்மச் சூத்திரம ஒன்றை மேற்கோள் காட்டுகிறா. அது இது :

"உயிருறுப் புயிர்மெய் தனிநிலை யெனுஅக
குறினெடி லளபெடை மூவின மெனுஅ
அஃகிய நாலுயிர் மஃகான் குறுககமோ
டைநது தலையிட்ட ஐயீ ரெழுததும
அசைதொடை நேரசை யாகு முறுப்பென
வசையறு புலவர் வகுததுரைத தனரே
இது, பெரிய பம்மம்"

இந்தப் பெரிய பம்மததைப்பறறி வேறு செய்திகள தெரிய வில்லை.

## 11. தக்காணியம்

இந் நூலை யாப்பருங்கல விருததியுரைகாரா குறிப்பிடுகிறர். யாப்பருங்கலம ஒழிபியலில, உரையாசிரியர், "இடைச் சொல் லும் உரிசசொல்லும் தொல்காப்பியம தககாணியம அவிநயம, நல்லாறன் மொழிவரி முதலியவற்றுட காண்க" என்று எழுதுகிறர்.

இதனல், தக்காணியம் என்னும் பெயருள்ள இலக்கண நூல் ஒன்று இருந்ததென்பது தெரிகிறது. இந நூலைப்பற்றி வேறு செய்திகள தெரியவில்லை

## 12. நல்லாறன் மொழிவரி

இப் பெயருள்ள செய்யுள் இலக்கண நூல் ஒன்று இருந்த தென்பது யாப்பருங்கல விருததியுரையினல் தெரிகிறது. யாப் பருங்கல ஒழிபியலில், "இடைச் சொல்லும் உரிச்சொல்லும் தொல்காப்பியம், தக்காணியம், அவிநயம், நல்லாறன் மொழிவரி முதலியவற்றுட் காண்க." என்று உரையாசிரியர் எழுதுவதி லிருந்து இதனை அறியலாம். மேலும் இந் நூலிலிருந்து நான்கு சூத்திரங்களை இவ் வுரையாசிரியர் தமது உரையில் மேற்கோள்

காட்டுகிறார். நல்லாறன் என்பதற்கு ஓரிடத்தில் நல்லாதன் என்றும பாடபேதம் காட்டுகிறார். ஆகவே இந் நூலாசிரியர் பெயர் நல்லாறனா அல்லது நல்லாதனா என்பது உறுதியாகக் கூற முடியவில்லை. ஆனால், நல்லாறன் என்னும் பெயரே பல முறை கூறப்படுகிறபடியால் நல்லாறன் என்பதே சரியான பெயர் என்று கொள்ளலாம.

நல்லாறன் மொழிவரி என்னும் இலக்கண நூலிலிருந்து யாப்பருங்கல விருத்தியுரைகாரர் காட்டும் மேற்கோள் சூத்திரங்கள் இவை :—

அ ஆ ஐ ஔ வென்றிவை யெனாஅ
இ ஈ எ ஏ யென்றிவை யெனாஅ
உ ஊ ஒ ஓ வெனறிவை யெனாஅ
த ச ம வ ஞந வெனு மென்றிவை யெனாஅ
முநநா லுயிரு மூவிரு மெய்யுந
தம்முண மயஙகினுந தவறின் றென்ப.

என்றின மாமாறெடுத் தோதினார் நல்லாறனாா எனக் கொள்க.

(யாப்பருஙகலம : தொடையோதது உரை மேற்கோள்.)

புறநிலை வாயுறை செவியறி வுறாஉவே
யறநிலை வஞ்சியுங கலியு மாகா
வெணபா வாசிரிய வியலான வருமே
வஞ்சி கலியவற் றியலா வவற்றுள்
இடையிரு செய்யுளும் கைககிளைப் பாட்டும்
கடையெழு சீரிரண் டகவியும் வருமே.

என்றார் நலலாதனார். (நல்லாறனார் எனவும் பாடம்.)

(யாபபருஙகலம செய்யுளியல் 2-ஆம் சூத்திரம் உரை மேற்கோள )

புறநிலை வாயுறை செவியறி வவையடக
கெனவிவை வஞ்சிக் கலியவற் றியலா

என்றார் நல்லாறனாா.

(யாபபருங்கலம் செய்யுளியல் 40-ஆம் சூத்திரம் உரை மேற்கோள்.)

உரியசைச சீாப்பி னுகர நேராயத
திரியுந் தளைவகை சோத லானே.

என்றார் நல்லாறனாா.

(யாப்பருஙகலம் ஒழிபியல். உரை மேற்கோள்.)

(தொடரும்)

# கோசர்

[வித்துவான், ஆ. சிவலிங்கனார், மயிலம்]

(சிலம்பு உஅ : பரல். எ. பக்கம் : ௩௩௦. தொடர்ச்சி)

## (5) கோசம்

'கோசம்' என்ற சொல்லுக்கு, (1) முட்டை (2) உறை (3) பஞ்சகோசம் (4) மதிலுறுப்பு (5) ஆண்குறி (6) கருப்பை (7) பொக்கிஷம் (8) பொக்கிஷசாலை (9) புத்தகம் (10) பட்டா (11) தொகுதி (12) அபிநயத்துக்குரிய அலிக்கை வகை (13) சாதிக்காய் (14) வீதி எனப் பதினான்கு பொருள்கள் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகராதியில் (Tamil Lexican Vol II. Part I) காணப்படுகின்றன. இப் பொருள்களைக் குறிக்கும் நிலையில் பழைய இலக்கியங்களில் 'கோசம்' என்பது ஆளப்படவில்லை. இப் பொருள்களுள் ஒன்றன் அடிப்படையிலும் ஆராய்தற்குப் பொருத்தம் இன்மையால்தான் ஆராய்ச்சியாளர் அவர்கள் இவற்றை விட்டனர்போலும்! கொங்கு வேளிர் பெருங் கதையில்தான் முதற்கண் 'கோசம்' என்ற சொல்லைக் காண்கின்றோம்.

"காப்பியக் கோசமும் கட்டிலும் பள்ளியும்."
(பெருங். உஞ்சை. 38-167)

என்பது காண்க. "காப்பியக் கோசம் : காப்பியம் எழுதிய புத்தகங்கள், கோசம் : தொகுதியுமாம்" என உரை யெழுதினர் திரு. உ. வே. சா. ஐயா அவர்கள். ௸ அகராதியில் 'பொக்கிஷ சாலை' என்ற பொருளுக்கு ஏற்ப மேற்கோளாக, "ஐம் பெருங் குழுவும் அத்தி கோசமும்" (பெரு. வத்தவ. 9. 5.) என்ற பெருங்கதையடி காட்டப்பட்டிருக்கின்றது. அவ்விடத்தில் அத்தி கோசம் என்பதற்குப் பொருள் அஃதன்று என்பது அதன் உரையால் அறியலாம். "ஐம் பெருங் குழுவினரும் அத்திகோசத்தாரும்" என்பது அதன் உரை.

## (6) கோயமான்

மோகூர்ப் பழையன், மாறன், அதியன், மிஞிலி, அகுதை, திதியன், குறும்பியன், ஆதன் எழினி, தழும்பன், வஞசன், முடியன் ஆகிய இவர்கள் யாவரும் கோசர்கள் என்பர், ஆராய்ச்சியாளர். இவருள் பழையன், ஆதன், எழினி, தழும்பன், மாறன், குறும்பியன் ஆகியவர்களின் பெயர்கள் தமிழ்ச்சொற்கள் என்பதில் ஐயமில்லை. பிறர் பெயர்களும்

வடசொற்கள் என்றும் கூறிவிடுதற்கில்லை இக் கோசர் முன்னோர் வத்த நாட்டினராலும் காசுமீர நாட்டினராலும் அவர்களுள் இப் பெயர்களுடையோர் ஒருவரும் இலர் வடவர் மொழிகளில் தமிழ்க்கேயுரிய சிறப்பெழுத்துக்களாகிய 'ழ' 'ற' இலலாமை யறிக. கோசரைபபற்றி வரும இடங்களிலெல்லாம் அவர்கள் வாய்மொழியும, கொடைத்திறனும, வீரமும் கூறப் பட்டனவேயன்றி அவர்கள் பிற மொழியாளர்கள் என்பதற் குரிய ஒரு சிறு குறிப்பும காணப்பட்டிலது வத்தராயன், வச்சன் என்பனகொண்டு கூறுதல் ஏற்புடைத் தாகாது.

ஆராய்ச்சியாளர் கோசா, வாய்மொழியினர், கொடை யினர், வீரத்தினா என்றெல்லாம் கொண்டு இலக்கியச் சானறுகளுடன் பழையன் முதலியவர்களையும் கோசர்களே என முடிவுகட்டியதற்கேற்பக் 'கோயமான்' என்பவனும் கோசா வழியினனே என யாம் முடிபு கொண்டுள்ளோம்.

"நிரப்பாது கொடுக்கும செல்வமு மிலனே
இல்லென மறுக்கும் சிறுமையு மிலனே
இறையுறு விழுமந தாங்கி யமரகத்து
இரும்பு சுவைக்கொண்ட விழுப்புண் நோய்தீர்ந்து
மருநதுகொள் மரத்தின் வாள்வடு மயஙகி
வடுவின்று வடிநத யாககையன் கொடையெதிர்ந்து
ஈர்ந்தை யோனே பாண்பசிப் பகைஞன்
இன்மை தீர வேண்டின் எம்மொடு
நீயும வம்மோ முதுவா யிரவல
யாநதன் இரக்குங காலைத் தானெம்
உணஙு மருஙகுல் காட்டித் தன்னூாக்
கருஙகைக் கொல்லனை யிரக்கும்
திருந்திலை நெடுவேல் வடித்திசி னெனவே." (புறம் : கஅ0)

இப்பாடல் ஈர்நதூர்க்கிழான் தோயன்மாறனைக் கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைககுமரனாரால் பாடப்பட்டது. 'ஈரநதூர்கிழான் தோயன்மாறன்' என்பதற்குப் பதிலாக, 'ஈர்ந்தூர்கிழான் கோயமான்' என்பதும் பிரதிபேதமாக இருக் கின்றது. 'கோயமான்' என்பதே சிறக்கும் என்னலாம். கோசமான் கோயமான் என்றாகும் எனவே இவனும் கோச மரபினன் என்னலாம். கோசர்க்குக் கூறப்பட்ட சிறப் பியல்புகள் யாவும் இவனும் பெற்றவனாவான். அவைகளை மேற்பாடலில் நன்றாகக் காணலாம்.

"நிரப்பாது கொடுக்கும் செல்வமும் இலனே
இல்லென மறுக்கும் சிறுமையும் இலனே"

"கொடையெதிர்ந்து,
ஈர்ந்தை யோனே பாண்பசிப் பகைஞன்"

எனவந்த அடிகள் கோசரது "வறுங்கை வம்பலர்த் தாங்கும் பண்பினை" (அகம் : 15) அன்றோ அறிவிக்கின்றன?

"இறையுறு விழுமம் தாஙகி அமரகதது
இரும்புசுவைக கொண்ட விழுப்புண் நோயதீரநது
மருநதுகொள் மரத்தின் வாள்வடு மயங்கி
வடுவின்று வடிநத யாககையன்"

எனவந்த அடிகள்,

"இரும்பிடம் படுத்த வடுவுடை முகததர்
கருஙகட் கோசர" (அகம. 90)

"கடநதடு வாய்வாள் இளம்பல் கோசர்" (மதுரைக்கா: 713)

என்ற அடிகளையும்,

"இறையுறு விழுமம் தாஙகி"

என்றது, கோசரது "நன்றல் காலையும் நட்பிற் கோடாமை யையும்" (அகம் : 113)

"மழையொழுக் கறூஅப் பிழையா விளையுட்
பழையன் மோகூர் அவையகம் விளஙக
நான்மொழிக் கோசர் தோன்றி யன்ன" (மதுரை · 507-10)

என்ற அடிகளையும நினைவுபடுத்துகின்றன. "இல்லென மறுக்கும் சிறுமையிலன்" ஆகலின், "எம உண்ணு மருங்குல் காட்டித் தன்னூர்க் கருங்கைக கொல்லனை யிரக்கும" என்றது,

"ஒன்றுமொழிக கோசர்" (அகம்: 196)

"வாய்மொழி நிலைஇய சேண்விளஙகு நல்லிசை
வளஙகெழு கோசர" (அகம் :113)

என்ற அடிகளை நினைவிற்குக் கொண்டுவருகின்றது.

இவற்றால் 'தோயன் மாறன்' என்றதின் 'கோயமான்' என்ற பிரதிபேதமே சிறக்கும் என்னலாம். ஈர்ந்தூர் கொங்கு நாட்டில் 'ஈஞ்சூர்' என வழங்கும் ஊராகும். கொங்கில் கோசர் வதிந்தனர். எனவே கோயமானும ஒரு கோசன் ஆகலாம்.

(தொடரும்)

# வள்ளுவர் காலம்

[திரு. கு. பரமசிவம்]

(சிலம்: உஅ, பரல்: எ, ௩௫௭-ஆம் பக்கத் தொடர்ச்சி)

## ௩. பொருட்பால்

இனிப் பொருட்பாலைப் பற்றிய இவரது ஆராய்ச்சியை நோக்குவோம். பொருட்பால் அர்த்த சாஸ்திரத்தைப் பின் பற்றியது என்று காட்டுவதே இவரது நோக்கம் என்பது முன்னரே குறிக்கப்பெற்றது. இதனை ஆராயும் முன்னர் அர்த்த சாஸ்திரத்தைப் பற்றியும் அதன் ஆசிரியரைப்பற்றியும் ஒரு சிறிது அறிவது இன்றியமையாதது.

அர்த்தசாஸ்திரத்தின் ஆசிரியர் கௌடில்யர் என்பர். இயற்றியவர் வேறொருவர் ஆயினும், இந்நூல், சூழ்ச்சியின் மிக்காராக விளங்கியவரும், சந்திரகுப்தரின் அமைச்சராகத் திகழ்ந்தவரும் ஆகிய கௌடில்யர் எனபாரது பெயரால் வழங்கப் பெற்று வருகிறது என்பாரும் உளர்.[1] கௌடில்யருக்கே சாணக்கியர், விஷ்ணுகுப்தர் எனனும் வேறு பெயர்களும் உண்டு. 'கௌடில்ய' என்னும் சொற்குக் கோணல் (Crookedness) என்பதும் பொய்ம்மை (Falsehood) என்பதும் பொருளாகும்.[2] இதனால் இந்திய ஆசிரியர்கள் அர்த்த சாஸ்திரத்தை இயற்றிய வருக்கு இப்பெயரைக் கொடுக்க விரும்பாமல் கௌடல்யர் எனனும் பெயரையே வழங்குகின்றனர். கௌடில்யர் காஞ்சி புரத்தைச் சேர்ந்தவர்; தென்னாட்டு முன்குடுமிப் பார்ப்பனர்.[3] இவ்வளவே அர்த்தசாஸ்திர ஆசிரியரைப்பற்றி நாம அறியலாகும் கருத்துக்கள்.

இனி, அர்த்தசாஸ்திரத்தில் கூறப்பட்டவற்றைச் சுருக்க மாகப் பார்ப்போம். இந்நூல் 15 அதிகரணங்களை உடையது. இவை 150 அத்தியாயங்களாகவும் 6000 சுலோகங்களாகவும் வகுக்கப்பட்டுள்ளன. நூல் உரைநடையிலேயே எழுதப்பட் டுள்ளது. ஒரோவழி அத்தியாயத்தின் இறுதியில் செய்யுள் அமைப்புக்காணப்பெறுகிறது. நூல்பெயருக்கேற்பப் பொருளைப்

1. "In my opinion the work has been ascribed to him only because the legendary Canakya or Kautilya who was the best known type of the cunning and unscrupulous minister who accurs frequently both in dramatic and narrative literature,"—M. Winternitz, M.A., ph. D. "Some problems of Indian Literature," pp 108.

2. Ibid pp. 91.

3. Dr. B. Natarajan: "வெள்ளிவிழா மலர்" pp. 294.

பற்றியே பேசுகிறது. அரசன் பொருளைப் பெறும் வழிகளையும் காக்கும் வழிகளையும் கூறுமுகத்தான் உழவு போன்ற பிறவும் பேசப்படுகின்றன. அரசன், அமைச்சன், நாடு, எயில் (Fort) கருவூலம், (Treasury) படை, நட்பு, பகை ஆகிய இவை ஒரு பேரரசின் உறுப்புக்களாகக் கருதப்படுகின்றன.[1] இவ்வுறுப்புக்களேயன்றிப் புரோகிதனும் அரசியலில் சிறந்த இடம் பெறுகிறான். அரசின் உறுப்பாகப் புரோகிதன் கூறப்பெற்றானல்லனேனும், அவன், அமைச்சனோடும், இளவரசனோடும் அரசனின் தாயோடும் பட்டத்தரசியோடும் ஒருங்குவைத்து எண்ணப்படுகிறான். இவர்கள் ஒவ்வொருவருக்கும் ஆண்டுக்கு 48000 பணம் சம்பளமாகக் கொடுத்தல்வேண்டும் என்று கௌடில்யர் கூறுகிறார்.[2] ஆசிரியன் சொற்படி மாணவன் நடத்தல் போலவும், தந்தை சொல்வழி மைந்தன் நிற்றல் போலவும், வீட்டுக்காரன் பணித்தவற்றை வேலைக்காரன் நிறைவேற்றல் போலவும், அரசன் புரோகிதன் வழியொழுகுதல்வேண்டும்.[3] இவ்வாறு அரசியலில் புரோகிதருக்குத் தலைமை கொடுக்கப்பட்டது போன்றே சமுதாயத்திலும் முதலிடம் வழங்கப்பெற்றது. அரசன் அமைக்கும் கோட்டையில் அரண்மனையைச் சுற்றிய பகுதியில் அவ்வகுப்பாரே வாழ்தற்குரியராவர்.[4] அன்றியும் அவர்களுள் வானப்பிரஸ்தத்தையும் சன்யாசத்தையும் மேற்கொண்டொழுகுவார் வாழ்தற்கென்று அரசன் சில காடுகளை யொதுக்கவேண்டும். அக்காடுகள் எவ்வாறு இருக்கவேண்டும் என்பதனைக் கௌடில்யர் நன்கு விளக்குகிறார். பொதுவாக இவ்வகுப்பாருக்கே இறையிலி நிலங்கள் வழங்கப்படவேண்டுமென்று கூறியுள்ளார். பிற வகுப்பார் வாழுமிடங்கள் அவரவர் வகுப்புக்கேற்றபடி ஒவ்வொரு நகரிலும் அமைக்கப்பெறும். இவ்வாறு "பலவிடங்களிலும் அவர் அரசன் சமயச் சடங்குகளை இயற்றுதல் வேண்டுமென்றும், பார்ப்பனர், முனிவர் ஆகியோரைப் புரத்தலேயன்றி அவர் நலன்களையும் பாதுகாக்க வேண்டுமென்றும் கூறுகிறார்.

---

1. I. 10 · "The King, the minister, the country, the fort, the treasury, the army, and the friend and the enemy are the elements of sovereignty"-Kautilya's Artha Sastra Translated by Dr. R. Shama Sastry, pp. 287

2. இதனைக் கணக்கிட்டவர்கள் ஆண்டுக்கு 48,000 பணம் மிகவும் குறைவென்றும் திங்களுக்கே அத்தொகை யுரியதாகும் என்றும் கூறுகின்றனர்.

3. I. 9: "As a student his teacher, a son his father, and a servant his master, the king shall follow him."—Kautilya's Artha Sastra—Tran. by Dr. R. Shama Sastry—pp. 15.

4. II. 4.

இதனால் அவர் பார்ப்பனீயத்தினை முழுவதும் பின்பற்றுபவர் என்பது தெளிவு[1] "அவர் காணும் சமுதாய அமைப்பும் பார்ப்பனச் சமயத்தையும் வழக்கங்களையும் அடிப்படையாகக் கொண்டதாகும்"[2] கௌடில்யர் கூறும் பொருளாதாரமும் இத் தகையதே[3] அரசியலுக்குப் பொருளை எவ்வெவ் வகையில் சேர்க்கலாம் என்பதனையே அர்த்தசாஸ்திரம் முழுவதும் கூறு கிறது. சுங்கம், வரிகள் முதலிய பல வழிகள் கூறப்படுகின் றன இவையன்றி இவ்வாசிரியர் கூறும் சில முறைகள் மிகவும் வியப்பைத் தருவனவாகும். பரத்தைமை, புலால், கள் முதலி யனவும் அரச வருவாய்க்குப் பயன்படுத்தப்பட்டன இக்கால மொழியில் சொல்வதாயின், இவையெல்லாம் தேசிய மயமாக்கப் பட்டன. பரத்தைமை பொதுவியல் வேத்தியல் என, இரு பகுதிக ளாகும் இரண்டையும் கண்காணிக்க ஓர் அரசியல் அலுவ லாளர் (The Superintendent of Prostitutes) ஏற்படுத்தப் பட்டார் பரத்தையர், ஒவ்வொருநாளும் தம்மோடு அன்று கலந்தவர் யாவர் என்பதனையும், வருவாய் எவ்வளவு என்பதனை யும், அதில் தாம் கைவரப்பெற்றது எவ்வளவு பெறவேண்டியது எவ்வளவு என்பதனையும் அலுவலாளர் (Superintendent)-க்கு அறிவித்தல்வேண்டும். அவர்கள் கூற்றின் உண்மைநிலை உற்று ரால் தெளியப்படும். திங்களதோறும் ஒரு குறிப்பிட்ட தொகையை இவர்கள் அரசுக்குச் செலுத்தவேண்டும். அரச னின் கருவூலம் குன்றிய காலத்துத் தம் வருவாய் முழுவதை யுமே வழங்கவேண்டும். வேத்தியலில் அரசனுக்குக் கவரி வீசு தல், நடனத்தாலும் இசையாலும் மகிழ்வித்தல் முதலிய தொழில்களைச் செய்யவும் பரத்தையர் ஏற்படுத்தப்பட்டனர். இவர்கள் ஒவ்வொருவரும் அரசின் அடிமையாவர் அரசன் ஏவற்படியே வாழவேண்டும் மறுத்தால் அரசன் ஒறுப்பான். ஒறுத்தல் கசையடியாகவோ காசு வடிவிலோ இருக்கும் ஒருத்தி இறந்தால் அவள் இளையளாயின் அவளுடைய தாயும், முதிய ளாயின் அவளின் மகளும் அவளது இடத்தைப் பெறறே தீர

1. "Kautilya . in many places of the Artha Sastra proves himself to be an orthodox follower of Brahmanism ane often recommends the performance of religious rites and always admonishes the king to protect Brahmans and ascetics and to take due record of their previleges"—Winternitz. "Some problems of Indian Literature" pp. 92.

2. "And the whole Artha Sastra shows that its author was a strict adherent of Brahmanism and that he presupposes a social system entirely founded on Brahmanic religion and customs"—Ibid, pp 104.

3. Dr. B. Natarajan "வெள்ளிவிழா மலர்" pp 298.

வேண்டும். ஒருத்தி தன்னை அடிமைநிலையிலிருந்து மீட்டுக்கொள்ள விழைந்தால் அரசுக்கு 12000 பணம் செலுத்தவேண்டும் இன்னும் பல செய்திகளைக் கௌடில்யர் விளக்குகிறார் இனி கள்: இதுவும் தேசிய மயமாக்கப்பட்டது என்பது முன்னரே குறிக்கப்பெற்றது கள்ளின் பலவகைகளைச் செய்யும் முறையை ஆசிரியர் விரிவாகக் கூறியுள்ளார். பலவகைகளுக்கும் அவற்றைச் செய்யும் முறைகளையொட்டிப் பெயர்கள் கூறப்பட்டுள்ளன. இம்முறைகளும் பெயர்களும் சங்க இலக்கியங்களில் காணப்பெறும் அப்பகுதிகளோடு பெரிதும் ஒத்துள்ளன என்பது மட்டுமன்று; தமிழ்ப்பெயர்களின் மொழிபெயர்ப்பாகத் தோன்றுகின்றன. அரசியலார் ஒவ்வொரு ஊரிலும் ஒரு கள்ளுக்கடையை ஏற்படுத்துவர் இக்கடைகள் தாம் பலவகையான கள்ளையும் வடிப்பதற்கும், விற்பதற்கும் உரியன. பிறர் அரசியலார் ஒப்புதலின்றி வடிப்பராயின் அவர்களிடமிருந்து தண்டம் பெறப்படும். குறிப்பிட்ட சில விழாக் காலங்களில் சிலருக்கு மட்டும் இவ்வுரிமை (Licence) வழங்கப்பெறும். அவ்வுரிமை பெறுதற்கு ஒரு குறித்த தொகையை அரசியலாருக்குக் கொடுத்தல்வேண்டும். கடைகளுள் அறைளும் இருக்கைகளும் எவ்வாறிருத்தல்வேண்டும் என்பதெல்லாம் கூறப்படுகின்றன ஒவ்வொரு நாளும் எவ்வளவு கள் விற்கப்பட்டது, ஊதியம் எவ்வளவு என்பவற்றை இதற்கென அரசியலாரால் ஏற்படுத்தப்பட்ட கண்காணிப்பாளரிடம் (Superintendent of liquors) கடைக்காரர் அறிவித்தல்வேண்டும்.

இவ்வாறே புலால் விற்பனையும் அரசியலாரால் ஏற்படுத்தப்பட்ட கண்காணிப்பாளருக்கும் (Superintendent of Slough-ter Houses) அவரது பார்வையின்கீழ் நிறுவப்பெற்ற கடைகளுக்குமே உரியது. எவ்வெவ் விலங்குகளைக் கொல்லலாம் எவற்றைக் கொல்லக்கூடாது என்பன விளக்கப்படுகின்றன. கொல்லக் கூடாதென்று விலக்கப்பட்டவற்றைக் கொன்றவனிடமிருந்து குற்றத்தைப் பொறுத்துப் பொருளோ உயிரோ தண்டமாகப் பெறப்படும். கொல்லக்கூடிய விலங்குகளையும் அன்றன்றுதான் கொன்று விறகவேண்டும். கடைக்கு வெளியே மாண்ட விலங்குகளைக் கடையிற் கொணர்ந்து விற்றல்கூடாது. இவைபோன்ற பல வரன்முறைகள் கூறப்பட்டுள்ளன.

வியப்பைத் தரும் மற்றொரு பகுதி, அரசனின் கருவூலம், வறண்ட காலத்தில் பொருள் ஈட்டும் முறைகளைப்பற்றிக் கௌடில்யர் கூறும் பகுதியாகும். பல முறைகள் கூறப்படுகின்றன. அவற்றுட் சில: ஒற்றர் கூட்டத்தைச் சேர்ந்த

பரதனை பொருதகி ஒரு வணிகனின் காதலியாவாள். சில நாட்களில் அவளை ஒரு ஒற்றன் கொலை செய்வான், வணிகன் மீது கொலைக்குற்றஞ் சாட்டப்பட்டு அவனது அளவிறந்த செல்வமும்—ஆவியும் பறிக்கப்படும் அல்லது ஒற்றன் ஒருவன் துறவி வேடம்பூண்டு வணிகனொருவனிடம் செலவான். தான் கடவுளருள் பெற்றவன் என்றும காசு ஒனறை இரண்டாக்க வல்லவன் என்றும் கூறுவான். வணிகன் ஆசை மிக்கவனாய்த் தரும சில நாணயங்களை ஒரு கல்லறையருகில் வைத்துப் பூசை செய்வதாகக் கூறுவான். நள்ளிருளில கல்லறையைத் தோண்டி அதனுளளிருககும் சில நாணயஙகளை யெடுத்துக்கொண்டு முனனரே வணிகன் தநதவற்றோடு சோதது மறுநாட் காலையில் வணிகனிடம கொடுப்பான போலித் துறவியின் ஆற்றலை உண்மையென்று கருதிப் பேராசையால உநதபபட்டு வணிகன் நிறைநத பொருளைக் கொடுபபான். அதைப் பெற்றுக்கொண்டு இரவோடிரவாக மறைந்துவிடுவான பொருள அரசனது கருவூலததை யடையும அலலது மேற்கூறிய முறையிலேயே ஒரு சிறிது மாறுபட்ட முறை பினபற்றபபடும. போலித்துறவி அபபொழுதே மூடப்பட்ட கல்லறையைத தோண்டி முதனாளிர வில் சில நாணயங்களை எடுததுக்கொள்வான் கல்லறையி லிருக்கும குழநதையின் பிணததை ஒற்றர்படையைச் சேர்நத வரைவின்மகள் ஒருததி எடுததுககொளவாள். மறுநாட் காலையில் அவள் வணிகன தன் குழநதையைக் கொன்றதாக முறையிடுவாள அக் குற்றசசாட்டைச் சானறாகக்கொண்டு வணிகனது பெருமபொருளும் ஆருயிரும் பறிக்கப்படும். இவவாறு பல முறைகள கூறபபட்டுளளன.

ஒற்றர்களைப்பற்றியும் கௌடில்யர் பலவாறாகக் கூறியுள்ள னர். கள்ளுக்கடைகளிலும் பரததையரில்லங்களிலும ஊருக்குப் புதிதாய் வருவாரைக் குறிதது அறிந்துகொள்ளவும் ஊரின ரையே கண்காணிக்கவும ஒற்றர் ஏற்படுததப்பட்டனர். அரசி யல் அலுவலாளர், அமைச்சா ஆகியோரது போக்கை யறியவும் ஒற்றர் துணைபுரிந்தனா. நன்றியில்லா அமைச்சரை ஒழிக்கக் கூறப்படும் முறைகளும வியப்பைத் தருவனவாகும். பகை நாடுகளை வெல்வதிலும ஒற்றா மிகவும் பயன்பட்டனர். ஒற்றர் போக்கையறிய வேறு ஒற்றர் ஏற்படுத்தப்பட்டனர். முன்னரே குறித்ததுபோன்றும் சிறப்பாக வரைவின் மகளிரும் பொது வாக மகளிரும் ஒற்றாடலுக்குப் பயன்பட்டனர்.

இனிப் போரைப்பற்றிய கௌடில்யரது கருத்தும் பெரிதும் வியப்புக்கு உரியதாகும். பகைவன் தன்னினும வலியனாயிருப் பின் அவனுடன் அமைதியை நாடவேண்டுமென்றும், எளிய

னாயின் போரையும் மேற்கொள்ள வேண்டுமென்றும் கூறி யுள்ளார்[1]

உழவுபற்றிய இவரது எண்ணம் என்னவோ அதுபற்றிக் கூறுவதற்கில்லை ஆனால் இவர் கூறுவன உழவுத் தொழிலின் வளர்ச்சிக்குத் துணைபுரிவனவாக இல்லை அர்த்த சாஸ்திரத்தின் உரைகாரர் இப் பகுதியில் ஒரு பழஞ்செய்யுளை மேற்கோளாகக் காட்டுகிறார். இஃது அக்காலத்தவர் உழவுக்களித்த சிறப்பை நாம் அறிவதற்கு மிகவும் துணைபுரிவதாகும் "நிலம் நீர் ஆகிய இரண்டுக்கும் அரசனே உரியவன் இவ்விரண்டும் நீங்கலாகப் பிறவற்றின்மீதே மக்கள் உரிமை கொண்டாடலாம்." என்று அச் செய்யுள் கூறுகின்றது[2] கௌடில்யரது போக்கும் ஏறத்தாழ இவ்வாறேயுள்ளது உழவர்க்குரிய பல வரிகளில் நீர்வரியும் ஒன்று இவ் வரி அவர்கள் உழவுக்கு நீர் பெறும் முறையை அடிப்படையாகக்கொண்டு விதிக்கப்படுகிறது.

(தொடரும்)

## தமிழ் மொழி

[திரு. கி. வேங்கடசாமி]

செம்மைத் தமிழ்மொழி எங்கள்மொழி!—அது
தெய்வத் திருக்குறள் தந்தமொழி!
இம்மையில் இன்னிசை பெற்றிடவே—எமக்(கு)
இன்னமு தாகவி னிக்குமொழி! (௧)

கன்னித் தமிழ்மொழி எங்கள்மொழி!—அது
காவியம் பற்பல கண்டமொழி!
முன்னைப் பரம்பொருள் போன்றுநின்றே—அது
மூப்பிறப் பின்றிமு திர்ந்தமொழி! (௨)

---

1. "He who is weaker than the other shall make peace, he who is stronger shall wage"—Quoted by Winternitz: "Some Problems of Indian Literature." pp. 107.

2. "Those who are well-versed in the Sastras admit that the King is the owner of both land and water and that the people can exercise their Right of ownership over all other things excepting these two"—ARTTHA SASTRA. II. 24. Tran. by Dr. R. Shama Sastry. pp. 129.

# நாடக நலன்

[தென்னாப்பிரிக்கா—டர்பன், திரு ச. மு பிள்ளை அவர்கள்]

'நாடகம்' என்ற சொல்லைக் கேட்ட துணையானே சிலர் அருவருப்புக் கொள்ளுவதையும், வேறு சிலர் புறக்கணிப்புச் செய்வதையும், மற்றும் சிலர் இழிவாக நினைப்பதையும் நாம் கண்டும் கேட்டும் வருகின்றோம் ஆனால், உண்மைவழி நோக்கினால் நாடகம் புறம்பழித் தொதுக்கப்படவேண்டிய சிறுமையுடையதா? அல்லது பாராட்டிப் போற்றக்கூடிய பெருமையுடையதா? என்பது நன்னெஞ்சுடைய அறிவாளர் எல்லோருக்கும் இனிது புலப்படும்.

எண்ணரிய பிறவிதனில் பெறுதற்கரிய இம்மானிடப் பிறவியைப் பெற்றதன் பயன் என்னையோவெனின்? அறம் பொருள் இன்பமாகிய மூன்றினால் அடையக்கூடிய இம்மைப் பயன்களை யடைந்து, மறுமையில் வீடுபெறுதலைக் கூடும்படி யான முயற்சியை இம்மையிற் செய்தல் ஒன்றேயாம் அங்ஙனம் முயற்சி இம்மையிற் செய்வதற்கு மக்களுடைய அறியாமை தேய்ந்து அறிவு விரிந்து விளங்கவேண்டுவது மிகவும் இன்றி யமையாத தொன்றும். அறம் பொருள் இன்பம் வீடாகிய மக்கட் பயனை அடைதற்கு அறிவு பெருகுதல் வேண்டுமெனக் கூறுவதெற்றுக்கோவெனின், கூறுவம்.

உலகத்திலே பெருமை என்றும், சிறுமை என்றும், ஒளி யென்றும், இருள் என்றும், உயர்வென்றும், தாழ்வென்றும் ஒன்றற்கொன்று பெரிதும் முரண்பட்ட இருநிலைகள் இருக்கக் காண்கின்றோம் அதுபோலவே பொருள்களுள் மெய்ப் பொருள்கள் என்றும், பொய்ப்பொருள்கள் என்றும் இரண்டு பிரிவுகள் இருக்கின்றன இவைகளுள், பொய்ப்பொருள் இது வெனத் தெரிந்து அதை ஒழிக்கவும், மெய்ப்பொருள் இது வெனத் தெரிந்து அதைத் தழுவவும் நாம் முயற்சித்தல் வேண்டும். ஏனெனில், மெய்ப்பொருள் தெரிந்தாலன்றி, நாம் எல்லாம்வல்ல இறைவனை இறைஞ்சி அவரைத் தலைக்கூடுதல் ஒண்ணாது. அங்ஙனம் மெய்ப்பொருள் அறிதற்கு அறிவே சிறந்த கருவியாகவிருக்கிறது.

"எப்பொருள் எத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு" (திருக் · ௩௫௫)

என்றும்,

"எப்பொருள் யாயார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு" (திருக் · ௪௨௩)

என்றும் ஆசிரியர் திருவள்ளுவனார் இரண்டுமுறை வலியுறுத்திக் கூறியதே மேற்கூறிய உண்மையைப் புலப்படுத்தப் போதிய சான்றாம்.

இனி, அறிவு என்பது ஒவ்வோர் உயிரினிடத்தும் இயற்கையாகவே அமைந்து கிடக்கிறது. ஆனால், பயிரைச் செழுமையாக வளர ஒட்டாமல் களை மூடிக்கொண்டிருத்தல்போல, ஆன்ம அறிவை ஆணவமென்னும் அறியாமை மலம் மூடிக்கொண்டிருக்கின்றது. களையைக் களைந்துவிட்டால் பயிர் செழித்து வளருவதுபோல் ஆன்ம அறிவை மூடிக்கொண்டிருக்கும் அறியாமையாகிய ஆணவமலத்தின் ஆற்றலை அறவே ஒழித்துவிட்டால், இயற்கையாகவே ஆன்மாவினிடம் அமைந்துகிடக்கும் அறிவானது விரிந்து ஒளிரும். அவ்விதம் திகழ்வதே அறிவு பெருகுதல் என்று சொல்லப்படும்.

இனி, அவ்வறிவு திகழுமாறு யாங்ஙனமெனின், ஆன்றோரால் இயற்றப்பட்ட நலம்படு நூல்கள் பலவற்றையும் நுணுகி ஆராய்வதனாலும், பேரறிவுடைய நன்மக்களுடன் அரிய பொருள்களைப்பற்றி அளவளாவி வருவதனாலும் அறிவு விரிந்து திகழுமென்க.

இனி, ஒரு பொருளின் உண்மையைத் தேர்தற்கு மூன்று வகையான அளவைகள் நம்முடைய ஆன்றோர் நூல்களில் கூறப்பட்டிருக்கின்றன. நூலாராய்வோரும், அறிவு வளர்ச்சியை விரும்புவோரும், உண்மைப்பொருள் தேர அவாவுறுவோரும் அம்மூன்று அளவைகளையும் கைக்கொள்ளவேண்டியது மிகவும் இன்றியமையாததாகும். அம்மூன்று அளவைகளாவன :—(1) உரையளவை (ஆகமப் பிரமாணம்), (2) கருதலளவை (அனுமானப் பிரமாணம்), (3) காண்டலளவை (பிரத்தியட்சப் பிரமாணம்). இவைகளை முறையே நூல் (சுருதி), பொருந்துமாறு (யுக்தி), நுகர்வு (அனுபவ) மென்றும் கூறுவார்கள். இம் மூன்றனுள்ளும் உரையளவை பல நூற்பொருளையும் ஒருங்கறிந்த அறிவாளர்களாலும், கருதலளவை நூலறிவோடு கூடிய இயற்கை நுண்ணறிவுடையோர்களாலும் கொள்ளப்படுவனவேயன்றி, பொதுமக்களால் கொள்ளப்படுவன வாகா. ஏனெனில், பொதுமக்கள் இவ்விரண்டு அளவைகளாலும் பொருள் உறுதிப்பாடு செய்தல் முடியாது. மேலும், இவ்விரு அளவைகளாலும் கொள்ளப்படும் கோட்பாடுகள் ஒருவருடைய கொள்கைக்கும் மற்றொருவருடைய கொள்கைக்கும் மாறுபட்டிருப்பினும் இருக்கலாம். மற்று, காண்டலளவையோ எல்லோராலும் ஏற்றுக்கொள்ளத் தக்கதாயும், பொதுமக்களுக்கும் புலப்படக் கூடியதாயும் இருப்பதாகும்.

இந்த மூன்று அளவைகளுள் காண்டலளவையே மிகவும் சிறப்புடைத்தென்பது இதனால் புலப்படுகின்றதன்றோ? இவ்வுண்மை உணர்ந்தே நம் செந்தமிழ் மொழியை முதன்முதல் பாகுபடுத்திய அகத்தியமா முனிவர், இயற்றமிழென்றும், இசைத் தமிழென்றும், நாடகத் தமிழென்றும் முப்பிரிவாகத் தமிழைப் பிரித்து இலக்கணஞ் செய்வாராயினர். இம்மூன்றுள் ஒன்றாகிய நாடகத் தமிழின்கட் படுவதாம் காண்டலளவை நிற்க, நாடகத் தமிழைச் சரியானபடி கற்பதற்குத் தமிழ்மொழியின் இயல்பினை அறிந்துகொள்ள வேண்டுவது மிகவும் இன்றியமையாததாதலால் இயற்றமிழை முதலினும், இசைத் தமிழ் நாடகத்தின் ஓர் அங்கமாக விருத்தலால் அதனை இரண்டாவதாகவும் கூறிக் கடைசியில் நாடகத் தமிழை உரைத்தார்.

ஆகவே, நாடகம் மக்களின் அறிவுவளர்ச்சிக்குக் கட்டாயம் வேண்டற்பாலதாம் என்றும், இதுபற்றியே நாடகத் தமிழ் என்று அகத்தியர் தனியாக எடுத்துக்கொண்டு அதற்கு இலக்கணஞ் செய்வாராயினர் என்றும், நம்மனோரிற் சிலர் கருதுகிறபடி நாடகம் புறம் பழிக்கப்படுவதற்கு உரியதாகாமல் எல்லோராலும் போற்றக்கூடிய மாட்சிமையுடையதாக இருக்கிறதென்றும் ஏற்படுகிறது.

இனி, நாடகம் என்பதைப்பற்றிச் சிறிது கூறுவாம். பொருள்கள் இருவகைப்படும். அகத்தைச் சார்ந்துவரும் பொருளெல்லாம் அகப்பொருளென்றும், புறத்தைச் சார்ந்து வரும் பொருளெல்லாம் புறப்பொருளென்றும் கூறப்படும். மக்களின் அகத்தே நிகழும் நிகழ்ச்சிகளெல்லாம் புறத்தே ஒவ்வொருவரின் உடலில் புலப்பட்டுத் தோன்றும் இயல்புடையனவாம். இதுபற்றியே,

> "அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
> கடுத்தது காட்டு முகம்" (திருக். எ0௬)

என்று ஆசிரியர் திருவள்ளுவனாரும் கூறுவாராயினர். அங்ஙனம் அகத்தே நிகழும் நிகழ்ச்சிக்குத் தகப் புறத்தே காணப்படும் மெய்ப்பாடுகளை நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், வீரம், உவகை, சினம், சமநிலை என்னும் ஒன்பது சுவைகளும் பொருந்த அவையோர்க்கு நடித்துக்காட்டுதலே நாடகமாம். அங்ஙனம் நடித்துக் காட்டுதலினாலே மக்களுக்குப் பலவகையான நீதிகள் புலப்படுவதோடு, ஒவ்வொன்றையும் நேரில் அப்போது தாம் பார்ப்பதுபோல் அவர்களுக்குத் தோன்றுவதால் தாங்கள் கண்ட காட்சிகளை அடிக்கடி நினைவுகூர்வார்கள். அவ்விதம் நினைவுகூரும்போதெல்லாம் அந்நாடகத்தால் புலப்பட்ட நீதி

களும் அவர்கள் மனத்தில் உடன் நிகழும். இவ்விதம் அடிக்கடி நிகழுவதால் மக்களின் அறிவு விரிந்து திகழும் அதனால் அவர்கள் நல்லவழியிற் செல்லவும் ஏதுவுண்டாகும் இவ்வுண்மையெல்லாம் உணர்ந்தே தமிழ்முதுமக்கள் பண்டைக காலத்திலே நாடகமாடுதலை மிகவும் போற்றிவந்தார்கள். இன்னும் வடமொழியில் தலையாய புலவரெனக் கொண்டாடப் படும் காளிதாசர், "சாகுந்தலம்", "குமார சம்பவம்" முதலான நாடகக் காப்பியங்கள் இயற்றியிருப்பதையும், ஆங்கில மொழி விற்பன்னரான சேக்குப்பியர் என்னும் மாகவிஞர் எண்ணிறந்த நாடகங்கள் இயற்றியிருப்பதையும் உலகம் கொண்டாடுகிறதே!

இப்படியெல்லாம் நாடகத்தின் மாட்சியும், பெருமையும் ஒருபுறம் அமைந்து கிடக்க, அதனை இழிவாகவும் அருவருப்பாகவும் மக்கள் கருதக் காரணமென்ன? இக்காலத்திலுள்ள சில போலி நாடக உறுப்புக்கள் நாடக இலக்கணப்படி நாடகம் நடத்தாமல், அவ்விலக்கணத்தினின்றும் வழுவித் தமக்குத் தோன்றியவாறெல்லாம் நடத்துவதன்றோ? இங்ஙனம் இவர்கள் நாடகம் நடத்துவதால் அந்நாடகத்தைக் காணச் செல்லும், அறிவு திருந்தா மக்களைக் காமம், குடி முதலிய படுகுழிகளில் விழச் செய்வதுடன், நாடகத்திற்கே இழிவை உண்டாக்கித், தங்களைப் பிறர் கேவலமாக நினைக்கும்படியாகவுஞ் செய்து கொள்ளுகிறார்கள். நாடகப் புனைவழகு சிறிதும் இன்றிப் புராண இதிகாசத்தில் கூறப்படும் கதை வரலாற்றுக்கு மாறாக எத்தனை நாடகக்காரர்கள் இக்காலத்தில் நாடகம் நடத்தி வருகிறார்கள்! பயனற்றதும், நீதியைப் போதிக்காததுமான நாடகத்தைப் பயனற்ற பாடல்களால் நிரப்பி நடத்திக் காட்டும் நடிகர்களுக்குக் கணக்குண்டோ! இவர்கள் நாடகத்தைச் சென்று பார்த்து எத்தனை இளைஞர்கள் கெட்டலைகின்றனர். இன்னும் எவ்வளவு பேர் கீழ்நிலையிற் போய்க்கொண்டிருக்கிறார்கள்! கற்பினை அணிகலமாகக் கொண்டு வாழவேண்டிய எத்தனை பேதை மகளிர் தங்கள் ஒழுக்கந்தவறி இழிவுப் படுகுழியில் வீழ்ந்தார்கள்! அம்மம்ம! இவ்வளவு கெடுதிகளுக்குங் காரணமென்ன? நாடகக்காரர்கள் ஒழுங்கு தவறி, நாடகம் நடத்துவதல்லவா?

எனவே, நாடக அமைதிப்படி நாடகங்கள் இனியேனும் முறையாக நடைபெற்று, அதனால் நம் மக்கள் நலனடைய வேண்டுமென்று பெரிதும் விரும்புகின்றோம்.

# காதலும் கற்பும்

[திரு. மா. ரா. இளங்கோவன்.]

காதல் என்பது உணர்ச்சி கற்பு என்பது ஒழுக்கம். ஒழுக்கம் களவு, கற்பு என இருவகைபபடும. களவில் நட்புக் கொண்ட ஒருவனும் ஒருததியும மணநது வாழும வாழ்வே கற்பாகும கற்பின் இலக்கணததை,

"பொறபமை சிறப்பிற் கற்பெனப் படுவது
மகிழவும ஊடலும் ஊட உணாத்தலும்
பிரிவும் பிறவும மருவிய தாகும்." (சூத • ௨௦௦)

என்று நாற்கவிராசர் அகப்பொருள் நூலில் கூறியிருத்தல் காணததககது. தான் விருமபிய ஒருவனை அனறிப் பிற ஆடவனை மனததாலும் நினையாத உறுதியே கற்பாகும. இதனையே வளளுவரும்,

"பெணணிற் பெருநதக்க யாவுள ? கற்பெனும்
திணமைஉண் டாகப் பெறின்." (குறள்• ருச)

என்று கூறியுளளாா. கற்பு என்பது ஆண்—பெண் ஆய இரு பாலாககும் உரிய ஒரு பண்பாகும்

காதலும கற்பும எனபவற்றிற்கு விளக்கம் இதுகாறும் கண்ட நாம அடுதது, அவை இலக்கியஙகளில் இடமபெற்ற வகை கண்டு மகிழ்வோம •

காரைக்காலமமையாா எனப்போற்றப்படும் புனிதவதியார் பரமதத்தனின் மனைவியராய் விளஙகி, இல்லறமென்னும் நல்லறம் நடாத்தினா. அவாகள்தம வாழ்க்கையைப பிளந்தது அற்புதக் கனி ஒனறு ! அமமையாரைத்தெய்வம்என எண்ணிய தததன, அவருடன வாழ்தல தொல்லையானது என்ற முடிபும் கொண்டு வங்கம்சென்றான் அங்கு ஒருத்தியை மணந்துவாழ்நத அவன், தனககுப் பிறந்த மகவிற்குப 'புனிதவதி' என்ற பெயரிட்டு மகிழ்நதான்.

இதனை யறிநத அம்மையாரின் சுற்றத்தார் அவரைத் தத்தனோடு சோக்கக் கருதி அவனிடம் அழைததுச்சென்றனர். அம்மையாரைக் கண்ட அவன்,

"யானும தருளால் வாழவேன்
இவவிளங குழவிதானும் பான்மையால் உமது நாமம்"

என்று முன் பணிந்து வீழ்ந்தான். அதுகண்ட அம்மையார் உளம் வருந்தி,

"ஈங்கிவன் குறித்த கொள்கை இதுஇனி இவனுக்காகத்
தாங்கிய வனப்பு நின்ற தசைப்பொதி கழித்திங்கு உன்பால்
ஆங்குநின் தாள்கள் போற்றும் பேய்வடி வடியே னுக்குப்
பாங்குற வேண்டும் என்று பரமனைப் பரவி நின்றார்."

தன்னைக் கொண்டவனைப் பேணி, அவன் வாழ்வே தம் வாழ்வெனக் கொண்ட அம்மையார், தம் துணைவனை தம்மோடு வாழ எண்ணுததை எண்ணி வருந்துகின்றார். அவருள்ளம் அவன் நலன் ஒன்றையே எண்ணி வாழ்ந்த ஒன்று. அவன் தம்மைப் பிரிந்தது முதலாக, சுற்றத்தார் முயற்சியால் அவனைக் கண்டதுவரை எங்ஙனமேனும் அவனை மகிழ்வித்து வாழ வேண்டும் என்பதே அம்மையார் குறிக்கோளாக இருந்தது ஆனால், கொண்டவன் வாழ்த்தயர்ந்தும் நேரத்தில் அம்மையாரின் உள்ளம் அவனுக்கென அலங்கரித்து வாழ்ந்த தம் நிலையை எண்ணிப் பார்த்தது எழில் மிக்க தம் உடல் தம்மை ஏற்று உடன்வாழ்ந்து மகிழ்ந்த ஒருவனுக்குத்தான் உரியது என்ற முடிவை அம்மையார் உள்ளம் அறிவித்தது. எனவே தாம், அவர் பேய் வடிவம் வேண்டுகின்றார் .

"இவனுக்காகத்
தாங்கிய வனப்பு நின்ற தசைபொதி கழித்திங்கு."

என்ற அம்மையாரின் கூற்று அறிந்து மகிழ்தற்குரிய தொன்றாகும்.

பரமதத்தனுடன் மனைவி என்ற முறையில் வாழ்ந்தபோது அம்மையாரின் உள்ளம் காதலால் கனிந்திருந்தது. காதலில் கடமை உணர்வும், உரிமை உணர்வும் உண்டென்பதை நாம் மறக்கலாகாது. உரிமை உணர்வை அம்மையார் உள்ளத்தில் கொண்டதால்தான், கணவன் அனுப்பிய கனிகள் இரண்டனுள் பசித்து வந்த அடியவர்க்கு ஒன்றீந்தார். இங்ஙனம், காதல் வாழ்வால் மகிழ்ந்த அம்மையார், கணவன் தம்மை மாறாக எண்ணி, "யானும் தருளால் வாழ்வேன" எனக்கூறும் பொழுது வியப்பில் மூழ்குகின்றார் ஆயின், தம் துணைவன் வேறு ஒருத்தியுடன் வாழ்வது கண்டு அம்மையார் உள்ளம் பொறுமவில்லை. அதற்கு மாறாக அவர்கள் எந்நாளும் இன்புற்று வாழவேண்டும் என்று அம்மையார் எண்ணினா.

அம்மையார் பேய் வடிவம் வேண்டுகின்றார் ஆண்டவனை நோக்கி! தம்மோடு வாழ்ந்தவன் வேறொரு தையலுடன் வாழும் போது அவனுக்கு என வாழ்ந்த தாம், வளர்ந்த தம் அழகு இனி வாழ்வதிலும் வளர்வதிலும் பயனில்லை என்ற எண்ணமே அம்மையாரின் பேய் வடிவ வேண்டுகோளாக இடம் கொண்டது

அம்மையாரின் திண்மை உள்ளம்—காதலுக்கு இடம் அளித்த அவர்கள் உள்ளம் கற்புக்கும் உறைவிடமாய் விளங்கி யதை விளக்குவதே அம்மையாரின பேய்வடிவ விழைவு கற்பு நெறி என்பது இதுதான்! கொண்டானை அன்றிப் பிறிதோர் ஆடவனை மனத்தினும் கருத ஒருபபடாத உறுதி அல்லவா கற்பு என்பது!

மறக்கற்பின் விழுமிய கொழுந்தாய் அன்று விளங்கி இன்றும அழியாது மககளால் போற்றப்படும் கண்ணகி சிலம் பின் செல்வி! அவளிடம் பொறுக்கும் பண்பும் தவறிழைத தோரை ஒறுக்கும பண்பும் வாழ்ந்தன. மணக்காலததின் போது,

"காதலற் பிரியாமற் கவவுககை ஞெகிழாமற் றீதறுக."

என வாழ்ததிக கண்ணகியை மங்கல நல்லமளி ஏற்றினர், அறி வறிந்த பெரியோா. அவர்கள் வாழவு ஆரமப காலததில் சிறந் திருநதது வளமான அவர்கள வாழவினை வளமிழக்கச் செய்தது புகாா நகரில் நடந்த ஆடலரங்கேற்றம! ஆடல், பாடல, அழகு என்ற மூன்றில் ஒன்றும குறைபடாத பெண்ணே மாதவி அவள்பால கோவலன மையல்கொண்டு, மயஙகி விடு தல்அறியா விருபபினனுகித தன் மனையாளையும மறநது அவ ளுடன வாழ்ந்தான்

கோவலன் கண்ணகிக்குக் கொடுமை செய்தான் அவளை மறநது பரததையர் பெணணுன மாதவியோடு வாழ்ந்தான. தன் முன்னோா ஈட்டிய பொருளனைததும அழிததான் கணவன் மகிழ்வாக மாதவியுடன வாழ்கினறுன என்ற நினைபபு அவ ளுக்கு வருததததையும ஏக்கததையும தராமலிருககவில்லை. அவனுக்கே உரியவளான தன்னை அவனில்லாதபோது அழகு செய்துகொள்ள அவள விருமபவில்லை கணவன்பால் தான் செலுத்தும உண்மை அனபு வீண்போகாது என்பது அவள் நமபிக்கை

அதனுல்தான், "கணவனுடன் நீ கூடி வாழக் காமன் கோயிற் குளததில மூழ்கி வா" என உரைதத தன் தோழியான தேவநதிககுக் கண்ணகி, "பீடனறு" எனறு கூறினமை அவள் உள்ள உறுதியைக் காட்டுகின்றது. வினைவலியால் மாதவிபால் வெறுப்புறறு, கண்ணகியை அடைநதான் கோவலன். அடைந்த அவன், கண்ணகியின உடல் மெலிவு, உள்ளச் சோர்வு முதலி யனவற்றைக் குறிபபாலுணாந்து,

"சலம்புணா கொள்கைச சலதியொ டாடிக்
குலநதரு வான்பொருட் குன்றந் தொலைதத
இலம்பாடு நாணுத தருமெனக்கு"　　(சிலப், ௯; ௬௯-எக)

என்று கூறியபோது, நகைமுகம் காட்டி அவன் வருத்தம் போக்கினாள் கண்ணகி. தன்னை வெறுத்து வேறொருத்தியுடன் வாழ்ந்தவனை அவள் உள்ளம் வெறுக்கவில்லை. "உன் சிலம்பு விற்று, வரும் பொருள் கொண்டே வாழ்வு துவங்கவேண்டும், மதுரை செல்வோம," என்று அவன் உரைத்தபோது அவள் மறுக்கவில்லை; நடுயாமத்துப் போகத்தான் வேண்டுமா என்று கேட்கவும் இல்லை. அவன் மனம் கோணாது நடத்தலே தன் கடன் என எண்ணி வாழ்ந்த காதலரசி அன்றோ அவள்!

இங்ஙனம், மென்மையும் பொறுமையும் கொண்ட கண்ணகி, கணவன் இறப்பைக் கேட்டபோது வீர உள்ளம் கொள்கின்றாள். அவள் வன்மையின் விளக்கமாய்த் தோன்றினாள். கற்பு என்னும் உறுதிப் பண்பை அவள் வடிவம் உணர்த்தியது. அரசவை குறுகிய கண்ணகி, வாயில் காப்பவனை,

"அறிவறை போகிய பொறியறு நெஞ்சத்
திறைமுறை பிழைத்தோன் வாயி லோயே!"

என்று விளிக்கின்றாள்.

கண்ணகியின் நிலையைக் காவலனிடம் கூறும் வாயிற் காவலன்,

" . மடக்கொடி
வெற்றிவேற் றடக்கைக் கொற்றவை யல்லள்,
அறுவாக் கிளைய நங்கை, யிறைவனை
ஆடல்கண் டருளிய அணங்கு, சூருடைக்
கானக முகந்த காளி, தாருகன்
பேருரங் கிழித்த பெண்ணும் அல்லள்;
செற்றனள் போலும் செயிர்த்தனள் போலும்
பொற்றொழிற் சிலம்பொன் றேந்திய கையள்."

என்று கூறுகின்றான். அவன் கண்ணகியைக் கொற்றவை, பிடாரி, பத்திரகாளி, காளி ஆகியோர்க்கெல்லாம் ஒப்புமை கூறி, அவர்களையொத்தவள் அல்ல என்கின்றான் அவர்களினும் கொடிய தோற்றத்தினளாய் மன்னன்முன் கண்ணகி சென்றாள். அவளின் வடிவம் கண்டு—கற்பின் திண்மை கண்டு மன்னன் வியந்தான்—அச்சம் கொண்டான.

பின்னர், அவளின் வழக்கினையும் செயலையும் கண்ட மன்னன் வெட்கி வீழ்ந்து மாண்டான். தவறிழைத்த நெடுஞ் செழியனைத் தனது கற்பின் திறத்தால் ஒறுத்தாள் கண்ணகி. அவள் அன்றும் வீரபத்தினியாய் விளங்கினாள்—இன்றும் தமிழரின் மறக் கற்பின் விழுமிய கொழுந்தாய் வாழ்கின்றாள்.

காதலும்கற்பும் கண்ணகிவாழ்வின் சிறந்த இருபண்புகள்!

# இராச நாயகம்

[பெருமழை, புலவர். திரு. பொ. வே. சோமசுந்தரனார்]

இராச நாயகம் என்பது செந்தமிழில் இயன்றதொரு தீஞ்சுவைப் பெருங்காப்பியம் என்று தமிழுணர்ந்த அறிஞர்களுக்குக்கூட எடுத்துக் கூறவேண்டியிருக்கின்றது. இங்ஙனம் ஒரு காவியம் நந்தமிழ் மொழிக்கண் உளதென்பது புலவர்களினும் பலர்க்குத் தெரியாது. தமிழ் வரலாற்று நூல், புலவர் வரலாற்று நூல் முதலிய வரலாற்று நூல்களினும் இவ்விராச நாயகப் பெருங் காப்பியத்தைப்பற்றிய குறிப்புக்களை யான் கண்டதில்லை. இக் காப்பியம் இற்றைக்கு நாற்பது யாண்டுகட்குமுன்னர் அச்சேறி நூல்வடிவில் வெளியிடப்பட்டிருந்தும், சீவக சிந்தாமணி, கம்ப ராமாயணம்போன்ற சொற்சுவை பொருட்சுவை நிரம்பப் பெற்றதாயிருந்தும், பொதுவாகத் தமிழ்மக்களும், சிறப்பாகப் புலமையாளரும் இதனைப் போற்றிக்கொள்ளாதது எனக்குப் பெருவியப்பையே நல்குகின்றது.

ஏறத்தாழ இருபத்தைந்து ஆண்டுகட்குமுன்னர் ஒரு கிராமத்தில் திண்ணைப் பள்ளியாசிரியராயிருந்த முதியவர் முதன் முதலாக எனக்கு இராச நாயகத்திலிருந்து ஒருசில செய்யுள்களை இனிய இசையோடே ஓதி அறிவுறுத்தார். அவர் பாடிய பாடல்கள் இயல்பாகவே செய்யுளின்பம் நுகரும் என் உளத்திற்கு அமிழ்தம்போன்று இனித்தன. இத்தகைய செய்யுளாலியன்ற இராச நாயகம் என்னும் அக் காவியத்தைப் பெற்று ஓதியின்புறக் கருதிய யான், இந்நூல் எங்கே கிடைக்கும்? என்று அக் கிழவரையே வினவினேன். அவர் இந்நூல் இப்பொழுது யாண்டும் கிடைத்திலது; எம்மிடம் ஒரு பழைய (அச்சு) சுவடியுளது; அதைத் தருகின்றேன்; இயலுமேல் தாங்கள் அதைக் கைப்படியாக எழுதிக்கொண்டு அச் சுவடியைத் தந்துவிடுங்கள் என்று கூறி அன்புடன் உதவினார். அந்நூலை யான் முழுதும் எழுதிக்கொண்டு அச்சுச் சுவடியை அவர்க்குக் கொடுத்துவிட்டேன்

இராச நாயகம் நாற்பத்தெட்டுப் படலங்களில், இரண்டாயிரத்து நானூறு செய்யுள்களடங்கியதொரு பெருநூல். அஃது பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே எழுந்த நூலாகும். அதனை யியற்றிய நல்லிசைப் புலவர் வண்ணக் களஞ்சியப் புலவர் என்னும் சிறப்புப் பெயரானே வழங்கப்பட்டுள்ளார். மகம்மதிய மரபினர்; மதுரை மீசல் வண்ணக் களஞ்சியப் புலவர் என்னும் அடைமொழிகளோடே அவர் பெயர் காணப்படுதலால், இவர் மதுரையிலே வாழ்ந்தவர் என்று தெரிகின்றது. அந் நூலின் பாயிரச் செய்யுள் ஒன்று இராச நாயகம் அரங்கேறிய காலத்தை

விளக்கமாகக் கூறுகின்றது. இப் புலவர் பெருமானை ஆதரித்த வள்ளல் வேதை. மகம்மது நயினர் மகனர் அப்துல் காதிர் என்னும் மகமமதிய பெருநிதிக் கிழவர் ஆவர். கம்பநாடா சடைய வள்ளலைத் தம காப்பியத்தே பற்பல செய்யுட்களிலே போற்றிக் கூறுதலபோன்றே, வண்ணக் களஞ்சியப் புலவரும இவ் வள்ளற் பெருமானை இராச நாயகக் காப்பியததில் பற்பல இடஙகளினும் போற்றிக் கூறியுள்ளனர்.

இராச நாயகம் பெருமபாலும் கம்பராமாயணததைப் பின் பற்றியே பாடப்பட்டதெனபது அதனை ஓதுவாாககு நன்கு விளஙகும். மேலும சிலபபதிகாரம, சீவக சிநதாமணி முதலிய நம் பண்டைய பெருஙகாவியஙகளின் மணம இதன்கண் பயிலு மிடந்தோறும் கமழுகின்றது. செய்யுட்கள், பதினெட்டாம நூற்றாண்டின்கட் டோனறிய பிற செய்யுட்களைப்போன்றே எண்மையுடைய சொறகளாலே இயற்றபபட்டுள்ளன. இச் செய்யுட்கள திராட்சாபாகச செய்யுடகள என்னலாம்.

இனி, இவ வின்சுவைக் காவியததின இனிமையை யான உணாநது மகிழ்ந்தாங்கு நீஙகளும மகிழும பொருட்டு எடுததுக காட்டாக, முன் எனககு அத திணணைபபள்ளி ஆசிரியா ஓதிய நான்கு செய்யுளை மட்டுமே கீழே தருகினறேன.

ஓரிடததே ஒரு தலைவன் ஊழ்வலியாலே தன காதலி யைத் தனியிடத்தே காணபபெறறு, அவள எழிலைப பாராட்டி, அவளை 'யார்?' என அறிய முயலும் செவ்வியில் இச் செய் யுட்கள் அமைந்துள்ளன. அவை:

(1) "மனமெனுங கடலில ஓடுமோா காம
வஙகமே! இளைஞாகண மணியே!
புனையிழை மடவாா மகுடமே! எனது
புண்ணியத திரணடபூ ரணமே!
தினமொரு படத்தின ஒட்டிநில் லாமல
திருமொழி பேசுமோ வியமே!
வினவு மெபபொழுதும் கருகிவா டாது
மிகுமணந தருமருக கொழுந்தே!

(2) காற்றினில வெயிலில் அடிபடா வளாநது
கணமுத்தம் அரும்பிலாக கருமபே!
மாற்றரு மடவி வரையிடைத் தூஙகா
மஞசததில் தூஙகுசெந தேனே!
ஆற்றொணுத் தழற்செந் தீயடுப் பேற்றி
அடடிடா நவரசப் பாகே!
வேற்றொரு வரினகை புகுநதுநூ லதனல
வீக்குறா மெலலிதழ மலரே!

(3) வாய்ந்தமுள் ளடவி தொறு மலையாது
மலரணை குலவுவான் மயிலே!
ஏந்தவோ ரிசையே பயின்றிடா தனந்த
இசைபயின் றிடுமிளங் குயிலே!
ஆய்ந்தசொற் குழறு கிளைஞர்கள் இதய
மாங்குடம் பையிலுறை கிளியே!
ஏய்ந்தநால் வகைய மலர்களும் சுமந்த
விளங்கெழில் வயங்குபூங் கொடியே!

(4) கம்மியர் உருக்கும் நெருப்பிலே புகுதாக்
கனகமே! தமரிடா திலங்கித்
தம்மதி யதனில் விலைமதித் தெவரும்
சாற்றொணாத் தாளமே! புடைத்து
விம்மிய களப முலைமலை சுமந்து
விரைகமழ் மறைபடா மினனே!
செம்மலர் மரைவேல் கொவ்வைகள் சுமந்த
செழுங்கதிர்ச் சீவரத் தினமே!

என்பனவாம். இச் செய்யுட்களை அக் கிழவர் கூறியபோது யான் அளவிறந்த இன்பமடைந்தேன். நீங்களும் இச் செய்யுட்களை ஓதியவுடன் என்னைப்போன்றே மகிழ்கின்றீர்கள் என்று நம்புகின்றேன். இன்பமுடைய செய்யுட்களைச் சுட்டிக் காட்டலாமல்லது, சொல்லிக்காட்ட வியலாதென்றான் இன்ப முணர்ந்த கலைவாணன் ஒருவன் ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பதுபோன்று, இச் செய்யுட்களை ஓதியமாத்திரையானே, இராசநாயகக் காப்பியத்தின் சுவை எங்ஙனமிருக்கும் என்று நீங்கள் ஊகித்துக் கொள்வீர்கள்.

இச் செய்யுட்களை ஓதும்போதே,

"மாசறு பொன்னே! வலம்புரி முத்தே!
காசறு விரையே! கரும்பே! தேனே!
அரும்பெறற் பாவாய்! ஆருயிர் மருந்தே!
பெருங்குடி வாணிகன் பெருமட மகளே!
மலையிடைப் பிறவா மணியே என்கோ!
அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ!
யாழிடைப் பிறவா இசையே என்கோ!
தாழிருங் கூந்தற் றையால்." (சிலப்-௨. ௭௩-௮௦)

என வரும் சிலப்பதிகாரத்துச் சீரிய அடிகளின் தமிழ்மணம் இவற்றிற் கமழ்தலை அறிஞர் உணர்வர். மேலும் அப் பழைமையோடே திருவருட்பாவை ஒத்த ஓசை நயமும், எண்மையும், இனிமையும், இவற்றின்கண் உளவாதலையும் உணர்தல் கூடும்.

இங்ஙனமே அக் காப்பிய முழுதும் இனிமைப் பண்பு நிரம்பிக் கிடக்கின்றது. இதனை இயற்றிய நல்லிசைப் புலவர்

உள்ளம், பண்டைச் செந்தமிழின்பம் செறிந்ததொரு கலையுள்ளம் என்பதற்கு இன்னும் சான்றுகள் பற்பல உள்ளன அவை நிற்க

இனி, இப் பெருங்காப்பியம் கதைப் போக்கானும், சுற்போர் உளத்தைக் கொள்ளைகொள்ளும் தன்மையுடையது. இக் காப்பியத் தலைவன் 'சாலமோன்' எனனும் தோன்றலாவான் தலைவி பல்கீசு எனனும் மெல்லியல் நல்லாள். ஈண்டுத் தமிழ்ப் பெருங்காப்பியத்தே ஒப்பற்ற தலைவனும் தலைவியுமாகத் திகழ்கின்ற இப் பெரு மக்களைப்பற்றிய குறிப்புகள் சிலவற்றை யான் பல ஆண்டுகட்குமுன்னர் "டெய்லி ஸ்கெட்ச்" என்னும் செய்தித்தாளில் "நார்மன் ஸ்டோனபியர்" எனனும் அறிஞர் வரைந்த கட்டுரை ஒன்றிற் கண்டு அவற்றைக் குறித்துவைத்துள்ளேன் "அபிசீனிய மரபினை ஆக்கிய அரசியர்" என்ற தலைப்புடைய அக் கட்டுரை நமது இராச நாயகக் காப்பியத் தலைவியாகிய பல்கீசு நல்லாளைப்பற்றிய சுவைமிக்க வரலாற்றை நனகு விளக்குகின்றது. அக் கட்டுரையின் நேரிய மொழிபெயர்ப்பு வருமாறு ·

"வீரமடந்தை பல்கீசு வாழ்க்கை"

"பள்ளத்தாக்கை ஏரியாக்கினாள்"

"பாலைவனத்தை விளைநில மாக்கினாள்"

"மண்மூடிப்போன 'மாரேப்பு' நகரின் வரலாறு"

இவை அக்கட்டுரையின் முகப்பின்கண் காணப்படுகின்றன. இனி வருவது கட்டுரை, "சானு" என்பது ஈமன் என்னும் அரபிய நாட்டின் தலைநகரம். அஃது, அரேபியாவின் தென் மேற்குப் பகுதியில் உளது. அங்குள்ள கல்லறைகளில் பண்டைக்காலத்தே வரையப்பட்ட கையெழுத்துப் படிகள் மறைந்து கிடக்கின்றன; அவற்றில் பேரழகி 'பல்கீசு' என்பவளைப் பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கிறது

இந்நங்கை 'சியா,' 'அபிசீனியா' ஆகிய நாடுகளின் அரசியாவாள். இவ்வரசி வெள்ளை ஒட்டகத்தில் ஏறிக்கொண்டு ஒட்டகக் கூட்டங்கட்குத் தலைமை தாங்கிச் செல்லும் வழக்கம் உடையவள்.

அவளுடைய ஒட்டகக்கூட்டம் வெகுதூரத்திலுள்ள 'ஒபீர்' என்னும் இடத்திலிருந்து, பொன், மணி, தந்தம் போன்ற விலைமிக்க பொருள்களை ஆயிரங் கல்களுக்கு அப்பாற்பட்ட செருசலத்திலுள்ள அரசர்பெருமான் சாலமோனிடத்திற்கு ஏற்றிச் செல்லும். இப்பொருள்கள் அனைத்தும் தன் காதலனாகிய அம்மன்னனுக்கு அந்நங்கை மனமுவந்து நல்கும் பரிசில்கள் ஆகும்.

அவைகளின் மதிப்பு இரண்டு கோடியே அறுநூறாயிரம் பொன் எனப இததுணைப் பெரும்பொருள்களையும் உலகத்திலேயே பேரறிஞனாகத் திகழ்ந்த சுலையுமான் மன்னனுக்குப் பரிசிலாகவே அம்மாதரசி ஏற்றிச்சென்றாள்.

ஆயினும், அறிவு மிக்க அவ்வரசா பெருமான், தனது அரசியலின் கீழுள்ள இரண்டு நாடுகளுக்கு அரசியாயுள்ள அபபல்கீசு நல்லாளுக்கு, மேலும் ஒரு நாட்டை நல்கினனில்லை அவள் அன்புப் பரிசுக்குக் கைம்மாறாக அம்மன்னன் அவளுக்குத் தன்னையே வழங்கினன்; அவள் அன்பார்ந்த கணவன் ஆயினன்.

பல்கீசு சுலையுமானுடைய கோனகரத்தில் அவன் காதலி யாக எத்தனை யாண்டுகள் உறைந்தாள் என்று தெரியவில்லை. ஆனல் அந்நங்கை தன் தலைநகரத்திற்கு மீண்டு வந்தவுடனேயே சுலையுமானின் மகனை "மெனிலிகு" என்பானை ஈன்றாள். இம மெனிலிக்கே இபபொழுது அபிசீனிய மன்னராக விளங்கும் 'நெயல்சிலாசின்' மரபிற்கு முதல்வா ஆவா

பல்கீசு 'ரார்கெயில' எனபவரின் மகளாவாள் இவள் 'மாரெப்' என்னும் நகரத்தே பிறந்தவள் மாரெப் என்பது சபேயிய பேரரசின் தலைநகரமாகும் பல்கீசுவின் அன்னை "எட்டியே அரீபு" எனப்படுவாள இவள் அபிசீனிய இளவரசி களில ஒருத்தியாவள்.

பல்கீசு தன் குழந்தைப் பருவத்தை அபிசீனியாவிலேயே கழித்து வந்தாள. அவள் தந்தை இறப்பதற்குச் சிறிது காலத் திற்கு முன்புதான் மாரெப் நகரத்தை எய்தினள்

பல்கீசின் தாய் தன் சாவை நெருங்கிய பொழுதுதான் தனக்குப பின்னர் அரியணையேறும உரிமையைப பல்கீசுவிற்கு வழங்கினள். ஆனல், அந்நாட்டு அரசியல் விதி அவ்வுரிமையை உறுதிப்படுத்தாது, எற்றுலெனின் அந்நாட்டுக் குடிகளும அவளை அரசியாக ஒப்புதலவேண்டும். ஒபபினற்றான் அவள அரசுகட்டிலேறலாம்.

அரசுகட்டிலேற முன்வருவோர் ஒன்பது வகையான சிறப்புக்களை உடையராதல்வேணடும என்பது, அக்காலத்தே அந்நாட்டின் அரசியல் விதியாம். அவற்றுள்ளும், உடல்நலனும், உளத்திண்மையும ஆத்மீக உணர்ச்சியும் தலைசிறந்தனவாகக கருதபபட்டன. சியா நகரத்திற்கு, அரசியாக வரும் பல்கீசு ஒரு நொண்டிப பெண்.

பொதுமக்களாலும அவளே அரசியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டாள். அவள் அரசுகட்டிலேறியவுடன் ஞாதியொருவன் அச்சமிக்க பெருங்கலாம் ஒன்றனைத் தொடஙகினன். அக்

கிளர்ச்சி பெருங்கேடு விளைவிப்பதாயிருந்தது. பல்கீசு முதன் முதலாக அதனை அடக்கவேண்டியவளாயினள.

அக்கலகததை அடக்குதற்கு அவள காட்டிய வீரமும், தறுகண்மையும் அவளுடைய புகழை வளர்த்தன. "பார்த் தாற் பசு, பாய்ந்தாற் புலி," என்று அவளை அநநாட்டினா எல்லாம் புகழ்நதனர்.

அவளது மறததன்மை இங்ஙனமிருப்பினும், பல்கீசு ஒரு புதுமைப் பெணணுகவுந் திகழ்ந்தாள. அவள் தனக்கு முன்னும் பினனுமாகிய எலலாக்காலத்தும வாழ்நத மகளிாகள அனைவரி னும் மிக்க வனபபுடையள ஆவாள எக்காலத்தும காணப் படாத பேரெழிலே அவள பெருஞசெல்வமாக விளஙகிற்று. அவள் பூஙகொடியை ஒத்தவள்; பொன்மேனியுடையவள; சித்திரப்பாவையினுஞ் சிறபபுடையள, கயற்கண்ணுள், அமிழ் தத் தீங்கிளவியாள

இன்று மறைநது கிடக்கும் தலைநகரமாகிய 'மாரெப்' கடல் மட்டததிறகு ஏழாயிரம அடியுயரமுளள மலைகளினமேல் அமைக்கபபட்டிருநதது அநநகரம சிறிய தொனருகவே இருந் திருககககூடும எனினும, அரண்மனை பொன்னுனும், மணியா னும் "பிரமிட்" உருவததில் கடடப்பட்டிருநதது.

"மெயோரிசு" என்னும் ஏரியின் அழகிய கரையினகண் இவ்வரண்மனை அமைநதிருந்தது. காண்போா கண்கவரும் தோற்றததுடன் அது நிவந்து நினறது அந்த ஏரி ஒரு செயற்கை ஏரி, ஒரு பளள நிலத்தை இருமருங்கும கரைகோலி யதன் வாயிலாய் அவவேரி அமைககபபட்டதாம்

புகழ் மிகக இம் மாரெப் அரசி பல்கீசு பண்டையுலகப் புதுமையில ஒன்ருக விளங்கிஞள். இவள் குன்றுகளை ஆழ்நத ஏரிகளாகவும், மயோரிப் பளள ததாக்கை ஏரிகளாகவும் மாற்றி ஞள் அவ்வேரிகளினின்றும் கால்வாய்கள் அமைத்து மருங் குள்ள நிலபபரப்பை எலலாம வளம்படுததிஞள. இவள் இது செய்திலளேல் அப்பகுதியெல்லாம பாலை நிலமாகவே கிடந் திருக்கும்.

அக்கால்வாயின் அணை மிகப்பெரிது. அதைச் சுமந்து நிற் கும் தூண்களுக்குச் சாந்தாக, வெள்ளியும், வெள்ளீயமும் பயன் படுத்தப்பட்டன. நானூறு யாண்டுகளுக்கு முன்னிருந்த மாரெப் நகர அராபியர்கள், அந்நீர்நிலையைப பேணும் மதுகையி லராய் அணைக்கட்டின் பூட்டுகள் சீர்கேடெய்தும்படி விட்டு விட்டனர்.

(தொடரும்)

# செய்திகளும் குறிப்புக்களும்

**மலேயாத் தமிழர்கள் நாட்டுப் பற்று**

தெனகுமரி வடபெருஙகல் என, ஆசிரியா குறுஙகோழியூர்கிழா ரால் வரையறுததுரைககப்பட்ட நம தமிழக நிலவெலலே, தொல் காப்பியா காலத்தில் வடவேஙகடம்வரை வடவெல்லேயாகக குறுகியது. இப்போது திருததணிக்குஙகூடபபோராட வேண்டிய நிலேயில தமிழக எல்லே சுருககம பெற்றுள்ளது.

சித்தூா திருததணி திருக்காளததி வடவேஙகடம் முதலியவற்றை, ஏறககுறைய 40 ஆண்டுகளுககு முனனா, தம் ஆட்சிமுறைக கொள்கைக் கேறப ஆநதிரப் பகுதியோடு ஆஙகில அரசினா இணைததனா. ஆனல் தமிழகததையே அவை சோநதன எனபதறகு இலக்கியஙகளும், வரலாறுகளும, கலவெட்டு, செப்பேடு, பழககவழககம முதலியனவும் மெய்ப்படுததுகினறன. அவவாறிருபப இன்னும ஆநதிரததோடு இணைததுவைத்திருப்பது அரசியலாரின நடுநிலே பிறழ்ந்ததன்மையே ஆகும

இவவுண்மைகளே மலேயாவில வாழ நம தமிழமககள் நன்குணர்ந்து ஓர் அறிககை விடுததுள்ளனா. அவவறிககையோடு ஆஙகில அரசினர் காலததில ஆநதிரததோடு தமிழக ஊர்களே இணைப்பதற்குமுன இருந்த நிலவரைப்படம ஒனறினையும இயைதது அனுப்பியிருககின்றனா. அவ வறிககை, தமிழகததில வாழும அறிவறிநத பெருமககட்கும மககள தலைவா, மாநில அமைசசா, சென்னே மாநில முதலமைசசா, சட்டஅவை உறுப்பினா, நாள் திஙகள் கிழமை இதழாசிரியா முதலிய பல்லோர்கரும் வழஙகி யாவரும் தமிழக எல்லேப் போராட்டததைத துவஙகி நிகழததுமாறும தாம யாவரும அதிற் பஙகெடுததுக்கொள்ள முன் வருவதாகவும அறிவிதது வேணடுகினறனர் அந நிலப்படததை இதனேடு இணைதது வெளியிட்டுள்ளோம்.

குறிப்பு: மலேயாவாழ தமிழாகள, இடஞ்சிறிதெனனும ஊக்கந் துரப்ப ஒடுஙகா உள்ளததராய மடிதற்று முன்வருவதறிநது இறும்பூதும், இன்பும கொள்கினறேம்.

நம் தமிழ மககள் தம தமிழநாட்டு ஊர்களேக கொடாமை வல்ல ராய்ப் போரைத துவஙகிப் பொற்கோட்டிமயப் பொருவறு பததினிக் குக கற்கொணர்ந்து, கனக விசயா தம் முடிததலே நெரித்தவன் வழி யினா தமிழர், வீர வென்றியா எனபதை உலகுணரச செயவாாகளென நம்புகின்றேம்

**பச்சையப்பன் கல்லூரி மாணவர் தமிழ்க் கழகம்**

மேற்படி கழகச சார்பில் 19-2-'54-ல் மாலே 5-30 மணிக்கு, திரு. மா. இராதாகிருட்டிண பிள்ளே தலைமையின்கீழ ஒரு கூட்டம் கூடியது. அதுகாலே, திரு. அ. சிதம்பரநாதச செட்டியாா, திரு சு. செஙகல்வராய பிள்ளே, திரு. இரா. நெடுஞ்செழியன ஆகியவாகள முறையே, திரு. கா. சுப்பிரமணிய பிள்ளே, திரு. கி. மு. சுப்பிரமணிய பிள்ளே, திரு. பாரதிதாசன் ஆகியவர்களின் திருவுருவப் படஙகளேத் திறந்து வைத் தனா. அவவவர்தம் சிறப்பியல்புகளேயும குறித்து விரிவுரை நிகழத் தினா. 'வாழிய செந்தமிழ' என்னும் பாடலோடு இனிது முடிநதது.

**குறிப்பு:** தமிழ்நாட்டுப் புலவர், அறிஞர்களின் படங்களைத் திறந்து வைத்தலும் பாராட்டெடுத்தலும் நாட்டுக்கும் மொழிக்கும் செய்யும் அருந்தொண்டாகும்.

**திருக்குறள் விளக்கச் சொற்பொழிவுகள்**

மாம்பாக்கம் குருகுலத் தலைவர் திரு இளவழகனார் அவர்களால் திருக்குறளின் ஒன்பது இயல்களின் உட்கிடக்கைகளை 19-3-54 முதல் 27-3-54 வரை ஒன்பது நாட்களிலும் விரிவுரையாக நிகழ்த்தி உண்மை கூறப்பட்டது. 23-3-54-ஆம் நாள் சென்னை பூக்கடை மல்லீசுரர் திருக்கோவில் மண்டபத்தில் பல அறிஞர் சொற்பொழிவு நிகழ்த்த இனிது முடிவுற்றது.

**திருக்குறள் ஆங்கில உரையாசிரியருக்குப் பாராட்டு**

திருக்குறட் பெருநூலுக்கு ஆங்கிலத்தில் விளக்கவுரை யெழுதி வெளியிட்டுள்ள திரு. எ சக்கரவர்த்தி நயினார் அவர்கட்கு 28-3-54 மாலை 4 மணிக்கு சென்னை தங்கசாலைத் தெரு செயின் மண்டபத்தில் கல்வியமைச்சர் திரு சுப்பிரமணியம் அவர்கள் தலைமையில் ஓர் பாராட்டுக் கூட்டம் துவங்கிற்று அதுகாலை, பேராசிரியர், திரு. ரா. பி. சேதுப்பிள்ளை, பன்மொழிப் புலவர் திரு. தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், திரு கி வா. செகந்நாதன் முதலியோர் பாராட்டிப் பேசினர். அப்பால் மாலை 6 மணிக்கு விழா முடிந்தது.

**குறிப்பு:** திருக்குறளுக்கு அணிசெய்யும் உரைகள் பல புதுவதாக ஆங்கிலத்தில் உரை வருவதுகண்டு பேருவகை யெய்துகின்றோம்.

**பூனா பல்கலைக் கழகத்தின் தாய்மொழிப் பற்று**

கடந்த 3-4-54-ல் கூடிய பூனா பல்கலைக் கழகச் செயற்குழுக் கூட்டத்தினர், மருத்துவத்துறையிலும், பொறியியல் துறையிலும் பாடங்களை இந்தி மொழியிலேயே கற்பிக்க வேண்டும் என்று பம்பாய் அரசினர் ஆணையிட்டிருப்பது பல்கலைக் கழக மாணவர்க்கு ஊறு பயப்பதாகும் என்றும், மராத்திய மொழி வளர்ச்சிக்கு இடர் செய்வதாகும் என்றும் தம் கருத்தைத் தெரிவித்துள்ளனர்.

அண்மையில் பம்பாயக் கல்வி அமைச்சர் இந்தியே பயிற்சி மொழியாக வேண்டும் என்று ஆணைபிறப்பித்திருந்தார் அதனைக் கண்டிக்கவே இக்கூட்டம் கூடிற்று. கூட்டத்தினர் தாய்மொழியிலேயே பாடங்களைப் பயிற்றுவிக்க வேண்டிய இன்றியமையாமையினையும், அயல் மொழியால் விளையும் தீமைகளையும் பற்றிப் பேசினர்.

அடுத்துவரும் 1956-57-ம் ஆண்டுகளில் கல்லூரி முதல் வகுப்புக்களில் கலை, விஞ்ஞானம், வாணிகம் முதலிய தேர்வுகளில் விடை எழுதும் மாணவர்கள் மராத்தியிலேயே எழுதுவதற்கான திட்டமொன்றும் தீட்டப்பட்டது. இதுபற்றி ஆய்ந்து முடிவுகாண ஒரு குழுவும் அமைக்கப்பட்டது. இதனை நம் தமிழகம் பின்பற்றுமா?

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




பெண்ணாகடம் ஆட்சிமொழி மாநாட்டுப் பந்தல்



பெண்ணாகடம் ஆட்சிமொழி மாநாட்டிற்கு வந்திருந்த பெருமக்கள்



**உட்கார்ந்து இருப்பவர்** (இடமிருநது வலம) 1 மாநாட்டுப் பொருளாளா, திரு குஞ்சிதபாதம் பிள்ளை, 2. பனமொழிப்புலவர், திரு கா அப்பாததுரை, எம ஏ, எலடி; 3 மாநாட்டுத தலைவா, திரு ஆ கசபதி நாயகா, பி ஏ, பி எல், 4 திரு கி ஆ பெ விசுவநாதம், 5 மாநாட்டு வரவேறபுத தலைவா, திரு சிவ பழமலை




| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு கஅஅரு, சித்திரை<br>மே, 1954 | பரல் |
|---|---|---|
| உஅ | | க |

# பெண்ணாகடம் தமிழ் ஆட்சிமொழி மாநாடு

உலகில் பல்வேறு வகை மொழிகள் வழங்கிவந்தன, வருகின்றன. அவை பல்லாயிரம் ஆண்டுகளாக வழங்கிவருவன; இடைப்பட்ட காலத்தில தோன்றி வழங்கிவருவன, தோன்றி மறைந்தன, நாட்டு வழக்கற்று ஏட்டு வழக்கில் நிறபனவாகிய பல்வேறு வகையின ஆகும்.

இவற்றுள், உலக வழககினும் செய்யுள் வழக்கினும் நின்று நிலவுவதும் மக்கள தோன்றி வாயதிறந்த காலத்தே பிறந்த பழமையானதும, மெல்லிய இனிய மேவரு தகுநவாகிய சொற் கூட்டங்களைக் கொண்டதும, இலக்கண இலக்கிய வரமபுள்ளதும் என்றுமுள நம் தென்றமிழ் மொழி யொன்றேயாகும்.

இத்தகைய பண்பு வளாந்த நம் தமிழ்மொழி, நாட்டில்—தான் பிறந்தநாட்டில்—ஆட்சிமொழியாதற்குரிய சிறப்பினை இது காலை இழநது நிற்கின்றது. இதன் கிளைமொழிகளான தெலுங்கு கன்னடம போன்ற மொழிகள் தம் நாட்டில் இன்று ஆட்சி மொழி ஆக நிலவி மேலோங்கி வருகின்றன. நம் தமிழ்மொழி மட்டும் நாடு விடுதலைபெற்றும் ஆட்சிமொழியாகக் கொள்ளப் பெரிதும தயங்கி நிற்கின்றது. அதற்குக் காரணம, பன்மொழிக் கூட்டுறவான சட்ட அவையும், மொழிப்பற்று, நாட்டுப்பற்றற்ற போலிமக்களின் ஆர்வமில்லாக் குறைவும், எதற்கெடுததாலும் தமிழமொழி ஆக்கத்துக்குக் கேடுசூழும் கொள்கையினரும் பல்கி யிருப்பதுமேயாம்.

## பெண்ணாகடம் தமிழ் ஆட்சிமொழி மாநாட்டு

# நிகழ்ச்சிக் குறிப்புக்கள்

[தொகுத்துதவியவர் : திரு பழம் நீ]

பெண்ணாகடம் முத்துக்குமரப் பூங்காவில் நடைபெற்ற இம் மாநாட்டில தென்னுற்காடு மாவட்டததைச சோநத பல சங்கங் களின் பிரதிநிதிகளும், பெருமபாலான மாணவமணிகளும கலநது கொண்டார்கள்.

முன்னுள் அமைச்சா ஓ. பி. இராமசாமி ரெட்டியார் ஊர் வலத்தை ஆரமபிததுவைத்தாா. யானையின்மீது தமிழ்க்கொடி அமைதது மாநாட்டுத தலைவர்கள் உநதுவணடியில் அமாநது வர ஊர்வலம் மிகவும சிறப்பாக நடைபெற்றது. திரு. சிவ. பழமலை வரவேற்புரை நிகழத்தினுர்.

தலைவர், கசபதி நாயகர், M. L. C. அவர்கள் தலைமை உரையில் கூறியதாவது :—பதினன்கு மாவட்டங்கள கொண்ட மாகாணததில் 12 மாவட்டங்கள முழுவதும் தமிழ பேசும மக் கள் இருககின்றனர். ஆநதிராவில் இபபோது தெலுங்கு ஆட்சி மொழியாயுள்ளது அதைப்போல் தமிழ் நாட்டிலும தமிழ் ஆட்சி மொழியாக வேண்டும் தமிழ் ஆட்சி மொழியாவதற்குச் சட்டம் இடந்தருகிறது. எம். எல். ஏக்கள தமது கட்சி மனப் பான்மையை விட்டுத் தங்களைத தேர்நதெடுத்த பாமரத் தமிழ ருக்குக கடமையைச் செய்ய முன்வர வேண்டும.

திரு. ஓ. பி. இராமசாமி ரெட்டியார் மாநாட்டைத் திறந்து வைத்துப் பேசியதாவது :—

நான் ஒரு சாதாரண விவசாயி. கிராமிய முறையிலே இருந்து கொண்டு நான் பேசுகிறேன். ஆன்மநேயததோழர் களுக்கு ஆன்மநேய ஒருமைப்பாடு வேண்டும் தமிழர்களுக்கு உணர்ச்சி வேண்டும. உணாசசி மிகுதியாகவும் இருக்ககூடாது; ஆனல், இப்போது உளளதுபோல குறைவாகவும் இருககக் கூடாது, மாநாடு திறந்தே இருக்கிறது. உங்கள் உள்ளததைத் தான் திறக்கவேண்டும். கடமையில் கருத்து, நேர்மை, நாண யம், ஒழுங்குமுறை, கட்டுப்பாடு, இவைகள எல்லாம் வேண்டும். தலைமைப் பதவிக்காகப் போட்டி போடுதல் கூடாது. நாம் அனைவரும் சேர்நது ஆக்க வேலைகளில் ஈடுபடவேண்டும. சண்டை போடும போதாவது ஒன்றுபடவேண்டும். புதை பொருள் ஆராய்ச்சியாளர்கள் புதைபொருளைக் கண்டுபிடித்துத் தமிழர்களின் சிறப்பைப்பற்றிப் பஞ்சாபிலே பேசுகிருர்கள. மலை

யாளத்திலே சங்க இலக்கிய வார்த்தைகள் பேசப்படுகின்றன. செந்தமிழ் முருகன் அருளால் தமிழ் ஆட்சிமொழியாகவேண்டும். எல்லாத் துறைகளிலும் தமிழர்கள் முன்னேறவேண்டும்.

பல்லாயிரக்கணக்கான மக்களின் முன்னிலையில் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் தமிழ்க் கொடியை ஏற்றிவைத்துப் பேசியதாவது:—இன்றைய தமிழகம 2 லட்சத்து 50 ஆயிரம் நாற்புற மைல்கள பரப்பளவையுடையது தமிழ் மக்களின் எண்ணிக்கை 3 கோடி.

தமிழ் நாட்டின் வட எல்லை ஆந்திரத்திற்கு அடிமையாயிற்று. தென் எல்லையை மலையாளம் கொள்ளை கொண்டது மேற்கெல்லை கன்னடத்தில் மறைந்து விட்டது கிழக்கெல்லை பிரெஞ்சுக்குச சொநதச சொத்தாயிற்று. நடுவில் தமிழகம கூனிக் குறுகிப் போயிற்று. இதற்கும தமிழ்நாடு என்று பெயரிலலை. எஞ்சிய சென்னை மாகாணமென்று முன்பும், வெறுஞ் சென்னை மாகாணமென்று பின்பும் கூறுகின்றனர் இவ்வாறு கூறுகின்றவர்களை ஏன் ? என்று கேட்க நாதியுமில்லை. இது இன்றுள்ள தமிழ்நாட்டின் நிலை தமிழ்நாட்டினரைத் தவிரப் பிற நாட்டினரெலலாம தங்களை, ஆந்திரா, வங்காளி, பஞசாபி, மலையாளி எனறே கூறுகின்றனர் தமிழன் மட்டும இன்னும் தன் சாதிப் பெயரையும, வாழும் ஊரையுமே கூறிக்கொண்டிருக்கிறான். "தமிழ்நாடு" என்றோ "தமிழன்" என்றோ கூறுகின்ற உணர்ச்சி சிறிதுமில்லை. இதுவே இன்றைய தமிழ் நாட்டின் நிலை.

## தீர்மானங்கள்

(க) தமிழகத்துக்குத் தமிழ்மொழியே ஆட்சிமொழியாக இருக்கவேண்டுமென்று சட்டம் இயற்றி ஆவன செய்யுமாறு சென்னை சட்டசபைகளின் உறுபபினர்களையும அரசாங்கததாரையும் இம மாநாடு வற்புறுத்துகிறது.

(உ) ஆந்திரம் பிரிந்தபிறகு தமிழகத்தை 'எஞ்சிய சென்னை' என்று பெயரிட்டு வருவதைக் கண்டு இம் மாநாடு வருநதுவதுடன், தமிழ்நாடு என்றே பெயரிட வேண்டுமென இம் மாநாடு ஆட்சியாளரைக கேட்டுக்கொள்ளுகிறது.

(ந) சென்னை சட்டசபை நடவடிக்கைகளில் தமிழக உறுப்பினர்கள் அனைவரும் தமிழிலேயே பேச வேண்டுமென்று இம் மாநாடு கேட்டுக்கொளளுகிறது.

(ச) அரசாங்கத்துக்கு எழுதும் விண்ணப்பங்கள், கடிதப் போக்குவரவுகள் அனைத்தையும தமிழிலேயே எழுதி அனுப்ப வேண்டுமென்று இம் மாநாடு கேட்டுக்கொள்ளுகிறது.

# கலைக்களஞ்சிய வெளியீட்டு விழா

நம் ஒண் தீந்தமிழ்க்கண் முதல்முதல் அறிவுக்கருவூல மாகிய தமிழ்க் 'கலைக் களஞ்சிய'த்தின் முதல் தொகுதி வெளி யீட்டு விழா இச் சயஆண்டு சித்திரைத் திங்கள் க (13-4-1954) ஆம் நாள் பிற்பகல் சென்னைப் பல்கலைக் கழகக் கட்டிடத்தில் நிகழ்வுற்றது.

தமிழ் வளர்ச்சிக் கழகத் தலைவர் திரு தி. சு. அவிநாசி லிங்கஞ் செட்டியாரவர்கள விழாவிற்குத் தலைமை யேற்றார். ஏராளமான அறிஞர் பெருமக்களும தமிழன்பாகளும் குழுமி யிருந்தனர்.

தலைமை யேற்ற அவிநாசிலிங்கஞ் செட்டியார் தலைமை யுரைக்கண் குறிப்பிட்டதாவது :

'தமிழ்மொழி மிகவும் பழைமையானது; உலகம் போற்றும் சிறந்த காவியங்களையுடையது. எனினும், இச்சிறப்புக்களுடன் தற்கால வாழ்க்கைக்குரிய பிற கலைச் செல்வங்களும தமிழிற்கு இன்றியமையாதனவாகும். எல்லாத துறைகளிலும் உயர்ந்த அறிவுபெறற்கு உதவியாக இருக்கக் கலைக களஞ்சியம் ஒன்று, தமிழில் வெளிவரவேண்டும் என்பது தமிழ் அறிஞர்களின் நெடு நாளைய அவாவாகும். ஆனால், இது வெளியிடுதற்கு ஏராளமான தொகையும், இநத வேலையின் சிறந்த தன்மையும கடக்க முடி யாத மலைகளபோலத தோன்ற இப்பணியை நடைபெற வொட்டாமல் தடுத்தன.

1947 இல் தமிழ்வளர்ச்சிக் கழகம் ஏற்பட்டது. ஷெ ஆண்டு ஆகஸ்டுத் திஙகள் 15 ஆம் நாள் நம் இந்திய நாடு முழு உரிமை பெற்ற நாள். அன்று நாடு முழுவதும் மக்கள் மனத் தில் பெருமகிழ்வு பூத்துக் கரைபுரண்டு ஓடிற்று. மக்கள் உள் ளத்தில் பொஙகியெழுநத மகிழ்வுவெள்ளத்தைச் செயலென் னும் வாய்க்கால் வழியே கரைகோலிச செலுத்தினால் நற்பயன் விளையும் என்ற எண்ணம் எனக்குத் தோன்றிற்று. அது காலைக் கலைக்களஞ்சியம் ஒன்றை ஆக்கும் அரிய வேலையில் நாம் ஈடுபடவேண்டுமென்ற அறிக்கை யொன்றைத் தன்னுரிமை நன் னாட்கு முதல்நாள் வெளியிட்டிருநதேன். நண்பாகள் அனை வரும் அதை அன்புடன் வரவேற்றார்கள். தமிழன்பர்கள் பலர் அதற்கு உதவி செய்ய முன்வந்தனர்.



தமிழ் வளர்ச்சிக் கழகத்
தலைவர்
திருவாளர்,
**தி. சு. அவினாசிலிங்கம்**
**செட்டியார் அவர்கள்**
பி.ஏ., பி.எல்., எம்.பி.



கலைக்களஞ்சியத் தலைமை
ஆசிரியர்
திருவாளர்,
**பெ. தூரன் அவர்கள்**
பி.ஏ., எல்.டி.

முதல் முதல் டாக்டர், திரு. ஆர். எம் அழகப்ப செட்டியார் பதினாயிரம் ரூபா, தருவதாக வாக்களித்தனர். இராசாசர், திரு எம். ஏ. முத்தையா செட்டியாரும, தருமபுர ஆதீனத் தலைவரும் இவ்வரிய பணிக்குத் தனித்தனியே அதே தொகையைத் தந்துதவினர். காலஞ் சென்ற திரு. டி. ஏ இராமலிங்கஞ் செட்டியார், திரு. கருமுத்து. தியாகராசச செட்டியாா, திரு. ட்ரோசன அண்ணாமலைச் செட்டியார், திரு. ரா கிருஷ்ண மூர்த்தி, திரு. வி. எஸ. தியாகராச முதலியார், திருவாவடுதுறை ஆதீனத தலைவர், திரு நா. ம. ரா. சுப்பராமன முதலியோரும் பெருந தொகை உதவினார்கள. இரண்டுநாட்களில் இலட்சத்துக்கு மேற்பட்ட தொகை சேர்ந்தது.

1947 ஆம் ஆண்டு அக்டோபர்த் திஙகள் கலைமகள்விழா (விசயதசமி) நன்னாளில கலைக்களஞ்சியப்பணி சென்னைப் பல் கலைக்கழகக் கட்டிடததில் தொடங்கியது இப்பணிக்கு என்ன செலவாகுமென்பதைக் கணக்கிட்டுப் பார்த்ததில் ஏறக்குறையப் பதினான்கு இலட்சம ஆகுமெனத் தோனறிற்று. சென்னை மாநில அரசியலார் ஆண்டொன்றுககு ஒரு இலட்சமாக ஐந்து இலட்சத்துககு மிகாமல், தமிழ்வளாச்சிக் கழகத்தாா திரட்டும் தொகைக்கு இருமடங்கு வழங்குவதாக அன்புடன் இசைநதார் கள். அதுகாலை மததிய மாநில அரசினர் நிதியமைச்சராக இலகிய காலஞ சென்ற, டாக்டா. திரு ரா. க. சண்முகஞ்செட்டியாா ஒத்துழைப்பால, அவ்வரசினர் ஆண்டொன்றிற்கு எழுபத்தையாயிர ரூபாவாக, நான்காண்டுகள்வரை அளிப்பதாக வாக்களித்தனர். திருப்பதித் தேவத்தானததார் மிகுந்த அனபுடன் ஐம்பதினாயிர ரூபா வழங்கியுளளார்கள. வேறு பல அன்பர் களும சிறிதும பெரிதுமான தொகைகளை, வழங்கினார்கள். சென்னைப பல்கலைக்கழகததார் இப்பெரும் பணியை ஆற்றுதற்கு இடங்கொடுத்துதவினார்கள். இவர்கள் எல்லோருக்கும் எங்கள் நன்றியுரியது.

இவைகளை ஒழுங்குபெறச் செய்யத் திட்டம் வகுக்க, டாக்டர் திரு. ஏ. இலட்சுமணசாமி முதலியார் தலைமையில் ஓர் திட்டக் குழு அமைக்கப்பட்டது அதன்பின துறைக்கு ஒரு குழுவும நிறுவப்பட்டது. கட்டுரைகளை ஆய்தற்கும, பதித்தற்கும் பல குழுக்களும் நிறுவப் பெற்றுள்ளன. பல துறைகளில் எடுததுச் சொல்ல வேண்டிய கருத்துக்கள், எண்ணஙகள், பெயாகள் முதலியன, தமிழில் இல்லாமையால் அவைகட்கு ஏற்ற இடங்களில் தமிழில் கலைசசொற்கள் உண்டாக்க வேண்டியிருநதன. இன்றியமையாத இடங்களில் ஆங்கில மொழியில் உள்ள குறிகளையும் பெயர்களையும் தமிழ்மொழிக்கேற்றவாறு

அமைக்கவேண்டியதாயிற்று. இதில் பணியாற்றிய பெருமக்கள் தாயமொழியின்பாலுள்ள பேரன்பால் இடையறாது பணிபுரிந்து வந்துளளனர். அவர்கட்கு எம் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம.

இப்பணி தொடங்கி ஆறாண்டுகள் ஆகி ஏழாம் ஆண்டு நடந்துகொண்டிருக்கிறது. இன்னும மூன்று ஆண்டுகளில எல்லாத் தொகுதிகளும வெளிவருமென எதிர்பார்க்கின்றோம். ஆங்கிலத்தில் 'சேம்பர்ஸ் என் சைகளோ பீடியா' வெளிவர 10 ஆண்டுகளும் 'என் சைக்ளோ பீடியா பிரிட்டானிகா'வின் 9 ஆம் பதிப்பைத திருத்தியமைபபதற்கு 15 ஆண்டுகளும ஆகியிருக்கின்றன. சபபான் மொழியில் 10 தொகுதி கொண்ட கலைக் களஞ்சியம வெளிவர 12 ஆண்டுகளும், இததாலிய மொழியில் கலைக களஞ்சியம் வெளிவர 9 ஆண்டுகளும ஆகியிருக்கின்றன. தமிழ் மக்கள் அறிவுத்துறையில உயரவேண்டுமென்பது எஙகள் வேண்டுதல. தமிழ்மக்கள இதையேற்று வாழ்ததியருள்வார் களாக,' எனக்கூறி முடிததார.

பின்பு சென்னைப் பல்கலைக் கழகத்துணை வேந்தர், டாகடர் திரு ஏ இலட்சுமணசாமி முதலியார் தெலுங்கில் இவவாறு கலைக்களஞ்சியத தொகுதிகள் வெளிவர விருபபதாகக் கூறிக் கலைக்களஞ்சியச் செயறகுழுத தலைவர் திரு. பெரியசாமித்தூரன வர்களைப் பாராட்டிப்பேசினார் அபபால கல்வி அமைசசர் திரு சுப்பிரமணியம், பேராசிரியர் திரு. ரா பி. சேதுபபிளளை, 'கலகி' ஆசிரியா திரு ரா. கிருஷ்ணமூாத்தி முதலியோர் கலைக் களஞ்சியத்தின் சிறபபுககுறிததுப் பேசினாகள். 'வாழிய செந்தமிழ்'ப பாட்டுடன விழா இன்புடன முடிநதது.

—செல்லூர்க்கிழார்.

# இருகுறட் பொருண்மை

[திரு பி. எல். சாமி. பி. எஸ்ஸி.]

(க) "தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை." (திருக்குறள் : ருரு)

கற்புத் திறத்தை வலியுறுத்தவே வள்ளுவர் இக் குறளைக் கூறினர் என்று பொதுவாக எல்லோரும் கூறுகின்றனர். மணி மேகலை, கலித்தொகை முதலிய நூல்களிலும் வள்ளுவர் கருத்து எடுத்தாளப்படுகின்றது. கணவனைத் தொழுது பெய்யென்றால் மழை பெய்யும் என்ற எளிய கருத்தை வள்ளுவர் இக் குறளில் கூறினர் என்று கருதி அந்த அளவில் நின்றுவிட முடியுமா? வள்ளுவர் தம் காலத்தில் வழங்கிய கதைகளை எடுத்துக் கையாண்டு அவைகளின்மூலம் ஆழ்ந்த கருத்துக்களைக் கூறு கின்றார். 'இந்திரனே சாலும் கரி,' என்ற வரியின்மூலம் ஐம் புலன்களை அடக்க வேண்டியதின் இன்றியமையாமையை எடுத் துக் கூறினர் இந்திரன் கதையைக் கூறினதால் வள்ளுவர் அதை நம்பினர் என்றோ, வடநூற்புராணக் கருத்தைப் போற்றுபவர் என்றோ கூறுவது பொருந்தாது. பொதுமக்க ளிடை வழங்கிய கதையைக் கருத்துத்தெளிவுக்குக் கையாண்டார் என்ற அந்த அளவில் நின்றுவிடவேண்டும். ஆனால், சிலர் இதை வைத்துக்கொண்டே வள்ளுவரின் வடமொழிக் கடப்பாட்டைப் பற்றியும் வைதிக மதக் கோட்பாட்டைப்பற்றியும் கதையளப்பர்.

மேலே சொன்ன குறளில் வள்ளுவர் பொதுமக்களிடையே வழங்கிய ஒரு நம்பிக்கையைக் கையாண்டு, அதன்மூலம் ஒரு உயர்ந்த, சிறந்த, முக்காலத்துக்கும் பொருத்தமான உண்மை யைக் கூறினர் என்றே கொள்ளவேண்டும். பெண் ஏன் தெய் வந்தொழ வேண்டியதில்லை? எல்லாங் கடந்த ஒன்றே கடவுள். அக் கடவுளை உணர்ந்து ஒன்றுபட இருவழிகள் உள்ளதாகப் பெரியோர் கூறுகின்றார்கள். ஒன்று 'ஞானவழி,' மற்றொன்று 'பக்தி வழி.' புத்தர், ஆண் பெண் இருபாலாருக்கும் எல்லாங் கடந்த ஒன்றை உணர இந்த இருவழிகளையே காட்டுகின்றார். அரவிந்தரும் அதையே கூறியிருக்கின்றார். இவ்வழிகளில் 'அறிவு வழி,' ஆண்களுக்கு ஏற்றதென்றும், 'பற்று வழி,' பெண்க ளுக்குப் பொருந்தியதென்றும் கருதுகின்றார்கள். பக்தி வழி, பெண்களுக்குச் சிறந்தது என்பதையே வள்ளுவர் இக் குறளில் கூறியிருக்கின்றார் என்று கருதவேண்டும்.

பொதுவாக ஆண், ஒப்பற்ற ஒன்றை உணர அறிவையே துணையாகக் கொள்கிறான். அதனால்தான் அவன் பெண்ணைவிடக்

கூடுதலான உரிமையும் விடுதலையும் வேண்டுகின்றான். ஆனால் பெண்ணோ பரம்பொருளைக் கட்டுத்தளைகள் (பந்தங்கள்) வாயிலாகவே உணர்கின்றாள் என்று புத்தா கூறுகின்றார். ஆதலின், ஆண், கட்டுத்தளைகளைக் கழற்றியெறிந்து காண முயலும்போது, பெண், கட்டுத்தளைகளைத தழுவி எழுந்து காண்கினறாள். பற்றை ஒழித்துப் பற்றற்றதைக காண்கிறான் ஆண் ஆனால், பெண் அப் பற்றினைப்பற்றிப் பற்றற்றதைப் பாாக்கின்றாள்.

புத்தர், மனைவிமுதலிய தளைகளைத் தள்ளினார். இயேசு பெருமான், மணமற்ற வாழ்க்கையை நடத்தினார். சாக்ரட்டீஸ், மணவாழ்க்கையில் பற்றற்று இருநதாா. அரிய அறிவியல் ஆராய்ச்சியில் ஈடுபட்டிருநத நியூட்டனை அவருடைய மண நாளன்று நினைவுபடுததி அழைதது வரவேண்டியிருநதது. கடவுளைககாணும துறையில மட்டுமல்ல, அறிவியல், இலககியம முதலிய பல துறைகளிலும அரிய பெரிய உண்மைகளைக் காண முயலவோர் கட்டுத்தளைகளை விருமபுவதில்லை. இதனாலதான் உலகில் புதிய கண்டு பிடிப்புகளுக்கும (Discoveries) படைபபு களுக்கும் (Inventions) காரணமாயிருபபவாகள ஆண்களே. உலகில் சிறநத மதங்களைத தோற்றுவித்தவாகளும தத்துவ ஞானிகளும ஆண்களாயிருப்பதும் இது காரணமாகவே.

கொடி, மரத்தைத் தழுவிச்சென்று மேலேறி இலைப் பரப்பை விரிததுக் கதிரவன் ஒளியைப் பெறுகின்றது. அது போன்று பெண்ணும், 'கொழுநனை'க் கொழுகொம்பாகக் கொண்டு எல்லாம கடந்ததை உணாகின்றாள் 'கொழுநன்,' என்ற சொல்லிற்குப் பொருள், பற்று என்ற விரிநத பொதுப் பொருள் கொளளவேண்டும. கொழுகொம்பாக உள்ள எல்லாப் பறறுகளையும் அது குறிக்கும். தொழுது எழுவது தழுவி மேலேறுவதைக் குறிக்கும். கதிரவன் ஒளியைக் கொடி காண்பதுபோலப் பெண்ணும் எல்லாம கடந்த பேரொளியைப் பற்றினைப் பற்றுக்கோடாகக் கொண்டேறிக் காண்கிறாள் என்பதே வள்ளுவர் கருத்து. ஆணை மரமாகவும் பெணணை அதைத் தழுவியேறும் கொடியாகவும் கூறுவது பல மொழி இலக்கிய மரபு. மரங்கள், கதிரவன் ஒளியைத தங்கு தடையின்றிப் பெறுகின்றன. ஆனால், கொடிகள் மரங்களையே கொழு கொமபாகக்கொண்டு தழுவியேறிப் பெறுகின்றன.

'பெய்யெனப் பெய்யும் மழை,' என்றது அரியதை எளிமையாகச் செய்யும் வலிமை அவாகளுக்குக் கைகூடும் என்பதை வலியுறுததிக் கூறலேயாகும. உலகில் மிக அரிய பெரிய செயல் மழையைப் பெய்விப்பது அததகைய அரிய செயல்களும்

பொருத்தமாதல் காணலாம்" என்று மூன்றாவதிடத்தில்[1] எழுதுகிறார். இவற்றுள் "யாவோவாயினன்?"

ஆறாவது: இத்தமிழன்பரே வேறொரு நூலில், "முற் சங்க இலக்கியம் பிற்சங்க இலக்கியம் என்று இரண்டு கூறுக ளாக இந்த இலக்கியங்களைப் பகுத்துக்கொள்வது நலம். இவற்றுள் முற்சங்க இலக்கியங்கள்: நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, அகநானூறு, புறநானூறு என்ற தொகை நூல்களும், பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படை யொழிந்த ஏனைய பாட்டுக்களுமாம். பிற்சங்க இலக்கியங்கள்: கலித்தொகை, முருகாற்றுப்படை, பரிபாடல் என்பனவாம்"[2] எனவும், "முற்சங்கப் புலவர்கள் கி. பி. 100 முதல் 400 வரை யுள்ள காலப்பகுதியில் வாழ்ந்தவர்கள் என்று நாம் பொதுப் படக் கொள்ளலாம். பிற்சங்கப் புலவர்கள் கி. பி. 450 முதல் கி. பி. 600 வரையுள்ள காலப்பகுதியில் வாழ்ந்தவர்கள் ஆக லாம். இவர்களுள் முற்சங்கப் புலவர்கள் இயற்றியவை சுமார் 5-ம் நூற்றாண்டிலும், பிற்சங்கப் புலவர்கள் இயற்றியன சுமார் 7-ம் நூற்றாண்டிலும் தொகுக்கப்பெற்றன என்று கொள்ள லாம்"[3] எனவும் எழுதியுள்ளார். முற்சங்க இலக்கியங்களிலேயே குறள் எடுத்தாளப்பட்டுள்ளதனை அனைவரும் அறிவர். இவர் கூறும் வள்ளுவரது காலம் ஒப்புக்கொள்ளப்படின் கி. பி. 600-ல் தோன்றிய குறளை கி. பி. 100-ல் தோன்றிய முற்சங்க இலக்கி யங்கள் எடுத்தாண்டமை எவ்வாறு பொருந்தும்?

ஏழாவது: தமிழ்நாட்டில் கி. பி. 6-ம் நூற்றாண்டிலேயே பல்லவரது ஆட்சி நிலைபெற்றுவிட்டது. அதற்கு முன்னர் களப்பிரர் ஆட்சிக்காலம் ஏறத்தாழ மூன்று நூற்றாண்டுகளாகும். பல்லவர் பெரும்பான்மையும் வடமொழியையே வளர்த்தனர் என்பதும் தமிழ் அக்காலத்தில் அத்துணைச் செழிப்படைய வில்லை என்பதும் வரலாறுகண்ட உண்மைகளாகும். இத்தகைய சூழ்நிலையில் ஒப்பற்ற அறநூலாகிய திருக்குறள் தோன்றிற்று என்று கூறும்பொழுது வரலாற்றுணர்ச்சியும் சூழ்நிலையுணர்ச்சி யும் பெரிதும் போற்றப்படவில்லை. ஆகவே இத்தமிழன்பரது முடிவை ஒத்துக்கொள்ள இயலாதென்று தோன்றுகிறது.

இறுதியாக வள்ளுவரும் ஏலேலசிங்கரும் நண்பர் என்றும், ஏலேலசிங்கரின் வேண்டுகோட்கிணங்கியே வள்ளுவர் குறளை எழுதினர் என்றும் ஒரு வரலாறு கூறும். ஏலேலசிங்கரென்

1. Ibid. pp 77
2. தமிழர் பண்பாடு: pp. 20-1.
3. Ibid pp. 21.

பவர் சோழநாட்டிலிருந்து ஈழஞ்சென்று அங்குச் செந்தமிழ் வளரச்செய்த செம்மலாய்க் கி மு. முதல் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்பது மகாவமசத்தால் அறியககிடககிறது. எனவே அவரது நண்பராகிய வள்ளுவரும அக்காலத்தவரே யென்று நாம துணியலாம். இம்முடிவே தமிழ் இலக்கிய வரலாற்றோடும் தென்னாட்டு 'வரலாற்றோடும் பொருநதி வருவதாகும தக்க சான்றுகள காட்டபபெற்று வேறு முடிவு நிறுவப்பெறும்வரை, இமமுடிவை மாறறிக்கொள்ளவேண்டிய தேவையிலலை.

டாக்டா கால்டுவெல்—"தமிழ் நூல்களில் மிகவும சிறந்த நூலாக எலலோராலும் மதிக்கபபடும திருககுறள, அமைப்பி லும் யாப்பிலும் வடமொழிததொடாபு சிறிதுமில்லாமல் தனிச் சிறப்புடன் அமைநதுள்ளது" என்று எழுதுகிறார்.[1]

சார்லஸ E. கவா என்பார், "இறையுண்மையை நிலைநாட்டு வதற்கும, பாாபபனாகள பினபற்றிவநததும சடஙகுகள் நிறைநததுமாகிய, பல தெய்வ வணக்கததைக் கண்டிப்பதறகும, திருவள்ளுவரையும சிவவாககியரையும போன்ற அறிஞாகள் தம் சொல்லாற்றலையும எழுத்தாற்றலையும் பயன்படுத்தி வந்தாாகள்... திராவிடாகளின் மனபபணபு உயா ஒழுககததையே நாடி நின்றது என்பது இந்நூலால் தெளிவாக விளஙகுகின றது. நெருப்பினாலும போரினாலும இரக்கமற்ற கொடுமையினா லும் பார்பபனா புததமதம இநதியாவில பரவாதபடி அழித்தனர். திருககுறளை அழிப்பதற்குத தகுநத எநதக் காரணததை யும் பாாபபனர் கண்டிலா" என்று எழுதுகிறா.[2]

இவற்றையெல்லாம் கண்ட திருக்கூட்டத்தார் இவற்றை எவ்வகையில் மறுக்கலாம் எனறு கருதினர் இறுதியில் வள்ளுவரும வடவருககுக் கடமைபபட்டவர் என்று எழுதத் துணிநதனா.

---

1. Quoted by ஆசிரியர் இறையனா· "திருக்குறளாராய்ச்சி" pp. 56.

2. Ibid pp 56-58.

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) தூத்துக்குடி சைவசித்தாந்தசபை ஆண்டுவிழா

தூத்துககுடி **சைவசித்தாந்த சபையின்** (எ0) **எழுபதாம் ஆண்டு நிறைவுவிழா** நாளிது மேமாதம் 29, 30 ஆகிய இரண்டு நாட்களிலும் நிகழும். அப்பொழுது மதுரைத திருஞானசமபநதசுவாமிகள் ஆதீனம், இளவரசு திருப்பெருந்திரு திருவருளதவயோக **சோமசுந்தர தேசிக பரமாச்சாரியசுவாமிகள்** அவர்கள அன்புடன தலைமைபூண்பார்கள். மதிநுட்பம நூலோடுடைய அறிஞாகள் பலர், அரும்பெரும் விரிவுரை யாற்றுவாாகள. விளகக நிகழசசி பின் வெளிவரும எனத் தெரி கின்றது.

## (உ) பெரியபுராணப் பேருரை அரங்கேற்றம்

கோயமுத்தூா சிவக்கவிமணி, திருமுறைத்திரு. **சீ. கே. சுப்பிர மணியமுதலியாரவாகள்**, சேககிழாரடிகள அருளிய திருததொண்டர் புராணம என்னும பெரியபுராணததுககு விளககமான பேருரை ஒனறு திருவருட்டுணையால் யாததுள்ளாாகள். அவர்கள் திருமுறைகள் பன் னிரணடினையும் சீருற ஆண்டுகெகாருமுறை ஓதி நிறைவுற்று வருமுறை யாக நாறபது யாண்டுகளுககுமேல ஓதிவருகினறாாகள். சேககிழா ரடிகள் போனறே உரையையும் திருததிலலைப் பொன்னம்பலவாணர் ஆயிரககால் மண்டபததில் துவஙகி 6,7-5-54-இல் நிறைவுவிழாவும் மிகச சிறப்பாக நடைபெற்றது.

தொன்மைபோன்று திருமடமுதலிகளும், கோவேந்தர், பாவேந்தர், நாவேநதா, பூவேநதா, மெயயடியாா, பொயயிலபுரவலா, தனிப்போன் பா முதலியோா குழுமிய பேரவையில், தலைமை, வாழத்து, விரிவுரை, பொன்னுடை, பொற்கிழி முதலிய பன்னருஞ சிறப்புகளுடன் சிறப் பிததுப் போற்றினர். நிகழசசிமுறைவிரிவு விளக்கமாகப் பின் வெளி வரும

## (ந) தாய்மொழி முதன்மைபற்றி திரு. இராசேந்திரபிரசாது கருத்து

“ அநதந்த நாட்டு மொழி, கலை, பணபாடு முதலியன வளர்சசியுற வேண்டும எனனும் ஆாவம் நாடெங்கும் வளாநதுவருவதுகணடு மகிழசசியடைகிறேன் அநதந்த மாநிலஙகளின மொழி, கலை, பணபாடு ஆகியவற்றின வளாச்சியினால் மட்டுமே இந்தியா அதன் முழுச சிறப்பை யும் எய்தமுடியும்” எனறு அணமையில் நாகபுரியில் விதாப்ப சாகிதய சஙகப் புதுககட்டிடத திறப்புவிழாவின்போது கூறினர்.

விதாப்ப சாகிதய சஙகம என்பது மராத்தியமொழி வளர்சசியையே முதன்மையாகக் கருதி 1923-ஆம் ஆண்டில துவககப்பட்டதாகும். மததியபிரதேசத்தில் மராததி பேசும் மக்கள்வாழ் பகுதிகளில் இத்தகைய சஙகஙகளின் ஐநது கிளைகள் இருககினறன.

**குறிப்பு:** இஙஙனம் நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் மொழிப் பற்று வளாநது வருவதும், அதுகண்டு ஆட்சியாளரே தெளிவுபெறுவது மான இத்தகைய சூழநிலையில் நந்தமிழகம இனனும் எத்துணைப் பொறுப்பேற்க வேணடும் என்பது எணணற்பாலது.

(ச) மொழிக்கல்வி குறித்து நேருவின் கருத்துரை

"இந்தியாவின் சிறந்த மொழியாகிய தமிழை நான் பயிலவில்லை. இனிப் பயிலவும் காலம் போதாது எனினும் தமிழுக்கு என பாராட்டு தலைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்." என்று அண்மையில் சிதம்பரத்தில் நடைபெற்ற எழுத்தாளர் மாநாட்டில் பேசும்போது குறிப்பிட்டார். மேலும், "மொழி உயிர்த்தன்மை வாய்ந்தது பள்ளிக்கூடங்கள் மூலமும், பல்கலைக்கழகங்கள் மூலமும் மொழி வளர்க்கப்பட்டபோதி லும், அது நாம் நினைத்தவண்ணம் விரைவில் வளர்ந்து விடுவதல்ல அஃது ஒரு நுண்ணிய செடிபோன்றது இதனை நாம் போற்றி வளர்க்க வேண்டும். அதன்மூலம் மொழிகள் வளரும் வாழ்வும்பெறச் செய்ய வேண்டும் இங்ஙனம் செய்தால்தான் எழுத்தாளர்கள், கவிஞர்கள், நாவலாசிரியர்கள் ஆகியோர் தம்முடைய எழுதும் பணியைச் செவ்வனே செய்யத் தக்க சூழ்நிலையை உண்டுபண்ணியவர்களாவோம்.

மொழி, மக்களுடைய வாழ்க்கையில் ஒரு கூறாகிவிட்டது மக்களிடையே மொழியார்வம் சிறப்பாக இருப்பதற்கு இதுவே காரணம் எனவே நல்ல எழுத்தாளர்கள் தோன்றும்படி செய்யவேண்டும். அதற்கு மாநாடுகளும், சங்கங்களும், பட்டம் வழங்கலும் போதாது. அறிஞர்கள் தோன்றும்படியான சூழ்நிலையை உண்டுபண்ண வேண்டும். அஃதோடு அறிவாற்றலைத் தடைப்படுத்தும் சூழ்நிலைகளையும் தடுக்க வேண்டும்"

(ரு) இலங்கை முதலமைச்சர் தமிழ்மொழிக்குப் பணிவுரை

"அண்மையில் ஆங்கில எலிசபெத் அரசியார் இலங்கைக்கு வந்த போது, அவருக்குப் பாராட்டுரை நிகழ்த்தியவர்கள் சிங்கள மொழியிலேயே நிகழ்த்தினர். தமிழ்மொழியை அறவே விட்டுவிட்டனர். இதனால் தமிழ்மக்களிடையே வெறுப்புணர்ச்சி தோன்றியுள்ளது. இது குறித்து வருந்துகிறேன் தமிழை அவமதிக்க வேண்டும் என்பது இலங்கை அரசினர் நோக்கமல்ல சிங்கள மொழிக்குரிய அதே உரிமை தமிழுக்கும் உண்டு," என்று இதழ் எழுத்தாளர் சந்திப்பின்போது கூறினர்.

(சு) தமிழிலேயே பாடங்கள்யாவும் நடத்தல் வேண்டும்

"இந்த நாடு சம்பந்தப்பட்டவரை தமிழ மக்களுக்கு நல்ல முறையில் கல்வி போதிக்கப்படவேண்டுமானால் தமிழ மொழியில்தான் கலலூரிகளிலும் பாடங்கள் சொல்லிக் கொடுத்தாகவேண்டும். அப்போது தான் தமிழர்களுக்கு விடுதலை, தமிழுக்கும் உயர்வு.

"கல்லூரிகளில் பாடங்களையெல்லாம் தமிழில் சொல்லிக் கொடுப்பது நிகழக்கூடியதா? என்று கேட்கலாம். தமிழில் எதனையும் எடுத்துச் சொல்லமுடியும் எழுதமுடியும் என்று எடுத்துக்காட்டவே கலைக் களஞ்சியம் வந்திருக்கிறது"—இது, தமிழ்ப் புத்தாண்டுவிழாவிலே, கலைக் களஞ்சியத்தின் முதல வெளியீட்டைப் பாராட்டும் முறையில நம் கல்வி அமைச்சர் திரு. சுப்பிரமணியம் அவர்கள் பேச்சுக்களின் சாரம்.

**குறிப்பு:** சென்னைமாநில அரசியலாரும் அமைச்சரும் சொல்லிய வண்ணஞ் செயலில் கொணர்ந்து பாடங்களைத் தமிழில் நடத்த ஏற்பாடு செய்வதுடன், அதனை விரைவில் ஆட்சிமொழியாக்கி அரியணையி லமர்த்த வேண்டுகின்றோம்.

(எ) குசராத்தியில் தாய்மொழிப் பேரவா

குசராத்தி மொழிதான் பயிற்சி மொழியாகவும், தேர்வு எழுதும் மொழியாகவும் ஆக்கப்படல் வேணடும் எனக் கடந்த 26-4-54-ல் கூடிய குசராததிப் பல்கலைக் கழக ஆட்சிக்குழு முடிவுசெய்துவிட்டது. இக் கூட்டம் மொழிப்பயிற்சிபற்றி ஆராய்வதற்கெனக கூட்டப்பட்டதொரு சிறப்புக்கூட்டமாகும். குசராத்தி, அலலது இந்தி பயிற்சி மொழியாகவேண்டும் என்ற கருததுக்கொண்டிருந்தனர் ஆட்சியாளர். ஆட்சியாளரின் முடிவு பல்கலைககழக ஆட்சிக்குழுவின் தீர்ப்பால் தகர்ககப்பட்டது. இந்தி கூடாது என்றும் முடிவு செய்யப்பட்டது.

**குறிப்பு:** நாடெஙகும் தத்தம் தாய்மொழியில் வீறுகொண்டு ஆட்சி மொழியாக்க முன்நிற்கின்றனர். தமிழன்மட்டும் தூஙகுகின்றான். அநதோ! நந்தாய்மொழி அரியணையேற வேண்டவா?

(அ) பாகிஸ்தானிலும் மொழிப்பற்று

ஆட்சிமொழி பற்றிய போராட்டம் பாகிஸ்தானிலும் தலைகாட்டியுள்ளது. பாகிஸ்தான் முதலமைச்சரும் மௌலி அப்துல் ஹக்கும் 23-4-54-ல் ஆட்சிமொழிபற்றி உரையாடினர். உருதுதான் ஆட்சி மொழியாதல் வேண்டும என மக்கள்மன்றம் தீாப்புக் கூறியுள்ளது. உருதும் வஙகாளமுமட ஆட்சிமொழி ஆகவேண்டும் என முஸ்லீம்லீக் கோருகிறது. உருது ஒன்றுககுத்தான் இடமுண்டு என்கிறார் மௌலி அப்துல் ஹக.

**குறிப்பு:** தாய்மொழி அவவந் நாட்டில் ஆட்சிமொழிஆக நடத்தற்குரியது. இதனைத தமிழநாட்டு ஆட்சியாளர் கவனிப்பரா?

(க) தாய்மொழிபற்றி 'அரிசன்' ஆசிரியர் கருத்து

பல்கலைக் கழகங்களில் இந்திமொழியைக் கற்பிக்கும் மொழியாக வைத்தால் நாட்டின் ஒற்றுமைக்குக் கெடுதல் விளையும் என்று அரிசன் கிழமைஇதழாசிரியர் திரு. மகனபாய் தேசாய் 21-4-'54-ல் ஆமதாபாத்தில் கற்பிக்கும் மொழிபற்றிய ஆய்வுக்குழுவில் பேசுங்கால் எசசரிக்கையாகக கூறினார்.

பின்னும் பல்கலைக்கழகங்களில் அவ்வந்நாட்டு மொழிகளையே கற்பிக்கும் மொழிகளாக ஆககினால்தான் உண்மை ஒற்றுமை கண்டு நாடு ஒருமுகப்படுமென்றும் எடுத்துரைத்தார்.

**குறிப்பு:** இந்திமொழி எழுத்துப் பெருக்கமும் முறகல், கனைத்தல், உள்ளிழுத்தல், நீள ஒலித்தல் முதலியனவும் மிக்கமொழி. இளஞ் சிறார்கள் எளிதில் கற்கும் இயல்புடையதுமன்று. ஆகவே, நம் நாட்டில் தாய்மொழியாகிய தமிழையே கற்பிக்கும் மொழியாக ஆட்சியாளர் நிலைபெறுத்துதல் வேண்டும். அதுவே, நாடு உயர்ந்து சிறப்புற வழி கோலுவதாகும்.

# மதிப்புரை

**திருச்செந்தூர் வள்ளிமணாளன்கோவில் வரலாறு**

[ஆசிரியர்: குலசேகரன்பட்டினம், தமிழகம், சித்தாந்த சைவப் புராணிகரும், கந்தபுராண அருள்மணியுமாகிய திருவாளர் ச. முத்துக் குமாரசாமி பிள்ளை அவர்கள், பக்கம்: அஅ. விலை ரூ. 1.]

இந்நூல் மிக இனிய எளிய நடையில் யாக்கப்பெற்றது. பலவேறு தலைப்புக்கள் பொருத்தமுற அமைக்கப்பெற்றுள்ளன. நக்கீரர் காலந் தொட்டு ஆறுமுகச்சாமியவர்கள் காலம்வரையும் திருச்செந்தூர்த் திருக்கோவிலுக்கு ஆற்றிய திருத்தொண்டுகளும், திருக்கோவிலமைப்பு, நாள்விழாத் திருவிழா நடப்பு முதலிய அனைத்தும் வரன்முறையாகச் செம்மையுற வரையப்பெற்றுள்ளன. அகச்சான்றுகள், கல்வெட்டுக்கள் முதலிய காணப்பெறுவன.

குமரகுருபர அடிகள், ஞானியார், இரு வைணவர், பகழிக்கூத்தர், வடமலையப்பபிள்ளையன், கட்டப்பொம்மு, மேடைதளவாய், கந்தசாமிப் புலவர், மீராக்கண்ணுப்புலவர், 1803, கலெக்டர் S R. லூசிங்க்டன், மலையாளமன்னர், குலசைமூப்பனார், பாண்டித்துரைத்தேவர் முதலிய பல மெய்யடியார்கள் அறுமுகப்பெருமான் திருவருளால் ஆட்கொள்ளப் பெற்று வியத்தகு முறையில் நோய் நீங்கல், கண்பெறல், பொன்பெறல், கடலகத்துவீழ்ந்த பொருள் கையுறப்பெறல், கனவினருளல் முதலிய அருளிப்பாடுற்ற வரலாறுகள் பல காணலாம்.

ஆதிசங்கராச்சாரியார் வடமொழியில் புசங்கம்பாடி நீங்கா நோய் நீங்கி ஆட்பட்டமை காணுந்தோறும் அறுமுகப்பெருமான் ஆரருளை வியவாதார் எவருளர்?

சுருங்கச்சொல்லின் இந்நூல் ஓர் அரிய தென்தமிழக வரலாற்று நூலாகவும், திருக்கோவில் வழிபாட்டுமுறை, அறுமுகப்பெருமான் ஆரருட்டிறம், விழாமுறை முதலியன விளக்கும் விளக்க நூலாகவும், முன்னுள் நாயன்மார் காலங்களில் நிகழ்ந்த அருட்செயலேபோன்று இந்நாட்களில் அருட்செயல்பலவும் நேரில்கண்டார் உளராகவும் காணப் பெறும் வாய்மை பெரிதும் பாராட்டற்குரியது.

எனவே, இந்நூலைச் செந்தமிழன்பர்களும், செந்நெறிச் செல்வர்களும் வாங்கிக் கற்றும் கற்கச்செய்தும் போற்றுவார்களாக. நூலாசிரியரவர்களை இதுபோன்ற அரும்பெரும் நூல் பல வெளிப்படுத்தி ஊக்குவார்களாக.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பா அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




| சிலம்பு ௨௮ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௫, வைகாசி ஜூன், 1954 | பரல் ௧௦ |
|---|---|---|

# பெரியபுராணப் பேருரை அரங்கேற்றவிழா

'சைவசமயமே சமயம்' என மெய்ந்நெறிச் செல்வராகிய தாயுமானார் அருளியவாறு உலகிற் சிறந்த சமயங்களில் முதலிடததில் வைத தெண்ணத்தக்கது நம் சைவ சமயம ஒன்றே.

ஏதனாலெனின் வினவின், இச் சைவசமயம்

'ஓதுசம யங்கள பொருள்உணரும் நூல்கள்
ஒன்றோடொன் றொவ்வாமல் உளபலவும் இவற்றுள்
யாதுசம யம்பொருள்நூல் யாதிங் கென்னின்
இதுவாகும் அதுவல்ல தெனும்பிணக்க தின்றி
நீதியினால் இவையெல்லாம ஓரிடத்தே காண
நின்றதியா தொருசமயம் அதுசமயம'

(சிவஞானசித் : ௨௯௮)

என்னும் அருணந்திசிவாச்சாரிய அடிகளின் திருமொழிக்கேற்ப எல்லா நெறிகளின் நன்னெறியெல்லாம தன்னகத்தே கொண்டு மிளிரும் பெற்றிமையாலெனக் கூறலாம். இதனால் இது 'திருநெறி' என, ஆன்றோர்களால் போற்றப் பெறுகின்றது.

இச் சைவசமயத்தில் சாதி சமய வேறுபாடு இன்று. 'கங்கை வார் சடைக்கரந்தார்க் கன்பராகில் அவர் கண்டீர் நாம் வணங் குங் கடவுளாரே' என்று தேவாரமறை முழங்குகின்றது. அஃதோடு முழு முதலாகிய இறைவனை இயற்கை நெறிகொண் டமைத்து வழிபடும் அமைப்புங் கொண்டது; ஆண்டவன் ஆணுரு பெண்ணுருவாக இலகுகின்றான் என்பது அது காட்டும உண்மை. பழங்காலத்தேயே இதனையே அடிப்படையாகக் கொண்டு,

'நீல மேனி வாலிழை பாகத்து ஒருவன்'

என்று சங்ககால நூல் சாற்றுகின்ற தெனின், அதன் சிறப்பை என்னென்று கழறுவது? நாம் உலகம் முழுதையும்—நிலையியல் இயங்கியற் பொருள்களின் கூறுகளையும—ஆய்வோமாயின், இரண்டின் இணைப்பு ஒன்றுபட்டு இயங்குதலைக காணலாம. உயிரில பொருள், இரண்டு தனிப்பட்ட பொருள்களாலும், உயிருள பொருள், ஆண் பெண் என்னும் இரண்டு தனிப்பட்ட பொருளகளாலும இயங்கித் தொழிற்பட்டு உலகியல் நிகழ்வதைக காணலாம். நாம் ஒனறை எழுதத துவங்கினுல் எழுதும் கருவியும் அதற்குக் கடிதமும இன்றியமையாது வேண்டும். ஒன்றிருநது ஒன்றின்றேல் எழுதுதல் இயலாது. இவவாறே எதை நோக்கினும காணலாம இதனுனே நம் உடலுறுப்புக்களும் இவ்விரண்டாய் அமைந்துளளவும் அறியற்பாலது. பொழுது, பகலும இரவும்; செயல, நலமும் தீங்கும்; ஏனையவும இவ்வாறே உயிர்களுள் எவ்வுயிர்களை எடுததுக் கொண்டாலும் அவவவற்றுள் ஆண் பெண் என இரண்டிருத் தலைக் காண்கின்றேம். உலகத் தோற்றம இவவிரண்டும ஒனறுபட்டே நிகழ்கின்றன. இவ்வுண்மையைக கூர்ததறிந்த நம் தமிழ் மக்கள்,

எல்லாம் வல்ல இறைவனை அம்மை அபபனுகப போற்றினர்கள். இதனைத், 'தோன்மைக் கோலம்' என, மணிமொழிப் பெருமான் அருள்கின்றூர். இத்தகைய இயற்கையொடு சோநத உண்மையைக்கொண்ட சமயம வேறெஙகே காணமுடியும்? எனவே, இது தலைசிறந்த சமயமாய்—தமிழர் தனிச் சமயமாய்—உண்மை வழிகாட்டும் ஒண்சமயமாய்—இறையை அடையும் எண்மை நெறியாய்—இலகுவதென்க.

இதன் உண்மை நெறியை அளவை முறைப்படி ஆய்ந்து காட்டும் கண்ணுடியாக மிளிர்வன, சைவ சித்தாந்த சாத்திரங்கள் பன்னுன்குமாகும் அவையிற்றுள் கடவுள் உயிர் உலகம் என்னும் முப்பொருள் உண்மைகளையும் வகுத்துக்காட்டி, உயிர் இறையடி யின்பத்தில் திளைத்து வீடுபேறும் நிலைபெற்ற நிலையை எய்தும் நெறியையும் வகுத்து நிரல்பட மொழிவனவாகும்.

இத்தகைய நன்னெறிக்கண்ணின்று ஆண்டவன் திருவடிப் பேறெய்திய பெரியார்கள், அறுபான்மும்மைத தொண்டர்களாவா. இவர்தம வரலாற்றை முற்றமுடிய எடுத்துக் கூறுவது திருத்தொண்டர் புராணமெனப் பெயரிய பெரிய புராணம் ஆகும். இந் நூல் சேக்கிழார் பெருமானுல் அருளப்பெறறது; சைவத் திருமுறை பன்னிரண்டனுள், பன்னிரண்டாவதாகத் திகழ்வது; அடியார் பெருமையை அகநெக உரைப்பது, கருங்

தன் மனமும் கரைந்துகச் செய்யும் கனிவுமிக்கது இதன்கண் சேக்கிழார் பெருமான் இயற்கையான வருணனைகளைக் கூறும் போதுகூட ஆங்காங்கே இறைவன் காட்சியையும், அடியார் திறப்பாடுகளையும், பிறவற்றையும் எடுத்துக் காட்டி இறையடிப் பேரின்பினும, அடியார அருளன்பினும் கற்றுரை ஈடுபடச் செய்வர். காட்டாக இரண்டொன்று காட்டுதல் சாலுமெனக் கருதுகின்றேம்.

பெரிய புராணம் ஆக்கற்குத் தொகையாக இருப்பது, நம்பி யாரூரர் அருளிய, 'திருத்தொண்டத் தொகை' யென்னும் தேவாரத் திருப்பதிகமாகும். அப் பெருமான் வரலாற்றை முதற்கண், 'தடுததாட்கொண்ட புராணம' என்னும் தலைப் பிந்து அருளுகின்றார். அதில் நமபிகள் இறையை வணங்கறகுத் தில்லை செல்கின்றா. செல்லும்போது ஒரு காட்சி. தில்லையில் மலைபோல் உயர்நத மதில்களா; அதனைச் சூழ ஆழ்நத அகழிகள்; அவ் வகழியில் அலர்ந்த மலர்கள் பொதுளிய தாமரைகள்; அதிற் பூதத மலர்களில் தேன் ஊற்று; அதில் வாழும் கரு வண்டுகளா பல; அவை தாமரைமலர்த தேனை உண்டு உண்டு களிகூாந்து மயங்கிக கிடக்கின்றன. அவ்வகழிக் கரைமருங்கண் தாழைகள். அதன் விரிநத மடலகள்; அம மடல்களில் நிறைந்த பூந்தாதுகளா; மயங்கிக்கிடந்த வண்டுகட்குச் சிறிது உணர்வு வருகின்றது பறக்கின்றன; தாழைப் பூந்தாதில் படிகின்றன; அததாதுகள் அவைகளின் உடலெலலாம் அப்பிக் கொள்கின்றன; கருநிற வண்டுகள் அத் தாதினல் வெண் ணிறம் பெற்றனவாகிப் பறந்து தம் இன்னொலி பரப்பிப் பாடிக் கொண்டு எதிர் வருகின்றன இக் காட்சி சுநதரா பெருமா னுக்கு இறைவன் தொண்டாகள் குளிததுமுழுகி வந்து மெய் யெல்லாம் வெண்ணீறு பூசிக்கொண்டு எழுந்து இறைவனைத் தொழுதற்கு அவன் புகழைப் பாடிக்கொண்டு செல்வதாகவும், தமமை எதிாகொண்டு அழைப்பனபோன்றும் தோன்றுவதாக வும் ஓர் அழகிய கற்பனையை உருவாக்கி அருள்கின்றார், நம சேக்கிழார் பெருமான். அச் செய்யுள்:

'மன்று ளாடுமது வின்னசை யாலே மறைசசு
 ரும்பறை புரத்தின மருங்கே
குன்று போலும்உயர் இஞ்சிசூழ் மாடக குண்டகழக்
 கமல வண்டலா கைதைத்
துன்று நீறுபுனை மேனிய் வாகித தூய
 நீறுபுனை தொண்டர்கள் என்னச
சென்று சென்றுமுரல் கின்றன கண்டு சிந்தை
 அன்பொடு திளைத் தெதிர்சென்றார்.' (தடுத்தாட் : கூசு)

என்பதாகும் பிறண்டும், பரவை நாசசியாரைக் காண்கின்றார்; அம்மையாரும் வன்றொண்டரைக் காண்கின்றார்; இவ்விருவர்க்கும் பண்டை வினை கடைக் கூட்டுகின்றது; காதல் கொள்கின்றனர்; இருவரும மாறிப்புக்கு இதயம் எய்துகின்றனர்; இருவரையும் கண்ணுதலைத் தொழுமன்பே கைக்கொண்டு செலவுய்க்கின்றது. மணந்தாருயிருண்ணும் மாலைபோக, இருள் எங்குஞ் செறிகின்றது; அவ்விருட் காட்சி, நம் சேக்கிழார் பெருமானுக்கு நமக்குத் தோன்றுவதுபோன்று மைந்நிறமாகக்—கடல் நிறமாகத் தோன்றவில்லை; அரன் திருப்பெயராகிய—மந்திரமாகிய—ஐந்தெழுத்தை அறியாத மக்களின் நெஞ்சைப் போல் இருண்டது என்று கூறியருள்கின்றார். அக்காட்சி:

> 'அஞ்செ ழுத்தும் உணரா அறிவிலார்
> நெஞ்சும் என்ன இருண்டது நீணடவான்.'
>
> (தடுத்தாட் • கடுசு)

பின்னர், இருளினை ஓட்டித தண்கதிர் மதியந தோன்றுகிறது, அது வெள்ளி வெண்குடததுப் பாலசொரிவதுபோல் தன் தண்ணிய வெண்கதிரைப் பொழிகின்றது; அக்காட்சி நம பெருமான், சேக்கிழாா அடிகட்கு இறைவன பூசிய திருநீற்றொளிபோல் தோன்றி இன்புறுத்துகின்றது. அதனை,

> 'தோற்று பலவுயிர் கட்கெலாம் தூய்மையே
> சாற்றும இன்பமும் தணமையும் தந்துபோய்
> ஆற்ற அணடமெ லாம்பரந் தண்ணல்வெண்
> நீற்றின் பேரொளி போன்றது நீணிலா.'
>
> (தடுததாட் : கசுஉ)

என்பதாகும்.

பின்னும ஏனாதிநாதநாயனார் புராணததுள், ஏனாதிநாத நாயனாரை எதிர்ததுப் போர் புரிய வந்தோர் எவரும் தவறாது, கொலையுண்டு மாண்ட நிலைக்கு,

> 'நிலைப்பட்ட மெய்யுணர்வு நோபட்ட போதில்
> அலைப்பட்ட ஆவமுதற் றூற்றம்போல் ஆனார்'

அதாவது நிலையானஉண்மையறிவு பெற்றவர்கட்குக் காமம், வெகுளி, மயக்க முதலியன நில்லாமல் அறவே ஒழிநது போவதைப்போல் என்று உவமங்கொடுத்தருளினார், தொண்டர் சீர்பரவுவார்.

இவ்வாறே ஒவ்வொரு நாயன்மார் புராணத்தும் வருணனைகளிற்கூட இறைவன் இயற்கை, அடியார் சிறப்பு, சைவசமய நெறி இவைகளைக் கண்டு நம்போல்வார் அறிய அருளிய அரு

மறையாகிய இப் பெரியபுராணத்துக்குத் தெளிவுபட்ட உரை பன்னெடுங்காலமாக இல்லாதிருந்தது. அக்குறையை நம் சிவக்கவிமணி, உயர்திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்கள் நீக்கி, அரிய பெரிய உரைவகுத்துதவினார்கள்; அவர்கள் கைம்மாறுபேணாக் கடப்பாட்டுக்குப் பொதுவாகத் தமிழுலகும், சிறப்பாகச் சைவவுலகும் நன்றிபாராட்டுங் கடப்பாடுடையன.

## நிகழ்ச்சிகள்

கடந்த 6—5—54-ஆம் நாள் சிதம்பரத்தில் கூத்தப் பெருமான் திருக்கோயில் ஆயிரக்கால் மண்டபத்தில் கோவை சிவக்கவிமணி திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் எழுதிய பெரியபுராணப் பேருரை வெளியீட்டு அரங்கேற்றுவிழாத் துவங்கியது.

அதற்கு மாலை ௬-மணிக்குத் திருஞானசம்பந்தர் மடாலய இளவரசுப் பட்டம் உயர்திரு. சோமசுந்தர தேசிக அடிகளார் தலைமை தாங்கினார்கள்.

மேற்படி சிறப்பு, சிதம்பரம் சிவகங்கைக்கரையில் சிவவழி பாட்டுடன் துவங்கியது. பின்னர்த் திருமுறைகள், பெரிய புராணச் சுவடிகள் எல்லாம் யானைமேல் வைக்கப்பட்டுத் தேவாரம் பாடுதலுடன் நகர்வலம் வந்தன. அரங்கேற்றப் போகும் பெரிய புராணப் பேருரை ஏழு புத்தகங்களும் நடராசர் சிற்சபையில் நடராசப்பெருமான் திருவடிகளில் வைத்து, பூசை வழிபாடுகள் செய்யப்பட்டன அப்போது பொதுத் தீட்சிதர் களின் சபை அமைச்சர் திரு. கலியாணசுவாமி தீட்சிதர் பொதுத் தீட்சிதர்களின் சார்பில சிவக்கவிமணி சி. கே எஸ். அவர்கட்குப் பொன்னாடை போர்த்தினார். கூத்தப்பெம்மா னுக்குத் திருப்பாவாடை வழிபாடு, திருமுழுக்கு முதலியன நிகழ்ந்தன. திருப்பனந்தாள் மடாலய அடிகளால் ஆயிரம் பேருக்குச் சோற்றுக்கொடை வழங்கப்பெற்றது.

அவ்வமயம் தலைமைதாங்கிய உயர்திரு சோமசுந்தர தேசிக வடிகளார் பேசியதாவது :

'பெரியபுராணம் பாடி அரங்கேற்றப்பெற்ற இடத்திலேயே அதேநாளில் பேருரை வெளியீட்டு நிறைவு விழாவும் கொண் டாடப்பெறும்படி முடிவுசெய்த விழாச் செயற்குழுவினரை நாம் யாவரும் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம அதற்கு அன்பே உருவாக, தியாகமே சின்னமாகக் கொண்டொழுகும் திரு. பி டி. இராசன் அவர்கள் சீரியதலைமையும், தமிழுக்கும்

சமயத்துக்கும் தம்மை உரிமையாக்கிய திரு. சி. எம். இராமச்சந்திரன் செட்டியாரவர்களின் பண்பாடும் செயலாற்றும் திறமுமே காரணமென்று கருதுகின்றோம்.

பெரியபுராணம் முழுவதையும் உரையுடன் வெளியிட்டிருப்பவர்கள், திரு. வி. கலியாணசுந்தர முதலியார், திரு. ஆறுமுகத்தமபிரான் சுவாமிகள், திரு. சுப்பராய நாயக்கர், நாம் விழாக்கொண்டாடுகின்ற பேருதவி தந்திருக்கும் சிவக்கவிமணி திரு சி கே. சுப்பிரமணிய முதலியாரவர்கள முதலியோராவார்கள. சிவக்கவிமணியின் பேருரை சேக்கிழாரடிகளின் ஆழ்ந்த தெய்வீகக் கருத்துக்களை அகழ்நதெடுதத பெரியதோர் அருட்புதையலாக அமைநதிருக்கிறது. அதைச் சைவசமயததின் கலைக்களஞ்சிய மெனலாம. புராணவுரை தறகாலததுக்கு வேண்டியவாறு உருவெடுததுளது மிகவும சிறப்பானது நம் அருள்மணி நம்மிடையே பல்லாண்டு பல்லாண்டு வாழத திருவருள் துணைபுரிவதாக' எனக் கூறிமுடி ததார.

அவ்வமயம வரவேற்புக் கழகத தலைவர் திரு பி. டி. இராசன அவாகள பேசியதாவது :

'சமணமும் பௌத்தமும் தலைதூக்கி, சைவம் மக்களாலும் அரசாகளாலும் கொண்டாடபபெறாத காலவரலாற்றைப் பெரியபுராணக் கண்கொணடு பார்த்தால் அவ்விருணடகால வரலாறும் நமககுக கிட்டியதெனறே மகிழலாம. திரு. சி. கே. எஸ். அவர்கள் தமது நீண்டகால அடைவினால் (அனுபவம்) ஆராய்ந்து ஒரு அரிய வுரையை ஆக்கி வெளியிட்டுள்ளார்கள், கருத்துரைத்தல், கண்ணழித்தல், பொழிப்புத் திரட்டல், அகலநகூறல என்னும நான்குவகையாலும பெரியபுராணத்துக்கு இதுவரை உரையெழுதினாரில்லை. இம்முயறசியை மேற்கொள்ளவுமில்லை. எழுதுதல் தவறு என நினைந்தே பெரியவர்கள் எழுதாது விட்டிருநதனர். அது, அக்காலததிய சூழ்நிலை. இக்காலததில் எதையும் ஆராய்ந்தறிய முற்படுவதால் திரு. சி. கே. எஸ. அவாகள் தமது பேருரையை உதவியுள்ளார்கள். இத்தகைய சிறநத உரையைப் பொருள் இலக்கிய நுணுக்கம், இலக்கணப் பொருத்தம், சமய நோக்கு, மேற்கோள்காட்டல் முதலிய அரிய முறைகளைக், கையாண்டு உரையாசிரியர் செய்துளள பேருழியம் உலகம உள்ளளவும நின்று நிலவும்' என்றார்.

பின்னர்த் தமிழ்நாட்டு அருள்நெறித் திருக்கூட்டத்தார் சார்பில் திருவண்ணாமலை ஆதீன வித்துவான திரு. முத்து வேங்கடாசலம் வாழ்த்துப்பா படித்தளித்தார்.

குன்றக்குடி அடிகளார் அருளிய வாழ்த்துரையைச் சபாபதித தம்பிரானும், திருப்பனந்தாள் ஆதீனம, தருமபுரம், திருவாவடுதுறை, மயிலம் முதலிய மடாதிபதிகள் சார்பிலும் வாழ்த்துப் பாக்கள் படித்தளிக்கப் பெற்றன. தவிர, தனித்தனி மக்கள் பலர் வாழ்த்துபபாக்கள் பாடியளித்தனர்.

கடைசியாகத தேவகோட்டைத் திருவாளர். உ. ராம. மெ. சுப.-சேவு மெ. மெய்யபப செட்டியாரவர்கள் (௨0) பொன் (பவுன்) மதிப்புள்ள பொன் அட்டையிட்ட பெரியபுராண நூல் ஒன்றைத் திரு டி. பி. மீனுட்சிசுந்தரனுரால் கொடுக்கச் செய்து வழங்கினுர்கள.

திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்கள் தம்மை வாழ்த்தி அன்புமாலை வழங்கிய யாவாககும், பாராட்டிய ஏனைய யாவர்க்கும் தம் நன்றியுரையைக் கூறினுர். இன்புடன் கூட்டம் முடிவுற்றது.

## முற்றுரை

உலகில் 'செயற்கரிய செய்வார் பெரியர்' என்னும் வள்ளுவர் வழக்கிற்கேற்ப, நம் சிவக்கவிமணியவர்கள் தம் அஃகியகன்ற புலமையால் சீரிய கூரிய தீஞ்சொற்களால் பெரியபுராணத்துக்கு விரிந்த புத்துரை எழுதி உதவினுர்கள் அவர்களின் அரிய முயற்சியும், காலத்துக்கேற்றவாறு சைவ வுலகுக்கு அரண் செய்யும் ஆக்கப்பாடும் அறிந்து கழிபேரோகை யெய்துகின்றேம். இவர்கள் இதுபோன்ற அரிய பெரிய தமிழ்த் தொண்டும், சைவத் தொண்டும் செய்து 'ஆலமணிமிடற்றெருவன்போல மன்னி' இவ்வுலகில் பன்னெடுங்காலம் வளனுற வாழுமாறு இறையருளை வேண்டி வாழ்த்துகின்றேம்.

# மலையும் அணிலும்

[திரு சேனாதிபதி]

மலையும் அணிலும் மலைந்த தோர்நாள்
*"தலைகால் இன்றித் தவிக்கின்றாயே
சிறிய னாயினும் பெருமையே னுனக்கு?"
மலையார் இவ்விதம் மறுகினார்; கேட்ட
அணிலார் பைய அறைகின் றாரே:
"பெரியோய் எல்லாப் பெருமைக் குரியோய்
சரியின் றேனும சாற்றக் கேண்மின்
பெரிது பெரிது புவனம் பெரிது
புவனமோ பற்பல பொருட்களின் சேர்க்கை
சிறிதும் பெரிதும் சேர்ந்ததே உலகம்
காலம் என்பது கார்த்திகை மட்டுமா?
ஆறிரு திங்கள் ஆனதே ஆண்டு
உண்மை யாயினும உன்போல் பெரியன்
அல்ல; நீரே ஆயினும என்போல்
சிறுபொருளல்ல ஆதலால் பெரியீர்
திறமைகள் பற்பல தெரிந்திட வேண்டும்
'வானை யளக்க உம்மால் இயலும்
வனமதைக் காக்கும் வன்மையும் உடையீர்!
ஓர்நொடிப் போதில் உயர விருந்து
கீழே குதித்து மேலே ஏறுவேன்!
கடுக்காய்க் கொட்டையைக் கடித்தே உடைப்பேன்
காட்டிய கொட்டையைக் கடிக்கின் றீரா?"
அணிலார் அறைந்த அனைத்தும் சரியே
பெருமைப் பட்டோர் பெரியோராகார்
சிறியோர் குணத்தால் சீரிய ராவார்
உயர்த்தப் பட்டோர் தாழ்த்தப் படுவதும்
தாழ்ந்தோர் உயர்ந்தோர் ஆவதும் காணீர்
இஃதே உலகத் தியற்கையென் பதுவே.

---

* தமிழில் ஓர் மரபுச் சொற்றொடர்.

# எழுத்தும் புணர்ச்சியும்

[செல்லூர்க்கிழார் திரு செ. ரெ. இராமசாமிபிள்ளை]

முன்னைப் பழமொழிகட்கும் பின்னைப் புதுமொழிகட்கும் முன்னைமொழியாகவும பின்னைமொழியாகவும் தன் சீரிளமைத் திறங்குன்றாது வளாவது நம தமிழ்மொழி.

இமமொழி, திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும, குன்றெறிந்த குமரவேளும, நிதியின் கிழவனும் ஆய்ந்து பயின்றமையாற் சிறந்ததெனப போற்றுவா, பழந்தமிழாசிரியன்மார் ஆனாலும, அதன இனிமை, ஒலியமைபபு, மென்மை வன்மை இடைமையென்னும மூவ்வகை ஒலியும் ஒரு நிகரவாய அமைப்பு முறை, எக்காலததுக்கும ஒததகருத்தமைதியும அறங்களும் கொண்ட இலக்கிய செல்வவளங்கள், பிறவெல்லாம அதன் உயரிய சிறபபுக்கு ஏற்றனவாம.

இம்மொழி ஏனையமொழிகள் அளவு எழுததுப் பெருக்கமின்மை, ஆங்கிலம போன்ற மொழிகள அளவு, எழுத்துச் சுருககமின்மை இன்றி, இடைப்பட்ட நடுத்தர எழுத்துக் கூட்டங்களையுடையது பிறமொழிகளிலுள்ள ஒலிகளைக் கூட்டெழுத்தாலும தனிநிலையாகிய ஆய்த எழுத்தாலும பலுக்கி (உச்சரிதது) அமைக்க இயலும சிறபபுடையது. எனினும் இடைககால மககளிற் சில புல்லுருவிகள தோன்றி, வேற்று மொழியாகிய வடமொழிச சொற்களை-எழுத்துக்களைக்-கோத்துச் செருகித தமிழ்மொழிக்கு ஊறுசெய்துகெடுத்தனர். இதனைப் பிற்காலததில் தமிழை வளாக்க முறபட்ட சுவாமிநாத தேசிகர் போன்ற ஆசிரியன்மாாகளும்,

‘ஒன்றே ஆயினும் தமிழ்ச் சொல்லுண்டோ
தொல்காப்பியம் திருவள்ளுவர் கோவையார்
மூன்றினும் முழங்கும் ஆன்ற பொருளெலாம்
அவையினு மிலவேல்
வடமொழி தன்னிற் பெறலா மென்ப’

எனவும்,

‘ஐந்தெழுத தாலொரு பாடையொன் றுளதென
அறையவே நாணுவர் அறிவுடை யோர்’

எனவும கூறித், தாம் தமிழனென்பதையும் மறந்து தம் புன்மை தெரிப்பாராயினர்

இப்போலி மாந்தர்களின் புன்மொழிகளையும் அறிவுமுறைக் கொவ்வா ஆக்கமின்மையையும் பின்பற்றிப் பிற்கால அறியாத்

தமிழ் மாந்தர், வட வெழுத்துக்களையும், வட சொற்களையும் பிற வேறு சொற்களையும் தமிழிற் கலந்து கலந்து எழுதித் தமிழ் மொழியின் எழுத்துருவத் தூய்மையையும், சொல்லழகையும் கெடுத்துத் தொலைப்பாராயினர். இக்கால ஆங்கிலமொழி பயின்ற தமிழ்மக்களில் ஒருசிலர், தமிழ்மொழியில் சில ஒலி இல்லையென்றும் அவைகளை ஆங்கிலமொழியினின்றும் கடன் பெற்று நிரப்பவேண்டுமென்றும் வாது செய்வர் அவர் தம் அறியாமை இருந்தவாறென்னே! என்னே! அவரறியாமை குறித்து வருந்துகின்றோம்! 'அரியகற் றாசற்றார் கண்ணும் தெரியுங்கால், இன்மை அரிதே வெளிறு' என்பது தேவர் திருமொழி அதற்கு எடுத்துக்காட்டாக இலகுகின்றனர். தமிழ்மொழிக்கண் ணுள்ள 'ககர' 'ழகரம' போன்ற எழுத்துக் கட்கு ஏற்ற ஒலியுடைய எழுத்து அதில் இன்மையால் கூட் டெழுத்து எழுதியும் அதன் ஒலி பெறாது அலமரும் ஒரு மொழியிலிருந்து கடன் பெறுவது யாங்ஙனம்? ஒரு மொழியி லுள்ள ஒலி, மற்றொரு மொழியிலில்லாததால் அஃதொரு குறையுமாகாது. எந்த மொழிகளிலும் எல்லா நாட்டுமொழி களின் ஒலிகள் அமைந்ததில்லை. அமைவதும் முடியாது. பொன்னின் தன்மை பொன்னுக்குத்தான் உண்டு வெள்ளியின் தன்மை வெள்ளிக்குத்தான் உண்டு. அதனால் ஒன்றுக்குள்ளது மற்றொன்றுக்கில்லை யெனின், அது குறையாகக் கொள்வதற் கில்லை. இதுபோன்றே மொழிகளின் அமைப்பும். ஆங்கிலேயன், குளிர்நாட்டில் வாழ்வோன்; அவன் வாய், குளிரால் நடுங்கி நன்கு திறப்பதில்லை அதற்கேற்றவாறு எழுத்தும், சொற்களும் தோன்றின நம் நாட்டுக்கு வந்தபோதுங்கூட அவன் வாய் நன்கு திறக்கவொண்ணாமையால் திருநெல்வேலி என்று சொல்ல முடியாது 'டின்னவெல்லி' என்றான். தூத்துக்குடியை 'டூடுகு ரின்' என்றான், திருவல்லிக்கேணியை 'டிரிப்ளிக்கேன்' என்றான். இவ்வாறு வெண்டுரை கூறியவற்றைப் பின்பற்றி, நங்கருந் துரைமாரகளும் இவ்வாறே மொழிவர். இப்படிப் பேசுவது தமக்குப் பெருமையென்று இறுமாப்பர் ஐயகோ! தமிழன் அடிமைஅறிவை என்னென்று பகர்வது! எதற்கெடுத்தாலும் வேற்றுமொழி, வேற்றுநாட்டுக் கலை நடை உடை முதலியவற்றில் பேரவா; இதனால் தன்னிலையை மறந்தான். ஏனையவற்றை மறந்தது போலவே, தன் மொழியின் சிறப்பியல்புகளையும் மறந்தனன் எனவே, வேற்றுமொழியெழுத்துத் தமிழில் நுழைவது கூடவே கூடாது. நம் தமிழ் நெடுங்கணக்கில் இல்லாதவற்றை எதற்காகச் சேர்ப்பது? வேற்றுமொழியிலுள்ள சொற்களை அம்மொழி யமைப்புப்படி சொல்வது, எந்த மொழி யிலும் இயலாதவொன்றே எனவே நம் மொழிக்கேற்றவாறு

அமைப்பதுவே முறையாகும். இதுவே, மொழி வல்லுநர் கண்ட முடிபுமாகும். முற்காலத்திலும் இப்பிற்காலத்திலும் அறிஞர்கள் இவ்வாறே கையாண்டு வந்துள்ளனர். புஷ்பம், புஸ்தகம் என்னும் வடசொற்களை அவ்வாறே கடன் கொள்ளாது, 'புட்பம்,' 'புத்தகம்' என்றே நம் தமிழ் எழுத்துக்கொண்டே அமைத்தனர். தமிழைக்கெடுக்க வந்த ஒருசிலரே அவ்வாறே எழுதினர். தற்காலம் மும்மொழிப் புலவராய்ப் பேராசிரியக் கிழமை பூண்டு, தமிழ்ப் பெரியராயிலங்கிய ஆசிரியர் மறைமலை யடிகள் மேல்நாட்டு நாடக ஆசிரியர் 'ஷேக்ஸ்பியர்' என்னும் பெயரைச் 'சேக்குப்பியர்' என்றே நம் தமிழ்வளங்குன்றாது எழுதுவர். அன்னாரால் நம தமிழ்மொழி இன்றைய ஆக்கமும் எழுச்சியும் பெற்றதெனின், உண்மையன்றிப் புகழ்ச்சியாகாது. அவர்கள் தமிழில் எழுதியுள்ள உரைநடை நூல்கள் தமிழ் மேன்மையை - ஆக்கத்தை - வளர்ச்சியை - அளந்து காட்டுவன. அவர் தம் பெருமையறியாது நந்நாடு ஏமாற்றமுற்றது.

நந்தமிழ் மொழிக்கண் முந்து நூலாக இலகும் தொல்காப்பியம் தமிழ்மொழியின் ஒலிமரபு, சொன்மரபு, தமிழ் மக்களின் ஒழுகலாறாகிய அகப்புற வாழ்க்கைகளையும் தமிழர் தனிநாகரிகத்தையும் முற்றமுடிய எடுத்து மொழியும் முழுமுதல் இலக்கண நூல். அதன்கண் எழுத்திலக்கணங் கிளக்குங்கால்,

> 'எழுத்தெனப் படுப
> அகர முதல்
> னகர இறுவாய் முப்பஃ தென்ப
> சார்ந்து வரல் மரபின் மூன்றலங் கடையே.'

என, மொழிந்தருள்வாராயினர்.

இந் நூற்பாவிற்கு உரை வகுத்த ஆசிரியர் நச்சினார்க்கினியர், இவ் வெழுத்துக்களின் நுட்பத்தையும் சிறப்பையுங் குறித்துக் கூறுங்கால்,

> [1]'இவ் வெழுத்தெனப்பட்ட ஓசையை அருவென்பார் அறியாதவர்; அதனை உருவென்றே கோடும். அது, செறிப்பச் சேறலானும் செறிப்ப வருதலானும் இடையெறிப்பப் பெறுதலானும், செவிக்கட் சென்று உறுதலானும் இன்பத் துன்பத்தை ஆக்குதலானும் உருவும் உருவுங் கூடிப் பிறத்தலானும் தலையும் மிடறும் நெஞ்சுமென்னும் மூன்றிடத்தும் நிலைபெற்றுப் பல்லும் இதழும் நாவும் மூக்கும் அண்ணமும் உறப் பிறக்குமென்றமையானும் உருவேயாம். அருவேயாயின் இவ்விடத்திற் கூறியன இன்மை உணர்க. அல்லதூஉம், வன்மை மென்மை இடைமையென்று இதினமையானும் உணர்க.'

1. தொல். எழுத்து. நூற்பா: க. உரை.

என, எழுத்தின் தன்மையையும் அதன் சிறப்பியல்பையும் அதன் உருவையும் அருவையும் தம் ஆன்ற அறிவாற்றல் கொண்டு விளக்குவாராயினர்

இதனுள் எழுத்தெனப்படுப அகரமுதல் னகர இறுவாய் முப்பஃதென்பது, அதன் முதன்மையும் தொகையும் ஒருங்கே விளக்கியதாகும். இதில் உயிரும் மெய்யும் ஒருங்கே கூறப் பெற்றமை பெற்றும். இவ்வாறு உயிரும் மெய்யும் தோன்றி னும் மெய் உயிரின் உதவியின்றி ஒலியா. உயிர் தானே ஒலித்த லோடு பிற மெய்களினும் சார்ந்து அவைகளையும் ஒலிப்பிக்கும். உயிர் சாராத மெய்யை அறிதற்கு அதற்குமேல் புள்ளியிட்ட னர். எனினும் மெய்கள் உயிர்க்கும் உயிர்மெய்க்கும் நடுவே நின்றுதான் ஒலிக்கும். இதன் இயல்பை [1]'மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல,' என்றார் ஆசிரியர் தொல்காப்பியர்.

சார்ந்து வரல் மரபின், 'மூன்று' என்பது, இம் முதலெழுத் துக்களைச் சார்ந்த குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தமென்னும் முப்பாற் புள்ளியுமாகும் முதல் இகரமும், உகரமும் தத்தம் ஒலிக்குறைவால் முதலெழுத்தின் திரிபாகக் கோடலால் இவை சார்பெழுத்தெனப்பட்டன. ஆய்த எழுத்தொன்றும் உயிரி னும் சாராது, மெய்யினுஞ் சாராது தனியே நிற்பதாலும், இம் முதலெழுத்துக்களில் உயிர்களுக்குப் பின்னர் நிற்பதாலும், இவ்வெழுத்துக்கள் போலாது, தான் மொழிக்கு உருபாகாது ஒலியளவாய் நிற்றலானும் இதுவும் சார்பெழுத்தெனப்பட்டது.

இம் முதலெழுத்துக்கள் முதல் முதல் வாய் திறந்ததும் தோன்றலால் முதலெழுத்து எனப்பட்டன. இதனை, தொல் காப்பியருக்குப் பின்வந்த நன்னூலாரும்,

'உயிரும் உடம்புமாம் முப்பதும் முதலே'

என்றார்.

மக்கள் முதல் புற்பூண்டு ஈறுகக் காணப்பெறும் எல்லா இயங்கியல், நிலையியற் பொருள்களின் உள்ளகத்திருந்து உடலை இயக்கித் தொழிற்படுத்துவன, கட்புலனகாப் பொருளாகிய உயிரேயாகும் அவ் வுயிரின்றேல் எவ்வகை உயிர்களும் செயற் படாது, கல் மண் கட்டைகள்போன்று வாளா கிடப்பனவே.

இத் தன்மையொப்பத் தமிழ் நெடுங்கணக்கிலுள்ள அகர முதல் ஔகாரம் ஈறுகக் கிடந்த எழுத்துக்கள் பன்னிரண்டும் உயிரெழுத்தெனவும், ககர முதல் னகரம் ஈறுகக்கிடந்த எழுத் துக்கள் பதினெட்டும் உடல் (மெய்) எனவும் ஆன்றோர் வகுத்

1. தொல். எழுத்து. நூற்: கரு

தமைப்பாராயினர். எனவே, இவை காரணத்தாற் பெற்ற பெயராம். உயிர்போன்று தானே இயங்கலான, உயிரெனவும், மெய்போன்று உயிரின் உதவி இல்லாது நடவாமையால் மெய்யெனவும் வழங்கிய சான்றோர் நுண்மாணுழைபுலம வியக்குந் தன்மையதாக ஒளிர்கின்றது.

இவ்வாறு தமிழ் நெடுங்கணக்கை வகுதத ஆன்றோர், இவ்விரண்டும ஒன்றுசாரப் பிறந்த எழுததுகளாகக் குறியீடு செய்து அவ்வவற்றுக்கு உருவும அமைதது உயிா மெயயெழுத்து எனப் பெயா ஆக்கி, ௧௮ × ௧௨ = ௨௧௬ எழுததுககள உண்டாக்கினா. ஆங்கிலம்போன்ற மேலைநாட்டு மொழிகளில் தனியே உயிர்மெய் யெழுததாக்காது உயிரையும் மெய்யையும் தனிததனியே யெழுதி மொழியை ஆககுவாராயினா. அவ்வாறே நம் தமிழ்மொழி யெழுத்துக்களை அமைததல்வேண்டுமென ஒருசிலா வாதிடுவர். அதுநம தமிழமொழிக்கேற்றதாகாததோடு பழைய இலக்கிய இலககணச செலவஙகளைத் திரையிட்டுப பிற்காலத்தவர் பயிலாதவாறு ஒடுககும சிறையுமாகும். அன்றியும் தமிழ்மொழியை அழிததொழிபபதறகு மறைமுகமாகச செய்யும சூழசசியுமாகும. தமிழமொழி யெழுத்துக்களைப் பற்பல குழுக்கள தோன்றித தததமக்குத் தோன்றியவாறு எழுதியும், உருவைச் சிதைததும எழுததுச சீாதிருத்தஞ் செய்யாநிற்கும் தமிழ்ப்புலவர்கள் செலவ வளததில் குறைந்தவர்களாக இருப்பதால்—தாம, பளளிகளில் ஆசிரியராக இருப்பதால்-தம் வேலைகளைக் காபபாற்றவேணடிய நிலையினால்-மெல்லவும இயலாது விழுங்கவும இயலாது நடுபபட்ட நிலையில நின்று தததளிக்கின்றனா. எனவே, எவரும தமிழ்மொழியைத் தங்கொண்டித்தனமாகத் திருதத முனவருகின்றனா. பிறரெல்லாம் தமிழ்வளனை ஆர அமரக கறகாதவர்; தம் செல்வாக்கினாலும் நல்வாழ்வயததாலும இதழாசிரியாபோன்ற உயர்நிலைகளில் இருத்தலால், இவ்வாறு தமிழைத திருத்த இடனுமுண்டாகின்றது. தமிழ்நாட்டில் தமிழுககெனத் தனிக்குழு அமைத்து மொழிப்பாதுகாபபுச் செய்யாதிருக்கும் குறையினால் நிகழுங் கேடேயாகும் இது.

(தொடரும்)

# எழுத்துப் போலி

[வித்துவான், திரு. ந. சண்முகசுந்தரன்]

போல்வது போலி எனப்படும். ஓர் பொருளுக்கும் மற்றோர் பொருளுக்கும் ஓர் வகையான் ஒப்புமை காணப்பட்டு மற்ற வகையான் ஒவ்வாமை காணப்படின் அம்மாறுபட்ட பொருள் போலி எனப்படும். சில நிலைத்திணைகளிற் கூட நாம் போலிநிலைத்திணைகள் சிலவற்றைக் காண்கிறோம். வைரம் போன்ற சில உயர்ந்த பொருள்களில் கூடப் போலிகள் காணப்படுகின்றன. பொன்மினுக்கு மேற்பூச்சுப் பெற்ற அணிவகைகள் இக்காலத்து மிகுதியாகக் காணப்பட்டும் அணியப்பட்டும் வருகின்றன. அவை உண்மையான பொன் அணிவகைகளைக் காட்டினும் பார்வை, ஒளித்தன்மைக்கும் புதுமையில் சிறந்து காணப்பட்டாலும் நாளடைவில் பகல் மதியைப்போன்று காட்சியளிக்கின்றன.

மக்களிலுங்கூட, உள்ளொன்றும் புறமொன்றுமாக நடப்பவர்களைப் 'போலி ஆசாமி' என்று அழைக்கின்றனர். உண்மைப்பொருளோடு போலி போட்டியிடுகின்ற தன்மை, தோகையைக் கண்டு வான்கோழி ஆடுவதை யொக்கும்.

உலகில் காணப்படும் பொருள்களில் போலிகளும் கலந்து காணப்படுவதைப் போல, எழுத்துக்களிலுங்கூட ஓர் சில வெழுத்துக்கள் ஒன்றுகூடி ஓரெழுத்தின் ஒலியைப் போன்ற போலியெழுத்துக்களும் மொழியில் விரவிவருகின்றன. அப்போலி யெழுத்துக்களைப்பற்றி இலக்கண ஆசிரியர்களும் வரைந்து சென்றுள்ளனர். போலியெழுத்துக்களைப் பெற்ற சொற்கள் இலக்கணச்சொற்களல்ல வென்றும் தங்கள் நூற்பாவில் காணுமாறு உரைத்துப் போயினர்.

ஆனால், வடமொழிப் பற்றுள்ள உரையாசிரியர் சிலர் மாறுபட்ட கருத்துடன் தம் மதி நுட்பத்திறத்தால் உரையியற்றி உள்ளனர். ஆனால் நூலாசிரியரின் கருத்து, தன் கருத்தாக இருக்குமா ? எனவும், பழந்தமிழ் இலக்கண ஆசிரியரின் கருத்தும் ஒத்துளதா? எனவும், தனித்தியங்கும் செந்தமிழிற்கு இழுக்கெனவும் ஆராய்ந்தாரல்லர். வடமொழி இலக்கணத்தைத் தழுவித் தமிழிலக்கணம் எழுந்ததென்றும், இருமொழி இலக்கணத்திற்கும் ஒப்புமை உண்டென்றும் தங்கள் உரைகளில் எடுத்துக்காட்டிச் சென்றுள்ளனர். அவ்வெடுத்துக்காட்டுகளில் ஒன்று, எழுத்துப்போலியைப் பற்றியதாகும். எனவே, எழுத்துப்போலியைப்பற்றி நூலாசிரியர்கள் கூறியவற்றையும், உரையாசிரியர்களின் உரையைப் பற்றியும் ஈண்டு ஆராய்வாம்.

ஒலகாப புகழ்வாயந்த தொலகாப்பியத்தில் ஆசிரியர் தொல் காபபியனூா ஐ, ஔ என்ற தமிழ்எழுத்துக்களின ஒலியைப் போன்று சொற்களில் வேறு எழுததுக்கள் வநது இசைக்கு மென மொழிமரபில்,

"அகர இகரம ஐகார மாகும்" (தொல் ௫௪)

"அகர உகரம ஔகார மாகும" (தொல்:௫௫)

"அகரத திம்பா யகரப் புள்ளியும
ஐ யென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும" (தொல:௫௬)

என, நன்கு கூறியுளளாா. அந்நூற்பாககளுக்கு விளக்கமான பொருள வருமாறு :—

அகரமும் இகரமும்கூடி ஐகாரம் போன்று இசைக்கு மெனவும, அகரமும உகரமுமகூடி ஔகாரம் போனறு இசைக்கு மெனவும், இவவிரணடு உயிாககு நடுவில யகர மெய்யும, வகர மெய்யும வந்து அவவிரணடு உயிாகளைபபோனறு இசைககு மெனவும ஆகும மூன்றும நூறபாவிடதது "மெய பெற" எனறதனுல வகரவொறறும இடையிலவநது ஔகாரம் போனறு இசைககுமெனக கொளக.

இககருத்தையே சார்பு நூலாசிரியராகிய நன்னூலார் தம் நூலில தொலகாபபிய மூன்று நூறபாககளையும் ஒன்று சோதது விளக்கம் பெற,

"அமமு னிகரம யகர மெனறிவை
எயதி னையொத திசைககு மவவோடு
உவவும் வவவும் ஔ, வோ ரன்ன" (நன்னூல:௧௨௫)

எனக கூறியுளளார். இந்நூறபாவின் பொருள வருமாறு:— "அகரததினமுன் இகரமும யகர மெயயும் வருமாயின் ஐகாரத்தை ஒதது நடக்கும; அகரததின்முன் உகரமும வகர மெய்யும் வருமாயின் ஔகாரததை ஒத்து நடக்கும எனவே, யகர வகரமெய்கள நடுவிற் கலக்குமெனக கொளக."

(எ-டு) அய்இ—ஐ. அவ்உ—ஔ.

தமிழ்மக்கள் மொழியிலும் அரசியலிலும வளமபெற்றுத திகழ்ந்த காலத்துப புலவாபெருமக்களாலும அரசர் திருமக்க ளாலும் போற்றி வளர்த்துவந்த இடைசசங்கததும், கடைச சஙகததும் இலக்கணநூலாகத் திகழ்நத பழநதமிழ மக்களின் வாழ்க்கைவரலாற்று நூலெனப போற்றும் தொல்காபபியத் திற்கும அதன் வழிவந்த சார்புநூலாகிய நன்னூலுக்கும ஒப்புமை காணுமல் வடமொழிப்பற்றுடையோர் தாம் கற்ற வடமொழி இலக்கணததோடு ஒப்புமைகண்டு பின் வந்த

நன்னூலுக்கு உரை வகுத்தனர். மற்றும், "வடநூல் உணர்ந்தாக்கன்றித் தமிழ் இயல்பு விளங்காது" என்றும் கூறிப் போந்தனரென்றால் அவரின் செந்தமிழ்ப்பற்று எத்தகைத்தென்று கூறுவது?

'தம் முக்குணவயத்தால் முறைமை மயங்கிக் கூறினர்' என்று பிறரையெல்லாம் கூறித் தாமகளே பழந்தமிழ் இலக்கணத்திற்கும், தமிழ்இயல்புக்கும் முரண்பட்டுக் கூறினரென்றால் அவரே முக்குணவயத்தால் முறைமை மயங்கினர் ஆவர் எனலாம்.

வடமொழிப் புலமை வாய்ந்த சிவத்திரு சிவஞான முனிவர் அவர்கள், வடமொழிப் பற்றினால் சங்கரநமசிவாயர் உரையைத் திருத்தியும் புதுக்கியும் வகுத்த நன்னூல் விருத்தியுரையில், "அம்முனிகரம் யகரமென்றிவை" என்ற நூற்பா 'வடநூலார் சந்தியக்கரமென்பவற்றுள் ஐ, ஔ, என்னும் நெட்டெழுத்துக்களின் வடிவு புலப்படுதல் உணர்த்திற்று' எனவும், எழுத்துப் போலி உணர்த்திற்றெனக்கூறும் ஆசிரியர், மயிலைநாதரைத் "தமிழ்நூற் பயிற்சியொன்றுமே யுடையார்"ரென்றும், "அவர் கூறும் பொருள், பெரும் பயனின்மையானும், வடநூலோடு மாறுபடுமாதலானும் அது பொருந்தாதென்க" எனக் கூறியுள்ளார் அதைப் பின்பற்றியே சில காண்டிகையுரையாசிரியர்களும் அவ்வாறே கூறிப் போந்தனர்.

நன்னூலாசிரியராகிய பவணந்தியாருக்கு முனிவர் கொண்டுள்ள கருத்து அல்லவென்பது எழுத்ததிகாரத்தைத் தொகுத்துக் கூறும் நூற்பாவாகிய,

"எண்பெயர் முறைபிறப் புருவ மாத்திரை
முதலீ றிடைநிலை போலி யென்றா
பதம்புணர் பெனப்பன் னிரு பாற்றதுவே" (நன்னூல்· ௫௭)

என்றதில், போலி எனக் கூறியிருக்கின்றாரே யல்லாமல் சந்தியக்கரமெனக் கூறக் கண்டிலம் அன்றியும், தொல்காப்பிய ஆசிரியரின் நூற்பாக்களின் கருத்தையே, "அம்முனிகரம் யகரமென்றிவை" என்ற நூற்பாவில் மாறுபடாமல் கூறியிருப்பதாலுமறிக அவ்வாறிருக்க, முனிவர் சந்தியக்கரம் நுதலிற்று எனப் புதியன புகுத்தி முன்னம் கூறிய மறுப்புரையும் கூறிப் போந்தார்

அம்மறுப்புரை பொருந்தாதென்பது :

முனிவர் பெரும் பயனின்மையென வாளா கூறினரே யன்றி எடுத்துக்காட்டுடன் எவ்வகையில் பயனின்மை எனக்

காட்டினாரல்லர். தமிழிலக்கணமெல்லாம் வடமொழியோடு மாறுபடாமலிருக்க வேண்டுமென்ற நியதியுண்டா? உண்டெனின், அவ்விடத்தைச் சுட்டிச் சொல்லவேணடும் உலகத்து எம்மொழியும் வடமொழியோடு மாறுபடாமலிருக்கின்றனவா? முனிவர் கூறும் சந்தியக்கரமே நூலாசிரியர் கருதமெதனின் வடநூலார் சநதியக்கரம் எனக்கூறும் எகர ஒகரங்களையும் உடன் கூறியிருப்பார். அங்ஙனம கூறாமையின் எழுத்துப் போலி உணர்ததினாரென்பதே துணிபாம்

மற்றும், இதனாற் பெறபபடும் பயன் யாதோவெனின்? செய்யுளில வருமஎதுகைககண் இவ்வாறு கொளள நிற்றலே யாகும். எடுத்துக்காட்டாக,

“அவவிய நெஞ்சததா னாக்கமுஞ் செவவியான்
கேடும் நினைககப் படும்” (திருககுறள்: ௧௬௯)

என்றதன்கண் ‘செவ்வியான்’ என்பதற்கியைய ‘ஔவியம்’ என்பது ‘அவ்வியம’ என நிற்பதைக காண்க. இவ்வாறு வந்தவிடத்தும் கணடுகொள்க

இரு ஆசிரியருக்கும் மயக்கவோற்றுமை:

தொல்காபபியர், மொழிக்கு முதலினும் இறுதியினும் வரும் எழுத்துக்களைக் கூறி, அதனபின் அஃறிணைக்கண், னகர வீற்று மொழிகளைபபற்றிக் கூறுமிடத்து, சொறகளில் னகரவீறும் மகரவீறும் தம்முள் மயஙகியும மயங்காமலும வருமென நுதலிப் போந்தார். மயங்கி வருமிடத்து ஓரெழுததிற்குப் பதில் வேறோரெழுத்து வந்து பொருளமாறாமல் மொழியில மயங்கி வருவதால் போலியைச்சார வையாமல் மொழிகரு இறுதியில் வரும் எழுத்துக்களைக்கூறி அதனபின் கூறினார். எல்லா மொழிகளினும் ஒத்து நடவாமையாலும் ஆசிரியர் மொழி மரபு ஈற்றின் கண், னகரவீற்று மயக்கநூற்பாவை அமைத்துச் சென்றார். நன்னூலாரும்,

“மகர விறுதி யஃறிணைப் பெயரின்
னகரமோ டுறழா நடப்பன வுளவே” (நன்னூல்: ௧௨௨)

எனப் பகாநதார். உறழா எனும் சொல்லாற்றலான் உறழ்வனவுங் கொள்க.

தொல்காபபியரைப் போலவே இவரும் மொழி முதலீறிடைநிலை கூறிய பின்பே இம்மயக்கமும கூறியுள்ளார். இம்மயக்க நூறபாவை முனிவரும், அவர் வழி உரை வகுத்த காண்டிகை உரைக்காரரும் போலியென்றே வகுத்துச்சென்றனர்.

மயக்கததின்பாற் படுத்தும் பொருளை மறுத்து முனிவர் கூறும் மறுபபுரையாவது :—

"இங்ஙனங் கூறிய எழுத்துக்கண் மொழிக்குறுப்பாகி, ஒன்று நின்ற நிலைக்களத்து மற்றொன்று அதுபோல மொழி நிறபதன்றி ஒன்றொடொன்று மயஙகி, இரண்டெழுத்தும் உடனிற்பதின்மையானும, முதலீறிடை நிலைகட்குப் புறனடை யுங் கூறிக் குறைவறுததமையானுமம ; 'உறழா நடப்பன' என்றும, 'ஒக்கும' என்றும, 'உறழும்' என்றும், உவமவுருபு கொடுத்து இமமூனறு சூததிரததாங கூறுதலானும், அது பொருநதாதென்க," எனக் கூறியுளளார. அவர மறுப்புரை பொருத்தமற்ற தென்பதை நன்கு ஆராய்வாம.

போலியொன்பதும் மயக்கமென்பதும வேறுபாடுடையன ·

போலியில எழுத்துக்களின் ஒலி வேறுபடாமலும பொருள் மாறுபடாமலும் காணப்படும மயககததில் எழுததுக்களின் ஒலி மாறுபட்டும் பொருள் மாறுபடாமலும காணபபடும்.

எடுததுக்காட்டாக இவ்வேறுபாட்டை,

ஐவனம்—அஇவனம், அய்வனம ,

ஔவை—அவ்வை என்பனவற்றிலும் ;

அகம்—அகன், முகம்—முகன், நிலம—நிலன் என்பன வற்றிலும ஒலிததுப பாரக்க.

சிறப்பாக ஒலிககுமபொழுது சொற்களின் ஒலி மாறுபடாம லிருப்பதைத்தான இலககண ஆசிரியர போலி எனக் காட்டினர். ஒருருபு நிற்கவேண்டிய விடதது மற்றோருருபு வந்து மயங்கி நிறபதைப்போல் கலம - கலன், நிலம - நிலன எனபன போன்ற வற்றில ஓரெழுததிற்காக மற்றோரெழுத்து காணபபடுகின் றனவே யன்றி, ஒலியில் ஒத்துக்காணப்படவிலலை. ஏவல, வியங் கோள் என்பன ஒருபொருட் கிளவியாயினும இருதிணை யைம் பான் மூவிடங்களினுஞ் செல்லும் ஏவலை வியங்கோள என்பது தொன்னெறி மரபாதல்போல, ஒன்றொடொனறு மயங்கி இரண் டெழுத்தும் உடனிற்பதினமையாயினும எழுத்தொலியில் ஒப்புமை காணப்படாமையான் அது குறிததே போலியென்னாது மயககமென்றனராகலானும, ஒன்றொடொன்று மயங்கி இரண் டெழுத்தும உடனிற்க வேண்டுமெனற நியதி இனமையானும், இம்மயக்க வெழுததுக்கள முதலீறிடைநிலைகளைப் போலன்றிப் பெருமபாலான விடங்களில் ஒததும், சிறுபாலான விடங் களில் ஒவ்வாமையும் காணப்படுகின்றமையால், அவைகட்குப்

புறனடை கூறிய பின்பே நுவலவேண்டுமாகலானும், நூற்பாக்களில் "உறழா நடபபன" என்றும், 'ஒக்கும்' என்றும், 'உறழும்' என்றும், உவமவுருபு கொடுததால் பொருந்தாதென்பது சிறப்பிற்றாகலானும், பெரும்பாலான விடங்களில் மயங்கி வருவதை நூற்பாவினுலே கூறி மயஙகாத சிறுபானமையைச் சொல்லாற்றலான் அமைத்தற்கு அவ் உவமவுருபு கூறினரேயன்றி வேறெதற்குமல்ல வாகலானும் முனிவா கூறின அம் மறுபபுரை பொருந்தாதென்க செந்தமிழ்ச்சான்ரோ செம்மை புணாநது உரைபபாராக.

**ஐ, ஔ என்பன தமிழ் எழுத்து முறை பற்றியதே :**

தமிழ நெடுங்கணக்கு வடமொழியையோ ஆரியத்தையோ பின்பற்றியதன்று. உலகுக்கு வடிவு தநத நாட்டினஙகள் எகிபதிய, சாலடிய, தமிழ், சீன இனஙகளே. இவற்றுள்ளும் இன்றைய இந்தியமொழிகள அனைத்துக்கும் அடிப்படையான நெடுங்கணக்கு மரபு இநதியாவுக்கு மட்டுமே தனிச்சிறபபுடையதாதலாலும, பிறநாட்டு நெடுங்கணக்கு வரிசையில் இன்றளவும் இத்தகு வரிசைமுறை காணப்படாததாலும, ஆரியா வருமுன்பே இநதியாவில் எழுததுமுறை இருந்ததாலும், பிற இந்திய மொழிகளனைத்தின் நெடுஙகணககுமுறை தமிழ்ப்பேரினத்திற்கே உரியதாகுமென்பது மொழிவரலாற்றுமுறையில ஆராயுமிடத்து நன்கு வெளிப்படும.

ஆரியர் வருவதற்கு முன்பே இந்தியாவில் மொழி வளாச்சியடைந்து உயர்நிலையிலிருநததென்பதும, அரசியல் நன்முறையில் நடைபெற்றது என்பதும, மக்கள் மிக்க நாகரிகததுடன் வாழ்நது வந்தார்களென்பதும் சிநதுநதிப பள்ளத்தாக்கில் தோண்டி யெடுக்கபபட்ட நகரங்களிலிருந்து அறியவருகின்றன. மேலும, அங்குக் காணப்படும மொழி தமிழே என்பதும, நாகரிகம, சமயக் கொளகை தமிழருடையதே என்பதும், செய்யுள், தமிழ்நடை தழுவிய குறளவெண்பாக்கள் என்பதும் புதைபொருள ஆராய்ச்சியாளரின் கருததாகும்.

சிந்துவெளி நாகரிகத்தின் பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்பே மனிதத் தோற்றத்திற்கிடமாகிய குமரிக கண்டததில் வழங்கிய மொழி, தமிழென்பது பழந்தமிழ இலக்கியங்களால் நன்கு உணரலாம். வண்டமிழ் மாமுனியாகிய அகததியர், மொழி இலக்கணம் வகுத்தாரென்பதும், அதன் வழிநூலே தொலகாப்பியமென்பதும ஆராயுமிடததுச் சிறநது காணப்படுகின்றது. அகத்தியம் செய்த அகத்தியர் தமிழ் முனிவரே ஆவர்; ஆரியர் அல்லரென்பதற்குப் பல சான்றுகள் உள.

விரிக்கின்பெருகும். அகததியர் என்பது தமிழ்ச்சொல்லே அது தமிழுககு இன்றியமையாகவா என்ற பொருளுடையது.

ஆசிரியர் சிவஞான முனிவர் தொல் பாயிர விருததியுரையில் "ஐநதிரம் நோககித தொகுததானெனின்......................வெண்பா முதலிய செய்யுளிலக்கணமும இனனோரன்ன பிறவும் வடமொழி யிற பெறப்படாமையானும இவையெல்லாம் தாமே படைததுக் கொண்டு செய்தாரெனின், முநது நூல் கண்டு என்பதனோடு முரணுதலானும முற்காலத்து முதல்நூல் அகத்தியம எனப தூஉம, அதன வழிததாகிய தொல்காப்பியம் அதன்வழி நூலென்பதூஉம துணியப்படும" எனறு முன்னம கூறி, பின்பு முதறசூததிர விருததியில "வடநூலார கருத்துபபற்றியே சந தியக்கரமென 'அகர இகர' 'அகர உகர' 'அகரத்திமபா' என்ற நூறபாக்கள் இயற்றினர்" என்று கூறுதலும, நன்னூல விருததி யில் "வடநூலோடு மாறுபடுதலானும அது பொருநதாதென்க" எனக் கூறுதலும, முரணபட்டுக் கூறுதலே யாகும

எனவே, ஐ, ஔ என்பன தமிழ் எழுத்து முறைபற்றியதே வடநூலார் எழுத்துமுறை பறறியதலல ஆதலாலும, தமி ழெழுத்து முறையும, இலக்கியமும வகுததவர் பண்டைத் தமிழரே ஆவராதலாலும, மேறகாட்டிய தொல் நூறபாக்களும், அதன் சாரபாக வெழுநத 'அமமு னிகரம' என்ற நன்னூல் நூற்பாவும எழுத்துப்போலி உணாத்திற்று என்பதும, வடநூல் சார்புபறறிச் சநதியக்கரம் நுதலிற்று எனபது நூலாசிரியா களின கருத்தலலவென்பதும், முனிவா, நன்னூலில போலி யெனக்கொண்ட நூற்பாக்கள் எழுத்துக்களின் மயக்கததைப் பற்றிக் கூறுவன வென்பதும, அதுவே, தொலலாசிரியா கருத் தென்பதும், மயக்கமும் போலியும வேறுபாடுடையன வென்ப தும் இன்னோரனனவை கண்டு சானறோர் செமமை உரைபபா ராக

# வள்ளல் பாரி

[திரு. அ. குருநாதன்]

"எவ்வழி நலலவர் ஆடவா, அவ்வழி நல்லை வாழிய நிலனே" என்றா அருநதமிழ் மூதாட்டியார் ஔவையார் பண்டைக்காலததே நம் தமிழ்நாட்டினகண வளளல்கள பலர் சிறக்க வாழ்நதனர். அதனால தமிழகம் சிறப்புற்றுத திகழ்நதது வளளல பலருள பாரியும ஒருவன் அவன் யாவர்ககும ஈததுவககும் பெற்றியான் இரநதவா இன்முகஙகாணும இயல்பினன் கருணையின் உறைவிடம் போர்ததொழிலில சிறநத வீரன. அவன் முநநூறு ஊாகளைககொணட பறமபு நாட்டை ஆட்சிபுரிநது வந்தான். அவன் புகழ வான் சிறிதாபபோர்ததது, அதைக் கண்ட தமிழ்நாட்டு மூவேந்தரும் (சேர, சோழ, பாண்டியர்) பாரியின் அருமபுதல்வியர்களை மணநது அவனைத தங்கள் உறவினனாக்கிககொள்ள விழைநதனா

பண்டைக் காலத்தில் காதல் நெறியானே மணம் நிகழ்நது வந்தது. பாரியின் மகள இருவரும் மூவேந்தரில் யாரையும் மணகக இசையவில்லை. அது காரணமாக வேநதாகள் மூவரும பெருஞசினங் கொண்டனா ஒருஙகே கூடினர். பறமபு மலையை முற்றுகையிட்டனர் அவன் மகளிர் இருவரையும் சிறை செய்யத துணிபு கொண்டனர்.

பாரி அருங்கலை விநோதன், புலவர் பலரை எக்காலத்தும் தன் நாட்டின்கண் இருத்தி, வேண்டுவன நல்கி மகிழும் தன்மையான் அவனுக்கு உயிர் நண்பர் கபிலர் என்னும தூய்மையாளர். இபபுலவர் பெருநதகை முற்றுகையிட்டிருக்கும் மூவேந்தரையும் நெருஙகிப் பாரியின் வீரத்தையும, கொடைத்திறனையும் கூறுகின்றா.

"முடியுடை மன்னர்களே! பாரி பெரிய வீரன். அவனை வெல்ல உஙகளால் முடியாது. இந்த முற்றுகை அறநெறிப் படாது.

அவன் நாட்டைப் பெற விழைவீராயின் பரிசிலராக வாருங்கள். பாரியின் பறம்பு நாடு தள்ளாவிளையுளையுடையது. தக்கார் வாழ்வது. தாழ்விலாச் செல்வரைக்கொண்டு திகழ்வது. இந் நாட்டார் உழுதலைச் செய்யாமலேயே நால்வகை உணவுப் பொருள்களைப் பெறுவர். ஒன்று, சிறிய இலைகளை உடைய மூங்கிலின் நெல்விளையும்; இரண்டு, இனிய சுளைகளை உடைய பலாவின் பழம் பழுக்கும்; மூன்று, செழித்த கொடிகளை

உடைய வள்ளிக் கிழங்குகள் பூமியின் கீழ் உண்டாகும்; நான்கு, தேன் முதிர்ந்து நீல நிறம் பரந்து தேன்கூடு பருத்தலால் அதைத் தாங்கி நிற்கும் கோடு இற்றுவிழ அதனால் அம் மலைக்கண் எக்காலத்தும் தேன் சொரிந்துகொண்டே இருக்கும். அவன் மலையோ வானளாவியது. இம் மலைக்கண் உள்ள சுனைகள் வானின்கண் துலங்கும் உடுக்கணத்திலும் பல இங்ஙன மிருப்பதால் இந் நாட்டிலுள்ளார் உணவிற்கும், நீர் முதலியவற்றிற்கும் யாங்கணும் செல்லவேண்டுவதில்லை. இங்கேயே இருந்துகொண்டு வீரத்துடன் போர்புரிவர் இத்தகைய எவ்வாற்றானும் குறையில்லாத சிறப்பிற்குரிய இம் மலையில் உள்ள மரங்கள்தோறும் உங்கள் யானைகளைப் பிணித்தீர் ஆயினும், இடமெங்கணும் பரப்பிய தேரினீர் ஆயினும் நீங்கள் முயற்சியால் வெல்லமாட்டீர்கள். உங்கள் வாள்வலியைக் கண்டு அவன் தன் நாட்டை ஈயமாட்டான். அது கோடும் நெறியினை யானறிவேன். வடித்து முறுக்கப்பட்ட நரம்புகளை உடைய சிறிய யாழ்களை மீட்டி, நுங்கள் மணங்கமழும் கூந்தலை உடைய மனைவியர் பின் வர நீங்கள் ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் செல்லின், தன் பறம்பு நாட்டையும், குன்றையும் ஒருங்கே ஈவான்."

இங்ஙனம் கூறும் புலவர் திலகம் கபிலர் கூற்றால், பாரி என்னும் வள்ளல் வீரஞ்செறிந்த வில்லாளன் என்றும், பரிசிலர் யாது விரும்பினும் ஈயும் பான்மையன் என்றும், தள்ளாவிளைவும், தக்காரும், செல்வரும் சேர்வதே நாடு என்றும் அறிந்தாம். நம் செந்தமிழ் நாடு பண்டுபோலவே என்றும் வள்ளல்களையும், புலவர் பெருமக்களையும், சான்றோர் பலரையும் தாங்கித் திகழ்வதாக.

"அளிதோ தானே பாரியது பறம்பே
........ .. ....... ............ .......
.................................. ... .
நாடுங் குன்றும் ஒருங்கீ யும்மே." (புற: ௧0௯)

# திருக்குறள் அகவல்

[வித்துவான், திரு. மா வேதாசலம், எம் ஏ, பி ஓ எல்.]

(சிலம்பு - உஅ. பரல்-கூ, பக்கம் சசo-ன் தொடர்ச்சி)

## சா. வாழ்க்கைத் துணைநலம்

1 மனைக்குத் தக்க மாண்வினை உடையள்
மனைவி யாக மணந்தான்
வருவாய்க் கேற்றாள் வாழ்க்கைத் துணையே.

2. மனையற மாட்சி மனைவி யிடத்து
வாயா தாயின் வாழ்க்கை
எனைமாண் பாயினும் ஏதும் இன்றே.

3, மனைவி நல்ல மாண்பின ளாயின்
இல்ல(து) எவனோ? இலளேல்
உலகின ளாயினும் உள்ள தென்னே?

4. பெண்ணின் மிக்க பெரும்பொருள் யாவுள
கற்பெனும் கலங்காக் காவல்
பெறலரும் பொருளாப் பெற்றக் காலே?

5. தொல்புகழ்த் தெய்வம் தொழாஅ ளாகிக்
கணவனைத் தொழுதெழும் காரிகை
பெய்யெனச் சொல்லப் பெய்யும் மழையே.

6. கற்புக் காத்துக் கணவன் வேண்டும்
உண்டி முதலிய உதவி
நற்புகழ் காக்கும் நல்லாள் பெண்ணே.

7. சிறைகடி காப்பெவன் செய்யும் மகளிர்
நிறையால் காக்கும் நீளரண்
தலைமைத் தாய தரவுக் காப்பே.

8. வாய்த்த கணவனை வழிபடல் செய்யின்
புதரேள் வாழும் பொன்னிலம்
மகளிர் பெறுவர் மாண்ட சிறப்பே.

9. புகழினை விழையும் பூங்குழல் மங்கை
இல்லா தாருக் கில்லை
இகழ்வார் முன்னர் ஏறு நடையே.

10. மங்கலம் என்ப மனையாள் மாட்சி
அதனது நல்ல அணிகலம்
நல்ல மக்களை நனிபெறு தல்லே.

## எ. புதல்வரைப் பெறுதல்

1. அறிய வேண்டுவ அறியும் மக்களைப்
பெறுதல அல்லது பிறவே
அடையு மவற்றுள் அறிவ திலையே

2 எழுமைப் பிறபபும இன்னாத் தீண்டா
பிறாபழி சேராப பெருமைப
பெற்றிசேர் மக்களைப பெற்றக் காலே.

3. தம்முடை மக்களைத் தம்பொருள் என்ப
புதலவா செய்த பொருள்கள்
தந்தம் வினையால் தம்பால் வருமே

4 அமிழ்தந் தன்னினும் ஆற்ற இனிதே
மன்பெருங் காட்சி மக்கள்
அஞ்சிறு கையான் அளாவிய கூழே.

5. மக்கள் மெய்தொடல் மாண இனிதே
மலர்வாய் மணக்கும் மாற்றம்
இணங்கிக் கேட்டல் இன்பம் செவிக்கே.

6. குழலே இனிது குலவுயாழ் இனிதே
எனறே எளிதின் இயம்புவர்
மக்கள் மழலை மடாஅ தாரே.

7. தந்தை என்பான் தன்மகற்(கு) ஆற்றும்
நன்றி யாதென நவிலின்
அவையின் மிக்க அறிவனாச் செயலே.

8 மக்கள் மறுவிலா மல்லல் அறிவு
மாநிலம் வாழும் மன்னுயிர்க்(கு)
எல்லாந் தம்மினும் என்றும இனிதே.

9. பெற்ற பொழுதினும் பெரிது மகிழ்வாள்
கல்வியால் நிறைந்த கடனென
அறிவர் சொல்ல அறிந்த தாயே.

10. தந்தைக் காற்றும் தன்மகன் உதவி
இவற்குத் தந்தை இம்மையின்
செய்தவம் என்னெனச் செப்பும் சொல்லே.

# மறைவுற்ற தமிழ்நூல்கள்

[மயிலை. திரு. சீனி. வேங்கடசாமி]

(சிலம்பு உஅ, பரல் க, சஙச-ஆம் பக்கத் தொடர்ச்சி)

## 32. கோப்பத்துப் பரணி

சோழ அரசர் கொப்பம் என்னும ஊரில் சளுக்கிய அரசருடன் போர செய்து பெற்ற வெற்றியைப் பாராட்டிக் கொப்பத்துப்பரணி என்னும் நூல் பாடப்பெற்றது. இச்செய்தியை இராசராச சோழனுலாவினுல் அறியலாம். என்னை?

"‥ ‥ ‥‥ ‥ ‥ ‥‥.கொலையானை
பப்பத் தொருபசிப்பேய் பெற்ற வொருபரணி
கொப்பத் தொருகளிற்ருற் கொண்டகோன்."

எனக் கூறப்படுவது காண்க இந்தக் கொபபததுப பரணி இப்போது கிடைக்கவில்லை. இந்நூலை இயற்றியவர் பெயர் முதலியனவும் தெரியவில்லை.

## 33. "தென்றமிழ்த் தெய்வப் பரணி"

இப்பெயருள்ள பரணி நூலைப்பற்றித் தக்கயாகப்பரணி 776-ஆம தாழிசை கூறுகிறது. என்னை?

"செருத்தந் தரித்துக் கலிங்க ரோடத
தென்றமிழ்த் தெய்வப் பரணி கொணடு
வருத்தந தவிரத்துல காணட பிரான்
மைந்தர்க்கு மைந்தனை வாழ்த்தினவே."

இததாழிசைககு உரை எழுதிய, பெயர் அறியப்படாத பழைய உரையாசிரியர், "இப்பரணி பாடினர் ஒட்டக்கூத்தரான கவிச்சக்கரவர்த்திகள். இப்பரணி பாட்டுண்டாா விக்ரமசோழ தேவர்" என்று எழுதுகிறுர்.

இதனுல், கலிங்கபபோரைப் பாராட்டிச் செயங்கொண்டார் கலிங்கத்துப் பரணி பாடியதுபோலவே, அதே கலிங்கப்போரைப் பாராட்டி ஒட்டககூத்தர் விக்கிரமசோழன்மீது இந்தப் பரணியைப் பாடினுர் என்று தெரிகிறது. இந்தப் பரணியின் பெயர் தெரியவில்லை. ஆனுல், ஒட்டக்கூத்தராலேயே தென்றமிழ்த் தெய்வப்பரணி என்று தமது தக்கயாகப் பரணியில் கூறப்பட்டபடியால், அதே தலைப்பெயரை இந்தப் பரணிக்குச் சூட்டினம். ஒட்டக்கூததர் விககிரமசோழன்மீது, விக்கிரமசோழனுலா என்னும் நூலை இயற்றியிருப்பதும், அவர் 'அவனது அவைக்களப்

புலவராக இருந்தனர் என்பதும் கருதத்தக்கது. ஒட்டக்கூத்தர் இயற்றிய தென்றமிழ்த் தெய்வப்பரணி இப்போது கிடைக்கவில்லை.

## 34. கூடலசங்கமத்துப் பரணி

கூடலசங்கமத்துப் பரணி என்னும் ஒரு பரணி நூல் இருந்தது என்பதை விக்கிரமசோழனுலாவினாலும், இராசராசசோழனுலாவினாலும் அறிகிறோம். சோழர்கள் கூடலசங்கமம் என்னும் இடத்தில் பகைவேந்தருடன் போர்செய்து பெற்ற வெற்றியைப் பாராட்டி இந்தப் பரணி பாடப்பெற்றது என்று தெரிகிறது. என்னை?

“ .. .. .. .. . . . .. . கூடல்
சங்கமத்துக் கொள்ளுந் தனிப்பரணிக் கெண்ணிறந்த
துங்கமத யானை துணித்தோனும்”

என்று விக்கிரமசோழனுலா கூறுகிறது.

“ .. . . .. .. . . . . . . ..ஒப்பொருவா
பாடவரிய பரணி பகட்டணி வீழ
கூடலார் சங்கமத்துக் கொண்டகோன்.”

என்று இராசராசசோழனுலா கூறுகிறது.

இந்தப் பரணி யாரால் செய்யப்பட்டது என்பது தெரியவில்லை. நூலும் கிடைக்கவில்லை.

## 35. இராமாயணம்

இப்பெயரைக் கண்டவுடன் கம்பராமாயணமோ என்று கருதவேண்டா. இது கம்பராமாயணத்தின் வேறானது. இதனை யாப்பருங்கலம் செய்யுளியல் 9-ஆம் சூத்திர உரையில், விருத்தியுரைகாரர் குறிப்பிடுகிறார். “இன்னும் பலவடியான் வந்த பஃறொடை வெண்பா இராமாயணமும் புராணசாகரமும் முதலாகவுடைய செய்யுட்களில் கண்டுகொள்க” என்று அவர் எழுதுகிறார். இதனால், இந்த இராமாயணம் வெண்பா யாப்பினால் இயற்றப்பட்ட நூல் என்பதும், இதில் பலவடியால் வந்த பஃறொடை வெண்பாக்கள் இருந்தன என்பதும் தெரிகின்றன. இந்நூலைப்பற்றிய வேறு செய்திகள் தெரியவில்லை.

## 36. புராணசாகரம்

யாப்பருங்கலம் செய்யுளியல் 9-ஆம் சூத்திர உரையில், உரையாசிரியர் இப்பெயருள்ள நூலைக் குறிப்பிடுகிறார். “இன்னும் பலவடியால் வந்த பஃறொடை வெண்பா இராமாயணமும்,

புராணசாகரமும் முதலாகவுடைய செய்யுட்களிற் கண்டு கொள்க" என்று அவர் எழுதுவது காண்க.

இதனால், புராணசாகரம என்னும் நூல் வெண்பாவினால் அமைநத நூல் என்பதும, இதில் பஃறொடை வெண்பாக்களும் இருநதன என்பதும தெரிகின்றன.

இந நூலாசிரியர் பெயர் முதலிய ஒன்றும் தெரியவில்லை.

## 37. திரையக்காணம்

இது ஒரு சோதிட நூல என்று தெரிகிறது யாப்பருங்கல உரையாசிரியர் இந நூலைக் குறிப்பிடுகிறார் (யாப்பருஙகலம், ஒழிபியல் 2-ஆம் சூததிர உரை) இந் நூலிலிருநது கீழ்க்கண்ட இரண்டு செய்யுட்களை உரையாசிரியர் மேற்கோள் காட்டுகிறார்:

"பூமன் றெறுகதிரோன் பொனகாரி யொண்புகரோன்
வாமப் புதன் வெளியோன் மாமநதன்—சோமன்சேய்
சந்திரனே செவவாய் சதமகனறன் மநதிரியே
யந்திரையைக் காணமாள் வார்."

"ஆடரிவி லாகிநடு வந்தமுறை சேயிரவி யம்பொனியலும்
சேடிசுற வேறுசனி வெள்ளிபுத னள்ளுமெறி தேள்வலவன்மீ
னேடுமுயல் திஙகளிஞே டஙகிகுரு வுணடலுணர் நண்டு துலைநீர்
மூடுகுட மோடுபுகர் காரிபுத னேரிதனை யுணணு முறையே."

"இவையு முய்த்துணர் நிரனிறை. இவ்விரண்டுந் திரையக் காணம் ஓரிராசி மும்மூனறாக ஒட்டிக்கொள்க" என்று உரையாசிரியர் எழுதுகிறார.

இந நூலைபபற்றி வேறு செய்திகள் தெரியவில்லை.

## 38. அமிர்தபதி

இபபெயரினுள்ள ஒரு நூலை யாப்பருங்கல உரையாசிரியர், (யாப்பருங்கலம ஒழிபியல்) குறிப்பிடுகிறார்.

"சிந்தாமணி, சூளாமணி, குண்டலகேசி, நீலகேசி, அமிர்த பதி என்றிவறறின் முதற்பாட்டு வணணத்தால் வருவன. அவற்றில நேரசை முதலாய் வரின் ஓரடி பதினன்கெழுத்தாம். நிரையசை முதலாய் வரின் ஓரடி பதினைநதெழுத்தாம்."

என்று அவர் எழுதுகிறார. இதனால், அமிர்தபதியின் முதற்பாட்டு வண்ணச் செய்யுள் என்பது தெரிகிறது.

இந்நூல் ஆசிரியர் யார், இது எதைப்பற்றிய நூல் என்பன ஒன்றும் தெரியவில்லை.

39. அவினந்தமாலை 40. அரசசட்டம் 41. வருத்தமானம்

இவை கணித நூல்கள், யாப்பருங்கல விருத்தியுரைகாரர் இந்நூல்களைத் தமது உரையில் (ஒழிபியல்) குறிப்பிடுகிறார். அவர் எழுதுவது இது:—

"இனி, எண் இரண்டுவகைய, கணிதமும் காரணமும் என. அவற்றுட் கணிதமாவன பதினாறு வரி கருமமும், ஆறு கலாச வருணமும், இரண்டு பிரகரணச் சாதியும், சதகுப்பையும், ஐங் குப்பையும் என்றிப் பரிகருமமும், மிச்சிரகமு முதலாகிய எட் டதிகாரமும். அவை அவினந்தமாலையும், அரசசட்டமும், வருத்த மானமும் முதலியவற்றுட் காண்க."

இந்நூல்கள் எக்காலத்தில் யாரால் செய்யப்பட்டன என் பன யாதொன்றும் தெரியவில்லை.

42. பரிப்பெருமாள் இலக்கண நூல்

திருக்குறளுக்கு உரை எழுதிய பதின்மருள், பரிப்பெரு மாள் என்பவரும் ஒருவர். இவர் ஓர் இலக்கண நூலையும் இயற் றினார் என்று அறிகிறோம். என்னை? "தெள்ளி மொழியியலைத் தேர்ந் துரைத்துந் தேமொழியார், ஒள்ளிய காமநூலோர்ந்துரைத்து,—வள்ளுவனார், பொய்யற்ற முப்பால் பொருளுரைத்தான் தென் செழுவைத், தெய்வப் பரிப்பெருமாள் தேர்ந்து" என்று இவர் எழுதிய திருக்குறள் உரைப்பாயிரச் செய்யுள் கூறுவது காண்க. இவர் செய்த இலக்கண நூலின் பெயர் முதலியன தெரியவில்லை.

43. பரிப்பெருமாள் காமநூல்

திருக்குறள் உரையாசிரியர்களில் ஒருவராகிய பரிப்பெரு மாள் காமநூல் ஒன்று இயற்றினார் என்று அவரது உரைப் பாயிரச் செய்யுள் கூறுகிறது: 'தெள்ளி மொழியியலைத் தேர்ந் துரைத்துத் தேமொழியார், ஒள்ளிய காமநூல் ஓர்ந்துரைத்து—வள் ளுவனார் பொய்யற்ற முப்பால் பொருளுரைத்தான் தென்செழு வைத் தெய்வப் பரிப்பெருமாள் தேர்ந்து' என்பது அச்செய்யுள். இந்தக் காமநூலின் பெயர் என்னவென்று தெரியவில்லை இந் நூல் இப்போது கிடைக்கவில்லை.

44. திருவதிகைக் கலம்பகம்

இந்தக் கலம்பகம் திருவதிகை வீரட்டானேசுவரர் பேரில் பாடப்பட்டது. திருவதிகை, தென்ஆர்க்காடு சில்லா கடலூர்த் தாலுகாவில் உள்ளது. திருவதிகைக் கோவிலில் உள்ள கல் வெட்டுச் சாசனம் ஒன்று இந்நூலையும் இந்நூலாசிரியரையும்

கூறுகிறது. இந்தச் சாசனம் சகஆண்டு 1458, துன்முகி ஆடி 10௳ எழுதப்பட்டது அஃதாவது கி. பி. 1536-இல் இது எழுதப்பட்டது. உத்தரமேரூரில் மகிபாலகுலசேரி என்னும் தெருவில் வாழ்ந்துவந்த உத்தண்ட வேலாயுத பாரதி என்பவர் இந்நூலை இயற்றினார் என்று இச்சாசனம் கூறுகிறது. தொண்டைமண்டலத்துக் காலியூர்க் கோட்டத்து ராஜேந்திர சோழ சதுர்வேதிமங்கலம் என்னும் உத்தரமேரூர் என்று இந்தச் சாசனம் இவர் ஊரைக் கூறுகிறது மேலும், கௌண்டன்ய கோத்திரத்து ஆபஸ்தம்ப சூத்திரத்து வீரவல்லி தேவராசபட்டா காசிநாத குபையன் என்னும் உத்தண்ட வேலாயுத பாரதி என்று இவர் பெயரைக் கூறுகிறது

இந்தக் கலம்பகம் பாடியதற்காக 2 மா நன்செய் நிலமும் 1 மா புன்செய் நிலமும், திருவதிகை நகரத்துக் கோட்டைக்குள் இருந்த அக்கிரகாரத்தில் ஒரு வீடும் இந்தப் புலவருக்குத் தானம் செய்யப்பட்டன (376 of 1921., Annual Report of Epigraphy, Madras, 1922 Page 99) திருவதிகைக் கலம்பகம் இப்போது கிடைக்கவில்லை

## 45 வீரமாலை

வீரமாலை என்னும் நூலைப் புலவர் பாண்டி கவிராசர் என்பவர் இயற்றினார் என்னும் செய்தி, புதுக்கோட்டையில் உள்ள ஒரு கல் எழுத்துச் சாசனத்தினால் தெரிகிறது. இந்தச் சாசனம் புதுக்கோட்டை திருமய்யம் தாலுகா ராங்கியம் என்னும் ஊரில் உள்ள பூமீசுவரர் கோவிலின் தென்புறச் சுவரில் இருக்கிறது. இந்தச் சாசனத்தின் வாசகம் இது :

“உ. ரொத்திரி வருஷம் தைய் மாதம் ௩௦உ. ஸ்ரீமது வெங்கள நாயக்கரய்யன் காரியத்துக்கு காத்தரான தீத்தாரியப்பரும் பொன்னமராபதி நாட்டுத் தென்பற்று இராசிமங்கலம் ஊரவரும் புலவர் பாண்டி கவிராசர் வீரமாலை பாடுகையில் இவற்கு இறையிலியாக விட்ட நிலம் மறவனேரி வயலில் வெம்படிப் புலவர் செய் அஞ்சாள நடுகையும் சந்திராதித்தர் வரைக்குபற்றி அனுபவிக்க கடவராகவும். இதுக்கு யாதாமொருத்தர் இதுக்கு இரண்டு நினைத்தவன் கெங்கைக் கரையிலே காராம் பசுவைக் கொன்ற தோசத்திலே போகக் கடவராகவும். இப்படிக்கு ஏறக்குடையான் ஆன பொய்சொல்லா மெய்யன் எழுத்து.”
(Inscriptions (Texts) of the Pudukkottai State No. 966.)

இந்தச் சாசனத்தினால், வெங்கள நாயக்கரய்யன் மீது இந்த வீரமாலை பாடப்பட்டது என்பது தெரிகிறது. வெங்கள

நாயக்கர் கி. பி. 16-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் இருந்தவர் என்று தெரிகிறபடியால இந்நூல் அககாலத்தில் இயற்றப்பட்டதாதல் வேண்டும். இந நூல் இப்போது கிடைக்கவில்லை.

## 46- பூம்புலியூர் நாடகம்

தென் ஆர்க்காடு சில்லா கடலூர்த் தாலுகா திருப்பாதிரிப்புலியூரில் உளள பாடலிபுரீசுவரர் கோவில் கல்வெட்டுச் சாசனங்களினால் இந நூலின் பெயர் தெரியவருகிறது. வீரைத் தலைவன் பரசமய கோளரி மாமுனி எனபவர் இந நூலை எழுதிய வா குலோத்துங்க சோழதேவா என்னும் முதலாம குலோத்துஙகன் காலததில் இவா இருநதவா இநத அரசனுடைய 41, 49-ஆம் ஆண்டுகளில இந்தச சாசனஙகள் எழுதப்பட்டன. இநதச் சாசனங்கள் செய்யுள நடையில எழுதபபட்டுள்ளன. இந்த நூலாசிரியர், கன்னிவன புராணம அஷ்டதச புராணம் என்னும் வேறு இரண்டு நூல்களையும எழுதியிருக்கிறா இந நூல்களை எழுதியதற்காக இவர் பாலையூரில் நிலஙகளை இறையிலியாகப் பெற்றார்.

ஷை கோயில் சாசனச் செய்யுளகளில் இது ஒன்று —

"மாங்கொல்லை .. ..ரண்டு மா வொருமா முக்காணி
யோங்கு மறப்பெருஞ் செல்வி யொருகாணி .. .. ..
பூவமா காணியினிற் பூம்புலியூர் நாடகஞ் செய்
நாவலன் பெற்ற நிலம்."

(No. 753 Page 382. South Indian Inscriptions Vol VII)

இந்தச் சாசனச் செய்யுளில் இடையிடையே சில எழுத்துக்கள் மறைந்துவிட்டன.

இந்த நாடகநூல் இப்போது கிடைக்கவில்லை.

## 47. கன்னிவன புராணம். 48. அஷ்டதச புராணம்.

ஷை பூம்புலியூர் நாடகம் இயற்றிய வீரைத் தலைவன் பரசமய கோளரிமாமுனி என்பவரே இநத இரண்டு புராணங்களையும் இயற்றினா. இந்தச் செய்தியைத திருப்பாதிரிபபுலியூரில் உள்ள பாடலிபுரீசுவரர் கோவில் கல்வெட்டுச் சாசனம கூறுகிறது இநதச சாசனஙகள் செய்யுள் நடையில் இயற்றப்பட்டுளளன. இக்கல் வெட்டுகளில் இடையிடையே எழுததுக்கள் சிதைந்தும் மறைநதும் கிடப்பதால நன்கு வாசிக்கமுடியவில்லை. குலோத்துங்க சோழ தேவர் என்னும் முதலாங் குலோத்துங்கனுடைய 41, 49-ஆம ஆட்சி ஆண்டுகளில் இந்தச் சாசனஙகள் எழுதப்பட்டன. கன்னிவன புராணம அஷ்டதசபுராணம் பூம்

புலியூர் நாடகம என்னும் நூல்களை இயற்றியதற்காக இந்நூலாசிரியருக்குப் பாலையூரில் நிலம் தானம் செய்யபபட்ட செய்தியை இநதச சாசனக் கவிகள கூறுகின்றன :—

ஸ்வஸ்தி ஸ்ரீ குலோததுஙக சோழ தேவாக்கு யாண்டு ௪கக௱.

தழைதத திருபபாதிரிப் . ன வீரை தலைவ
னிருடைப் பரசமய கோளரி மாமுனிககு
கொழிதத வஷட தச புராணஙக தானங
கனனிவன புராணம்
வழுததடி காட்டு தயானநத மவருததி
பாலையூரு . ..யிருபூவிளையுநி
பழுததுமறை தனமா யுள்ளளவு முணணவிறையிலி
யாமவகை தநதோ மிரணடு மாவே.

(No. 751. Page 382. South Indian Inscriptions Vol. VII)

ஸ்வஸதி ஸ்ரீ குலோததுஙக சோழ தேவர்க்கு யாண்டு ௪கக.

திருவாழுங கறைஞாழற் சினை மருதம் .
சாசனந் தென்மருதம பகைக
கருவாழ வருஙகமலாலயற்குக கன்னிவன
புராணம் பாடிப் பரிசி ...........
வாடுந் நாடகமுஞ் செயதாற்கு சிறப்பாம் பாலை
யூரினிலிருபூவும விளையும் ஒருமாநன்நில
பருஙகொழு கிளையினொடு மூழிதொறு மிறை
யிலியே யுரைததா னேய்.

(No 753. Page 382. South Indian Inscripfions Vol. VII)

சிதைநது காணப்படுகிற இநதச் செய்யுளினால் அறியப் படுவது எனனவெனறால், வீரைததலைவன பரசமய கோளரியாா என்பவா கனனிவனபுராணம, அஷ்டதசபுராணம் பூமபுலியூர் நாடகம என்னும மூனறு நூலகளை இயற்றினமைக்காகப் பாலையூரில் நிலம இறையிலியாகத தானம பெற்றாா எனபது.

இந்த நூல்கள் இப்போது கிடைக்கவில்லை.

## 49 காங்கேயன் பிள்ளைக் கவி

இராமநாதபுரம் சிலலா திருப்புத்தூா தாலுகா பெரிச்சிக் கோவில் என்னும ஊரில் உள்ள சுந்தரவனேசுவரா் கோவில் சாசனம் ஒன்று காங்கேயன் பிள்ளைக்கவி என்னும நூலைக்

குறிக்கிறது. 75 of 1924., Annual Report of South Indian Epigraphy 1923—24. Page 107.)

பாண்டியன மாறவர்மன் ஆன திரிபுவன சக்கரவர்த்தி சுந்தரபாண்டிய தேவரின் 14-ஆவது ஆட்சி ஆண்டில் இந்தச் சாசனம் எழுதப்பட்டது. கண்டன் உதயஞ் செய்தான் காங்கேயன் எனனும சிற்றரசன்மீது பிள்ளைக் கவி (பிள்ளைத தமிழ்.) நூலைக் கொடிகொண்டான் பெரியான் ஆதிச்சதேவன் என்னும் புலவா பாடியதையும அதற்காக ஷை காஙகேயன் இப்புலவருககுச் சாத்தனேரி என்னும் ஊரில் நிலம பரிசளித்ததையும இந்தச் சாசனம் கூறுகிறது.

இந்தச் சாசனம் கூறுகிற பாண்டியன் கி பி. 13-ஆம் நூற்றூண்டின் முற்பகுதியில இருந்தவன். ஆகவே, காஙகேயனும அவனைப் பாடிய ஆதிசச தேவரும அதேகாலததில இருநதவர் ஆவர்.

இப்பிள்ளைக் கவி இபபோது கிடைக்கவில்லை.

## 50. வஞ்சிப் பாட்டு 51. மோதிரப் பாட்டு 52 கடகண்டு

பேராசிரியர், தொல்காபபிய உரையில் இந நூல்களைக் குறிப்பிடுகிறூர். தொல் பொருள். செயயுளியல் 180-ஆம் சூத்திரத்தில் பண்ணத்தி என்பதை விளக்குகிற இடத்தில் பேராசிரியா இந்நூல்களைக் கூறுகிறூர். அவா கூறுவது இது:

"மெய்வழக்கல்லாத புறவழககினைப் பண்ணத்தியென்ப. இது எழுதும பயிற்சியில்லாத புறவுறுப்புப் பொருள்களைப் பண்ணததியென்ப வெனபது. அவையாவன நாடகச செய்யுளாகிய பாடடுமடையும் வஞ்சிப்பாட்டும் மோதிரப்பாட்டும கடகண்டும முதலாயின. அவற்றை மேலதே போலப பாட்டென்றூராயினூா நோக்கு முதலாயின உறுப்பின்மையினென்பது. அவை வல்லார்வாய்க் கேடடுணர்க."

இதனுல், மோதிரப்பாட்டு, வஞ்சிப்பாட்டு, கடகண்டு என்பன நாடகம் பறறிய நூல்கள் எனத தெரிகின்றன

இவை இப்போது கிடைக்வில்லை.

## 53. தேசிகமாலை

யாப்பருங்கல உரையாசிரியர், தொடையோத்து 52-ஆம் சூத்திர உரையில் தேசிகமாலை என்னும நூலைக் குறிபபிடுகிறூர். அவர் எழுதுவது வருமாறு:

"பன்மணிமாலையும் மும்மணிக்கோவையும் உதயணன் கதையும் தேசிகமாலையும் முதலாகவுடைய தொடர்நிலைச் செய்யுட்களும அந்தாதியாய் வநதவாறு கண்டுகொள்க."

இவர் கூறுகிற பன்மணிமாலையும் மும்மணிக்கோவையும் எவை என்பது தெரிவிலலை. ஏனென்றால் இப்போது பல பனமணிமாலைகளும் மும்மணிக்கோவைகளும் உள்ளன. இவை இப்போதுள்ளவைகளின் வேறுபட்ட நூல்களா எனபது தெரியவில்லை. உதயணன்கதை என்பது பெருங்கதை. அது இபபோது இருக்கிறது தேசிகமாலை என்னும அந்தாதித் தொடர்நிலைச் செயயுள் இப்போது கிடைக்கவில்லை.

தேசிகமாலை யாரால் செய்யப்பட்டது, எதைப்பற்றிக் கூறுவது, எப்போது இயற்றப்பட்டது என்பன தெரியவில்லை.

## 54. அறம் வளர்த்த முதலியாா கலம்பகம்

இப்பெயருளள ஒரு நூல் இருந்தது என்பதைத் தமிழ் நாவலர் சரிதையிலிருநது தெரிந்துகொள்ளலாம்.

"அறம வளர்தத முதலியாரைப் பாண்டியன் கலம்பகம் பாடலாமோ" என்று கேட்ட ஒரு புலவாக்குப பாண்டியன் கீழ்க்கண்ட செய்யுளைப பாடி விடையிறுத்தாா என்று தமிழ் நாவலர் சரிதை கூறுகிறது :

"உங்கண் மனந் தெரியும் புலவீர், ஒருசீா மரபோம் திஙகண் மரபினம் திஙகளின் கூடச செம்பூறமா துங்கன் மரபிற் கஙகையுஞ் சூடினன் சோதியன்றோ? எஙகண மரபுண்டெனக் கவிபாடினம் யாமவறகே."

இச்செய்யுளில் செம்பூறமாதுஙகன் என்பது செமபூர் அறம் வளாதத முதலியாரைக் குறிக்கிறது செமபூர் அறம் வளர்த்த முதலியார் விஜயநகர அரசரின அமைச்சராக ஹம்பி நகரததில் இருநதவர். இவரை அம்பி (ஹமபி) அறம் வளர்த்த முதலியாா எனறும் கூறுவர்

இவர்மீது பிற்காலத்துப் பாண்டியர் ஒருவர் கலம்பகம் பாடினார். அதையறிநத ஒரு புலவா அரசராகிய நீா மற்ற வரைப பாடலாமோ என்று வினவினார் அதறகு விடையாக இந்தப் பாட்டைப்பாணடியன் பாடினார் இச்செயயுளின் கருத்து இது: சிவபெருமான் திங்களையும் கஙகையையும் தமது திருச் சடையில்சூடினார். ஆகவே திங்கள் மரபினராகிய பாண்டியருக் கும் கஙகை குலத்தவராகிய அறம் வளர்த்த முதலியாருக்கும் தொடர்பு உண்டு. இத்தொடர்பு பற்றித்தான் அவர்மீது கலமபகம பாடினேன் என்பது.

கி. பி. 16-ஆம் நூற்றாண்டில் விஜயநகர ஆட்சி இருந்த படியினாலே இக்கலம்பகம் அந்நூற்றாண்டில் இயற்றப்பட்டிருக்க வேண்டும்.

இந்தக் கலம்பகம் இப்போது கிடைக்கவில்லை,

## 55. புட்கரனார் மந்திர நூல்

இப்பெயருள்ள நூலை யாப்பருங்கல விருத்தியுரைகாரர் குறிப்பிடுகிறார். யாப்பருங்கலம் செய்யுளியல் 40-ஆம் சூத்திர உரையில், ஆசிடப்போலி அல்லது ஆரிடவாசகம் என்பதைக் கூறும்போதும் இவ்வாறு கூறுகிறார் :—

“வச்சிரம் வாவி நிறைமதி முக்குடை
நெற்றி நோ வாங்கல் விலங்கறுத்தல்
உட்சக்கர வட்டத் தட்புள்ளி யென்பதே
புட்கரனார் கண்ட புணர்ப்பு”

இது மந்திர நூலுட் புட்கரனார் கண்ட வெழுத்துக்குறி வெண்பா. இஃதிரண்டாமடி குறைந்து வந்தது.

இதனை ஆரிடவாசகம் என்பதனாலே ரிஷிவாக்கு என்பது தெரிகிறது. ஆரிடவாசகம் = இருடி வாக்கு.

இந் நூலைப்பற்றி வேறு செய்திகள் தெரியவில்லை.

## 56. புணர்ப்பாவை 57. போக்கியம் 58. கிரணியம் 59. வதுவிச்சை

யாப்பருங்கல விருத்தியுரைகாரர் இந்நூல்களைக் குறிப்பிடுகிறார். யாப்பருங்கலம் ஒழிபியலில் சித்திர கவிகளைப்பற்றிக் கூறுகிற இடத்தில் இந் நூல்களைக் கூறுகிறார் உரையாசிரியர் எழுதுவது இது :

“இதனுட் சக்கரம் என்றதனானே பூமி சக்கரமும், ஆகாயச் சக்கரமும், பூமியாகாயச் சக்கரமும், வட்டச் சக்கரமும், புருடச் சக்கரமும், சதுரச் சக்கரமும், கூர்மச் சக்கரமும், மந்தரச் சக்கரமும், காடகச் சக்கரமும், சனிபுருடச் சக்கரமும், சலாபச் சக்கரமும் முதலாக வுடையன புணர்ப்பாவையுளும் போக்கியத்துள்ளும் கிரணியத்துள்ளும் வதுவிச்சையுள்ளும் கண்டுகொள்க.”

இதனால் இப் பெயருள்ள நூல்கள் இருந்தன என்பதும் இவை சித்திரகவியைச் சேர்ந்தவை என்பதும் தெரிகின்றன. இவற்றை இயற்றியவர் யாவர் என்பதும் எக் காலத்தில் இயற்றப்பட்டன என்பதும் தெரியவில்லை.

## 60. மஞ்சரிப்பா

இப்பெயருள்ள ஒரு நூல் இருந்ததென்பதைத் தொண்டை மண்டல சதகத்தினால் அறிகிறோம்.

> வானப்ர காசப் புகழ்க் கிருட்டின ராயர்க்கு மஞ்சரிப்பா
> கானப்ர காசப் புகழாய்ந்து கச்சிக் கலம்பகஞ்செய்
> ஞானப்ர காச குரு ராயன் வாழ்ந்து நலஞ்சிறந்த
> மானப்ர காச முடையோர் வளர்தொண்டை மண்டலமே

என்பது அப்பாடல்

காஞ்சிபுரத்தில் இருந்தவரும் கச்சிக் கலம்பகம் இயற்றியவருமான ஞானப்பிரகாசர் என்னும் பெயருள்ள ஆசாரியர் கிருட்டினராயர்மீது மஞ்சரிப்பா என்னும் நூலை இயற்றினார் என்று தெரிகிறது கிருட்டினராயர் என்பவர் கிருட்டின தேவராயர் என்னும் பெயருடைய விஜயநகரத்து அரசர் ஆவார். இவர் கி. பி 1509 முதல் 1529 வரையில் அரசாண்டார் எனவே 16-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் இந்நூல் இயற்றப்பட்டது.

மஞ்சரிப்பா இப்போது கிடைக்கவில்லை

## 61. கோட்டீசர உலா

கோட்டீசர உலாவிற்கு கொட்டையூருலா என்றும் வேறு பெயர் உண்டு கோட்டீச்சரம் என்பது கொட்டையூர். இவ்வூர் கும்பகோணத்திற்கு அருகில் இருக்கிறது. கோட்டீச்சர உலாவை இயற்றியவர் கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் என்பவர்.

இவர் முத்தமிழ்ப் புலவர். தஞ்சையை அரசாண்ட மகாராட்டிர அரசரான சரபோஜி மகாராஜாவின் (1798—1832) அரண்மனைப் புலவராக இருந்தவர். தஞ்சையில் சரஸ்வதி மகால் என்னும் பெயருடன் சரபோஜி மன்னர் அமைத்த புத்தகசாலைக்கு இவர் ஏட்டுச் சுவடிகளைத் தேடிக்கொடுத்தார் பின்னர், சென்னை அரசாங்கத்தார் அக்காலத்தில் நடாத்திவந்த சென்னைக் கல்விச் சங்கத்தில் தமிழாசிரியராக இருந்தார்.

கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் கோடீசரக்கோவை, தஞ்சைப் பெருவுடையாருலா, சரபேந்திர பூபால குறவஞ்சி, திருவிடைமருதூர்ப் புராணம், பெருமணநல்லூர்ப் புராணம் பல தனிச் செய்யுள்கள் முதலியவைகளை இயற்றினார்.

இவர் இயற்றிய கோடீசர உலா இப்போது கிடைக்கவில்லை; மறைந்துவிட்டது போலும்.

## 62. சிறறிசை 63. பேரிசை

இப்பெயருள்ள இரண்டு இசைத்தமிழ் நூல்களை இறைய ஞர் அகப்பொருள உரையாசிரியர் குறிப்பிடுகிறார் இவ்வுரை யாசிரியர் எழுதுவதாவது :—

"அவர்களால் (கடைச்சங்கத்தாரால்) பாடப்பட்டன நெடுந் தொகை நானூறும் குறுந்தொகை நானூறும் நற்றிணை நானூ றும் புறநானூறும் ஐங்குறுநூறும பதிற்றுப்பத்தும நூற றைமபது கலியும் எழுபது பரிபாடலும் கூத்தும வரியும சிறறிசை யும பேரிசையும என்று இத் தொடக்கத்தன"

இது இறையஞா அகபபொருள் உரைப் பாயிரம்

இதில் கூறபபட்ட சிற்றிசை பேரிசை என்னும் நூல்கள இப்போது கிடைக்கவில்லை. இவை இசைத்தமிழ நூல்கள்.

தொல். பொருள் செய்யுளில் 153-ஆம சூத்திர உரையில், பேராசிரியர் இவ்வாறு எழுதுகிறார :

"கந்தருவ மார்க்கத்து (இசைத் தமிழில) வரியும் சிற்றிசை யும் பேரிசையும் முதலாயினபோலச் செந்துறைப் பகுதிக்கே உரியவாகி வருவனவும கூத்தநூலும் வெண்டுறையும் அராகத் திற்கே யுரியவாகி வருவனவும் ஈண்டுக் கூறிய செய்யுளபோல வேறு பாடப்பெறும் வழக்கின என்பது கருத்து"

தொல். பொருள் செய்யுளியல 172-ஆம் சூத்திர உரையில் இளம்பூரண அடிகள் இவ்வாறு எழுதுகிறார :—

"பண்ணைத் தோற்றுவித்தலாற் பண்ணத்தி என்றார. அவை யாவன சிற்றிசையும் பேரிசையு முதலாக இசைத் தமிழில் ஓதப் படுவன," என்று எழுதினார.

பேராசிரியரும் இளம்பூரண அடிகளும் தமது உரைகளில் கூறுகிற சிறறிசை பேரிசை எனபன இசைப்பகுதிகள ஆகும்; நூலின் பெயர்கள் அல்ல. ஆனால், இறையனார் அகப்பொருள் உரையாசிரியர் கூறும் சிற்றிசை பேரிசை என்பன இசையைப் பற்றிய நூல்கள் என்பது ஐயமற விளங்குகிறது.

(தொடரும)

# திருநாட்டின் திருநெறி

[பன்மொழிப் புலவர், திரு. கா. அப்பாத்துரை எம்.ஏ.எல்.டி.]

நாகரிக உலகின் அடிநிலப்பாறை தமிழின நாகரிகமாகிய திராவிட நாகரிகமே. மேனாட்டு நாகரிகத்தின் தொலை வேரையும் கீழ்நாட்டு நாகரிகங்களின் அடிமரங்களையும் நாம் இதில் காணக்கூடும். ஆயினும் நாகரிக உலகின் பார்வையிலிருந்து அது நீண்டகாலமாக மறைக்கப்பட்டு வந்துள்ளது. கீழ்நாடுகளின் சமய, சமூக, அரசியல் ஆட்சி வகுப்பினர் ஆதிக்க நலங்களின் அறியாப் பிழைகளாலும் அறிபிழைகளாலும் தாம் அறிந்தும் பிறர் அறியவொட்டாமல் தடுக்கும் மாறாட்டங்களாலும் அது திரையிட்டு மூடப்பட்டு வருகிறது. இந்நிலையிலும் இவ் அடிநிலப் பாறையின் தனிப் பண்பை—கலப்பற்ற தூய பண்ணினை—எடுத்துக் காட்டும் பல தனிப் படைப்புக்களும் தனிப்பட்ட முழுநிறை துறைகளும் நம்மிடையே உள்ளன. தனிப் படைப்புக்களுள் தெய்வத் திருக்குறள் ஒன்று; செந்தமிழின் முந்து தமிழிலக்கணமாகிய தொல்காப்பியம் மற்றொன்று. தனிப்பட்ட முழுநிறை துறைகளுள் சித்தர் மருந்து நெறி, வாளக மெய்க்காட்சி நெறி, ஓவிய மெய்ப்பாட்டு நெறி, தமிழிசை, தமிழ் ஆடல் நெறி, தமிழ் நாடக நெறி, தமிழ்ச்சங்க இலக்கியம் ஆகியவைகள் குறிப்பிடத் தக்கவை. இவற்றிடையே மிடைந்து அதைந்து, மிளிர்ந்து விளைந்து, இவற்றுடன் தனித்தமிழ் நெறிகளாக எண்ணத்தக்க சிறப்புடையது, 'முடிந்ததன் முடிபு,' என்ற சிறப்புப் பெயர்கொண்ட வேதாந்த சித்தாந்த நெறி என்னும் திருநெறி.

'நம் சமயம்,' 'நம் நாகரிகம்,' 'நம் நாடு' என்று கூறிக்கொண்டே பசுத்தோல் போர்த்தவர்களாய் இவற்றைப் பாரா முகமாய் மறக்கடித்தவர்களாய், தமிழன்னையின் மனம் நைய, தமிழார்வலர் தகையழிய, தமிழினத் தொண்டர் வெம்பி வெதும்ப, அயற்பண்பை வருந்தி மேற்சென்று பேணுபவர் இன்று எத்தனை பேர்? மருந்துக்கும் தமிழ்மொழி, தமிழ்ப் பண்பு பேணாத நம் நாட்டுக் கோயில்கள், மடங்கள், கலை நிலையங்களை வளர்க்கும் சாக்கில் ஆயிர நூறாயிரம் வெண்பொற் காசுகள் செலவிட்டு அயலாட்சிபேணித் தன்னலம் வளர்க்கும், 'வீடணப் பெருந்தகையர்,' எத்தனை பேர்? ஆனால் உடன்பிறந்த நோய்

வருத்தினும், உடன்பிறவா மாமலை மருந்துண்டு அமையும் உடல்போல, அயல் இனத்தவர், அயல மொழியினர், அயல் சமயததவா காயதல் உவததலற்ற ஆராய்ச்சியுரைகள் அன்னை யின புண்ணும் நம அக வெபபும ஆற்றத்தககனவாயுள்ளன.

சைவ சித்தாந்தத்தைப்பற்றி ஆராய்ந்த தமிழக அறிஞர் ஒரு சிலராயினும் தலைசிறந்தவர்களே—எம் எஸ. பூரணலிங்கம் பிள்ளை, ஜே. எம் நலலசாமிப் பிள்ளை, வி. பொன்னையா, பி. முத தையா பிள்ளை, எஸ். சிவபாதசுநதரம ஆகிய தமிழ ஒளிச் சுடர்கள் என்றும மறக்கத்தக்கவையல்ல. ஆயினும பெரும் பான்மைத் தமிழர்—தமிழினத்தவர்—தமிழினரு சூழ்நத அண் புலத்தவர் புறக்கணிப்பிடையே இவர்கள் ஆறுதல் தரினும, அப் புறககணிபபை அகற்றவல்லரோ? அவரையே வகுபபுவாதிகள் குறுமதியாளர் எனக் கூறிக் குரைக்கும இக் காலச சூழ்நிலையில், அயலின மருத்துவர் உதவி, பெரிதும் வரவேற்கத் தககதா யுள்ளது. ‘டொ சைவ சிததாந்த,’ என்ற ஜொமன் நூலின் ஆசிரியர் ஷோமரஸ், ‘இநதியக கடவுள் நெறி,’ இயற்றிய மெக் நிக்கால், ‘சைவ சித்தாநததின் மெய்மை விளக்கம்,’ தநத ஜே எச். பீட். திருவாசக மொழி பெயர்த்துதவிய ஜி. யூ ப்போப், ‘பாரத வருடத்தின் முதற் பழங்குடிகள,’ என்ற நூலாக்கிய ஆபபாட், ‘இநதிய நாகரிகத்தின் திராவிடப் பண்பு,’ என்ற நூலின் ஆசிரியர் சிலேட்டர் ஆகியோரின் நட்புப் பகைமையற்ற நடுநிலை ஆராய்ச்சி முடிவுகள திராவிட நாகரிகத்துக்கும் தமிழுக்கும சைவ சித்தாந்தத்துக்கும பேரரண் ஆவன.

கலைமுனைவர் (டாக்டர்) செல்வி பரஞ்சோதி அவர்கள் அண்மையில் வெளியிட்டுள்ள ‘சைவசித்தாந்தம’ என்னும் நூல் இவ்வகையில் தனிசசிறப்புடையது. அதன் முதல் பதிப்பு 1938-ல சென்னைப் பல்கலைக் கழகத்தில் அவரது கலை முனைவர் பட்டததுக்குரிய தேர்வாராய்சசிக் கட்டுரையாக வெளியிடப் பட்டது அப்பட்டம் பெறுவதற்குரிய தகுதியை அவ்வாராய்ச்சி ஏற்கெனவே அவருக்கு அளித்திருந்தது. பட்டம பெற்ற பின்னும் அவர் தாமும் ஆராய்ச்சியிலீடுபட்டுப் பிற புதிய ஆராய்ச்சியாளர் முடிவுகளையும் ஆய்நது, புதுத்! திருத்தங்க ளுடன் செப்பம்செய்து அதன் இரண்டாம பதிபபை இவ் வாண்டு (1954-ல்) வெளியிட்டுள்ளார். இரண்டு பதிப்புக்களும் அவா நடுநிலையையும அவர் உள்ளத்தில் புத்தாராய்ச்சிகளால் ஏற்படும மாற்றததையும நன்கு படம்பிடித்துக் காட்டுகின்றன.

தமிழர் சமயவாழ்வு முழுவதும் தமிழ்மொழி யாட்சிக்கும் தமிழ்ப்பண்புக்கும் தமிழர் நலங்களுக்கும் மாறுபட்டது என்று கருதி இன்று பலர் சமயவாழ்வைப் புறக்கணிக்கின்றனர்.

அத்துடன் அச் சமயவாழ்வு அடிப்படையிலேயே ஆரியச் சார்பானது என்ற எண்ணமும பரவி வருகிறது அதற்கேறபச் சமயவாழவைப புறக்கணிககாதவர்கள தமிழையும தமிழ்ப் பணபையும புறக்கணிக்கவே செயகின்றனா. இநத மனப்பான் மையை இநதிய அறிஞர் உலகம் நிழற்படுததிக் காட்டுகிறது. இவர்கள சமயததுறையில் சைவத்தையும, சிததாநதத்தையும் பெரிதும புறக்கணிபபது மட்டுமன்றி, இருட்டடிக்கவும் செய்யத தவறவிலலை என்பதைக் காணலாம்.

வடமொழியில் 16-ம் நூற்றூண்டில் மாதவாசாரியார் என்ற தென்னுடு அறிஞர் சாவதாசனசங்கிரகம் என்ற நூல் எழுதி யுளளார். அதில் ஆசிரியர் அறிந்த எல்லாச் சமயங்களும் கோட்பாடுகளும் விளக்கப்படுகிறது அதில் 'சைவதர்சனம்' என்று ஒரேஒரு பகுதிதான் உண்டு. அதனுள்ளும் சித்தாந் தததின பெயாகிடையாது! இதுமட்டுமா? வடநாட்டு ஆராய்ச்சி யறிஞரான ஆர். ஜி. பாண்டாகார் 1919-ல் "வைணவம, சைவம் முதலிய சில்லறைச் சமயநெறிகள்" என்ற வரலாற்று ஆராய்ச்சி நூல் வரைந்துளளார் வைணவமும் சைவமும் இந்நாட்டின் சிலலறைச் சமயநெறிகளாகக குறிக்கப்படடிருப்பது கூர்நது கவனிக்கததக்கது. அநதச் சிலலறைச் சைவசமயததில் கூட சைவசித்தாந்தம பறறிய விளக்கம எதுவும் கிடையாது. "சிததாந்தம என்ற பெயருடைய நெறி என்னதான் சொல் கிறது எனறு அறிய வழியில்லை அதன் நூல்கள் எதுவும் ஆராய்ச்சிக்குக் கிட்டவிலலை" என்று அவர் கூறுகிறுர். நூலகள தமிழில் இருபபதால், வடநாட்டவருக்குக் கிட்டவிலலை என்று முதலடியில தோற்றும். ஆனல், இருபதாம நூறறூண்டில் பல சிததாநத நூல்கள் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கபபட்டு விட்டன. தவிர சிவஞானபோதம முதலிய நூல்கள் வட மொழியிலிருநதே மொழிபெயர்க்கப்பட்டதாகத் தமிழகத்தில் கருதப்பட்டிருந்ததையும் நினைவில் கொள்ளவேண்டும. இந் நூல்கள தமிழுக்குரியன அல்ல என்று நாட்டத தமிழகததில் உருவாக்கப்படட வடமொழி 'முதல் நூல்கள்' வடவருக்கு மட்டும் பயன்படமுடியாதது ஏனே?

இந்திய அறிஞரைப் பின்பற்றிப் பல மேனுட்டு அறிஞரும் பல தெனனுட்டறிஞரும்கூடச் சைவசித்தாந்தமபற்றி மௌனம் சாதித்துளளனர். அதைப்பற்றிக் குறிப்பிட நேர்ந்தபோதும் அது இநதியாவின் பிற கோட்பாடுகளின் ஒருநிழல், ஒருவகை பேதமாகவே முனைவர் (டாக்டர்) ராதாகிருஷ்ணன் போன்ற தென்னுட்டுப் பேரறிஞர்களால்கூட வேண்டாவெறுப்புடன் குறிப்பிடப்பட்டது.

ஆசிரியர் பரஞ்சோதி தமிழ் நூல்களைக் கற்றே சைவ சித்தாந்தம் பற்றி எழுதப்புகுந்தனராயினும், எல்லா இந்திய அறிஞர்களையும் பின்பற்றிச் சங்கரரின் ஏகான்மவாதக் கண் கொண்டே முதற்பதிப்பில் சித்தாந்தத்தை விளக்கமுயன்றார். அந்த ஏகான்மவாதமே அதன் மூலமுதல் என்றும் அதன் பிற்கால வகைதிரிபே அது என்றும் அவர் கருதினார். ஆனால் ஆராய்ச்சியில் முனையுந்தோறும் இந்த எண்ணம் அவரிடம் மாறுபட்டு வந்தது. இரண்டாம் பதிப்பு வெளிவருவதற்குள் திராவிட நாகரிகம்பற்றியும் அதனுடன் சைவத்துக்கும் சித்தாந்தத்துக்கும் உள்ள தொடர்பு பற்றியும் பல புத்தாராய்ச்சிகள் வெளிவந்தன. இவற்றால் இரண்டாம் பதிப்பு பெரிதும் மாற்றப் பட்டது. சைவசித்தாந்தத்தின் பழமை, திராவிட நாகரிகத் துடன் அதற்குள்ள தொடர்பு, அதன் தனிமுதன்மை தனிச் சிறப்பு ஆகியவை தனித்தனி இயல்களில் அவ்விரண்டாம் பதிப்பில் விளக்கப்படுகின்றன.

---

## வாழ்க்கையில் இரண்டு

[நெல்லை, திரு. க. சுப்பிரமணியன்]

### நேரிசை யாசிரியப்பா

சென்னியங் கிரிமிசை நண்பரொடு ஏகிக்
காந்தொடுங் காரவும் நந்தையும் அகத்த
துளைதா ரூஞ்சல் இளநிழல் தங்கி
மகிழ்வொடு மேயும் மறிக்கணம் நோக்கியும்
பூக்களும் தேனுண் ணாக்களுஞ் சூழப்
பன்னிறந் தன்னகம் பொருந்திய கன்மிசை
நன்மென காற்றினில் தோயந்து கண்துயின் றும்
நண்பகல் மீள்குவெம் யாமே! விடுமுறை
தண்ணறுஞ் சாரல் இன்னமு நுகர்ந்தும்
துறைத்தீந் தமிழ்நூல் உளங்கொளப் பயின்றும்
இனிய காண்டும் இவ இன்று நிலத்தே
இயற்கை இலக்கியம் எமக்கிவ் விரண்டும்
வாழ்க்கையின் பொருளா யமைந்தன,
ஈங்கெமக் காவன வேறெதும் இலையே!

**குறிப்பு:** சென்னியங்கிரி - சென்னிமலை; இது, கோவை மாவட்டத் துள் உளது. காந்து, ஒடுங்கு, அரா என்க. ஊஞ்சல், மரப்பெயர்.

---

# பேசும் தமிழ்

[திரு. சாமி]

ஒரு ஆங்கிலப் பேராசிரியர் தமிழிலக்கியதகைப் பற்றி 'Illustrated weekly' என்ற இதழில் எழுதியிருந்தார். அந்தக் கட்டுரையில் தற்காலத் தமிழ் இலக்கியதகைப்பற்றியும், கவிஞாகள் எழுத்தாளர்களைப் பற்றியும் தனது விருப்பு வெறுப்புக்கேறறவாறு எழுதியிருந்தார். பாடபுத்தகங்களில் காணபபடும் தமிழ் பேசும்தமிழிலிருந்து பெரிதும் வேறுபட்டு இருக்கிறது; இது இயற்கைக்கு முரணனது என்று குறை கூறியிருக்கிருர். பேசும்தமிழையே பாடப புத்தகங்களில் கையாளுவதாக வைத்துக் கொள்வோம். 'யார்பேசும் தமிழைக் கையாளவேண்டும?' என்று கேட்பின் என்ன விடை கொடுக்க முடியும? பேச்சுத் தமிழ் இடத்திற்கு இடம, இனததிற்கு இனம கூட மாறுபடுகிறது இந்நிலையில் 'யார் பேசுவதுபோல் எழுது வது' என்று கேட்டால் 'ஏன் நான் பேசுவதுபோல், எனது அம்மாமி பேசுவதுபோல்' என்று சொல்ல முடியுமா? ஓரினத் தமிழ் வழக்கையோ, ஒரு மாவட்டத்தார் வழககையோ பாடப் புததகங்களில் வரவிட்டால நமது சிறுர்களின் தமிழ் என்ன ஆவது? ஒரு ஐம்பதாண்டுக்கு முன்னிருந்தோரைவிடத் தற்போதிருக்கும் மாணவர்கள் தமிழ்ப் பற்றும் விழிப்பும் கூடு தலாகப் பெற்றிருப்பதை நாம் பார்க்கிறோம். பேச்சுத்தமிழை எழுதும தமிழில் புகுததிவிட்டால அவர்களது தமிழ்ப்பற்றை யும் தமிழையும் பாழடிப்பதாக முடியும் ஆதலின் பாடப் புத்தகங்களிலோ அல்லது பிற நூல்களிலோ காணப்படும் தமிழ் 'பொதுத் தமிழாக' இருக்கமுடியுமே தவிர, அவரவர் மனம்போன போக்கில் பேச்சுத்தமிழை நிரபபிவைத்ததாக இருக்க முடியாது. நல்ல பேச்சுவழக்குகளை எழுத்தில் நடமாட விடுவதில் குறையொன்றுமில்லை. ஆனல் புரியாத வழக்குகளையும், தனிப்பட்ட வழக்குகளையும், கொச்சைச் சொற்களையும் எழுதும் தமிழில் எடுததாளுவது தமிழுக்கு ஊறு செய்வதாகும்.

பேசுவதுபோல் எழுதவேண்டும் என்று சொல்லும் சிலரு டைய தமிழ், உண்மையில் பேசுவதுபோல் இருப்பதில்லை. அவர்கள் எழுதுவது, பேசுவதுபோல் எழுதவேண்டும் என்ற கொள்கைப் போர்வை மறைவில் வடமொழிச் சொற்களை வாரி யிறைப்பதாகவே இருக்கிறது. பேசுவதுபோல் எழுதுபவர்கள் நடையை நான், குறைகூறுவதாக நினைக்கவேண்டா. உண்மை யில் அந்த நடை (அவர்கள் நடையிலேயே) 'பூரண ஆகிருதியை

அடைந்து, அங்க பரிபூர்த்தியை எய்தி, ஆனந்த சரீரியாய், நூற்றுக்கணக்கான விவித வர்ணங்களுடன், அதிமனோகரமான ரூபவைசித்திரியம்' நிரம்பியதாகத் திகழலாம் அந்த நடை தமிழணங்கின் 'சௌலப்பியத்தை' உயர்த்தி 'அபாக்ரத சௌந்தர்ய' முடையவளாகச் செய்யலாம்! ஆனால் இவர்கள் நடையில் அள்ளி வீசப்படும் சொற்களைப் புரிந்துகொள்ள அகராதியைப் புரட்டவேண்டியிருக்கிறதே படித்தவர்களுக்கே அகராதியைத் துருவித் துருவிப் பார்த்தாலும் அச்சொற்களின் உண்மைப் பொருள் விளங்கவில்லையே இருந்தாலும் அவர்கள் பேசுவதுபோல்தான் எழுதுகிறார்கள்! அதைப்பற்றி ஐயமே இல்லை! இவர்கள் திரு வி. க. வின் நடையைப் போற்றுகின்றார்கள். ஆனால் எழுதும்போதோ அவர் நடையை மறந்து அதைத் தூற்றுவதுபோல எழுதுகிறார்கள். நடுநிலைமையோர் வேண்டும் நல்ல நடைக்கும், இந்த எழுத்தாளர்கள் நடைக்கும், 'அஜகாந்திர தூர' வேற்றுமை இருப்பதை யாவரும் அறிவர் 'அஜகஜாந்திரம்' என்ற மணியான சொல்லுக்குப்பொருள் என்னவென்று என்னைக் கேட்காதீர்கள். இந்த மணியான சொல்லைப் புரிந்து 'ரசிக்கும்' அளவு 'ரசிகமணி'யில்லை நான்! ஒருவேளை அஜகஜாந்திரத்திற்கும் அஜகஜத்திற்கும் (ஆடானை) ஏதாவது தொடர்பிருக்கலாம் என்று என் ஏழை மனம் இரண்டையும் முடிச்சுப்போட்டுப் பார்க்கிறது!

பேசும் தமிழுக்கும் எழுதும் தமிழுக்கும் உள்ள தொடர்பைப் பார்த்தோம். இனிப் பேச்சுத் தமிழ் மாவட்டத்திற்கு மாவட்டம் எப்படி மாறுகின்றதெனப் பார்ப்போம். திருநெல்வேலி, மதுரை மாவட்டங்களில் பேசும் தமிழுக்கும் ஆர்க்காடு மாவட்டங்களில் பேசும் தமிழுக்கும் மிகுந்த வேற்றுமை உண்டு. சோழநாடு, நாஞ்சில்நாடு, கொங்குநாடு ஆகிய பகுதிகளில் பேசும் தமிழ் மாறுபடுவதைக் காணலாம். சிறிதளவு என்பதை 'கொஞ்சூண்டு' என்பார் கொங்கு நாட்டார். 'இத்தனூண்டு' என்பாரும் உளர். 'ரவூண்டு' என்பார்கள் ஆர்க்காடுகளில் வாழ்வோர். 'துக்குனூண்டு' என்பார்கள் தஞ்சை மாவட்டத்தில். 'இதபமதத்தூண்டு' என்று கையைக் காட்டிச் சொல்லும் வழக்கும் உண்டு. பெண் பெரிசாகிவிட்டாள் என்று வழங்குகிறார்கள். தெற்கில் 'சமைந்துவிட்டாள்' என்பர். 'திரண்டுவிட்டாள்' என்று வடார்க்காட்டில் சில பகுதியில் வழங்குகிறது. புதுக்கோட்டை மாவட்டத்தில 'பக்குவமாய்விட்டாள்' என்று சொல்வதும் உண்டு. புஷ்பவதியாய்விட்டாள் என்பர் சிலர். நாகரிகம் தெரிந்ததுபோல் சிலர் 'மேஜர்' ஆகிவிட்டாள் என்பர். வாணல் சட்டியைப் 'பாணல்' என்று வடார்க்காட்டில்

வழங்குவர் 'பொரிக்கஞ்சட்டி' என்று கொங்கு நாட்டில் வழங்கு வர். வறுக்கஞ்சட்டி என்பாரும் உளர். கன்றை ஈன்றவுடன் பெறும் பசும் பாலை 'சீம்பால்' என்பர் பலர். 'சின்னப் பால்' என்பர் தெற்கில் 'கடும்பால்' என்று வடார்க்காட்டில் வழங்குகின்றனர் 'கடும்பு' என்று செட்டி நாட்டில் பயில்கிறது. (கெட்ட) நாற்றம் அடிக்கிறது என்பதை 'வீச்சம் அடிக்கிறது' என்பர் தெற்கில். 'கவுலடிக்கிறது' என்று சென்னையில் கூறுவர். 'கப் படிக்கிறது' என்பர் வடார்க்காட்டில். 'அதிகம்' என்ற சொற் பொருளில் 'கூடுதல்' என்று தெற்கில் வழங்குகிறார்கள். 'கொள்ளை' என்ற சொல்லும் அதே பொருளில் வழங்கப்படு கிறது. 'பணம் மிச்சமாயிருக்குது' என்ற வடார்க்காட்டு வழக் கில் 'மிச்சம்' அதிகம் என்ற பொருளில் வழங்குகிறது. 'எச்சா யிருக்கிறது' என்ற கொங்கு நாட்டு வழக்கில் 'எச்சு' (எச்சம்) எனும் சொல் அதே பொருளில் வழங்குகிறது.

விளக்கை அவித்துவிடு, அணைத்துவிடு என்பது பரந்து பட்ட வழக்கு. விளக்கைச் சின்னதாக்கு என்றும் சொல்லுவ துண்டு. 'விளக்கைக் குளிரவிடு' என்பது தெற்கில் வழங்கு கிறது 'விளக்கைப் பெரிதாக்கு' என்ற மங்கல வழக்கும் இதே பொருளில் பேச்சு வழக்கில் சில இடங்களில் பயில்கிறது. 'விளக்கை நூத்திவிடு' என்பர் வடார்க்காட்டில் வாழ்வோர். இச் சொல்லில் 'நூது' என்பது அடிச்சொல். 'நெய்யால் எரி நுதுப்பேம்' என்று குறளில் இச் சொல் பயில்வது வியப்புக் கிடமானது. குறளைத் தவிர வேறு நூல்களில் இச் சொல் வரு வதாகத் தெரியவில்லை. இச் சொல் வடார்க்காட்டில் பேச்சு வழக்கில் புகுந்து இருப்பது மிகமிக வியப்புக்குரியது. வெயில் காலத்தில் புழுக்கமாய் இருக்கின்றதென்கிறோம். உப்புசமாய் இருக்கின்றதென்பார் கோவை மாவட்டத்தில். உம்பலாயிருக் கின்றதென்பார் வடார்க்காட்டுப் பகுதிகளில். உம்பல் என்ற சொல் 'பெருகுதல்' என்ற அடிப்பொருளில் மன்னர் கால்வழி, யானை ஆகியவற்றைக் குறித்துச் சங்க நூற்களில் வழங்கியது. 'உப்புசம்' என்ற சொல் வயிற்றுக்கோளாறைக் குறித்துத் தென் னார்க்காட்டில் வழங்கும். உப்புசம், உப்புதல் ஆகிய சொற்கள் 'உம்பல்' அடியாகப் பிறந்தவேயாம். 'புழுக்கல்' எனும் சொல் சங்க நூற்களில் வெந்தவைகளைக் குறித்து வழங்கும் சோற்றை, ஊன் புழுக்கையும் குறித்து வருகின்றன. 'புழுங்கலரிசி' என்ப தும் இதே பொருளதே. 'துடைகாலிப் பயல்' என்பது ஒரு வழக்குச் சொல். 'போடுகாலன்' எனவும், 'ஆடுகாலன்' எனக் கொங்கு நாட்டிலும் வழங்குகிறது. 'விடுகாலிப் பெண்கள்' என்ற வழக்கில் வரும் 'விடு' எனும் சொல் 'தனி' என்ற

பொருளில் வழங்குகிறது. 'விடுகர்சு' என்ற பேச்சு வழக்கி லும் 'விடுபூ' என்ற இலக்கிய வழக்கிலும் 'விடு' என்ற சொல் பயில்கிறது. விடுபூவை உதிரிப்பூ வென்பர். உதிர்ந்த மாவால் ஆன பிட்டைக் கொங்கு நாட்டில் உதிரிப் பிட்டு என்பர். செருப்பை 'நடையன்' என்பர் புதுக்கோட்டையில். புதை அரணம், மிதிதோல், தொடுதோல் என்பன இலக்கிய வழக்குகள் நீர்ப்புணாபபைத் 'தடுமம்' என்பா செட்டிநாட்டில். பசு பயிராதலே, பசு பலனுதல் என்றும வழங்குவர். மேக மூட்ட மாக இருக்கிறது, மங்குலாக இருக்கிறது, வானததில் மாசு இருக்கிறது, ஆகியவை ஒரு பொருள குறிதத பேச்சு வழக்குகள். மலிவாகக் கிடைக்கிறது என்பர். அதையே 'சல்லீசாகக கிடைக் கும' என்பர் தென்னாக்காடு மாவட்டத்தில். 'சஸ்தாவாக கிடைக்கும்' என்பர் வடார்க்காடு மாவட்டததில். 'சல்லீசாக' என்ற சொல்லின் எதிர்ச்சொலலான 'வல்லீசாக' என்பது கொஙகு நாட்டில் வழஙகுகிறது. பதவிசாக, நறுவிசாக என்பனவும் தெரிந்ததே இமமுறையில் பேச்சுவழக்குகள இடத்திற்கிடம் மாறுபடுவதற்குப் பல எடுததுக்காட்டுகள் காட்டலாம். இடமஞசி விடுததனம.

சிறந்த பேச்சு வழக்குகள் பல உள அவைகளை எழுத்து நடையில கையாள்வது நல்லது. 'இசை கேடாக' மாட்டிக் கொண்டேன என்பது ஒரு சிறநத வழககு 'உஙக பிள்ளை மட்டும் ஒவியப் பிள்ளையா' என்று கொங்கு நாட்டில் வழஙகும் வழக்கு மிகச் சிறந்தது. 'அதிசயம, வியபபு' எனற பொருளில் இதே பொருளுடைய 'சித்திரம' என்ற சொல பெருங்கதை யில் வழங்குவது கவனிககத்தக்கது சட்டி உடைநதுவிட்டால், அது 'வாய்ப்பாட்டில' உடையலாம். 'அலேயிலே' (பக்க வாட்டததில்) உடையலாம். 'நிலைக்குத்தாகவும' உடையலாம். அல்லது 'தூரில்' உடையலாம. 'வாயுள்ள பானைக்குத தூரிலே ஒட்டை' என்பது பழமொழி 'தூர்' அடியெனும பொரு ளிலும் அடியில் கிடக்கும அழுக்கெனும பொருளிலும் பயில் கிறது. ஒட்டை விழுந்துவிட்டது எனபதைத் 'தொண்டி விழுந்து விட்டது' என்பா வடார்க்காட்டில் 'சில் விட்டுவிட்டது' என்பர் கொங்கு நாட்டில். 'வடிவாக இருககிறது' என்ற ஈழநாட்டு வழக்குச் சிறந்தது இம்முறையில சிறந்த வழக்குகள் இருப்பதோடு சிறப்பறற வழக்குகளும உள பேசும் தமிழுக்கு எடுத்துக்காட்டாக வடார்க்காடு மாவட்டத்தில் வழஙகும தமிழை மட்டும் பார்ப்போம காரணம வடார்க்காட்டுப் பேச்சுத் தமிழ் அவ்வளவு சிறப்புடையது அல்ல வடாாக்காடு தெலுங்கு நாட்டின் எல்லையைத் தழுவி உள்ளது. வடார்க்காட்டில்

தெலுங்கர்கள், மகமமதியர்கள் செல்வாக்கு நிறைய உள்ளது. ஆதலின் அவர்கள் பேசும் தமிழ், சொற்களைப் பொறுத்த மட்டிலுமன்றி,ஒலியிலும் வேற்றுமைப்படுகின்றது. வடார்க்காட்டில் வடமொழி ஒலியுடன் சொற்களை ஒலிப்பதைக் காணலாம். இழுத்துக்கொண்டு என்பதை 'இஸ்துக்கொண்டு' என்றும், குதித்து என்பதை 'குஜ்சு' என்றும ஒலிக்கின்றார்கள் 'நாஸ்தா' சாபபிடுதல், 'சஸ்தாவா'க்கிடைததல் ஆகிய பிறமொழிச் சொற்களை வழங்குவதொடு தமிழ்ச் சொற்களையும் 'இஸ்புஸ்' ஒலியோடு வழஙகுகிறார்கள். குழம்பை 'சேர்வா' என்றும் விருந்தை 'தா்வாத' என்றும் உருதுச் சொற்களைக் கொண்டு வழஙகுகிறார்கள்.

மற்றும் பேஜாராக இருக்கிறது, 'எல்லாம் திராப' திராணி இல்லை, 'டகுல் பாசசிபபயல' ஆகிய பல உருது தெலுங்குச சொற்கள் வழங்குவதைப் பார்க்கலாம். 'நூக்கித் தளு' என்பதும முனையைக 'கொனை' என்பதும் தெலுஙகினல் வந்தது. 'ராவடி செய்தல' என்றசொல் 'அடாவடி' எனற சொல்லிலிருநது வநதிருக்கலாம். 'சடாக்கு, மா' முதலிய அளவைகளும இஙகுதான் வழங்குகின்றன. வீடு மூடிககிடக் கிடக்கிறது என்பதற்கு, 'வீடு ஒடிப்போயிருக்கு' என்று கூறுவதை வடாரக்காட்டில மட்டும தெரியக்கூடிய வழக்கு. இதுபோல் பல சிறப்பற்ற வழக்குகள் வடார்க்காட்டில் பயிலுகின்றன.

பேச்சுத்தமிழ் மாவட்டத்திற்கு மாவட்டம மாறுவதைப் பார்ததோம். மதத்திற்கேற்பவும சில மாறுகின்றன. சமையலறை, சமையல் உள் எனபது அடுப்பங்கரை எனறு கொங்கு நாட்டில வழஙகுகிறது. கிறிததுவர்களில சிலா 'குசுனி' என்ற போர்த்துக்கல சொல்லை வழங்குகிறார்களா. முகமமதியர்களிடையே பல உருதுச்சொற்கள தமிழோடு விரவி வழஙகப் படுகின்றது பேச்சுததமிழ் இம்முறையில் இடத்திற்கிடம், சிறிதளவில இனம், மதம் ஆகியவைபற்றியும் மாறுபடுவதால் பேசும தமிழை எழுதும் தமிழாக்கும்போது மிகவும கவனிப்பாக இருக்கவேண்டும். எல்லாப் பேச்சு வழக்குகளையும் அப்படியே எழுதும் தமிழில் ஏற்றுவதென்பது தமிழ்க்கொலையாக முடியும.

---

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) நாத்துக்குடியில் தமிழ் ஆட்சிமொழி மாநாடு

கடந்த 30—5—54-இல் திருஞானசம்பந்தர் திருமடத்தருகே அமைந்துள்ள சுந்தரப் பந்தலில் தமிழ் ஆட்சிமொழி மாநாடு நடைபெற்றது. ஓய்வுபெற்ற முன்னாள் மாவட்ட நீதிபதி திரு. ஆ. கசபதி நாயகர் அவர்கள் தலைமையேற்றார்கள். சென்னை மாகாணத் தமிழ்ச் சங்க அமைச்சர் திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளை அவர்கள் தமிழ் மொழியின் சிறப்புபற்றியும், அது ஆட்சிமொழியாகவேண்டியதன் இன்றியமையாமைபற்றியும் சொற்பொழிவாற்றினார்கள். பின்னர் தமிழை ஆட்சிமொழியாக்குதல், தமிழ்நாட்டின் எல்லை வடவேங்கடம் தென்குமரி வரை சேர்த்தமைத்தல் பற்றிய தீர்மானங்களைத் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக ஆட்சிப் பொறுப்பாளர் திரு. வ. சுப்பையாபிள்ளை, ஔவை சு. துரைசாமி பிள்ளை, வீர. சிவ சுப்பிரமணியபிள்ளை ஆகியோர் வழிமொழிந்து சொற்பொழிவாற்ற மாநாடு இனிது முடிந்தது.

## (உ) நெல்லையில் தமிழ் ஆட்சிமொழி மாநாடு

தென்னிந்திய தமிழ்ச்சங்கம், அருணகிரி இசைக்கழகம், சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம் ஆகியவற்றின் சார்பில் கடந்த 31—5—54-ல் நெல்லை சந்திப்பு தருமபுர மடத்தில் தமிழ் ஆட்சிமொழி மாநாடு நடைபெற்றது. மாநாட்டுக்கு ஓய்வுபெற்ற மாவட்ட நீதிபதி திரு. ஆ. கசபதி நாயகர் அவர்கள் தலைமை ஏற்றார்கள். தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக ஆட்சிப் பொறுப்பாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை வரவேற்புரை வழங்க, இந்துக்கல்லூரிக்குழுச் செயலாளர் திரு. க. இராமசாமிக்கோனார் மாநாட்டைத் திறந்துவைக்க, திரு. கி. ஆ. பெ. விசுவநாதம், திரு. முத்துராமலிங்கத்தேவர், இ. மு. சுப்பிரமணிய பிள்ளை, மற்றும் பல பெரியோர்கள் ஆட்சிமொழி தமிழே யாதல் வேண்டும் என்பதுபற்றிச் சொற்பொழிவாற்ற, அருணகிரி இசைக் கழகத்தார் 'தமிழ் ஆட்சி மொழியா?' என்னும் உரையாடலை நடத்திக் காட்ட மாநாடு மிகச் சிறப்பாக நடைபெற்றது.

பின்னர், வடவேங்கடத்தையும் தென்குமரியையும் எல்லைகளாகக் கொண்டு சித்தூர், நெல்லூர் ஆகிய மாவட்டங்களையும், தெற்கே திருவாங்கூர்-கொச்சி நாட்டிலுள்ள தமிழ் வழங்கும் பகுதிகளையும் உள்ளடக்கித் தமிழ் நாட்டை ஒரு தனி நாடாக ஆக்கும்படியும் ஆந்திரம் பிரிந்த தமிழ் நாட்டை '**தமிழ்நாடு**' என்றே அழைக்கும்படியும் இந்திய அரசியலாரை வேண்டியும், இலங்கைவாழ் தமிழர்களின் துயர் துடைக்க இந்திய அரசியலார் முன்வரவேண்டும் என வேண்டியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

பின்னர் டாக்டர் மு.வரதராசனார் அவர்கள் இயற்றிய 'இளங்கோ' என்னும் நாடகத்தை அருணகிரி இசைக்கழகத்தார் திறம்பட நடித்துக் காட்டினர். வித்துவான் அ. க. நவநீதகிருட்டினன் அவர்கள் நன்றி கூற மாநாடு இனிது முடிந்தது.

**குறிப்பு :** தமிழ் ஆட்சிமொழியாக வேண்டும் என்று சென்னையிலே துவங்கிய முழக்கம், பெண்ணாகடம், தூத்துக்குடி, நெல்லை ஆகிய பலவிடங்களிலும் கேட்கவாரம்பித்துவிட்டது. மேலும் பல

மாவட்டஙகள் இம்முயற்சியில் முனைய ஆரம்பிததுள்ளன இனியேனும் ஆட்சியாளா தமிழ ஆட்சிமொழியாகவேணடிய இன்றியமையாமையை உணாவார்களாக.

(கூ) 'குமுதம்' கூற்றுப் பொருந்துமா? அது நிருந்துமா?

அமுதம் அனைய தமிழமொழி ஆட்சிமொழியாதல் வேண்டுமெனபது உண்மைத தமிழாதம் உளளக்கிடக்கை. தமிழ் ஆட்சிமொழியானல்தான் தமிழா வாழவு பெறுவர்—தமிழநாடு அதன உண்மைச சிறப்பைப்பெறும இது தமிழரின் ஒன்றுபட்ட உணாசசி.இவவுணாசசியின் விளைவாகவே தமிழ ஆட்சிமொழியாகவேண்டும என்னும் எண்ணம எழுசசியாக ஆங்காஙகே தலைதூககக காணகிறோம்.

எனவே, ஆட்சிமொழி பறறிய முயற்சியில் இனித தமிழா எததுணை விரைவாக முன்னேறவேண்டுமோ அததுணை விரைவிலே முனனேறவேண்டும. இம்முயறசியினை எதிாப்போா இலா எனறே சொல்லவேணடும். ஒருசிலா உணடெனினும அவர்களும வெளிப் படையாக எதிாககத் துணிந்திலா. இதழகள் யாவும தமிழ் ஆட்சி மொழியாவதை வரவேற்கின்றன.

எனினும், ஒருசிலா இயலபாகத தமக்குளள பிற்போக்குத தன்மையை விட்டபாடில்லை. தமிழ ஆட்சிமொழியாக வேண்டும என்பதை ஏற்றுககொள்வதுபோற் காட்டி 'அவசரப்படக்கூடாது' என்று அறிவுரை கூற முன்வருகின்றனர். இதற்கோா எடுததுக்காட் டாகத் திகழகிறது 'குமுதம்' என்னும் கிழமை இதழ. 1—6—54-ல் வெளிவநத அவவிதழ கூறுவதைச சறறுக கூர்ந்து நோக்குமின்:

"பஞ்சாயத்து நிர்வாகியின் வரிப்பாககி அறிவிப்பு முதல், சட்ட சபை உறுப்பினரின் ஒழுங்குப பிரசினைவரை, சகல நடவடிக்கைகளும் இன்று முதலே, இநத விநாடி முதலே தமிழில் நடததப்படவேணடும் என்று கிளாசசி செய்வது அவசரப்புத்திக்கு அடையாளமாக இருக் குமே தவிர அறிவு முதிாசசியின சின்னமாக இருககாது" என்று எழுதுகிறது.

'குமுத'த்தின் இககூற்று மிக மிக இரஙகத்தக்கது. இந்நாட்டில் ஆங்கில ஆட்சி நிலவிய காலையில் இக்கூற்றினைக் 'குமுதம' வெளியிட் டிருககுமாயின் அதில் சற்றேனும் பொருள் இருககமுடியும். நாடு விடுதலைபெற்று ஆணடுகள் ஏழாகின்றன. இநநாள் காறும் தமிழுக்கு ஏற்றமிலலையானல்—தமிழ் ஆட்சிப்பீடம் ஏற இயலவில்லையானல் விடுதலை என்ற சொல்லுககே பொருளில்லை. நாட்டுப்பற்றுக்கு அடிப் படை மொழிப்பற்று. நாட்டு விடுதலைககு அடிப்படை மொழி விடுதலை. ஏழாண்டுக் காலத்தில் இதனை நாம் காணமுடியவில்லையானல் தமிழரின் குரல் ஆட்சியாளா செவிப் புகவிலலை, அல்லது தமிழை ஆட்சிமொழி யாக்கத தமிழா தகுதியற்றவர் என்பதாக முடியும். எனவே, தமிழை ஆட்சி மொழியாகக நாடு மடிதற்று நிற்கின்றதென்பதை இருணடபோது மலரும் குமுதம் உணர்க. இனிக் குமுதம் போன்ற பிறபோக்குடைய இதழகள் நாட்டில் நெடுநாள் உலவ முடியாது. அது உலவவேணடுமானலே இத்தகைய போலிக்கொள் கைகளை விட்டுவிட்டு உடனடியாகத் திருந்தவேண்டும்.

---

# மதிப்புரை

உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன்

இந்நூல் டர்பன், நெட்டால் "செந்தமிழ்ச்செல்வன்" ஆசிரியர் திருவாளர், கோ. இராமசாமி அவர்களால் எழுதப்பெற்றுளது. இவர்கள் '**தமிழ் வேதம், சிவபிரான் தோற்றம், சிவராத்திரி, சேத்தமிழ் சீவன்நிலை, உருவவணக்கம், ஊன்வீடு, அறம்** முதல் ஓம் அல்ல, **பிரார்த்தனைச் சுருக்கம்** முதலிய பன்னூல் ஆசிரியர். திருமுறையும் சித்தாந்தமும் தென் தமிழ் நாட்டுக்கே உரிய சித்தாந்த சைவத்தின் திருமறை என்னும் திருவுளங் கொண்டவர். அந்நெறிக்குத் தொண்டாற்றுவதே பிறவிப்பயன் என்னும் அன்பு பூண்டவர். '**உலகெலாம்**' என்னும் தமிழ்மறை ஒன்றே முப்பொருள் உண்மை காட்டிச் செப்பும் திருவடி சேர்க்கும் என்னும் திடநம்பிக்கையுள்ளவர். இவ்வுண்மையைப் பன்னெடுங்காலமாகத் தென்னாப்பிரிக்கா முதலிய பல தேயங்களில் மெய்ப்பித்துக்காட்டிய பெரியார் 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்னும் திருமூலர் திருமொழியைக் கைக்கொண்டொழுகி ஒழுகுவிப்பவர்.

இந்நூற்கண் '**உலகெலாம்**' என்னும் திருப்பாட்டைப் பதினன்கு வகைப்படுத்தி இனிய எளிய நடையில் தெளிவுற விளக்கியுள்ளார்கள். '**சைவசித்தாந்தம்**' என்னும் பொருள்பற்றியும் விரிவாக விளக்கியுள்ளார்கள். இதனைக் கற்பார்க்குச் சைவசித்தாந்த மெய்ந்நெறி விளக்கமும் திருமுறைச் சித்தாந்த நுணுக்கமும் தெள்ளிதிற் புலனும் என்பது உறுதி. முதற்பதிப்பு ஆயிரம் படிகளே அச்சிட்டுள்ளனர். அவைகள் தென்னாப்பிரிக்க அன்பர்களுக்கே சரியாயின. மீண்டும் விரைந்து அச்சிடுவார்கள் எனத் தெரிகிறது. நூலமைப்பு, தாள், அச்சு முதலியன மிகவும் செம்மை. ஆசிரியரவர்கள் நெடுந்தொலைவான சேய்நாட்டிலுறைந்தும் தாய்நாடு தாய்மொழி தாய்நெறி முதலியவற்றின்கண் பெருவேட்கையும் பேருறுதியும் கொண்டு ஓவாதுழைக்கும் ஒண்மை நனிமிகப் பாராட்டிப் பின்பற்றற்குரியது. புத்தகத்திற் காணப்பெறும் திருக்கோபுரம், திருக்கோவில், மன்னர் முதலிய உருவங்கள் ஆசிரியரவர்கள் நேரிற் சென்று நிழலோவியம் எடுத்தும் வரலாறுகள் உசாவியும் அமைக்கப்பெற்றன. இதன் பொருட்டு அவர்கள் எடுத்துக்கொண்ட ஆள்வினைத்திறன் அளத்தற்கரியது.

பொதுவாகச் செந்தமிழன்பர்களும் சிறப்பாகச் செந்நெறிச் செல்வர்களும் ஆசிரியரவர்கள்பால் பெருநன்றி பாராட்டும் பெருங்கடனுடையார். அவர்கள் அரும்பெரு நூல்கள் நம் நாட்டகத்தும் நிலவ நாம் வேண்டுவன செய்வோமாக.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.

# தமிழாசிரியர் மாநாடு



**முதல் வரிசை இடமிருந்து வலம்** 1 இராமநாதன் செட்டியார, 2 நாவலா, ச சோமசுநதர பாரதியாா, 3 நிதியமைசசா, சி. சுப்பிரமணியம, 4 டாகடா அ சிதமபரநாதச செட்டியார, 5 இராமநாத பிள்ளை, 6 தெனனாககாடு மாவட்டக கலெகடா, ஏ உத்தண்டராம பிளளை, 7 சென்னை முனனாள மேயா, இராமசாமி நாயுடு




| | | |
|---|---|---|
| சிலம்பு உஅ | திருவளளுவா ஆண்டு ஆடி கக௲அரு, ஆகஸட், 1954 | பரல கஉ |

# தமிழாசிரியர் மாநாடு

தமிழ்மொழி தொன்றுதொட்ட பழமையது; அதன் இனிய ஒலிநயம சுவையுடையது, இதனைப பழங்காலத்தில் முதல இடை கடையென முசசங்கம அமைத்து மதுரையில் வளாததனா, இததமிழ இயல் இசை நாடகம் என முவ்வகைப் பிரிவாகப பிரிதது அதைத திறம்பெற வளாத்தனா நம தமிழ்ப் பெருமக்கள.

இவர்கள் அறிவும் திறனும் ஆற்றலுமிக்காராயிலங்கினர்; இததிறம் மிக்காரே ஆசிரியரெனப்படுவோராவர் தமிழாசிரியர் கற்பன கற்று அறிவுததிறம் மிககோராய் விளங்குவோராவர். ஒருநாடு, முன்னேற்றம் பெற்றுள்ளதென்பதை அந்நாட்டின் மொழியைக்கொணடு நன்குணரலாம். அங்ஙிலயில் ஆய்ந்து பாாத்தால் நம் தமிழ், பழங்காலந்தொட்டு வளம்பெற்றுச் சிறந்த மொழியென்பது, அதன்கண் பரநதுகிடக்கின்ற நூற்கருவூலச் செல்வங்களே நன்கு காட்டும்.

இரண்டாயிரம் மூவாயிரம யாண்டுகட்கு முற்பட்ட நூற் சுவடிகளைப் பார்த்தால், நம் நாட்டில் மொழியும் கலையும் பண்பும் அரசியலும் காதலும் அறமும் மறமும் பிறவும் எவ் வாறு ஓங்கி வளர்ந்து வளம்பெற்றிருந்தன என்பதை நன்கு அறியலாம.

"இரவலர் அவரைப்
புரவெதிர் கொள்ளும பெருஞ்செய் ஆடவர்
உடைமை ஆகும் அவருடைமை
அவா, இன்மை ஆகும் அவரின் மையே"[1]

இரந்துண்பவரை எதிர்கொண்டழைத்துப் பொருள் வழங்கும் செல்வரின் உடைமை, இரவலருடைமையாகவும், அவர் வறுமை, செல்வரின வறுமையாகவும் கொண்டனா எனனும் பொதுவுடைமைக் கருத்துப் பலலாயிரம ஆண்டுகட்கு முன்னரேயே தோன்றிற்ருனல்,

"யாதும ஊரே யாவரும கேளிர்"[2]

என்னும் வேறுபாட றற பொதுநிலைக் கருத்துப் பிறநததானல்,

"உள்ளது சிதைப்போா உளரெனப் படாஅர்
இல்லோா வாழககை இரவினும் இளிவு"[3]

எனனும வாழ்ககைச் செமமையைப்பற்றிய கருததுக்களும் இருக்குமானல், தமிழ்நாட்டின் பண்பாடு எவவளவு சிறந்ததாக இருந்துவநதுளது என்பதைக் காண்மின்.

இத்தகை அரிய கருத்துரைகளை—வாழ்க்கை முறைகளை—அக்கால நிகழ்ச்சிகளை—நமககுத் தெரியும்படி தமது அரிய பாக்களால் வடிததுத்தந்தோர் ஆசிரியராகிய புலவர்களே. அவர்தம் வழித் தோன்றல்களே தற்காலத தமிழாசிரியர். கற்றுத் துறைபோய நந்தமிழாசிரியர்கள், வேறுமொழி கற்றுத் தேர்ந்த ஆசிரியரளவு உயர்வு பெற்றனரில்லை. ஆங்கில மொழி கற்றூர்க்குக் கொடுககும மதிப்பு, இந்தி போன்ற ஏனைய மொழிகளைக் கற்றுததேறியவர்க்குக் கொடுக்கும் மதிப்பு அளவு, நநதமிழாசிரியர்கட்கு நாட்டிலும் அரசாங்கத்திலும் கல்லூரிகளிலும் கொடுக்கப்பெறுவதில்லை இது, நாட்டிலுள்ள அறியாமையைக் காட்டுகின்றதன்றி வேறன்று. மக்களுக்குப் பழமையில் பற்றின்மையும் புதுமையில் பற்றுங்கொள்வது இயல்பு. இம்முறையில் தாம பழகிய தம்மொடு பிறந்தது முதல் ஒன்ருக வந்த மொழியை மதிப்பதில்லை. இக் குறைபாட்டினல் பழத்தைப் பளமென்றும் குறிப்பைக் குரிப்பென்றும்

1, 2. புறம் : ககூக, ககூஉ. 3. குறுந்தொகை . உஅந.

பிழைபட எழுதும நிழ்நிலை பெற்றனர்; இதைக் குறித்து நாட்டுமக்கள் வெட்குவதுமில்லை, ஆங்கிலத்தில் (But) என் பதை (Put) என்று எழுதினுல் எவ்வளவு தவருே அத்தகைத தவறே இவவாறு எழுதுவதுமாகும். ஆனுல் இதைபபற்றி மக்கள பொருட்படுததுவதில்லை; தமிழில எப்படி எழுதினு லெனன? எனற கருததினுல், இன்று பிள்ளைப பாண்டியன் போன்ற வீரர்கள இல்லாத குறை. இவ்வாறு மக்களிடையே தவருன கருதது ஏற்பட்டதனுல், அஃது அரசியலாரிடமும் நுழைநது நாட்டு மொழியாகிய நம் தமிழ் புறககணிககபபடலா யிற்று. தமிழ்மொழி கொச்சையாக வீட்டிலும் நாட்டிலும் பேசப்படுகினறதன்றி, வேறு பயன்படுத்தக் கண்டிலேம்

அரசியலுக்கு ஆங்கிலமும் இந்தியும், பாடலுக்குத் தெலுங்கு, கடவுள வழிபாட்டுக்கு வடமொழி, கலவையாக்கிப் பேசுதற்குத் தமிழ என்ற நிலையில் இன்றிருக்கின்றது இவ் வாறிருநதால் நாடு எவவாறு முன்னேறும்? மொழி எவ்வாறு மதிப்புறும? இநநிலை மாறவேண்டுமேல் மொழியை உயாத் துதல் வேண்டும; அதற்கு அடிப்படையாக உள்ளோர் தமிழா சிரியர்கள்; அவர் உயர்வு, மொழி உயர்வு, அதன் உயர்வு, நாட்டு உயர்வு; நாடு உயர்நதால் செல்வமும் கலையும் சிந்தாது பெருகும். எனவே இதைக் குறிக்கோளாகக்கொண்டு அண்மையில் 11-7-54-ஆம நாள், சென்னைமாநிலத் தமிழாசிரியர் மாநாடு எனப் பெயரிய மாநாடு ஒன்று, தில்லை அண்ணுமலைப் பலகலைக் கழகப் பட்டமளிப்புவிழா மண்டபத்தில நாவலர் திரு. ச. சோமசுந்தர பாரதியார் அவர்கள் தலைமையின்கீழ்ச் சிறப்பாக நடநதது, அம் மாநாட்டில் தமிழ்மொழிக்கும், நாட்டுக்கும, தமிழாசிரியர்கட்கும் வேண்டும் முதன்மையான நிலைப்புறிய பல முடிபுகள் செய்யப்பெற்றன. அதனுட் சிலவற்றை அடுதத பக்கத்தில் காண்க.

நாட்டில் இத்தகைய மாநாடுகள் கூடி மொழிக்கும் கலைக்கும் நாகரிகங்கட்கும் எழுச்சியுறத் தொண்டுபுரிவது குறித்துப் பெருமகிழ் கொள்கின்றோம் நாடு சிறக்க—மொழி வளர—கலை ஓங்க—தமிழாசிரியர்கள் முன்னேற்றமுற எல்லாம் வல்ல இறை அருளை வேண்டுகின்றோம்.

தமிழாசிரியர் மாநாட்டில் செய்த முடிவுகளிற் சில :

(க) தமிழ் முதன்மொழியாகி உள்ளமையின், இதுகாறும் தமிழாசிரியர்களின் ஊதியம்பற்றி விடுத்துள்ள அரசியலார் கட்டளைகள் தெளிவின்மையால், யாவற்றையும் நீக்கிவிட்டுத் தமிழாசிரியர்கட்கு (பிறமொழி ஆசிரியர்களின் தொடர்பிலிருந்து விலக்கி) தனி ஊதியத் திட்டம் அமைக்குமாறு அரசியலாரைக் கேட்டுக்கொள்ளுகின்றது.

(உ) தனித்து வித்துவான் பட்டம் பெறுவதற்குள்ள வயதுத் தடையை விலக்கவும் வித்துவான்கள் எஸ். எஸ். எல். சி., பி. ஓ. எல். தேர்விற்குச் செல்லின், தமிழ்ப்பகுதிக்கு விலக்களிக்கவும், ஃபிரஞ்சிந்தியாவிலுள்ள ஆசிரியர்களும் நம் ஆசிரியர்கள் பெறும் தேர்வுச் சலுகைகள் பெறவும் சென்னைப் பல்கலைக் கழகத்தார் உடனடியாகக் கட்டளையிடும்படி கேட்டுக்கொள்ளுகின்றது.

(௩) தஞ்சை மாவட்டத்தில் அரசாங்கத் திட்டப்படி எல். டி. ஆசிரியர்களுக்கு ஊதியங் கொடுத்து மொழி ஆசிரியர்களுக்கு அவ்வாறு செய்யாததை அறிந்து இம்மாநாடு வருந்துகின்றது. மொழியாசிரியர்களுக்கும் எல். டி. ஆசிரியரைப்போல் அரசாங்கத் திட்டப்படி ஊதியம் கொடுக்குமாறு மாவட்டத் தலைவர்களை வற்புறுத்தும்படி அரசாங்கத்தை வேண்டுகின்றது.

(௪) தமிழ்ப்பாடப் புத்தகங்களைத் தேர்ந்தெடுக்கும் பாடப்புத்தகத் தேர்வுக்குழு (Text Book Committee) உறுப்பினர்களாகத் தமிழாசிரியர்கள் நியமிக்கப் பெறவேண்டுமென இம்மாநாடு வேண்டுகின்றது.

(௫) அரசியலார் விடுமுறை நாட்களில் 'திருவள்ளுவர் திருநாள்' அல்லது 'திருக்குறள் நாள்' என்பதாகச் சூலைத் திங்கள் இறுதிவாரத்தில் ஒரு நாளைக் குறித்து, அந்நாளைச் சென்னைமண்டிலம் முழுதும் பொது விடுமுறையாக அறிவிக்குமாறு இம்மாநாடு கேட்டுக்கொள்கின்றது.

---

# எழுத்தும் புணர்ச்சியும்

[செல்லூர்க்கிழார் திரு. செ. ரெ. இராமசாமிபிள்ளை]

(செல்வி, சிலம்பு உஅ, பரல்: கக-இன், ௫உசு-ஆம் பக்கத் தொடர்ச்சி.)

மெய்யெழுத்துக்களில் ஏறிநிற்கும் அகரவுயிரை இயல் நூலார் எழுத்தாகக் கொள்வதில்லை. அதனைச் [1]சாரியை யென்றே வழங்குவர். உயிரெழுத்துக்களைத் தனியாகச் சொல்லும்போது 'கரம்' என்னுஞ் சொல்லைச் சேர்த்துக் குறிலுக்கும் 'காரம்' என்னுஞ் சொல்லைச் சேர்த்து நெடிலுக்கும் அதனுள்ளும் 'கான்' என்னுஞ் சொல்லைச் சேர்த்து ஐ, ஔ என்னும் நெட்டுயிர் இரண்டுக்கும் வழங்குவர். மெய்யெழுத்துக்கள் பதினெட்டுக்கும் 'கரம்' என்னுஞ் சொல்லொன்றையே சேர்த்து வழங்குவர். இவைகளே 'சாரியை' எனப்பெறும். திருவள்ளுவர் 'அ'வைக் குறிக்க,

[2]'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு'

என்பதில் அகரமென்றே கூறியது காண்க. ஏனைய நூல்களினும் இவ்வாறு ஆட்சிபெற்று வருதலைக் காணலாம். எனவே தனி எழுத்துக்கள் கூடச் சாரியையென்ற புணர்ச்சி பெற்றே இயங்குதலைக் காண்கின்றோம்.

## மொழிகளின் புணர்ச்சி

இனி, மொழிகள் எவ்வாறு சேர்கின்றன; அவைகளால் சொற்கள் எவ்வாறு மாற்றம் பெறுகின்றன என்பனவற்றைக் காண்பாம்.

மொழி என்பது தனி எழுத்தேனும், இரண்டு, அதற்கு மேல் தொடர்ந்த எழுத்துக்களேனும் ஒரு பொருளை உணர்த்துமானால் மொழியெனப்பெறும். 'ஐ' எனப்படும் தனி உயிர் நெட்டெழுத்து இது, இங்கே எழுத்தாக மட்டும் நில்லாது சொல்லாக வந்துள்ளது. இது பலபொருள் குறித்த ஓரெழுத்து மொழி. தலைமை, வியப்பு, மென்மை முதலிய பல பொருள் தருவதாகும்.

[3]'என்ஐமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்ஐ
முன்னின்று கல்நின் றவர்'

[4]'என்ஐக்கு ஊர்இஃ தன்மை யானும்'

1. சார் இயை - சேர்ந்து பொருந்தியது; இதில் எழுத்தும், சொல்லும் வரலாம். 2, 3. திருக்குறள்: க, எஎக. 4. புறம்: அரு.

"ஐ வியப்பாகும்" [1]
"ஐதுவீழ் இகுபெயல் அழகு கொண் டருளி" [2]

என ஆன்றோர் நூல்களில் வழக்காறுற்று வருவதால் தெளியலாம். இதுபோன்றே மற்றைய ஓரெழுத்து மொழிகளும், மாடு, வான் முதலியன இரண்டெழுத்து மொழிகள்; பாட்டு, அழகு, புன்கண், கண்ணன் முதலியன இரண்டெழுத்துக்களுக்குமேல் வந்த சொற்கள்; இவைகளுள் உயிரெழுத்தை இறுதியாகவுடைய சொற்களும் மெய்யெழுத்தை இறுதியாகவுடைய சொற்களும் வந்துள்ளன. தமிழ்மொழி மரபுப்படி இறுதியில் நிற்பன உயிர்களும், மெய்களுள் வல்லெழுத்துக்கள் நீங்கலாகப் பன்னிரண்டு மெய்களும் ஆம். வல்லெழுத்து, வன்மை (வலிமை பெரிய) ஒலியுடைமையால் இறுதியில் முடிவதில்லை. கங்குகரையின்றிப் பெருக்கெடுத்தோடும் வெள்ளநீர், இடையில் தடைப்பட்டு நிற்பதில்லை, தடுத்த அணைகோலினும் அதனுள் அடங்கி நில்லாது அவைகளைத் தகர்த்துக்கொண்டாவது, அணையானது தகர்க்கும் அளவில்லாது திண்மை பெற்ற இட்டிகைகளால் ஆக்கப்பெற்றிருக்குமானால் அவ்வணைகட்குமேல் வழிந்தாவது, செல்வதைக் காண்டுமன்றோ? அது போன்றே, வல்லெழுத்துக்களும் கடையில் இருந்து ஏனைய மெலி இடையெழுத்துக்களால் தடையேறப்படுமானால், அவைகளையும் தன் ஒலியாக மாற்றிக்கொண்டு வீறுபெற்று வழங்கலைத் தமிழ்மொழிகட் காண்கின்றோம். 'இரவீந்திரநாத,' 'இராசேந்திரபிரசாத,' 'நட்,' (Nut) 'வாட்ச்' (Watch) முதலிய வேற்றுமொழிச் சொற்கள் த, ட, ச முதலிய வன்மையொலியால் முடிந்துநிற்றலைக் காண்கின்றோம். இவைகளைத் தமிழில் எழுதமுற்பட்டால இரவீந்திரநாது, இராசேந்திரபிரசாது, நட்டு, வாட்சு என உயிரவந்தே முடிகின்றது. 'ஏன் இவ்வாறு முடிகின்ற' தெனை வினவின, தமிழ் இயற்கைச் செம்மொழி, அது, உரத்த ஒலியால் முடிவதில்லை, பேரொலியானது இறுதியில் மெலவொலியால் முடிவதை நாம பன்முறை கேட்கின்றோமன்றோ? பெருமழை பொழியுங்கால இடி. இடித்தலைக் கேட்கின்றோம். அவ்விடிமுழக்கம் முடியும்போது குறைந்த ஒலியால் முடிவதைக் கேட்கின்றோமன்றே வாண வெடிகளும பேரொலியோடு வெடித்து, இறுதியில் சிறறொலியோடு முடிதலைக் கேட்கின்றோம். இன்னன போன்றே நம தமிழ்மொழி, இயற்கையோடு தோன்றிய இயல்மொழி ஆகலான், இறுதியொலி வல்லொலியாக முற்றுறுவதில்லை. இவ்வியற்கை, பழங்காலந்தொட்டு நாட்டிலும் ஏட்டிலும் இன்றுகாறும் மாறாது வழங்குதல இறும்பூதுபயப்பதொன்றாகும்.

---

1 தொல்: ருஅடு. 2. சிறுபாண்: கங

தமிழ்மொழியில் வல்லொலி மெல்லொலி இடையொலிகள் ஒரே அளவிற்றாக இருப்பன தனிச்சிறப்புக் குரிமையாகும். இத்தகை இயற்கைத்தன்மை பிறமொழிகளுக்கு இல்லை. சினந்து சொற்கள் பேசும்போது வல்லொலிகள் மிகுவதையும், வணக்கமாகப் பேசுங்கால் மெல்லொலி இடையொலிகள் பயின்று இயற்கையாக வருதலையும் அறிகின்றோம். இதனாலும் இயற்கைச் செம்மொழி தமிழ் என்பதை அரண்செய்கின்றது.

இவ்வாறாக வரும் தமிழ்மொழிக்கடலுள் நிறைந்துள்ள சொற்களில் முதலில் நிற்கும் மொழி நிலைமொழி என்றும், அதன்பின் நிற்கும் மொழி வருமொழியென்றும் கூறுவர், இயல் நூற்புலவர்.

## இயல்புப் புணர்ச்சியும் வேறுபடு (விகாரப்) புணர்ச்சியும்

புணர்ச்சியானது, இயல்புப் புணர்ச்சி, வேறுபடு புணர்ச்சியென இருவகைப்படும். இயல்புப் புணர்ச்சி நிலைமொழியும் வருமொழியும் ஒன்றுபடுங்கால் ஓரெழுத்து முதலியன தோன்றல், திரிதல், கெடுதல் முதலியன இன்றிப் புணர்வது. வேறுபடு புணர்ச்சி மேற்கூறியவற்றுள் ஒன்றோ பலவோ வேறுபடுதல் ஆகும். இவற்றுள் நிலைமொழி ஈற்றில் உயிரும், வருமொழி முதலில் உயிரும் வந்தால் இரண்டிடத்தும் உயிராகலான், உயிரும் உயிரும் சேராது, இணையாது; இருளும் ஒளியும்போல. இவைகளை ஒன்றுபட இணைப்பதற்கு இடையே ஓர் மெய்யெழுத்துத்தோன்றி அச்சொற்களை ஒன்றுபடுத்தும். இதற்கு இயல் நூலார் 'உடம்படுமெய்' என்பர். உடம்படுமெய், உடம்பாக அடுக்கும் மெய், அல்லது உடம்படுத்தும்—நிலைமொழி வருமொழி இரண்டையும் ஒன்றாக இணைக்கும் மெய் என்பது பொருளாகும். உயிருக்கும் உயிருக்கும் சேர்க்கை நிகழும் போது தோன்றுவது. இவ்வுடம்படு மெய்யும் ஒலி இயைபுக் கேற்பவே தோன்றும், இ, ஈ, ஐ என்னும் இந்த மூவுயிரும் மேல்வாய்ப்பல்லும் அடிநாவின ஓரமும் ஒற்றப் பிறப்பனவாதலால், இவைகளோடொத்து மேல்வாய்ப் பல்லின் சிறிதளவு நாவினிமபு தொடுமாறு பிறக்கும் ஒலியுடைய 'ய'கரம உடம்படு மெய்யாக நடுவில் வந்தடுக்கும், ஏனைய ஒன்பது உயிர்களுக்கு நடுவே அவைகளோடொத்த ஒலிஇயைபுடைய 'வ'கரம் வந்தடுக்கும் இவைகளை ஒலித்துப் பார்த்து நுட்பமொடு காண்க. இம்மெய்கள், நிலைமொழியின்கண் வரும் உயிர்கட்குச் சார்பாகவே தோன்றும். விரிப்பின் நீளுமாதலால், இவைகளைத் தொல்காப்பியம் முதலிய இயல்நூல்களிற் கண்டு தெளிக.

இவ்வுடம்படு மெய்கட்கு எடுத்துக்காட்டுக் காட்டுவாம்:

| | | |
|---|---|---|
| திரி + அழல் | = திரியழல் | இகரத்தின்முன் யகரம் தோன்றிற்று. |
| நீ + அழகன் | = நீயழகன் | ஈகாரத்தின்முன் ,, ,, |
| பனை + ஓலை | = பனையோலை | ஐகாரத்தின்முன் ,, ,, |
| வந்த + அரசன் | = வந்தவரசன் | அகரத்தின்முன் வகரம் தோன்றிற்று. |
| பலா + இலை | = பலாவிலை | ஆகாரத்தின்முன் ,, ,, |
| திரு + அடி | = திருவடி | உகரத்தின்முன் ,, ,, |
| கூகூ + என்றுன | = கூகூவென்றுன | ஊகாரத்தின்முன் ,, ,, |
| எ + அணி | = எவ்வணி | எகரத்தின்முன் ,, ,, |
| நன்றே + இன்று | = நன்றேவின்று | ஏகாரத்தின்முன் ,, ,, |
| நொ + அது | = நொவ்வது | ஒகரத்தின்முன் ,, ,, |
| கோ + அழகன் | = கோவழகன் | ஓகாரத்தின்முன் ,, ,, |
| கௌ + அணில் | = கௌவணில் | ஔகாரத்தின்முன் ,, ,, |

என, வந்தவாறு காண்க. பிறசொற்களினும் இவ்வாறு உடம்படு மெய்யாகப் புணர்தலை நூல்களில் காண்க இவற்றுள் ஏகாரத்தின் முன் வகரமும் யகரமும் உடம்படு மெய்யாக வரலாம்

இவ்வுடம்படுமெய் பொருள்நோக்கியோ நோக்காதோ தோன்றுமல்லா ஏனைய மெய்யிறுதியொடு உயிர்முதலாவது மெய்ம் முதலாவது புணருமேல் இயல்பாகவும் வேறுபட்டும் தோன்றல் திரிதல் கெடுதல் முதலிய பல்வகை வேறுபாட்டோடும் புணரும். இவைகளையெல்லாம் தொல்காப்பியம் போன்ற இயல் நூல்களில் பரக்கக் காண்க ஆயினும் அன்பாகட்கு விளக்கும் பொருட்டாக ஈங்குச் சிலவற்றைச் சுட்டிச் செல்லலாமெனக் கருதுகின்றேம். உயிரும் உயிரும் புணரும்வகை மேற்கூறியபடியே யாம். இனி, மெய்யெழுத்துக்களின் புணர்ப்பு வருமாறு

உயிரேனும் மெய்யேனும் ஈறாகவுள்ள நிலைமொழிகளோடு மெய்ம்முதல் வருமொழி புணருங்கால் பொருள்நோக்கித் தோன்றல் முதலியன வேறுபாட்டுடன் புணர்ந்தியங்குதலை வழக்கினும் செய்யுளினும் காணலாம்.

மொழிப்புணர்ச்சிகளை வேற்றுமை அல்வழி என இருவகையில் அடக்கி வரையறுத்தனர் நந்தமிழ்ச் சான்றோர். அவர்தம் அஃகியகன்ற அறிவாற்றலை என்னென்பேம்! என்னென்பேம்! பெயரின் பொருளை வேறொரு பொருளாக மாற்றுவதால் வேற்றுமைப் பொருளென்றும் அஃதல்லாத வேறுபடுத்தாத எல்லாவற்றையும் அல்வழிப் பொருளென்றும் பிரித்தனர் அல்வழி - அல்லாதவழி · வேற்றுமையல்லாத வேறொரு பொருள் தருவது என்னும் பொருள்படுவதாகும். இவ்விரண்டனுள் கடல்போற் பரந்துபட்ட தமிழ்மொழிச்சொற்கள் அடக்கப்பெற்றிருப்பதை உணர்ந்தின்புறுக.

இவ்வேற்றுமை அல்வழிப் புணர்ச்சிகளுள், தோன்றல் முதலாக வேறுபாட்டைச் செய்வது பெரும்பான்மையும் வல்லெழுத்துக்களே. அவற்றுள்ளும் மொழிக்கு முதலாகாத ட, றக்களை ஒழித்து ஏனைய க, ச, த, ப-க்களே தன் இனமல்லாத மெல்லின, இடையின எழுத்துக்களைத் தன்னினமாக மாற்றுவனவாகும். தமிழ்மொழி இயற்கையான மொழியாதலின், இவ்வேறுபாடு இயல்பாகவே தோன்றுகின்றன. இஃதுகூட அறிய இயலாத சில அறிஞரெனக் கூறிக்கொள்வோர் வலிமுன் தோன்றும் மெலி, இடைகளைத் திரியாது புணர்த்தெழுதித் தம் புன்மை தெரிப்பாராயினர்.

உலகில் மெலியவன் வலியவன்முன் நின்று வெல்வதில்லை; தோல்வியே உறுவதைக் காணுகின்றோம். இஃது இயற்கையாக நிகழும் நிகழ்ச்சியாகும். இதுபோன்றே வலிமுன் எதிர்நிற்கும் ஏனைய மெய்கள் தம் வடிவந்திரிந்து வல்லினமாக வேறுபடுகின்றன. காட்டாக :

கல்+சட்டி இதில் வலிமுன் இடை நிற்கின்றது, இப்போதுள்ள வடிவில் இவ்விரு சொற்களும் ஒன்றுபடாத நிலையில் கல் சட்டி என நிற்பதை அறிகின்றோம் இவை இரண்டு சொற்களும் ஒன்றாக இணைந்தபோது கற்சட்டி என லகர இடையெழுத்து றகர வல்லெழுத்தாக மாறுவதைக் காண்கின்றோம். இவ்வாறு புணர்த்தாது கல்ச்சட்டி என, எழுதினால் லகர ஒலி, தன் மென்மையினும் மிக மென்மையாகிச் சகர ஒலியே மிக்கொலித்தலும் நாவால் ஒலிக்கும்போது அச்சகரம் வன்மைக்குரிய ஒலியின்றியும் இடைமைக்குரிய ஒலியின்றியும் ஒலிப்பதை உணரலாம். இவைகளைப் பலுக்கி (உச்சரித்து)க் காது கொடுத்துக்கேட்டுத் தெரிந்துணர்க. ஆகவே, இயற்கைமுறைப்படி புணர்வதானால் லகரம் றகரமாக மாறுவதேயாகும். இஃதே இயற்கை மொழியாகிய நம் தமிழ்மொழியின் தன்மைக்கு ஏற்ற முறைமையுமாகும். பொற்பு என்னுஞ் சொல் பொல் என்னும் முதனிலையும் பு என்னும் கடைநிலையும் பெற்ற பண்புப்பெயர். இதைப் பொல்ப்பு என்று சிறுமகாரும் கூறாது, அது தன் மழலை பேசுங்காலுங்கூடப் பொற்பென்றே குழறிக் குழறிப் பேசுதலைக் காண்டுமன்றே.

(தொடரும்)

---

# அன்புநிலைகண்ட ஆயிழையார்

[பண்டித, வித்துவான், திரு. த. வடிவேலன்]

'உலகமென்ப துயர்ந்தோர் மேற்றே' எனக்கூறிய தமிழன் இந்திரர்க்குரியது அமுதம். அமுதம்தான் கிடைப்பதானாலும் அதனை இனிமையானது எனக்கருதித் தாமே தனித்துண்ணாதவர்; எவருடனும் வெறுப்படையாதவர்; அச்சங்கொண்டு சோர்வடையாதவர்; புகழ் வருமானால் தமதுயிரையுங் கொடுக்கும் விருப்புடையவர்; பழிச் செயலால் உலகம் முழுவதும் பெறலாமெனினும் அதனை விரும்பாதவர், மனத்திலே வருத்தமேயில்லாதவர், தமக்கென முயலாது பிறர்க்கென முயல்வோர் எவரோ அவரே உயர்ந்தோர் எனக் கண்டான். அவர்களாலேயே இவ்வுலகும் அழியாது நிலைபெற்று நிற்கின்றதென எடுத்துரைத்தான். உலகு நிலைபெற உத்தமரே காரணமாவரென உலகிற்கு எடுத்துரைத்த தமிழன் உலகில் ஒருவரால் ஒருவர்க்கு ஆக்கமோ கேடோ வருவதில்லை என்ற உண்மை உணர்ந்தான். உண்மையுணர்ந்த அவனிதயத்தில் "யாதும் ஊரே யாவருங் கேளிர்" என்ற உயரிய கொள்கை நிலைப்பதாயிற்று. அவ்விதமான பரந்த மனநிலையால் தமிழ்நாடு அன்பென்னும் அரும் பண்புகொண்டு ஆக்கமடைவதாயிற்று.

அரசியலினிஃதமைவதற்கு மக்களின் வாழ்வு நிலையே அடிப்படையாகும் எனக் கருதினர் தமிழர்கள். அதனால் தமது இல்லற வாழ்வினை நல்லறவாழ்வாக அமைத்துக்கொண்டார்கள். அன்று தமிழ்நாட்டில் பணம்பேசி மணங்கூடும் பிணவாழ்வில்லை. உளங்கூடி மணம் புணரும் உயரிய நிலையே இடம்பெற்றது. இல்வாழ்வின் உண்மையுணர்ந்து உளம் விரும்பும் காதலரை மணம் புணர்ந்து இல்வாழ்வின் மாட்சி இதுவென உலகிற்குணர்த்திய தமிழர்கள் இன்றுவரை தமது வாழ்வுநிலையை எம்முன் காட்டி எம்மையும் உயரிய வாழ்வுநெறிக்கு இட்டுச் செல்லும் உறுதுணையாய் நிற்கின்றார்கள். இதனைப் பண்டைய தமிழனின் பண்பட்ட வாழ்வினை எடுத்துரைக்கும் இலக்கியங்களே எமக்கு எடுத்தியம்புகின்றன.

அறிவின் வழிப்பட்ட தலைவன் தலைவியரது உள்ளங்கள் ஒன்றையொன்று பற்றுகின்றன. அவர்கள் உளவிருப்பின்படி மணம் நிகழ்கின்றது. தலைவி தலைவன் வீட்டில் மனமுவந்து வாழ்கின்றாள். தலைவனது மனங்களிக்க வாழ்வதே நலவாழ்வாகும் என்ற உண்மையுணர்ந்தவள் அவள். தன் கணவனை யாதொரு குறையும் நேராவண்ணம் பாதுகாப்பதே தன் கடமை

யெனக் கொள்கின்றாள். அவனுடல் நலம்பெற நல்லுணவட்டு ஊட்டுதல் வேண்டும் என்ற பெருவிருப்புடையவளாகின்றாள். கணவனே உயிரெனக் கொண்ட உளத்துடன் வாழ்ந்த உத்தமியின் வாழ்வுநிலையை அறிதல் வேண்டுமென்ற ஆவலுடன் அவளைப் பலகாலம் போற்றி வளர்த்த செவிலித்தாயானவள் தலைவன் வீட்டினை அடைகின்றாள். கணவனுக்கு இன்று தயிர்க் குழம்பு சமைத்துக் கொடுத்தல் வேண்டுமென்ற விருப்பம் தலைவிக்கேற்படுகின்றது. தயிரினை எடுக்கின்றாள்; அதனைக் கையினாற் பிசைகின்றாள்; நேரந்தவறாது உணவளிக்க வேண்டுமென்ற பேராவல் தயிர்பிசைந்த கையினைக் கழுவல் வேண்டுமென்ற ஒழுங்கு முறையினைக் கவனிக்க இடந்தருவதாயில்லை; தான் உடுத்திருந்த ஆடையவிழ்ந்த நிலைகண்டு தயிர் பிசைந்த கையினாலே ஆடையை உடுக்கின்றாள், கண்கள் புகையால் வருத்த மடைவதையும் நோக்காது தாளிதம் செய்கின்றாள்; பிசைந்த தயிரினையும் உடன் கலந்து தயிர்க்குழம்பு சமைக்கின்றாள்; கணவனுக்கு உணவு கொடுக்கின்றாள், கணவன் உண்கின்றான், தான் கொடுத்த உணவால் கணவன் இன்பமடைகின்றானா என எதிர் நோக்கியிருந்த அவளுள்ளம் மகிழ்ச்சியடையுமாறு "இன்றைய உணவு மிகவும் இனிதாயிருக்கின்றதே," என்ற கணவனின் கூற்று அவள் செவியிற் படுகின்றது, அவளுள்ளத்திற் பேருவகை பூக்கின்றது, கணவன் இனிதென உண்டான் என்ற உவகையின் காட்சி அவள் முகத்தில் வெளிப்பட்டுத் தோன்றுகின்றது, காதலரின் அன்புகனிந்த இன்பவாழ்வினைக் காண்கின்றாள் செவிலி. வீடு திரும்புகின்றாள். தலைவியின் தாய்க்கு மகிழ்ச்சியுடன் எடுத்துரைக்கின்றாள், காதலரின் உளங்கலந்த வாழ்வின் மாட்சியினை.

"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅ துடீஇக்
குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்
தான்றுழந் தட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவ னுண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன் றொண்ணுதல் முகனே"

(குறுந் : ௧௬௭)

என இக்காட்சியினைக் குறுந்தொகைச்செய்யுள் எடுத்துக் காட்டக் காண்கின்றோம் வாழ்வின் வழிமுறையை உணர்கின்றோம்.

மணம் புணர்ந்து இன்பமுடன் வாழ்ந்த கோவலன், மாதவி கூட்டுறவால் பல ஆண்டுகள் தன்னை விட்டிருந்தான் என்பது

னையும் பொருட்படுத்தாது மாதவியை நீங்கி வறுமையுடன் வந்த கோவலனை அன்புடன் ஏற்கின்றாள் கண்ணகி. பொருளீட்ட விரும்பிய கோவலன் சிலம்பு விற்பான் மதுரைக்குச் செல்வோம் கூடவா என அழைக்கின்றான், அதனையும் ஏற்று உடன்செல்கின்றாள், மதுரையின் புறத்தே மாதரி வீட்டில் தங்குகிறாள்; தன் கையால் உணவு சமைத்துத் தன் கணவனுக்கு ஊட்டுவதே இன்பமெனக் கருதுகிறாள், தன் கையால் உணவு சமைத்துக் கணவனை உண்பிக்கின்றாள், அக்காட்சி கண்டோராம் ஐயையையும் தவ்வையையும்—மாதரியையும் மகளையும் வியப்படையச் செய்கின்றது அவர்களது அன்புகலந்த இன்பக் காட்சியைச் சிலப்பதிகார ஆசிரியர் இன்பத்துறவி இளங்கோவடிகளும்,

"மெலவிரல் சிவப்பப் பல்வேறு பசுங்காய்
கொடுவாய்க் குயத்து விடுவாய் செய்ய
...... . . ...... .. .. . .......
கையறி மடமையிற் காதலற் காக்கித்
தாலப் புல்லின் வால்வெண் தோட்டுக்
கைவன மகடூஉக் கவின்பெறப் புனைந்த
செய்வினைத் தவிசிற் செல்வன் இருந்தபிற்
கடிமல ரங்கையிற் காதல னடிநீர்
சுடுமண் மண்டையில் தொழுதனள் மாற்றி
மண்ணக மடந்தையை மயக்கொழிப் பனள்போல்
தண்ணீர் தெளித்துத் தன்கையால் தடவிக்
குமரி வாழையின் குருத்தகம் விரித்தீங்கு
அமுத முண்க அடிக ளீங்கென
அரசர் பின்னோர்க் கருமறை மருங்கின்
உரிய வெல்லாம் ஒருமுறை கழித்தாங்கு
ஆயர் பாடியில் அசோதைபெற் றெடுத்த
பூவைப் புதுமலர் வண்ணன் கொல்லோ
நல்லமு துண்ணும் நம்பி யீங்குப்
பலவளைத் தோளியும் பண்டு நங்குலத்துத்
தொழுனை யாற்றினுள் தூமணி வண்ணனை
விழுமந் தீர்த்த விளக்குக் கொல்லென
ஐயையும் தவ்வையும் விம்மித மெய்திக்
கண்கொளா நமக்கிவர் காட்சி யீங்கு"

என அழகுற அமைத்துக் காட்டுவாராயினர்.

உளம் பொருந்திய தலைவன் தலைவியரது கூட்டு வாழ்க்கை அன்பு மிகுந்த பண்புடன் விளங்கியமை காணும் பிரிவிற்

கண்ணும் காதலனைத் தம் தெய்வமெனப் போற்றினர் தமிழ் மாதர் என்பதனையும் நாம் காணமுடிகின்றது.

தலைவன் தலைவியை நீங்கிப் பொருள்தேடப் புறப்படுகின்றான். அப்பொழுதும் தலைவிக்குத் தான் வருந்தும்படித் தலைவன் பிரிகின்றானே என்ற எண்ணமெழ இடமில்லை. செல்லும் வழியில் காதலன் துயருறுவானே என்ற எண்ணமே உள்ளத்தை உறுத்துகின்றது. அவன் செல்லும் வழி ஞாயிற்றின் வெம்மை மிக்குடையதெனச் சொல்லுகின்றார்களே அவ்வெம்மை தலைவனை வருத்தாதிருப்பதற்கு வழிகாண்டல் வேண்டுமென ஆராய்கின்றாள். ஞாயிற்றை வணங்கின் வெம்மை தணியுமென உரியவழியையும் அறிந்துவிட்டாள். ஆனாலும் தலைவனே தெய்வமெனக் கொண்ட அவளுள்ளம் பிறதெய்வம் போற்றுவது கணவன்மேல் தான் கொண்ட அன்புக்கு மாறுபட்டதாகும் என்ற உணர்ச்சியை ஏற்படுத்துகின்றது. "காதலன் வருத்தமடைவதைத் தடுக்க வழி கண்டேன்; அவ்வழியும் கற்பிற்கு மாறுபட்டதாயிற்று, எனது உள்ளத்தைக் கலங்க வைப்பதாயுள்ளது, கணவன்மேல் யான் கொண்ட தொடர்பறு அன்பினைத் துணிப்பதாயுள்ளது, துணைவன் தன் செயலால் தானே துன்பமடைவான், காதலன் துன்பத்தை நீக்குவது கற்புடை மங்கையர் கடன்; இவ்விடத்தில் என் பணி செய்ய முற்படின், யான் கணவனைப் போற்றும் காதல்நிலையை இழத்தல் வேண்டும், எனவே காதலன் வருத்தம் தணிக்கும் செயலை ஆற்றுவதற்கில்லை, அது என் தவறுமாகாது என முடிவு செய்கின்றாள்.

> "துன்னி நங்காதலர் துறந்தேகு மாரிடைக
> கன்மிசை யுருப்பிறக் கனைதுளி சிதறென
> இன்னிசை யெழிலியை இரப்பவு மியைவதோ
> ...... . . ....... ...... .... . .... . ...... ..
> சினைவாடச் சிறக்குநின் சினந்தணிந் தீகெனக்
> கனைகதிர்க் கனலியைக் காமுற லியைவதோ
> ...... .... .. ........ . ...... .. .. .... ...... .
> முளிமுதன் மூழ்கிய வெம்மைதீர்ந் துறுகென
> வளிதருஞ் செல்வனை வாழ்த்தவு மியைவதோ."

என்ற கலித்தொகைப் பாடலே காதலியின் உயரிய உளமாண்பினை உணர்த்தி நிற்கக் காண்கின்றோம்.

கோவலனைப் பிரிந்திருந்த கண்ணகியை அடைந்த தேவந்தி என்ற பெண், கோவலனைப் பெறுவதற்குரிய வழியை எடுத்தியம்ப எண்ணுகிறாள். "காவிரி கடலொடு கலக்குமிடத்திலே

சோமகுண்டம சூரியகுண்டம் என்னும் பெயருடைய இரண்டு பொய்கைகள் உள்ளன அவற்றிலே நீராடிக காமவேளது கோயிலையடைந்து வணங்கினால் மஙகையா கணவருடன் பிரியா திருந்து இன்புறலாம மறுமையிலும இன்ப உலகடைந்து கணவருடன் இன்ப வாழ்வெய்துவர் நாமும அவவிதஞ் செய்வோ"மெனக் கூறுகிறாள அதுகேட்ட கண்ணகி கணவனே தன் தெய்வமெனக் கொண்ட உளப் பாஙகால, "பிற தெய்வந தொழல கணவனைப்பெறற் நமககுரிய செயலாகாது," என விடை பகாகின்றாள.

கடலொடு காவிரி சென்றலைக்கு முன்றில
மடலவிழ நெய்தலங கானற் றடமுள
சோமகுண்டஞ் சூரிய குணடந் துறைமூழ்கிக
காமவேள் கோட்டந தொழுதார கணவரொடு
தாமின் புறுவ ருலகத்துத தையலார்'
போகஞ்செய் பூமியினும போய்ப்பிறப்பர் யாமொருநாள்
ஆடுதூ மென்ற அணியிழைககவ வாயிழையாள்
பீடன் றெனவிருநத...... . ......... . ..

என்ற சிலபபதிகாரச செய்யுள் கணவனைப பிரிந்தும அவனையே கடவுளெனப் போற்றிய கண்ணகியின் கலஙகாக் கறபுநிலையைச் சிந்திகக வைக்கின்றது

வாழ்விலும் பிரிவிலும் இல்வாழ்வின் மாட்சியினை எடுத் துக்காட்டும் தமிழ்மகளிரின் அன்புநிலைக் காட்சியினைக் கண்டோம்.

கணவனே உயிரெனக்கொண்டு அவன்வழிப பணியாற்றி அளவிலா உவகையுடன் வாழ்ந்த தமிழ்மகளிர் கணவனை யிழந்து உயிர்வாழ்தல் வாழ்வாகாது எனக் கருதினர். கணவ னிறந்ததும அவன்வழித் தாமும் செல்வதே மேலெ ன மதித் தனர். இராவணன் மனைவியான மண்டோதரியும இராவணன் இறந்தானெனக் கேட்டதும தானும அவன் செல்வழிச் செல் லலே தகவுடையது—இன்பந தருவது என எண்ணுகிறாள. தலைவன் நிலை கண்டு தானும் உயிர் விடுகின்றாள். கணவனுடன் மாய்ந்த மண்டோதரியின் பெருமையினை,

"ஏர்தருமே ழுலகேத்த எவவுருவுந் தன்னுருவாய்
ஆர்கலிசூழ் தென்னிலங்கை அழகமர் மண்டோதரிக்குப்
பேரருளின் பமளித்த பெருந்துறை மேய பிரானைச்
சீரியவா யாற்குயிலே தென்பாண்டி நாடனைக் கூவாய்."

என மணிவாசகரும் தமது குயிற்பத்தில் சிறப்பித்துப் பாடிவா ராயினர்.

பூதப்பாண்டியன் இறந்தானாக அவன் மனைவி பெருங் கோபபெண்டு கணவனொடு உடன் உயிர்போக்க எண்ணுகிறாள். தானே நீங்கா உயிர்நிலைகண்டு தீப்பாயச் செலகின்றாள். அப்பொழுது அங்கு நின்ற பெரியோர்கள் அவளைத் தீப் புகாது தடுக்கின்றனர். அன்பு வழிபபட்ட அவதிநிலையில் நின்ற தேவி பெரியோாகளை நோக்கி, "கணவனையிழநத எனக்கு இனி இவ்வுலகு நல்லுலகாகாது. துன்பநிலையில் நிற்கின்ற எனக்குக் குளிர்ந்த தடாகமும துன்பஞ் செய்வதேயாகும். எனவே தடாகமும தீயும எனககு ஒரு தன்மையதே யாகும். இச் செயலிலிருந்து என்னை நீக்கல் எவாக்கும் முடியாத காரியம," எனக்கூறித் தீயிற பாய்ந்து உயிா விடுகின்றாள்.

"பல்சான் றீரே பல்சான் றீரே
செலகெனச சொல்லா தொழிகென விலக்கும்
பொல்லாச் சூழச்சிப் பல்சான றீரே
.. . . ... ............... .. . . . .
பெருஙகாட்டுப் பணணிய கருஙகோட் டீமம்
நுமககரி தாகுக தில்ல வெமக்கெம
பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற
வள்ளித ழவிழநத தாமரை
நள்ளிரும் பொயகையுந தீயுமோ ரற்றே"

என்ற புறப்பாட்டுச் செய்யுளில் சான்றோரின் விருப்பமும் பெருங்கோப் பெண்டின் அன்புநிலையும் காட்சியளிப்பதைக் காணலாம்.

கோவலனைக் கள்வனெனக் கூறிய பொற்கொல்லன் சொற் கேட்டு "கொன்றச் சிலமபு கொணர்க" எனக் கூறிக் கோவலனை கொலைக்கு உறுதுணையாய்நின்ற நெடுஞ்செழியன், கண்ணகி சிலமபினையுடைதது அதன் பரலான மணிகாட்டியதும் நீதி வழியாண்ட பாண்டிய மன்னரின் உயாவுகுன்றக் காரணமான தானிழைத்த தவறினை உணாகின்றான், உடன் உயிர்விடுகிறான்; அதுகண்டு அன்பின் வழிவாழ்ந்த அவன் தேவியும உடன் உயிர் விடுகிறாள். இவ்வரலாற்றை,

மன்பதை காக்குந் தென்புலங காவல்
எனமுதற் பிழைததது கெடுகவென் னுயுளென
மனனன் மயங்கி வீழ்ந்தனனே தென்னவன்
கோப்பெருந் தேவி குலைநதனள் நடுஙகிக்
கணவனை யிழந்தோர்க்குக் காட்டுவதில் லென்று
இணையடி தொழுது வீழ்ந்தனளே மடமொழி"

என வழக்குரை காதையில் விளக்குகின்றார் இளங்கோவடிகள். கணவன் மாதவியின் பெண்மை நலம் விரும்பிப் பலகாலம்

தன்னை மறந்து வாழ்ந்தானாயினும் தானே அவனது பெருமையை விளங்கவைக்க வேண்டுமென விரும்புகின்றாள். மாண்ட கணவனுடன் கண்ட கண்ணகி தான் கூறிய வஞ்சினத்திற்கியைய உயிர்பெற்று உரைபகர்ந்த கோவலனை உடல்விட்டு உயர்நெறியடைந்ததும் தானும் தன் காதலனுடன் உடன்போதல வேண்டுமென விரும்புகின்றாள் தன் கணவன் கள்வனென்ற பழிச்சொல்லை உலகில் விடடுச் செலவது பெருமையாகாது. அவன் பெருமையை உலகறியக் காட்டி அவன வழிச்செல்லலே தகவுடைமை என்ற அவளது அறிவுள்ளம் உடன்போகும் ஆவலைத் தடுக்கின்றது. மன்னனைக் கண்டு வழக்குரைத்து கோவலன் மாண்பினை விளங்கவைத்துக் கணவனிறந்த பதினான்காம் நாள் கோவலனைக் கூடுகின்றாள். கணவன் மாண்பை இலங்க வைத்த கற்புடைப பத்தினி, இன்றும் நலவாழ்வு காட்டிய நஙகை எனப போற்றப்படுகின்றாள்.

கண்ணகி கணவனுடன் விண்ணடைந்தாள என்ற வரலாற்றைக் கட்டுரை காதையில கூறிய இளங்கோவடிகள்,

"மலைவேங்கை நறுநிழலின் வள்ளிபோல்வீர் மனநடுங்க
முலையிழந்து வந்துநின்றீர் யாவிரோவென முனியாதே
மணமதுரையோ டரசுகேடுற வல்வினைவந் துருத்தகாலைக்
கணவனையங்கிழந்து போந்த கடுவினையேன யானென்றாள்
என்றலும் இறைஞ்சியஞ்சி இணைவளைக்கை எதிர்கூப்பி
நின்ற எல்லையுள் வானவரும் நெடுமாரி மலர்பொழிந்து
குன்றவருங் கண்டுநிற்பக் கொழுநனொடு கொண்டுபோயினார்
இவளபோலும் நங்குலக்கோர் இருந்தெய்வம் இல்லையாதலின்
சிறுகுடி யீரே சிறுகுடி யீரே
தெய்வங் கொள்ளுமின் சிறுகுடி யீரே"

எனக் குன்றக்குறவரின் வாய்மொழியில் வைத்துப் போற்றியமை கண்ணகியின் மாண்பினை விளக்கவேண்டுமென்ற ஆசிரியரின் பெருவிருப்பைப் புலப்படுத்துவதாகும்.

நாம், நமது இலக்கியச்செல்வங்கள் மூலம இங்குக் கண்ட காட்சிகள தமிழ்மகளிரின் வாழ்வின் குறிக்கோள் இன்னதென்பதனையும், கணவன் வழிநின்று அவன் பணிபுரிதலே மகளிர்க்கு இன்பந்தரும் வாழ்வாகும் எனப் போற்றின ரென்பதையும், கணவனில்லாது உயிர்வாழ்தல் வாழ்வாகாது எனக் கருதினரென்பதனையும், ஆடவர் புகழ்பெறுதற்கு மாண்புடை மனைவியரே காரணமாவ ரென்பதனையும் எடுத்தியம்பித் தமிழ்மகளிரின் மாட்சியை என்றும இலங்க வைப்பதைக் காணலாம்.

# மறைவுற்ற தமிழ் நூல்கள்

[திரு. மயிலை, சீனி. வேங்கடசாமி]

(சிலம்பு உஅ, பரல் கக, ருஉ-ஆம் பக்கத் தொடர்ச்சி)

## 74. நக்கீரர் அடிநூல்

இப்பெயரையுடைய செய்யுளிலக்கண நூல் ஒன்று இருந்தது என்பது யாப்பருங்கல விருத்தியுரையினால் தெரிகிறது. யாப்பருங்கலம், செய்யுளியல் 40-ஆம் சூத்திர விருத்தியுரையில்,

ஐஞ்சீர் வெள்ளையுட் புகாமை பெற்றாற் பெறுதுமெனின்,

'ஐஞ்சீர் அடுக்கலும் மண்டில மாக்கலும்
வெண்பா யாப்பிற் குரியவல்ல.'

என்று நக்கீரனார் அடிநூலுள் எடுத்தோதப்பட்டவையாற் பெறுதும்.';

என்று உரையாசிரியர் எழுதுகிறார். மேலும், யாப்பருங்கலம், ஒழிபியலில விருத்தியுரைகாரர் இவ்வாறு எழுதுகிறார்.—

"தொல்காப்பியனார் நக்கீரனார் முதலாகவுள்ளார் ஒரு சாராசிரியர் ஆசிரியத்துள்ளும், கலியுள்ளும் ஐஞ்சீரடியும் அருகிவரப் பெறுமென்று............காட்டுவாராகலினென்பது.

'ஐஞ்சீ ரடுக்கலு மண்டில மாக்கலும்
வெண்பா யாப்பிற் குரிய வல்ல'

என நக்கீரர் நூலுள், 'வெண்பா யாப்பிற் குரியவல்ல' வென்றமையால், ஆசிரியத்துக்கும் கலிக்கும் ஐஞ்சீரடி புகுதலும், மண்டிலமாக்கலும் உரித்தென்று விரித்துரைத்தார் எனக் கொள்க."

இவ்வாறு உரையாசிரியர் கூறுவதனால், நக்கீரர் அடிநூல் என்னும் ஒரு செய்யுளிலக்கண நூல் இருந்ததென்பது தெரிகிறது. இந்நூலைப் பற்றி வேறு செய்திகள் தெரியவில்லை.

இந்த அடிநூல் செய்த நக்கீரர் சங்ககாலத்து நக்கீரரா அல்லது பிற்காலத்திலிருந்த வேறு ஒருவரா என்பது ஆராய்ச்சி செய்யற்பாலது.

## 75. நக்கீரர் நாலடி நானூறு

இப்பெயருடைய செய்யுளிலக்கணநூல் ஒன்று இருந்ததென்பது யாப்பருங்கல விருத்தியுரையினால் தெரிகிறது. மேலே கூறப்பட்ட நக்கீரர் அடிநூலின் வேறானது. நக்கீரர் நாலடி

நானூறு என்னும் நூல், நக்கீரர் அடிநூலுக்குப் புறனடை நூலாக இருக்கக்கூடும் என்று தோன்றுகிறது.

யாப்பருங்கலம், செய்யுளியல் 4-ஆம் சூத்திர விருத்தியுரையில, வெண்பா இலக்கணத்தைக் கூறுகிற இடத்தில் சில வெண்பாக்களை மேற்கோள் காட்டிய விருத்தியுரைகாரர், “இந்நவை பிறவும், நக்கீரர் நாலடி நானூற்று வண்ணத்தால் வருவனவும் எல்லாம் தூங்கிசைச் செப்பலோசை” என்று எழுதுகிறார்

இதனால, நக்கீரர் நாலடி நானூறு எனனும் நூல், வெண்பாவினால் ஆன நானூறு பாக்களையுடைய நூல் என்பதும், அப்பாக்கள் வண்ணத்தினால தூங்கிசைச் செப்பலோசையோடு அமைந்திருந்தன என்பதும் தெரிகின்றன.

இந்நூலைப்பற்றி வேறு செய்திகள தெரியவில்லை

## 76 விளக்கத்தார கூத்து

விளக்கத்தார் கூத்து என்னும் நாடகத் தமிழ நூலைப் பேராசியா தமது உரையில் குறிப்பிடுகிறா. தொலகாப்பியம், பொருளதிகாரம செய்யுளியல்,

> சேரி மொழியாற் செவவிதிற் கிளந்
> தோதல் வேண்டாது குறித்தது தோன்றிற்
> புலனென மொழிப புலனுணர்ந் தோரே.

என்னும் சூத்திரத்திற்குப் பேராசிரியர் இவ்வாறு உரை எழுதுகிறார் :—

“சேரிமொழி என்பது பாடிமாற்றங்கள். அவற்றானே செவ்விதாகக்கூறி ஆராய்ந்து காணாமைப் பொருட்டொடரானே தொடுத்துச் செயவது புலன் எனறு சொல்லுவர் புலனுணர்ந்தோர் என்றவாறு.

அவை விளக்கத்தார் கூத்து முதலாகிய நாடகச் செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள் போல்வன வென்பது கண்டு கொள்க.”

இதனால், விளக்கத்தார் என்னும புலவர் கூத்தநூல் ஒன்று செய்தார் என்பது தெரிகிறது.

இந்த விளக்கத்தார் என்பவர் விளக்கத்தனார் என்றும் கூறப்படுகிறார். இவர் செய்த “கெடலரு மாமுனிவர்” என்று தொடங்கும கலிப்பாச் செய்யுளை இளம்பூரண அடிகளும் பேராசிரியரும் தமது உரைகளில் மேற்கோள் காட்டுகிறார்கள். ஆனால், இச்செய்யுளை இயற்றிய ஆசிரியர் யார் என்று இவர்கள் கூற

வில்லை. யாப்பருங்கல விருத்தியுரைகாரர் இந்தச் செய்யுளை 30-ஆம் சூத்திரவுரையில் மேற்கோள் காட்டி, 40-ஆம் சூத்திர வுரையில் இதனைப் பாடியவர் விளக்கத்தனார் என்று கூறுகிறார். அவர் எழுதுவது :

"அஃதேயெனின், விளக்கத்தனார் பாடிய கெடலரு மாமுனிவர் என்னும் கலிப்பா புறநிலைவாழ்த்தாய் வந்தது பிறவெனின், அஃது ஆசிரியச் சுரிதகத்தான் வந்தமையாற் குற்றமின்றெனக் கொள்க"

இதனால், விளக்கத்தார் கூத்து என்னும் நூலை இயற்றிய வரும், கெடலருமாமுனிவர் என்னும் தொடக்கத்துப் பெருந் தேவபாணிச் செய்யுளை இயற்றியவரும் விளக்கத்தனார் என்னும் புலவர் என்பது தெரிகிறது. கெடலருமா முனிவர் என்னும் அழகிய பெருந்தேவபாணிச் செய்யுள், இவர் இயற்றிய கூத்த நூலின் ஒரு செய்யுள் என்று கருதலாம். இந்தச் செய்யுளில் அச்சுதன் என்னும் அரசன் கூறப்படுகிறான். இந்த அச்சுதன், அச்சுதவிக்கந்தன் என்று பௌத்தப் பாலிமொழி நூல்களில் கூறப்படுகிற களப்பிர அரசனாக இருக்கலாம். அப்படியானால் விளக்கத்தனாரும் கி. பி 450-இல் வாழ்ந்தவராதல் வேண்டும்.

## 77. சந்தம்

இது கூத்து சம்பந்தமான ஒரு நாடகத் தமிழ்நூல். இந்த நூலை யாப்பருங்கல உரையாசிரியர் தமது உரையில் குறிப்பிடு கிறார். யாப்பருங்கலம் ஒழிபியலில் உரையாசிரியர் இந் நூலை இவ்வாறு குறிப்பிடுகிறார் :—

"வெண்டுறை வெண்டுறைப் பாட்டாவன : பதினோராடற் கும் ஏற்றபாட்டு. அவை அல்லியம் முதலியவும் பாடல்களாக ஆடுவாரையும், பாடல்களையும், கருவியையும் உந்து இசைப் பாட்டாய் வருவன............... ....

இனி இவற்றினுறுப்பு ஐம்பத்து மூன்றுவன. அல்லிய உறுப்பு 6. கொடுகொட்டி யுறுப்பு 4. குடையுறுப்பு 4. குடத்தி னுறுப்பு 5. பாண்டரங்க உறுப்பு 6. மல்லாடலுறுப்பு 5. துடியாடலுறுப்பு 6. கடையத்துறுப்பு 6. பேட்டின் உறுப்பு 4. மரக்காலாடல் உறுப்பு 4. பாவையுறுப்பு 3. என விவை. இவற்றின்றன்மை செயிற்றியமும், சந்தமும் பொய்கையார் நூலும் முதலியவற்றுட் காண்க. ஈண்டுரைப்பிற் பெருகும்."

இதனால், சந்தம் என்னும் இந்நூல், பதினோராடற்குமேற்ற பாட்டுகளைக் கூறும் வெண்டுறைப் பாட்டுகளின் இலக்கணங் களைக்கூறும் நூல் என்பது தெரிகிறது.

இந்நூலைப்பற்றி வேறு செய்திகள் தெரியவில்லை.

## 78. இராச இராசேசுவர நாடகம்

இராசராசன் (கி. பி. 985 - 1014) என்னும சோழ அரச ஊைப்பறறிய ஒரு நாடக நூல் இது. இப்பெயருள்ள நாடக நூல் இருநததென்பது, இராசேந்திர சோழன் காலததுச் சாசனம ஒன்றினல் தெரிகிறது. இந்தச சாசனம், தென்னிநதிய சாச னங்கள, இரண்டாம் புத்தகம் 67-ஆம் எண்ணில் காணப படுகிறது (S. I. I. Vol II. No 67) இராச ராசேசுவர நாட கத்தைக குறிக்கிற இந்தச்சாசனப பகுதிகள வருமாறு :—

"உடையாா ஸ்ரீ ராஜராஜேஸ்வரமுடையார் கோயிலில ராஜராஜேஸ்வர நாடகமாட நித்த நெலலுததூணியாக நிவந்தம செய்த நமவாய்க கேழவிபபடி சாநதிக்கூததன் திருவாலன் திருமுது குனறனை விஜயராஜேந்திர ஆசாரயனுக்கும இவன வர்க்கததாருக்கும காணிக்கையாகக குடுததோம்..... .. .. ........ திருவாலநதிருமுது குன்றனை விஜயராஜேந்திர ஆசாரியன் உடையார் வைகாசிப பெருவிழாவில ராஜராஜேஸ்வா நாடகமாட இவனுக்கும் இவன வர்க்கததாருக்கும காணிக்கையாகப பஙகு ஒன்றும ராஜகேசரியோடொக்கும ஆடவலானென்னும மரக காலால் நித்தநெல்லுந தூணியாக நூறறிருபதின் கல நெலலும் ஆட்டாண்டுதோறும தேவா பண்டாரததேபெறச சநதிராதித்த வற் கலவெட்டித்து."

குறிப்பு (ஸ்ரீ ராஜராஜ விஜயம் என்னும் பெயருளள நாடக நூல் ஒன்றை, சவர்ணன நாரணபட்டாதிததன் என்பவன் இயற்றினன் என்று திருபபூநதுருததி சாசனம் ஒன்று கூறு கிறது. (Annual Rep. S I Epigraphy 1930-31.) ஆனல், இது வடமொழி நூல என்று தெரிகிறது இந்நூலும இப போது கிடைக்கவில்லை.)

## 79. வல்லையந்தாதி

வல்லை என்பது வல்லம் என்னும் ஊர். இது, வடஆர்க்காடு ஜில்லா குடியாத்தம் தாலுகாவில் உள்ளது. திருவல்லம் என்னும் இவவூரில் பில்வநாதேசுவரர் என்னும் பெயருளள சிவன் கோயில் உண்டு. இச் சிவபெருமான் மீது பாடப்பட்டது வல்லையநதாதி. இந் நூலை இயற்றியவர், குறட்டி வரதையன் என்பவர். வல்லையந்தாதி இயற்றிய குறட்டி வரதையனுக்கு இக் கோயில் அதிகாரிகள் 100 குழி நிலததை (தீக்காலிவல்லம என்னும் ஊரில் உளது) பரிசு அளித்தனர். (M. E. R. 293 of 1921.) இநநூல் இப்போது கிடைக்கவில்லை.

## 80. கையனார் யாப்பியல்

கையனார் எனனும் பெயருள்ள ஆசிரியரை, யாப்பருங்கலக் காரிகை யுரையாசிரியராகிய குணசாகரரும், யாப்பருங்கல உரை யாசிரியரும் தமது உரைகளில் குறிப்பிடுகிறார்கள். இவர்கள் கூறுவதிலிருந்து கையனார் என்பவர் யாப்பிலக்கண நூல் ஒன்று செய்திருக்கிறார் என்பது தெரிகிறது. ஆனால், அந்த இலக்கண நூலின் பெயர் என்னவென்று தெரியவில்லை. இந்த உரை யாசிரியர்கள், கையனார் என்னும் ஆசிரியரின் பெயரைமட்டும் கூறினரேயன்றி அந் நூலின் பெயரைக் கூறவில்லை.

குணசாகரர், கையனார் நூலைப்பற்றி (யாப்பருங்கலக் காரிகை. 40-ஆம் காரிகை யுரையில்) எழுதுவது இது :

"முதலயற் சீர்க்கண் இல்லாததனைக் கீழ்க்கதுவாய் என் றும ஈற்றயற் சீர்க்கண் இல்லாததனை மேற்கதுவாய் என்றும் வேண்டினார் கையனார் முதலாய ஒருசார் ஆசிரியர் என்பது அறி விதற்கு, 'மைதீர் கதுவாய்,' என்று விதப்புரைத்தாரெனக் கொள்க."

"இயைபுத் தொடைக்கு எழு விகற்பமும் இறுதிச்சீர் முதலாகக் காட்டினார் கையனார் முதலாகிய ஒருசார் ஆசிரிய ரெனக் கொள்க."

யாப்பருங்கலக் காரிகை 41-ஆம் காரிகை யுரையில் குண சாகரர், கையனார் நூலிலிருந்து ஒரு செய்யுளை உயிர் எதுகைக்கு மேற்கோள் காட்டுகிறார். அது வருமாறு:—

"துளியொடு மயங்கிய தூங்கிரு ணடுநாள்
அணிகிளர் தாரோ யருஞ்சுர நீந்தி
வடியமை யெஃகம வலவயி னேந்தித்
தனியே வருதி நீயெனின்
மையிருங் கூந்த லுயதலோ வரிதே."

இஃது இரண்டா மெழுத் தொன்றாதாயினும இரண்டா மெழுத்தின்மே லேறிய உயிர் ஒன்றி வந்தமையால் உயி ரெதுகை. இது கையனார் காட்டிய பாட்டு.

யாப்பருங்கல விருத்தியுரைகாரர் கையனாரைப்பற்றி இவ்வாறு எழுதுகிறார் :—

"அஃது ஈறுபற்றி யறியுந் தன்மைத்தாகலின், இயைபுத் தொடைக் கிவ்வா றெட்டு விகற்பமும சொன்னார் கையனார் தொல்காப்பியனார் முதலாகிய ஒரு சாராசிரியர்."

(யாப்பருங்கலம் : தொடையோத்து 34-ஆம் சூத்திர உரை.)

கடையிணை முரண், பின்முரண், இடைப்புணர் முரண், தொடையிலக்கணத்திற்கு உதாரணமாகச் சில செய்யுள்களை மேற்கோள் காட்டிய பிறகு யாப்பருங்கல விருத்தியுரைகாரர் "இவ்வாறு கூறினார் கையனார் என்னும் ஆசிரியரெனக் கொள்க," என்று எழுதுகிறார்.

(யாப்பருங்கலம். தொடையோத்து. 39-ஆம் சூத்திர உரை.)

"இனமோனை மூன்று வகைப்படும். அவை வல்லின மோனையும் மெல்லின மோனையும் இடையின மோனையுமாம். அவற்றுள் வல்லின மோனை வருமாறு.

'கயலே ருண்கண் கலுழ நாளுஞ்
சுடர்புரை திருநுதல் பசலை பாயத்
திருந்திழை யமைத்தோ ளரும்பட ருழப்பப்
போகல் வாழி யைய பூத்த
கொழுங்கொடி யணிமலர் தயங்கப்
பெருந்தண் வாடை வரூஉம் பொழுதே'

இஃதெல்லா வடியு முதற்கண் வல்லினமே வந்தமையின் வல்லின மோனை யென்று கையனார் காட்டிய பாட்டு"

(யாப்பருங்கலம், தொடையோத்து உரை)

கையனார் முதலாகிய வொருசாராசிரியர் இரண்டாஞ் சீர்க்க ணில்லாததனைக் கீழ்க்கதுவா யென்றும், ஈற்றயற் சீர்க்க ணில்லாததனை மேற்கதுவா யென்றும் வழங்கியதறிவித்தற் கொரு தோற்ற முணாத்தியதெனக் கொள்க."

(யாப்பருங்கலம்; தொடையோத்து 47-ஆம் சூத்திர உரை.)

"இவ்வாறு வண்ண விகற்ப மெடுத்தோதினார் தொல்காப் பியனாரும் கையனாரு முதலாக உடையார்."

(யாப்பருங்கலம்; ஒழிபியல் உரை.)

இவ்வாறு இவ் வுரையாசிரியர்கள் எழுதுவதிலிருந்து கையனார் என்னும் ஆசிரியர் இயற்றிய யாப்பிலக்கண நூல் ஒன்று இருந்ததென்பது ஐயமறத் தெரிகிறது. கையனார் யாப் பிலக்கண நூலிலிருந்து இவ் வுரையாசிரியர்கள் மூன்று சூத்தி ரங்களை மேற்கோள் காட்டி யிருக்கிறார்கள். அவை வருமாறு:—

"இறுவா யொப்பினஃ தியைபென மொழிப"

(யாப்பருங்கலக் காரிகை 17. உரை மேற்கோள்.)

"உறுப்பி னளவே யொன்றரை யாகும்."

"ஆய்த தானே குறியதன் கீழத்தாய்
வலியதன் மேல்வந் தியலு மென்ப."

(யாப்பருங்கலம்: எழுத்தோத்து. 2-ஆம் சூத்திரஉரை மேற்கோள்.)

இவையன்றி, கையனாரைப்பற்றியும் அவர் இயற்றிய யாப்பிலக்கண நூலைப்பற்றியும் வேறு செய்திகள் தெரியவில்லை.

## 81. நத்தத்தனார் இயற்றிய நத்தத்தம்

நத்தத்தனார் என்னும் பெயருள்ள புலவர் ஒருவர் தம் பெயரால் நத்தத்தம் என்னும் யாப்பிலக்கண நூல் ஒன்றைச் செய்தார் என்பது, யாப்பருங்கலக் காரிகை யுரையாசிரியர் குணசாகரரும் யாப்பருங்கல விருத்தி யுரைகாரரும் தம உரைகளில் கூறுவதிலிருந்து தெரிகிறது. 'ந' என்னும் சிறப்பெழுத்தோடு இவர் பெயர் வழங்கப்படுவதனால் இவர் புலவர்களால் பெரிதும் மதிக்கப்பட்டவர் என்பது தெரிகிறது இவர் பெயர் சில சமயங்களில் நற்றத்தனார் என்றும் கூறப்படுகிறது. இவர் இயற்றிய நத்தத்தம் என்னும் நூலுக்கு அடிநூல் என்னும் பெயரும் வழங்கியதுபோலும். என்னை?

"ஐஞ்சீ ரடுக்கலு மண்டில மாக்கலும்
வெண்பா யாப்பிற் குரிய வல்ல

என்று நத்தத்தனார் அடிநூலுள் எடுத்தோதினார்"
என்று உரையாசிரியர் குணசாகரர் (யா. காரிகை. 39 உரை.) கூறுவது காண்க. மேலும், குணசாகரர், நத்தத்தனார் நூலைப் பற்றி (25-ஆம் காரிகையுரை) இவ்வாறு கூறுகிறார் —

"மாவாழ் சுரம் புலிவாழ் சுரம் என்னும் வஞ்சியுரிச்சீ ரிரண்டும் உளவாக வைத்து, ஒரு பயனோக்கித் தூஉமணி கெழூஉமணி' என்றளபெடுத்து நேர்நடுவாகிய வஞ்சியுரிச் சீர்க்கு உதாரணம் எடுத்துக் காட்டினார் நத்தத்தனார் முதலாகிய ஒருசா ராசிரியர்"

நத்தத்த நூலிலிருந்து குணசாகரர் கீழ்க்கண்ட சூத்திரங்களைத் தமது உரையில் மேற்கோள் காட்டியுள்ளார் —

"அளபெடைத் தொடைக்கே யளபெடை யொன்றும்"
"வெண்பா விரவினுங் கடிவரை யின்றே." 1

"ஐஞ்சீ ரடுக்கலு மண்டில மாக்கலும்
வெண்பா யாப்பிற் குரிய வல்ல" 2

யாப்பருங்கலக் காரிகை யுரையாசிரியர் கீழ்க்கண்ட நத்தத்தச் சூத்திரங்களைத் தமது உரையில் மேற்கோள் காட்டுகிறார்.—

"யாப்பெனப் படுவ தியாதென வினவிற்
றூக்குந் தொடையு மடியுமிம் மூன்று
நோக்கிற் றென்ப நுணங்கி யோரே." 1

'பாவென மொழியினுந் தூக்கின் பெயரே." 2

"தனி நெடி றனிக்குறி லொற்றொடு வருதலென்
றன்னால் வகைத்தே நேரசை யென்ப." 3

"குறிலிணை குறினெடி லொற்றொடு வருதலென்
றந்நால வகைதத்தே நிரையசை யென்ப." 4

"நேரீற் றியற்சீர் கலிவயி னிலவே
வஞ்சி மருங்கினு மிறுதியி னிலவே." 5

"நாற்சீர் கொண்டது நேரடி யளவென்ப
தூக்கொடுந் தொடையொடுஞ் சிவணு மென்ப" 6

"ஆசிரி யப்பா வெண்பாக் கலியென
மூவகைப் பாவு நேரடிக் குரிய." 7

"வஞ்சி விரவினு மாசிரிய முரித்தே
வெண்பா விரவினுங் கலிவரை வின்றே" 8

"ஆசிரியப் பாவின் சிறுமைக் கெல்லை
மூவடி யாகும் பெருமை யாயிரம்
ஈரடி முதலா வொன்று தலைசிறந்
தேழடி காறும் மெணபாட் டுரிய
வாயுறை வாழததே செவியறி வுறூஉவே
கைக்கிளை மயக்கங் கலிவெண் பாட்டே
தத்தங் குறிப்பின வளவென மொழிப." 9

"முதலெழுத தொனறின் மோனை யாகு
மஃதொழித தொன்றி னெதுகை யாகு
மாயிரு தொடைக்குங் கிளையெழுத துரிய." 10

"பொருளினு மொழியினு முரணுதன் முரணே." 11

"இருசீ ரொன்றி னியைபெனப் படுமே." 12

"அளபெடைத தொடைக்கே யளபெடை யொன்றும்." 13

"ஒன்று தாவது செந்தொடைக் கியலபே." 14

"சீர்முழு தொனறி னிரட்டை யாகும்." 15

"முதற்சீர்த் தோற்ற மல்ல தேனை
விகற்பங் கொள்ளா ரடியிறந்து வரினே." 16

"ஒததா ழிசைக்கலி கலிவெண் பாட்டே
கொசசகக் கலியொடு கலிமூன் றாகும்." 17

"உரையு நூலு மடியின்றி நடிப்பினும்
வரைவில வென்ப வயங்கி யோரே." 18

"வாயமொழி பிசியே முதுசொல் லென்றாங்
காமுறை மூன்று மன்ன வென்ப." 19

"தானே யடிமுதற் பொருள்பெற வருவது
கடனென மொழிப குறியுணர்ந் தோரே."

"வஞ்சி யாயி னிறுதியும் வரையார்." 20

"கலிதத‌ளை யடிவயி னேரீற் றியற்சீர்
நிலைக்குரித் தன்றே தெரியு மோர்க்கே
வஞ்சி மருங்கினு மிறுதி யில்லா." 21

"குன்றியுந் தோன்றியும் பிறிது பிறிதாகியும்
ஒன்றிய மருங்கினு மொருபுடை மகார
மரையுஞ் சீரு மடியு மெல்லாம்
வகையுளி சேர்த்தல் வல்லோர் மேற்றே." 22

"சீரா கிடனு முரியசை யுடைய
நேரீற் றியற்சீ ரவவயி னான." 23

## 82. சேயூர் முருகன் உலா

சேயூர் முருகப்பெருமான்மீது கவிராசர் என்பவர் இயற்றிய ஒரு உலா உண்டென்பது, அந்தககவி வீரராகவ முதலியார் இயற்றிய சேயூர் முருகன் பிள்ளைத்தமிழினால் தெரிகிறது. அந்தககவி வீரராகவ முதலியார் தாம இயற்றிய சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ், அம்புலிப்பருவம் 10-ஆம செய்யுளில் இந்நூலைக் குறிப்பிடுகிறார். அச்செய்யுள் இது:—

"கவிராத வெவ்வினை தவிர்கரு முறுகாறுந்
தரித்தா றெழுத் தோதலாஞ்
சந்நிதிக கருணகிரி நாதன் திருப்புகழ்ச
சந்தம் புகழுந் துயயலாம்
புவிராசன வளவன் கழுக்குன் றன் வளமைபுரி
புண்ணியந் தரிசிக கலாம்
பொருஞ்சூ ரனைப்பொருங் கதைமுதற் கந்தப்
புராணக கடற் காணலாம்
கவிராச னிப்பிரான் மிசைசெய்த திருவுலாக்
கவிவெள்ளை கற்றுநகலாம்
கவிவீர ராகவன் சொற்றபிள் ளைக்கவி
கலம்பகக் கவி வினவலாம்
அவிராடகக் கோவில் புக்குவிளை யாடலாம்
அம்புலீ யாட வாவே
மயில்வனச செய்கையின் மயில்வகைக் கந்தனுடன்
அம்புலீ யாட வாவே."

இச்செய்யுள், கவிராசன என்னும் புலவா சேயூர் முருகன் உலா என்னும் நூலை இயற்றிய செய்தியைக் கூறுகிறது. கவிராசன் என்பவர், சேறைக் கவிராசபிள்ளை என்பவர். ஆசுகவிராயர் என்னும் சிறப்புப் பெயரையும உடையவர். சுன்னாகம்

திரு. அ. குமாரசுவாமிப்புலவர் அவர்கள் தாம் இயற்றிய தமிழ்ப் புலவர் சரித்திரத்தில் இவரைப்பற்றி இவ்வாறு எழுதுகிறார்:

"சேறைக் கவிராசபிள்ளை. இவரூர் சோழ மண்டலத்துள்ள சேறை என்றும், குலம் கருணிகர் குலம் எனறும் கூறுவர். சமயம் சைவம். இவா இலக்கிய இலக்கணங்கள் நன்கு கற்றவா. ஆசுகவிராயர் என்னும் பேரும் பெற்றவா. சேயூர் முருகனுலா, வாட்போக்கிநாதருலா, அண்ணுமலையாா வண்ணம், காளத்திநாதருலா முதலிய பிரபந்தஙகள செய்தவர், இப்பிரபந்தங்கள் சிலவறறிலே சிலேடை, மடக்கு, திருக்கு முதலிய அணிகளும் அமைத்தவர்."

சேயூர் முருகன உலா இப்போது மறைந்துவிட்டதாகத் தெரிகிறது இந்நூல் கி பி. 17-ஆம நூற்றுண்டில் இயற்றப பட்டிருக்கக்கூடும என்று தோன்றுகிறது.

## 83. பேர் வஞ்சி

புதுக்கோட்டை திருமய்யம் தாலுகா பொன்னமராபதி என்னும் ஊரில் உள்ள சுநதரராசப்பெருமாள் கோவில சாசனம ஒன்று பேர்வஞசி என்னும் நூலைக் குறிபபிடுகிறது. மற மாணிக்கர் என்னும் வீரர்களின சிறப்பை, திருவரங்குளமுடையான் என்னும புலவர் பேர்வஞசி என்னும் நூலின பாடினர் என்றும், அந நூலை அரங்கேற்றக்கேட்டு மகிழ்நத அநத வீரர்கள் இப்புலவருக்கு மறச்சக்கரவர்ததிபபிளளை என்னும சிறப்புப் பெயரைக் கொடுததுத் தூத்துக்குடியில் நனசெய புன்செய் நிலங்களைப் பரிசிலாக வழஙகினாகள் என்றும் அந்தச் சாசனம் கூறுகிறது. அந்தச் சாசனத்தின் வாசகம் இது :—

"ஸ்வஸ்திஸ்ரீ சோணாடு வழங்கியருளிய சுநதரபாண்டிய தேவற்கு யாண்டு பதினொன்ருவதி னெதிராமாண்டு. புறமலை நாட்டுப பொன்னமராபதி முதலான நாடுகளில் மறமாணிக்க ரோம் பேர்வஞ்சி கேட்டுப் பரிசிலாக குடுத்த (வந்) திருவரங்குள முடையானுக்கு மறச்சக்கரவர்த்திப பிள்ளையென்று பேருங் குடுத்து தூத்திக்குடி வயலில் வடபாகம் விளைநிலமும இதுக் கெல்லையான புன்செய்களும் முன்பு எழுதி அணிதது குடுத்த ...............சந்திராதித்தவரை இறையிலியே காணிக்கையாகக் குடுத்தோம்.

.......................இதில் தூத்திக்குடியில் நன்செய் புன்செய் உள்ளவை அடங்கலும் தேவன் திருவரங்குளமுடையானை மறச்சக்கரவர்த்திய பிள்ளைக்கு நன்செய் புன்செய் பாதியும் தமிழரையருள்ளிட்ட நால்வர்க்குப் பாதியுமாக இட்டோம்,

...................(*Inscriptions (Texts) of the Pudukkottai State No. 278.)

இந்தச் சாசனத்தில் கூறப்படுகிற சோழனுடு வழங்கிய சுந்தரபாண்டிய தேவர் என்னும் பாண்டியன் கி. பி. 13-ஆம் நூற்றுண்டின் முற்பகுதியில் அரசாண்டவன்.

இந்த பாண்டியனுடைய படையின் ஒரு பகுதியைச் சேர்ந்தவர் மறமாணிக்கம் என்று கூறப்படுபவர். இவாகளுடைய வீரத்தையும் வெற்றியையுங் கூறுவது போவஞ்சி என்னும நூல். பேர்வஞ்சி எனினும் பெருவஞ்சி எனினும ஒக்கும.

பேர்வஞ்சி பாடிய புலவருக்குத் தேவன் திருவரங்குள முடையான் என்னும் பெயர் இருபபதனுலும், மறச்சக்கரவர்த்திபிள்ளை என்னும் சிறப்புப் பெயர் சூட்டப்பட்டபடியாலும் இவா மறவர் இனத்தைச் சேர்ந்தவர் என்று கருதலாம.

பேர்வஞ்சியில் சரித்திர சம்பநதமான செய்திகளும் இருக்கக்கூடும். இந்நூல் இப்போது கிடைக்கவில்லை

84　பன்னிருபடலம்

புறப்பொருள இலக்கணததைக கூறுகிற பன்னிருபடலம் என்னும் பெயருளள நூலொன்று இருந்ததென்பது பேராசிரியா, இளமபூரண அடிகள், நசசினுர்ககனியா, யாப்பருங்கல விருததியுரைகாரா, இறையனுா அகபபொருள் உரையாசிரியர் ஆகியோர் உரைகளினுல் தெரிகிறது.

“அளவினுற் பெயர் பெறறது பன்னிருபடலம” என்று கூறுகிறுா இறையனுா அகப்பொருள் உரையாசிரியா.

“ஒததினுற பிணடமாயிற்று பன்னிருபடலம்” என்று கூறுகிறுா இளம்பூரண அடிகள. (தொல்: பொருள செய்யுள். 165-ஆம் சூத்திர உரை.)

இடைக்காலத்திலே பெரிதும் பயிலப்பட்டது பன்னிருபடலம் என்பது நன்கு தெரிகிறது. இநநூலைப் பின்பறறி, இதற்கு வழிநூலாகப் புறபபொருள் வெண்பாமாலை என்னும் நூலை ஐயன ஆரிதன் என்பவர் இயற்றினா, “பன்னிருபடலம் முதல நூலாக வழிநூல செய்த வெண்பாமாலை ஐயனுரிதனும் இது கூறினா” என்று பேராசிரியா (தொல்: பொருள். மரபு.) தமது உரையில் எழுதுகிறுர்.

பன்னிருபடலத்தின் வழிநூலாகிய புறப்பொருள் வெண்பாமாலை இப்போது முழுவதும இருக்கிறது. ஆனுல், முதனூலாகிய பன்னிருபடலம் மறைந்துவிட்டது.

அகத்திய முனிவரின் மாணவர் பன்னிருவரும் சேர்ந்து புறப்பொருள் இலக்கணம் பற்றி ஒவ்வொருவரும் ஒவ்வொரு படலம் இயற்றினார்கள் என்றும், அவர்கள் இயற்றிய பன்னிரு படலங்களின் தொகுப்பே பன்னிருபடலம் என்னும் பெயர் பெற்ற நூலாயிற்று என்றும் கூறுவர். என்னை ?

" மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை யிருந்த சீர்சான் முனிவரன்
றன்பாற் றண்டமிழ் தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல்காப்பியன் முதற்
பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த
பன்னிரு படலம் "

என்று புறப்பொருள் வெண்பா மாலைப் பாயிரம் கூறுவது காண்க.

பன்னிரு படலத்துச் சூத்திரம் ஒன்றினை இளம்பூரண அடிகள் (தொல் புறத்திணை 'அறுவகைப்பட்ட பார்ப்பன பக்கமும்" என்னும் சூத்திர உரையில்) மேற்கோள் காட்டுகிறார். அச்சூத்திரம் இது —

" பனியும் வெயிலும் கூதிரும் யாவும்
துனியின் கொள்கையொடு தொன்மை யெய்திய
தணிவுற் றறிந்த கணிவன் முல்லை "

நச்சினார்க்கினியர், சிந்தாமணி (கோவிந்தையார் 20) உரையில்,

" பல்லாக் கொண்டார் ஒலலா ரென்னும்
பூசல் கேட்டு கையது மாற்றி "

என்னும் பன்னிருபடலச் சூத்திரத்தை மேற்கோள் காட்டுகிறார்

யாப்பருங்கல விருத்தியுரைகாரர், கீழ்க்கண்ட பன்னிரு படலச் சூத்திரங்களைத் தமது உரையில் மேற்கோள் காட்டுகிறார்.—

" அகத்திணை யகவலுள் வஞ்சி வாரா. என்னை ?

'அகத்திணை மருங்கி னளவு மயங்கி
விதப்ப மற்றவை வேறு வேண்டி
வஞ்சி யடியின யாததிலர் வஞ்சி
யகத்திணை மருங்கி னணையு மாறே'

என்பது பன்னிருபடலத்துப் பெருந்திணைச் சூத்திரமாகலின் "
(யாப்பருங்கலம் : அடியோத்து)

"'ஆய வகப்புற மையிரண்டு மாயுஙகாற்
காந்த ளமர்ந்த வீரைநது மகததின் புறமே."
'கைக்கிளை யென்பது புறனே'
இவை பன்னிரு படலம்."

(யாப்பருஙகலம் ஒழிபியல்.)

"'பொருதல தும்பை புணாவ தென்ப'
இவற்றின் விகற்பமெல்லாம் பன்னிருபடலத்துட் காண்க."

(யாப்பருஙகலம : ஒழிபியல்.)

இளம்பூரண அடிகளை கீழ்க்கண்ட பன்னிருபடலச் சூத்திரத்தைத் தமது உரையில் (தொல· பொருளாதிகாரம்) மேற்கோள் காட்டுகிறா. அச்சூத்திரம் இது :

" தன்னுறு தொழிலே வேந்துறு தொழிலென்
றன்ன விரு வகைத்தே வெட்சி."

பன்னிரு படலத்திலே தொல்காப்பியர் இயற்றியதாகக் கூறப்படுகிற சூத்திரங்கள உண்மையில் தொலகாப்பியா இயற்றியன அல்ல என்று இளமபூரண அடிகள மறுககிறார் ஏனென்றால், தொல்காப்பியப பொருளதிகாரததில் தொல்காப்பியர் கூறியுள்ள கருத்துக்களுக்கு மாறுபட்ட கருததுககள், பன்னிரு படலத்தில் தொல்காப்பியா இயறறியதாகக கூறபபடுகிற சூத்திரங்களில் காணப்படுகின்றன என்பதைச சுட்டிக் காட்டுகிறார். அவா எழுதுவது வருமாறு :—

"பன்னிருபடலத்துள்,
'தனனுறு தொழிலே வேந்துறு தொழிலென்
றன்ன விரு வகைத்தே வெட்சி'

என, இரண்டு கூறுபடக் கூறினாராயினும, முன்வருகின்ற வஞ்சி, உழிஞை, தும்பை முதலாயின எடுததுச செலவு, எயிலகாத்தல், போர் செய்தல் என்பன அரசாமேல் இயன்று வருதலின் வேந்துறு தொழில் ஒழித்து, தன்னுறு தொழிலெனத தன் நாட்டும் பிறா் நாட்டும களவின் ஆன்நிரை கோடலின் இவா் அரசரது ஆணையை நீங்கினாராவர். ஆதலால, அவ்வாறு கூறல் மிகைபடக் கூறலாம். அதனால், பன்னிருபடலத்துள் வெட்சிப்படலம் தொல்காப்பியர் கூறினாரென்றல் பொருந்தாது. எனனை ?

'ஒத்த சூததிர முரைப்பிற் காண்டிகை
மெய்படக் கிளந்த வகைய தாகி
ஈரைங் குற்றமு மின்றி நேரிதின்
முப்பத திருவகை யுததியொடு புணரின்
நூலென மொழிப நுணஙகுமொழிப் புலவர்!

(தொல் : பொருள் : மரபு.)

எனவும்,

'சிதைவெனப் படுமவை வசையற நாடின்
கூறியது கூறல் மாறுகொளக் கூறல்
குன்றக் கூறல் மிகைபடக் கூறல்
பொருளில கூறல் மயங்கக் கூறல்
கேட்டோர்க் கின்னா யாப்பிற் றாதல்
பழித்த மொழியா னிழுக்கக் கூறல்
தன்னா னொருபொருள் கருதிக் கூறல்
என்ன வகையினு மனங்கோ ளின்மை
அன்ன பிறவு மவற்றுவிரி யாகும்.'

(தொல் : பொருள் : மரபு.)

எனவும் கூறிய ஆசிரியர் தாமே மாறுகொளக் கூறல், குன்றக் கூறல், மிகைபடக் கூறல், பொருளில கூறல், மயங்கக் கூறல், தன்னானொரு பொருள் கருதிக் கூறல் என்னும் குற்றம் பயப்பக் கூறினாரென வருமாகலான்."

(தொல்: பொருள் : புறத்திணை 'வேந்து விடு முனைஞர்' என்னும் சூத்திர உரை.)

தொல்காப்பியத்துக்கு மாறுபட்ட கருத்துக்களையுடைய சூத்திரங்கள் பன்னிருபடலத்துள் கூறப்பட்டுள்ளதை இளம்பூரண அடிகள் எடுத்துக் காட்டி, அப் பன்னிருபடலச் சூத்திரங்கள் தொல்காப்பியரால் இயற்றப்பட்டன அல்ல என்பதை மேலும் விளக்குகிறார் —

"பன்னிருபடலத்துள் காந்தைக்கண் புணர்வொடு வருதல் முதலாக வேறுபடச் சில துறை கூறினாராகலின், புண்படுதல் மாற்றோர் செய்த மறத்துறையாகலின், அஃது இவர்க்கு (தொல்காப்பியர்க்கு) மாறுகொளக் கூறலும் மயங்கக் கூறலுமாம். ஏனையவும் இவ்வாறு மயங்கக் கூறலும் மிகைபடக் கூறலும் ஆயவாறு எடுத்துக் காட்டின் பெருகுமாதலான் உய்த்துணர்ந்து கண்டு கொள்க."

(தொல்: புறத்திணையியல். 'வெறியறி சிறப்பின்' என்னும் சூத்திர உரை)

இதனால், சங்க காலத்துக்குப் பிற்பட்ட காலத்திலே, சிலர் புதுவகையால் சில சூத்திரங்களைச் செய்து அவற்றைத் தொல்காப்பியர் முதலிய பன்னிருவர் பெயரால் பன்னிரு படலம் என்று பெயரிட்டு அமைத்துக்கொண்ட நூல் பன்னிரு படலம் என்பது தெரிகிறது. ஆனால், இந்நூல் இடைக்காலத்திலே பெரிதும் பயிலப்பட்டது என்பதும் தெரிகிறது. இப்போது இந்நூல் மறைந்துவிட்டது. இதன் வழிநூலாகிய புறப்பொருள் வெண்பாமாலை இப்போது வழங்கிவருகிறது.

(தொடரும்)

# வாழ்வின் கடைக்கோட் காலம்

[வித்துவான் திரு. செ. வேங்கடராமச் செட்டியார்]

இளமையும் எழிலும் வளமையுமுடைய தலைவனும் தலைவியும் தமரறியாது தாமே தம்மில் கண்டு காதல்கொண்டு ஒழுகும் களவொழுக்கத்தைப் பற்றியும் பின்னர்ப் பல்லோரறிய மணமுரசறைந்து தமர்தரத் தலைவியைத் தலைவன் ஏற்றுக் கொண்டு நிகழ்த்தும் கற்பொழுக்கத்தைப் பற்றியும் விரித்துக் கூறும் நூல்கள் மிகப்பல தமிழில் உண்டு. அவை யாவும் காதலர்களின் இளமைக் கால வாழ்க்கையைப் பற்றியே விரித்துக் கூறுவனவன்றி அவர்களுடைய முதுமைக் கால வாழ்க்கையைப் பற்றிக் கூறுவனவல்ல. காரணம், இளமைக்கால வாழ்க்கை போல முதுமை வாழ்க்கை மக்கள் உள்ளத்தைக் கவராமையே யாகும். இன்பம் என்பது எல்லாவுயிர்க்கும் மகிழ்ச்சிதரக்கூடிய தாகலின் பொதுமக்கள் உள்ளம், இன்பம் நிறைந்த இளமை வாழ்க்கையையே அறிய விழைகின்றது. பொதுமக்கள் உள்ளம் எதை விரும்புகின்றதோ அதைத் தம்புலமை தோன்ற விரித்துக் கூறுவதையே புலவர்களும் விரும்புகின்றனர். எனவே இன்ப நுகர்ச்சிக்குரிய காதலரின் இளமை வாழ்க்கையை விரிக்கும் நூல்கள் பெருகின.

அங்ஙனமாயின், காதலராயில்லிருந்து நல்லறஞ் செய்து முதிர்ந்தவர் வாழ்க்கை பயனற்றதோ வெனின்? பயனற்றதன்று. அறிவும் பண்பும் அநுபவமும் முதிரப்பெறாத இளமை வாழ்க்கையைவிட அவை முதிரப்பெற்ற முதுமை வாழ்க்கையே மிகப் பயனுடையதாகும். ஆயின் மக்கள் உள்ளம் இன்பத்தையே நோக்குவதன்றிப் பயனை நோக்குவதில்லையே. எனவே, பயன் மிக்கதாயினும் காதலர்களின் முதுமைவாழ்க்கை நூல்களில் விரித்துக் கூறப்படவில்லை ஆயினும், முதுமை வாழ்க்கையின் சிறப்புணர்ந்த ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியர், அதற்கு இலக்கணம் கூறியுள்ளார். மக்கள் வாழ்க்கை முழுவதையும் ஆராய்ந்து கூறும் தம் பொருளதிகாரத்துக் கற்பியலின் இறுதியில், காதலராய் வாழ்ந்து முதிர்ந்தோர் எவ்வாறு வாழ்க்கை நடத்தவேண்டும் என்பதைக் கூறியுள்ளார், அதைக் காண்போம்.

> "காமஞ் சான்ற கடைக்கோட் காலை
> ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
> அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
> சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே." (கற்பியல்: ருக)

என்பது அச்சூத்திரம். தொல்காப்பியம் முழுமைக்கும் உரை வரைந்த இளம்பூரணர், பொருளதிகாரதது முன்னுரையில் இச்சூத்திரததை யெடுத்துக் காட்டி "என, இலலறததோர் இயலபும்" என வரைந்துள்ளார். கறபியலில் இசசூததிரத்தை விளக்கவநத அவர், இது தலைவறகுந தலைவிக்குமாவதோர் மரபுணர்த்திற்று சிறந்தது பயிற்றலாவது - அறத்தின்மேல் மனநிகழ்ச்சி என்று கருத்து வரைநது, "சூத்திரததால பொருள் விளங்கும" என்று கூறிப போந்தார.

நச்சினார்க்கினியர், "இது முன்னா இல்லறம் நிகழ்ததிய தலைவனும் தலைவியும் பின்னர்த் துறவறம நிகழ்த்தி வீடுபெறுப என்கின்றது." எனறு கூறிப்பின் விளக்குகின்றார்

"தலைவனும் தலைவியும் உரிமைச சுறறததோடே கூடி நின்று இல்லறஞ் செய்தலை விரும்பிய மக்களோடே தமக்கு முன்னரமைந்த காமததினையும் தீதாக உட்கொண்ட காலத்திலே அறம பொருளினபததிற் சிறநத வீட்டின்பம பெறுதற்கு ஏமஞ்சானறவற்றை யடிப்படுததல் யான முறகூறிய இல்லறத்தின் பயன் என்றவாறு.

"சான்றகாமம்" எனறா நுகர்ச்சியெலலாம் முடிந்தமை தோன்ற. இது கடையாயினா நிற்கும் நிலையென்றுரைததற்குக் 'கடை' என்றார். ஏமஞ்சான்ற ஆவன—வானபபிரத்தமும சந்நியாசமும; எனவே இல்லறததின பினனர் இவறறின கண்ணே நின்று, பின்னா மெயயுணர்ந்து வீடுபெறுப என்றார். இவ்வீடுபேற்றினைஇன்றி அமையாது இவ்வில்லறம என்பது இதன் பயன் இது காஞ்சியாகாதோ வெனின்? ஆகாது; தங் குறிப்பினன் அன்றி நிலையாமைதானே வருவதுதான் சிறந்து நிலைபெற்று நிற்குமெனச் சானறோா கூறுதலும், அது தானே வந்து நிற்றலுங காஞ்சி; இஃதனனதனறிச் சிறந்த வீட்டின்ப வேட்கையால் தாமே எல்லாவற்றையும் பற்றறத் துறத்தலின் அகப்பொருட்பகுதியாம். இதனானே இவ்வோததினும் பல வழியுங் கூறிய காமம் நிலையின்மையின்மேல் இன்பத்தை விளைததே வருதலிற் காஞ்சியாகாமை யுணர்க.

உ-ம். "அரும்பெறற் கற்பி னயிராணி யன்ன
பெரும்பெயாப் பெண்டி ரெனினும்—விரும்பிப்
பெறுநசையாற் பின்னிற்பா ரின்மையே பேணும்
நறுநுதலாள் நன்மைத துணை." (நாலடி · ௩௮௪)

இதனுள், அருநததியைப போலும் தமக்குப பெரும்பொருள் களை நச்சுதலாலே இரப்பாரது வறுமையே விரும்பிப் பாது காத்து, அவர்க்கு வேண்டுவன கொடுக்கு மகளிர், நாஞ செல்

கின்ற வானப்பிரத்த காருகத்திற்குத் துணையாவரெனத் தலைவன் கூறவே தலைவியும பொருளகளிற் பற்றற்றுளாய் யாமும் துறவறத்தின் மேற்செல்வாமெனக் கூறியவாறு காண்க" என்று உரை விரிததுளளார்.

"கிழவனுங் கிழத்தியும் சுற்றமொடு துவன்றி அறம்புரி மககளொடு சானற காமங் கடைக்கோட் காலை இறந்தது ஏமஞ் சான்ற பயிறறல் சிறநததன பயனே"

எனச் சூத்திரததைத தம் கருத்திற்கேற்பச் சிதைத்துக் கொண்டு கூட்டியிருக்கின்றார். இயல்பாகப பொருள் கொள்ளற் குரிய தொல்காபபியச சூததிரத்தை இவ்வாறு பலவகையாகச் சிதைத்து நலிநது பொருள எழுதின தன்மையே இந நச்சினாக் கினியர், தொல்காப்பியர் கருததுணர்ந்து உரைக்கவில்லை, தம் கருததையே விரித்துரைத்தார என்பது எளிதின் விளங்கும்

மககள வாழ்க்கை இலலறத்தில தொடங்கித் துறவறத்தில் முடிவு பெறுவதே சிறப்பு என்பதைத் திருககுறள முதலிய அறநூல் வழியுணர்நத நச்சினார்க்கினியா, அச்சிறநத கருதது அமமக்கள் வாழ்ககையையே அகம்புறமெனப் பாகுபடுததி விரித்துக் கூறிய தொல்காபபியா கூற்றிலும இருப்பதாக நுழைத்துக் காட்டவேண்டும என்று செய்த முயற்சியே, இச் சூததிரத்தை இவ்வாறு நலிந்து பொருள்கொள்ளச செயதது என்பதை எளிதின் உணரலாம் நசசினாக்கினியர், தாம் சிறப பாகக் கண்ட கருத்துககளை நுழைக்கவே சூததிரங்களையும செய்யுட்களையும் கொண்டு கூட்டி நலிநது பொருள்கொள்வர் எனபதை அவர் உரைகளைப பயின்றார் அறிவா அது ஒரு வகையிற் சிறநததாகலாம. ஆயின் நூலாசிரியர் கருததுணாந்து உரைத்ததாகாது என்பது வெளிபபடை. இவா கூறிய இப் பொருளைத் தொல்காப்பியர் கருதியிருப்பாராயின் அக்கருத்து விளங்கச் சொற்களை முறையிற் கூறியிருப்பர்

இச்சூததிரத்தை நலிந்து பொருள் கொண்டது போலவே இதற்கு உதாரணமாகக காட்டிய நாலடியாா செய்யுளையும நலிந்து பொருள் கொண்டே தம கருத்திற்கேற்ற வுதாரண மாக்கியுளளார். "கற்புடைப் பெண்டிா பிறர் நெஞ்சு புகார்" என்ற தமிழ்மரபை விளக்கவந்த செய்யுள் அது பெறலருங கற்பினையுடைய இந்திராணி போன்ற பெரிய பொருளையுடைய பெண்டிராயிருந்தாலும தன்னைக் காதலியாகப் பெறும் விருப் பத்தால் தன்பின் நிற்கும ஆடவா இல்லாமையையே விருமபு கின்ற பெண்டே இல்லறத்திற்கு நல்ல துணையாவாள்" என் பதே அச்செய்யுட்குரிய நேரிய பொருள் என்பது அதனை ஒரு முறை நோக்குவார்க்கும் நன்கு விளங்கும்.

மக்கள் வாழ்க்கை துறவினாலன்றி நிறைவுறாது என்பதைத் தொல்காப்பியர் அறிவர். ஆயின், அத் துறவை அகப்பொருளில் அடக்கிக் கூறுவது மரபன்று என்றே புறததிணையியலில், "நாலிரு வழக்கிற் றாபத பக்கமும்," (புறத்திணை. 16) "காமம் நீத்த பாலின் கண்ணும," (புறததிணை: 17) "அருளொடு புணாந்த அகற்சி" (புறத்திணை: 76) எனக் கூறியுள்ளார் என்பதறிதல்வேண்டும். இளம்பூரணரும், தம மூன்னுரையில் வானப்பிரத்த சநநியாசிகள இயல்பு கூறுவதாக இச சூத்திரங்களைக் காட்டியுள்ளமை காண்க.

இனி, தொல்காப்பியத்திற்கு வழிநூலாக அகப்பொருள் பகுதியை மட்டில் பிரித்து, 'நமபி அகப்பொருள,' என்னும் பெயரொடு விளங்கச் செய்த நாற்கவிராச நம்பியும நச்சினாக்கினியர் கருத்தை யுடன்பட்டே, "காமஞ் சான்ற," என்ற சூததிரத்திற்குப் பொருள்கொணடு தம நூலில்:—

"மக்களொடு துவன்றி மனையறங் காத்து
மிக்க காம வேட்கை தீர்ந்துழித்
தலைவனும் தலைவியும் தம்பதி நீங்கித்
தொலைவில் சுற்றமொடு துறவறங் காப்ப."

என்று விளக்கமாகக் கூறிச் சென்றார். "தலைவனும் தலைவியும் தமபதி நீஙகித் தொலைவில் சுறறமொடு துறவறம் காப்ப," என்றமையால் வானப்பிரதத நிலையையே யுணர்த்தியுள்ளார் என்பதும பெறப்படும்.

நச்சினார்க்கினியரும் நம்பியும் அச் சூத்திரத்திற்கு இவ்வாறு பொருள் கொணடிருப்பினும் இளமபூரணா அச் சூததிரம் இல்லறத்தோா இயல்பு கூறியதாகவே கொண்டுள்ளமை காண்க. அவர் கருததுப்படி அச் சூததிரத்திற்குப் பின் வருமாறு பொருள் கூறலாம்.

கிழவனும் கிழத்தியும்—தலைவனும் தலைவியும், காமஞ் சான்ற கடைக்கோட்காலை—பல்லாண்டு துய்ததுப் போந்தமையால் காமம் அமைதி யடையப்பெற்ற கடைசிக்காலத்து, ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி—தமக்கு இன்பத்தை மிகுவிக்கின்ற மக்களொடு நெருங்கியிருந்து, அறம்புரி சுற்றமொடு—தருமத்தையே விரும்பும் சுற்றததாரோடு கூடி, சிறந்தது பயிற்றல்—எல்லாவற்றினும் சிறநததாகிய இல்லறத்தைத் தம் மக்களுக்குப் பயிற்றுதல், இறந்ததன் பயனே—தாம் இல்லறஞ் செய்து பழகிப் போந்தமையாலாய பயனாகும்; என்பது.

குழவிப் பருவத்துக் குறுகுறு நடந்து சிறு கை நீட்டி இட்டும் தொட்டும் கவவியுந் துழந்தும் நெய்யுடை யடிசில் மெய்பட விதிர்த்தும் மழலைமொழி பேசியும் தாய் தந்தையரை இன்புறுத்தலானும், அவ் விருமுது குரவரும முதுமைக் காலத்துத் தளர்ச்சி நீக்கி வேண்டுவன செய்து பாதுகாதது இன்புறுத்தலானும, அவா இறந்த பின்னரும் நீாககடன் முதலிய செய்து மறுமைக்கண் தேவராக்கி யின்புறுத்தலானும் மக்களை, "ஏமஞ்சான்ற மக்கள்," என்று சிறபபிததார். தம மக்கள் அறநதலை நிற்றறகுக தாமேயன்றி அறததை விரும்பும் சுற்றமும் காரணமாதலபற்றி, "அறமபுரி சுறறமொடு சிறந்தது பயிறறல," என்றூா. "அற மெனபபட்டதே யில்வாழ்க்கை," எனவும், "அறததாற்றி னிலவாழக்கை யாற்றின், புறததாற்றிற் போஒயப பெறுவதெவன்," எனவும் புகழப்படும் சிறப்புடைமையின் இலலறததைச 'சிறநதது' என்றூா பயிற்றல—பயிலச் செய்தல தாம பயிறலனறு என்பதறகுப பிறவினைச சொலலாகிய, 'பயிற்றல்,' என்னும இச் சொலலே சான்றுதலறிக. இறநதது—கழிந்தது, ஈண்டுச செய்து பழகிப் போநதமை யுணர்ததிற்று. இல்லறஞ் செய்து கைவநததின பயன் பயிற்சி பெறாத தம் மக்களுக்கு அவ விலலறத்தை யுடனிருந்து பயிற்றுதலே என்பது கருத்து 'மக்களொடு துவன்றி,' என்றமையால் வனத்தின்கண் செல்லாது மக்கள அணமையில் இருததல் பெற்றாம.

இத்தகைய நேரிய பொருளை இளங்கோவடிகளும் கொண்டு தாம் சீர்பெற வியற்றிய சிலப்பதிகாரததில தாவிலனாகிய கோவலனுடைய இருமுது குரவாபால் அமைததுக் காட்டியுள்ளார். இம முறையே யாவாபாலும் காணத்தக்க எளிய சிறந்த முறையாதலும் காண்க. தலைவன் தலைவியராய் இன்பம் துய்ததாரெலலாரும் முதுமைக் காலத்துத் துறவின்கண் செல்ல வியலாமையும், தந்நலம் நோக்காது மக்கள் நலங் கருதி அறத்தை அவர்க்குப் பயிற்றுதல் பெருமபானமையோரால் கைக்கொள்ளததக்க எளிமையதாதலும் உலகியலிற் கண்டு தெளியலாம். மேலும புறத்திணையியலில், "அருளொடு புணர்ந்த அகற்சி," என வானப்பிரத்த நிலையையும், "காமம் நீத்த பால்," என முற்றும் துறத்தலையும கூறிய தொல்காப்பியர் கற்பியலினும அவற்றைக் கூறினர் என்றல் பொருந்தாமையும் உணர்க.

இளங்கோவடிகள், இத் தொல்காப்பியரின் கருத்துணர்ந்தே கோவலனையும் கண்ணகியையும் வேறில்லத்தில் வைத்ததற்குக் காரணங் கூறுகின்ற பொழுது,

மறப்பருங் கேண்மையோ டறப்பரி சாரமும்
விருந்து புறந்தரூஉம் பெருந்தண வாழ்க்கையும்
வேறுபடு திருவின் வீறுபெறக் காண
.... .......... ........
ஒருதனி புணர்க்க.

என்று விளக்கினமை காண்க. இவ் வடிகளில் கோவலன் இருமுது குரவரும் தம மகனுக்கும மருமகளுக்கும் சிறந்த தாகிய இல்லறம பயிற்றுதல் பெறப்படும

கோவலன் மாதவியின்பால் பிரிந்திருந்த நிலையில் அவன் தாயும தந்தையும் தன்னைக் காண வநதபொழுது கண்ணகி தான் இருந்த நிலைமைபற்றிக் கூறுகினறுழி,

"அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலும்
துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலு மிழந்த என்னை"

என்று கூறியிருததல் காண்க. கோவலன் தேற்றாத தீயொழுக் கத்தால் அவன தாய் தநதையர் பயிற்றிய இல்லற வொழுக்கங்க ளனைத்தையும் கண்ணகி யிழந்ததாகக கூறி யிருபபதும மாதவி யைப பிரிந்து வநது கண்ணகியோடு மதுரை நண்ணிய கோவலனும்,

"இருமுது குரவா எவலும் பிழைததேன்"

என்று கண்ணகிக்குத் தன் தவற்றினை எடுத்துரைக்குங்கால் இருமுது குரவர் ஏவலாகிய இல்லறததைச செய்யாது பிழைத் தேன் என்று வருநதியிருத்தலுங காண்க.

இதனல் காமம அமைந்த முதுமைக் காலத்துத் தலைவனும் தலைவியும தம மக்களோடு இருந்து தாம் பழகிய இல்லற நெறியை அவர்கட்குப் பயிற்றிக்கொண்டு தந்நலமறறு வாழ் வதுதான் முறை யென்பதை மாசாததுவானும் அவன் மனைவி யும் மேறகொண்ட முறையிலிருந்தும அறியலாம்

இதுகாறும் கூறியவாற்றான் தலைவன் தலைவியராயிருந்து இன்புற்றவர்கள் தம் முதுமைக்கண் இன்புறுவது தம மக்களை அறநெறி யொழுக்கும் செயலில்தான் என்பது விளங்கும். தொல்காப்பியர், 'காமஞ் சான்ற,' என்ற சூத்திரத்தால் விதித் ததும் இளங்கோவடிகள அவர் கருத்துணர்ந்து தம் சிலப்பதி காரததில அக் கருததை இலக்கியமாக்கித் தந்துள்ளமையும் கண்டு காதலர் வாழ்வின் கடைக்கோட் காலம் இன்னது என்ப துணரலாம்.

# பாராட்டுக்கூட்டத் தலைமையுரை*

**அறிவிற் சிறந்த தமிழாசிரியப் பெரியோர்களே !**

உங்களனைவருக்கும் என் அன்பு கலந்த வணக்கம். நம் தமிழ்மொழிக்குச் சிறந்ததோர் தொண்டாற்றிய பெரியாரைப் பொன்னாடை போர்த்திப் பாராட்டுவதற்காக நாம் இன்று இங்கு குழுமியிருக்கிறோம். அத்துடன் தமிழ்த் தொண்டாற்றி அண்மையில் மறைந்த புலவர் பெருமக்கள் மூவருடைய திருவுருவப்படங்களை மூன்று தமிழ்ப் பேராசிரியர்கள் திறந்துவைக்கப் போகிறார்கள். இவ்விழாவில் எனனைப் பங்குகொள்ள வேண்டுமென நண்பர் ஏ சி செட்டியாரவர்களும் செயலாளரும் என்னைப் பணித்தபோது நான் தயக்கத்துடன் ஒப்புக்கொண்டேன். நான் இப்பேரவைக்குத் தலைமைதாங்க எவ்வாற்றானும் தகுதியுடையேனல்லேனாயினும் அவர்கள் விருப்பத்தை மறுக்க இயலாமையாலும் தமிழாசிரியர்களால் தமிழுக்கு அரிய தோர் சேவை செய்த ஒரு பேராசிரியரைப் பாராட்டுவதற்காக நடத்தப்பெறும் ஒரு விழாவில் கலந்துகொள்ளும் வாய்ப்புக் கிட்டியபோது அதனைப் பயன்படுத்திக் கொள்ளுதல் கடமை என்று கருதியதாலும் அவர்கள் விருப்பத்திற்கிணங்கி வந்துள்ளேன். என்னைச் சொற்பொழிவு நிகழ்த்துமாறு வற்புறுத்தியிருந்தால் ஒருகால் நழுவியிருப்பேன். தலைவன் என்ற முறையில் இயன்ற அளவு பேச அவகாசம் இருப்பதோடு ஏனைய நிகழ்ச்சிகளை ஆரம்பமுதல் இறுதிவரை அண்மையிலிருந்தே "எனைத்தானும் நல்லவை கேட்க" என்றபடி கேட்டு ஆனந்திக்கும் வாய்ப்பும் உண்டல்லவா? நண்பர் செட்டியாரவர்கள் குறிப்பிட்டதுபோல, எனக்குத் தமிழ்ப்பற்று உண்டு ஆனால், புலமையொன்றும் கிடையாது. திருக்குறள் ஆர்வம் உண்டு. தமிழ் மக்கள் மட்டுமேயன்றி மனிதராய்ப் பிறந்த உலகிலுள்ள மக்கட்பகுதியினர் அனைவரும் அதை வாழ்க்கை நூலாகக் கொண்டு வாழவேண்டுமெனனும் கொள்கையும் உடையேன்.

திருக்குறள்—தமிழ் மறை, தெய்வநூல், பொய்யாமொழி, பொதுமறை என்று பலவாறாகப் போற்றப்படும் தலைசிறந்த உலக நீதி நூல் அது இன்றைக்குச் சுமார் 2000 ஆண்டுகட்கு முன்னர்த் தோன்றியபோதிலும், அன்றும் இன்றும் என்றும் பயன்படும் தன்மையுடையது. இவ்வுலகில் எல்லாப்பகுதிகளி

---

*அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்புவிழா மண்டபத்தில், "திருக்குறள் உரைவளம்" இயற்றிய திரு. ச. தண்டபாணி தேசிகரவர்களைப் பாராட்டக்கூடிய சென்னை மாநிலத் தமிழாசிரியர் மாநாட்டுக் கூட்டத்தில் தென்னார்க்காடு மாவட்டக் கலெக்டர் திரு. அ. உத்தண்டராமன் பிள்ளை (ஐ.ஏ.எஸ்.) அவர்கள் ஆற்றிய தலைமையுரை.

லும எல்லா மக்களாலும் போற்றப்படுகிறது இதனைப் பல் வேறு நாட்டினர் தங்கள மொழிகளிலே மொழிபெயாத்திருப் பதே இதன் சிறப்பை நன்கு உணாத்துகிறது. பல்வேறு சம யத்தினரும இதனைத் தங்கள் மதங்களில் உளள கருத்துக்களைப புலபபடுததுவதாக ஏற்றுககொள்வதைக காண்கிறோம். கடவுள உண்மையில நமபிக்கையில்லை என்போரும் ஒருசில குறளகள நீங்கலாக இநநூலை வாழ்க்கைககு வழிகாட்டும் அரிய நீதி நூலாக ஒபபுக கொளகிறார்கள். "வள்ளுவன் தனனை யுலகி னுக்கே தநது வான்புகழ் கொணட தமிழ்நாடு" என்று பாரதி யாா புகழ்ந்ததை உலகமே வழிமொழிகிறது

திருக்குறளின் சிறபபைச் சுருங்கக் கூறுமிடத்து அதில் எல்லாப பொருளகளும அடங்கியிருக்கின்றன அதனிடதது இலலாத பொருள் யாதொன்றுமிலலை. அறத்தை உணர விருமபுவாாககு அறநூலாகவும, அரசியலையறிய விருமபுவாாக் குச சிறநததோர் அரசியல் நூலாகவும, பொருளியலறிய வேண டுவோாக்கு ஓரரிய பொருள் நூலாகவும, இனப நூல் வேண்டு வோர்க்கு இன்ப நூலாகவும, பேரின்பம வேண்டுவோர்க்குப பேரின்ப நூலாகவும், பொதுவாக எல்லா மக்களுக்கும் வாழக கைக்கு வழிகாட்டும் வாழ்க்கைத் துணை நூலாகவும அமைநதுள ளது திருக்குறள அதன் சிறபபுபபறறித தமிழாசிரியாகள குழுமியிருககும இபபேரவையில் அதிகம் பேசத் தேவையிலலை.

இத்தகைய ஈடும் இணையுமறற அரிய நூலுக்கு அவர் காலததிலேயே உரையமையாத காரணத்தால் பிற்காலததில் தோன்றிய பல உரையாசிரியர்கள தங்கள் ஆராய்ச்சியறிவைக் கொண்டு உரை எழுதியிருக்கிறாகள். நூலாசிரியருடைய கொள்கைகளையும் கருத்துக்களையும் முற்றும் உணர்ந்து விளக் கம காண்பது எளிதன்றெனினும், பரிமேலழகர் ஏனைய உரை யாசிரியாகளைக் காட்டிலும் சிறந்த முறையில் உரை எழுதியிருப் பது யாவரும அறிநததே. திருக்குறளுக்கு உரையாசிரியர்கள தருமர், மணக்குடவா, பரிப்பெருமாள், காளிங்கர் முதலிய பதின்மர் என்று தெரிகிறது. ஆனால், இதுகாறும் பரிமேலழ கர், மணக்குடவர் உரைகள் அச்சில் வெளிவந்துள்ளன. இப் போது நமமிடை வீற்றிருக்கும் உயர்திரு. தண்டபாணி தேசிக ரவர்கள் "திருக்குறள் உரைவளம்" என்ற அரிய நூலில் உரை யாசிரியர்களின் உரைகளை எல்லாம் திரட்டித் தொடுத்துத் தமி ழுலகுக்குப பெரிதும் பயன்படும் அரியதோர் சேவை செய் திருக்கிறார்கள். இது எளிதாக இப்போது தோன்றலாம். ஆனால், இதுவரை இருக்குமிடம் தெரியாமலிருந்த பல்வேறு உரைகளையும கண்டு கவர்ந்து அவற்றைத் தொடுத்து அச்சிட்டு

வெளியிடுவது மிகவும் கடினமான செயல். அதற்குப் பல ஆண்டுகள் சலியா உழைப்பும் குன்று ஊக்கமும் பேராற்றலும் இருந்தாலன்றிப் பயன்கிட்டாது "செயற்கரிய செய்வார் பெரியர்" என்பதற்கிலக்காக, இவ்வரும்பெருஞ் சேவைசெய்த இப்பேராசிரியர் தமிழணங்கு பெற்ற தவப் புதல்வருள் ஒருவர் என்றே போறறப்படுதல் வேண்டும். இன்னாரைப் பாராட்டிப் புகழ்ந்து வாழ்ததுவதற்காகக குழுமியிருக்கும் இவ் வமயம இவ்வுரைவளமாகிய அரிய நூல் நல்ல முறையில் அழகாக அச்சிடப்பட்டு வெளிவருதற்குப் போதிய ஊக்கமும் உதவியும் அளிதத ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் தருமபுரம் ஆதீன கர்த்தரின் பெருங்கருணைத திறனையும் நாம் போற்றிப் பாராட்டக் கடமைப் பட்டுள்ளோம். இவ்வரிய "திருக்குறள் உரை வளம்" என்னும் நூல் இயற்றிய தேசிகர் அவர்கள் சேவையை உங்கள் சார்பாகவும் தமிழ்மக்கள் அனைவருடைய சார்பாகவும பாராட்டுவதுடன், இன்னும் இப்பேராசிரியர் தொடர்ந்து பல நூல்கள் இயற்றித தமிழ்த் தொண்டாற்றி வர அன்னாருக்கு நீண்ட ஆயுளும் உடல் நலமும் பிறவெல்லா நலன்களும் தந்தருள வேண்டுமாய் எல்லாம் வல்ல இறைவனிணையடிகளை இறைஞ்சுகின்றேன்.

---

# மதிப்புரை

காவேரி என் காதலி·

[ஆசிரியர்: 'நாதி' (ஆசிரியர் பெயர் புனைவாக இருக்கலாம்.) பக்கம் எஉ. விலை அணா கூ. வெளியிட்டோர் நக்கீரன் வெளியீட்டகம்; உத்தமபாளையம், மதுரை மாவட்டம்.]

இந்நூல் பல்வகைப் பாக்களால் இயன்றது. ஆசிரியர் பல அமயங்களில் பாடிய பாடல்களின் தொகுப்பேயாகும். பாடல் அருகிய இக் காலத்தில் இவர்கள் போன்றோர் பாட முன்வந்திருப்பது மகிழ்சசிக் குரியது. இதில் கடவுள் வாழ்த்து முதல் உழவன் தைப்பொங்கல் இறுதியாக உஎ தலைப்புக்களில் தொகுக்கப் பெற்றுள்ளது சுவையுள்ள பாடல்கள்; மக்கள் படித்து இன்புறற்குரியது. இச்சிறு நூற்குப் பிழைதிருத்தம் இறுதியில் சேர்த்திருக்கிறது. அடுத்த பதிப்பிலாவது பிழையின்றி வெளிவருமென நம்புகின்றோம்.

# செய்திகளும் குறிப்புக்களும்

(க) தமிழர் பேரவை அறிக்கை :

தமிழர் பேரவையின் பொதுச் செயலாளர் திரு கி. ஆ. பெ. விசுவநாதம் கீழ்க்கண்ட அறிக்கையை வெளியிடுகிருர் :—

தமிழ், தமிழர், தமிழ்நாடு நலன்களைக் கருதித் '**தமிழர் பேரவை**' அமைக்கப்பெற்ருயிற்று. அதற்கெனச் சட்ட திட்டங்களும் வகுக்கப் பெற்று, சட்டப்படி பதிவுசெய்தும் ஆயிற்று. இப்பேரவை சாதி, சமய, கட்சி பேதமற்ற ஒரு அமைப்பாகும். கன்னட சமயுத்த சம்மேளனம், கேரள ஐக்கிய சங்கம், ஆந்திர மகாசபை ஆகியவைகளைப் போன்று '**தமிழர் பேரவை**' தமிழகத்தின் தனி உரிமையுடைய அமைப்பாக விளங்கும். தமிழ்நாட்டைச் சிறந்த நாடாக ஆக்கவும், தமிழ்மொழியை ஆட்சி மொழியாகச் செய்யவும், தமிழ் மக்கள் இழந்த உரிமைகளைப் பெறவும் தமிழர் பேரவை போரிடும்.

நாட்டிற்கும், மொழிக்கும், மக்களுக்கும் தொண்டு செய்யும் எண்ணமுடைய அன்பர்கள் அனைவரும் தங்கள் தங்கள் ஊர்களில் தமிழர் பேரவைக்கு உடனே கிளைகளை அமைக்கவேண்டும். முதலில் தேவையானவர்கள் 7 பேர்கள். அவர்களே தலைவர், துணைத்தலைவர் இருவர், செயலாளர், துணைச் செயலாளர், பொருளாளர், கணக்காய்வாளர் என அமைத்துக் கையொப்பமிட்டு '**தமிழர் பேரவை** 87, வெங்கடேசபுரம், சென்னை - 23' என்ற முகவரிக்கு எழுதினுல் உறுப்பினர் சேர்க்கும் பற்றுச் சீட்டுகள் உடனே வரும். உறுப்பினர்களைச் சேர்த்ததும் அவர்களிலிருந்து 12 பேர்களைச் செயற்குழு உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். மொத்தம் கிளைக் குழுவினர் 19 பேர்.

200, 100, 50 க்குக் குறையாத உறுப்பினர்களைக் கொண்ட கிளைகள் முறையே, முதல், இடை, கடை எனக் கருதப்பெற்று வரும். ஆண்டுக் கட்டணம் அணு 4.

(உ) தமிழ்மொழிபற்றி டாக்டர் இரகுவீர் கருத்து

தில்லி அரசாங்க அவை உறுப்பினரான டாக்டர் இரகுவீர் பத்திரிகை நிருபர்கள் மாநாட்டில் பத்திரிகை நிருபர்களைக் கண்டு உரையாடியபோது கூறியது :

தமிழ்மொழி தொன்மைவாய்ந்தது; தமிழன் இதனுல் பெருமை கொள்ள முடியும்; இந்தியன் என்ற முறையில் நாங்களும் அதிற் பெருமை கொள்கின்ருேம். இந்திக்கும் தமிழுக்கும் போட்டி கிடையாது; எல்லா இந்தியமொழிகளும் தன்னந்தனியாக அந்தந்த நாடுகளில் அரசியல் மொழியாகவும் கற்கும் மொழியாகவும் வாணிப மொழியாகவும் வழங்கும் என்ருர்.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பா அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.




| சிலம்பு | திருவள்ளுவா ஆண்டு ஆனி ௧௯௮௫, | பரல் |
|---|---|---|
| ௨௮ | ஜூலை, 1954 | ௧௧ |

# தூ. சு. கந்தசாமி முதலியார் பிரிவு

*பிறப்பு*

இராமநாதபுர மாவட்டத்தில் "நெடுநுகத்துப் பகல்போல, நடுவுநின்ற நன்னெஞ்சினோர், வடுவஞ்சி வாய்மொழிந்து, தமவும் பிறவும் ஒப்பநாடிக், கொள்வதூஉ மிகைகொளாது கொடுப்பதூஉம் குறைகொடாது, பல்பண்டம் பகர்ந்து வீசும்" பண்டைத் தமிழக மரபினராம் வணிகர்குழுவுக்குச் சாத்து என்னும் பெயர் வழங்கிவந்தது. அப்பெயரானே வழங்கிவரும் விழுமிய சைவ வேளாண்குலத்தில் பல்வளமமிக்க சாத்தூரின் அண்மையிலுள்ளதோர் வளநாட்டில் பலவராயர்குடியில் திருவாளர் சுப்பிரமணிய முதலியாரவர்களும் அவர்தம கற்பின் மிக்க பொற்புறு மனைவியார் சுப்பம்மை அம்மையாரவர்களும் செய்த பெருந்தவப் பேற்றால் நந்தன ஆண்டு சித்திரைத்திங்கள் 14-4-1892 சோதி நன்னாளில், தமிழும் சித்தாந்தமும ஓங்கச்செய் சிறப்பு வாய்ந்த ஒரு செம்மலார் தோன்றினர். அவர்தம் திருப்பெயர் கந்தசாமியார் என்ப.

இவர்தம் பிற்கால வளமையெலாம் இளமைக்கண் தோன்றலாயின. உருவும, திருவும், ஓங்கிய முகமும், அகன்றநெற்றியும், கூர்ந்தமூக்கும், பரந்தவிழியும், விரிந்தமார்பும், நீண்டகையும், பிறவும் இவர்தம மாண்டகுணத்தின் மாண்படையாளங்களாயின. திருவருளால் செம்மையாக வளர்க்கப் பெற்றார்கள். நன்முழுத்தத்து நல்லாசான்பால் தமிழ் ஆங்கிலங் கற்றுச் சிறந்தனர். பின்னர் மதுரையம்பதியில் சேதுபதி உயர்நிலைப் பள்ளியில் மேற்படிப்புப் பயின்று மிளிர்ந்தனர். ஆங்குத் தமிழாசிரியர் நல்லகுற்றாலலிங்கம் பிள்ளையவர்கள்பால் தமிழ்

பயின்ற ஆர்வம இவர்கள்தம் பிற்காலத் தமிழ்ப்புலமையின் பெருக்க நிலையினைக் குறிக்கும் குறிப்பாயிருந்தது

கலை

பின் திருச்சிராப்பள்ளி எஸ். பி ஜி. கல்லூரியில் கலைபயில் கல்வி பயின்றனர். ஆங்குத் தமிழ்த் தவமகனாராம் திரு ந மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் தமிழ்ப் பேராசிரியராய்த் திகழ்ந்தனர். அவர்கள்பால் தமிழ்பயின்றார் தமிழ்ப்புலவராய்த் திகழ்வது இயல்பே. அம்முறையில் நம முதலியாரவர்கள் 1917-இல் கலை இளமையாம் பி ஏ. பட்டம பெற்றுக் காணபோர்க்கும் கேட்போர்க்கும் கனிவுற விளங்கினர். இயற்கையே இவர் தம் உள்ளத்தெழுந்த தாய்மொழியாம் தமிழ்ப்பயிர், நல்லாசிரியர்களாம் இருபெரு கொண்டல்களால் வீறுற்றெழுந்து கூறுதற்கரிய நற்பயன் தந்தது. அதன்பயனாகச் சிவகாசி உயர்நிலைப் பள்ளியில் 1917-இல் தமிழாசிரியராகவும சிலகாலம பணி புரிந்தனர்

1919-இல சட்டக்கலையில தேறி மன்றுடியாம வழக்குரைஞராய்ச் சிறந்து யாவரும புகழப பல்லாண்டு பணிபுரிந்து ஊதியமும் புகழும ஒருங்கு எய்திச் சான்றோராய் வாழ்ந்தனர். "கல்விக்கு மூப்பு இளமையில்" என்னும பண்டையோர் வாய் மொழியை வாய்மொழியாகக் கொண்டு கலைமுதுவர் என்னும தமிழ் எம். ஏ பட்டம் தம் முதுமையில் தாங்கினர்.

தொண்டு

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சிக் குழுவின் பார்வையாளராய்ப் பலகால் தொண்டாற்றினர். மெய்கண்டான் தனித் தமிழ் நூலாம "சிவஞானபோத"த்தின் கண்ணும், செந்தமிழ்ப் பொதுமறையாம் திருக்குறளின் கண்ணும மிக்க ஆய்வு முறையில் பயின்ற புலமைவல்லார். ஆங்கிலப் பேராசிரியர்கள் ஆக்கிய பெருநூல்களுடன் இவற்றை ஒப்புநோக்கியும உண்மை கண்டும உவந்தும் உலையாமுயற்சியுடன் நிலையாகக் கற்றுவல்ல நிறைபேரறிஞர். தாம்கண்ட மெய்ம்மையினை உலகோர் உளங் கொள எடுத்துரைக்கும் ஒண்மையர். மேனாட்டாரும் வியக்கும் திருக்குறளின் விழுப்பத்தை ஆங்கில நூற்களுடன ஒப்பிட்டு ஆங்கில ஆசிரியர்கள் கருத்தினும் திருவள்ளுவ நாயனார் கருத்து சீர்பெற்று விளங்குதலை, யாவரும ஒப்புக்கொள்ளும் வகையில் எடுத்தியம்பும் பாவன்மை மிக்க நாவன்மையர். கழகப் பதிப்புத் திருக்குறள் ஆராய்ச்சி முன்னுரையில் நாயனார் நன்கெடுத்து நவிலும் திறனெலாம் விளக்கிக் கணக்குமுறை மேற்கோளும் காட்டி வலியுறுத்தும் மாண்பு இவர்தம் நுண்ணுணர்வுக்கோர் எடுத்துக்காட்டாகும்.

விறு

திருக்குறள் எங்ஙனம் உலகப் பொதுநூலோ அதுபோல் மெய்கண்டான் தமிழாகிய சிவஞானபோதமும உலகப் பொது நூலேயாம. திருக்குறள அறமபொருள் இனபம் மூன்றினையும் திறமபடக் கூறுகின்றது. சிவஞானபோதம இம்மூன்றினையும் பெற்றுத் துன்பகனறு இன்பமாய் எனறும வாழும நனறுி உயிா, நற்றுணையாமஇறை, விட்டுநீங்குமதனை என்னும் முப் பொருள உணமையினை வழியளவையான வறபுறுததி உல கெலாம ஒபபும வண்ணம உணாததுகினறது. இமமெயயுணர்வு நூல தமிழகப பணபுசோ தனிப்பெருஙகலையாகும. இம்மெய்க் கலை மேனுட்டு மெய்பபுலவா (தததுவ ஆசிரியா) நனகுகற்கும் வாயிலை நாம உண்டாககிவைப்பின் உலகமும உண்மையோாநது தெளியும். நூலும் உலக அரங்கில முதன்மையுற்றுத திகழும்.

இவவுண்மை எலாம திருவுளங்கொண்ட திருப்பனந்தாள் திருமடததுத் திருமுறைத தலைவர் அவர்கள் திருக்காசியின்கண் விளங்கும காசிப பலகலைக் கழகததுச் சிததாநத வகுபபு ஒனறு நிலையாகப போதிககத் தம செலவிலேயே ஓா ஆசிரியரைத் தமிழகத்தினினறும் கொண்டு போயமர்ததி வேண்டும வாய்பபு களும செயதருளிப் போதிபபிக்கும பணியைப புரிவித் துளளாாகள். அவவாசிரியரும் எம். ஏ. பட்டம்பெற்ற ஏற்றத் தினரேயாவர் ஆணடுதோறும தமிழகததினின்றும செந் தமிழும், ஆங்கிலமும் சிததாந்தமும் ஒருங்கு கற்றுப் புலமை வாய்நது நுண்ணுணர்வினராய், நூலுணாந்த மேலோராய், ஆன் றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோராய் வாழும் பேராசிரியன் மாரை ஆங்குச் செலுத்திச சிவஞானபோத உண்மைகளைச் சில பல தலைபபுககளாக ஆங்கிலததில் தொடர்ந்து விரிவுரையாற்று விக்கின்றாகள் பின அககட்டுரையினை நூல் வடிவாக்கி வெளி யிடவும் அமைததுள்ளார்கள். இத திருததொண்டுகளெல்லாம் அண்ணுமலைப் பல்கலைக் கழக வாயிலாக நிகழ்த்துவிக்கின்றார்கள். நம் முதலியார் அவர்களும ஒருமுறை சென்று ஆங்குப பணி புரிந்து வேண்டுவபெறறு வீறுற்றுள்ளாாகள். காசியில் ஆற்றிய விரிவுரை இன்னும் வெளிவராமல் இருக்கிறது. அதனை அன்போடு அவர்தம் குடும்பததினா வெளியிடுவார்களென நம்புகின்றோம. தமிழகமும் அச்சிறநத வெளியீட்டை ஆர்வ முடன் எதிர்பார்க்கின்றது.

பொதுப்பணி

அரசியலில் 'நீதிக்கட்சியில்' உறுப்பினராக இருந்தாாகள். கூட்டுறவுப் பண்டசாலை, அர்பன் பாங்கு, மார்ககட்டிங்

சொசைட்டிகளை நிறுவி அதன் வளர்ச்சியின்பொருட்டு ஒல்லும் வகை ஓவாதுழைத்தனர் ஏ வி. உயர்நிலைப பள்ளியில் கொண்டு நடததும பொறுப்பினராயப பணியாற்றியுள்ளாாகள தேவத தானக குழுவின தலைவராக இருநது செமமையுறச் செயல் புரிநதனா சாததூர் நகராடசியில இருமுறை தலைவராக இருநது இயன்றன சிறப்புறச் செய்துளளாாகள.

சாததூரில் 'தமிழ்ச சங்கம்' என்னும பெயரால் ஒரு கழகம நிறுவி அதன உறுபபினராகவும, செயலாளராகவும, தலைவராகவும் அமாநது பல்லாண்டுகள பயனுா தமிழப்பணி புரிநதனர் 1948-இல 'சைவ சிததாநத மகா சமாச'ததின் தலைவராக இருந்து செந்தமிழுக்கும, சிவனெறிக்கும சீரபெறப பணியாற்றியுளளாாகள.

விருதுநகர் செய்தவததால தோனறிய சங்கஙகளில் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமைகளிலும சென்று, திருக்குறளும, சிவஞான போதமும் "கேட்டார்ப்பிணிக்கும் தகையவாய்க் கேளாரும வேட்கும" மொழியவாயச் சொற்பொழிவு ஆற்றியுள்ளாாகள. திருக்குறளில தம் மூமமொழிப் புலமையால மிக நுண்ணிய கருததுக்களெல்லாம ஆய்வு முறையில் தகுவாறு தேர்ந்து தெளிந்துளளாாகள அததெளிவின பிழிவெலாம செவ்விய முறையில் நூல வடிவாய் வெளிவர வேணடுமெனனும பெரு நோககமும பேருககமும கொணடிருநதாாகள. இறுதிக்காலததும அதனை நிறைவேறறவேண்டுமெனனும் ஆள்வினையில் மிககிருநதாாகள் நோயின காரணமாக மருததுவர்கள இணககம்தர மறுததுவிட்டனர் தமிழ்நாட்டின் தவக்குறைவால் அக்கருததுக்கள வெளிவர வாய்ப்பினறிக் கழிந்தமை பெரிதும வருநதத தககதே சிறபபாகத திருக்குறளில் மன்பேராறறல வாய்ந்த மதிவாணர்.

சைவசித்தாநத நூற்பதிப்புக் கழகத்து இயக்குநர் குழுவிலும உறுபபினராகவிருநது பணிசெய்துள்ளாாகள இதழாசிரியர் குழுவிலும உறுபபினராக இருநது தொண்டாறறியுளளாாகள்.

சிறப்புப்பணி

கழக அறநிலையங்களுள் ஒனறாகிய 'தென்னிந்திய சைவ சித்தாந்த சங்க'ச் சார்பில 27-4-52 முதல் 20-5-52 வரை இருபத்தொரு நாள்காறும திருநெல்வேலிச் சநதிப்பு சிந்து பூநதுறைத தருமபுரத திருமடததுப, சிவஞான போதச சிற்றுரைச சிததாந்த வகுப்புச் சிறபபுற நடநததுு. அதன் பேராசிரியராய்த் திகழ்ந்து தம் மும்மொழிப்

புலமையும் தோன்ற பி.ஏ., எம்.ஏ., ஆங்கிலப் பட்டமும், தமிழ்ப் புலமைப் பட்டமும் பெற்று நாவன்மை, பாவன்மை, நூலியற்றல், போதித்தல், நுண்ணுணர்வு முதலிய பிறநலங்களும் வாய்க்கப்பெற்ற மாணவர் அறுபதின்மாக்கு அவர் உளங்கொளப் போதித்துச் சங்கத்தாராலும், திருப்பனந்தாள், தருமபுரம், குன்றக்குடி முதலிய திருமடங்களாலும், திருமிகு செல்வர்களாலும், மாணவர்களாலும், பொற்கிழி, பொன்னுடை, பொன்னணி, வாழ்த்து முதலியன பெற்று ஒண்ணிதிச் செல்வர்களாய் உயர்ந்து பொலிந்துள்ளார்கள். அக்காலத்தே அவர்களுக்கு அறுபதாண்டு நிறைவுவிழாவாகிய மணிவிழாவும் நிகழ்ந்தது.

இவர்கள், தமிழகத்துச் சிறப்பாகக் காணப்படும் 'தூத்துக்குடி சைவ சித்தாந்த சபை'க்குப் பலமுறை தலைமை பூண்டுள்ளார்கள் தமிழக முற்றுமுள்ள அவைகளிலெல்லாம் தலைமை பூணல் விரிவுரையாற்றல் முதலிய தொண்டுகள் செய்தும் செந்தமிழும் சித்தாந்தமும் சிறக்க வளர்த்துள்ளார்கள். கலத்தின் வழியாகக் கடல்கடந்து இலங்கை யாழ்ப்பாணங்கள் சென்று இனிய விரிவுரை ஆற்றித் தாய்மொழியாம் தமிழ்ப்பணி ஆற்றியுள்ளார்கள்.

பேரா இயற்கை

சின்னாட்களாக நீர்க்கோவைப் பெருக்கமாம் பாண்டு நோயால் வருந்தினார்கள். ஆங்கிலத்திலும் தமிழிலும் சிறந்த மருத்துவர்கள் - மிகத்திறலோர் தக்கவாறு மருந்து கொடுத்து வந்தார்கள். சிறிது குணமாவதும், மீண்டு வருவதுமாக இருந்து வந்தது இந்நோய்த் துன்பம் அவர்கள் உடலை வருத்திற்றேயன்றி உள்ளத்தை வருத்தவில்லை. இதுவே இருவினை ஒப்பும், இறைநினைவு மாறாமையும் என்னும் சிறந்த பண்பாகும். நோய் நிலைக்காலத்தும் தாம் செய்யவேண்டிய தமிழ்த்தொண்டும், சிவத்தொண்டும், ஊர்ப் பொதுத்தொண்டும் ஓவாது உஞற்றி வந்தார்கள். உற்றார், உறவினர், நண்பர், மருத்துவர் முதலியோர் வேண்டாவென வற்புறுத்தியும் ஏற்றுக்கொள்ளாது தொண்டு புரிந்தே வந்தார்கள். இதுவன்றோ செயற்கருஞ்செயல்.

இந்நிலையில் 27-6-54 ஞாயிற்றுக்கிழமை பகல் 12-30 மணிக்கு இறையடி நீழல் எய்தினார்கள். இவர்தம் இழப்பு எஞ்ஞான்றும் ஈடுசெய்ய ஒண்ணாப் பேரிழப்பேயாம். அவர்தம் கற்பிற் சிறந்த மனைவியார், அன்பின் மிக்க மக்கள் இவர்கட்கு எங்கள் பரிவும் ஆறுதலும் உரியவாகுக. அவர்கள் ஆருயிர் இறையடி இன்பில் திளைப்பதாக.

ஓம்

திருச்சிற்றம்பலம்

# நால்வர் செல்லாக் கோவில்கள்?

[சித்தாந்த பண்டிதர், புலவர், 11 இராமநாத பிள்ளை]

தமிழ்

"மாதவஞ் செய் தென்திசை வாழ்ந்திடத்" திருவருளால் தோன்றிய தீதில் சிவனெறித் தலைவர் நால்வராவர். ஒருதிசை உயர்வுஎய்துவது அத்திசைக்கண் வாழும் நன்மக்களாலேயாம். ஒருநாட்டுமக்கள் நன்மக்களாவது அந்நாட்டின்கண் வாழும் "ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர் பலரா"லேயாம். சான்றோர் மக்களைச் செம்மையுடையவராக்குதற்கு ஏற்ற கருவி ஆற்றல் வாய்ந்த மொழியேயாம். மொழியே நாகரிகத்தின் விழி. தென் திசை "ஞாலம் அளந்த மேன்மை"ச் செந்தமிழால் சிறப்புற்றது என்க. செந்தமிழே உலகத்து முந்திய மொழி. முந்தியதுமட்டுமல்ல, உலக மொழிகட்கெல்லாம் தாய் மொழி. பண்பட்ட மொழி, பயனுர் மொழி, இன்புநிறை மொழி; எழினமிகு மொழி; மென்மொழி, மேலோர் கைக்கொள் நன் மொழி; தெய்வ இன்மொழி, கயிலாயத்தும் பயிலும் தொன் மொழி.

இத்தகைய மொழி யாவரும் எளிமையாகப் பேசவும், எழுதவும், கருதவும், கைக்கொண்டொழுகவும் வேண்டிய பல நலங்களோடு இயல்பாகவே அமைந்தது இயல்பாக அமைந்தது என்னும் உண்மையை விரிப்பின் திருவருளால் அமைந்தது என்றாகும் அதனாலேயே தெய்வத் தமிழ்மொழி பல்லாயிர ஆண்டுகள் ஆகியும் தெய்வத்திளநலங் குன்றாது, வேறு மொழிக் கலப்பாம் மாயத்தால் விழுங்கப்படுத் தன்னியல்பிழ வாது, தனித்துக் கன்னித் தமிழாய் இன்றும் விளங்குகின்றது. அவ்விளக்கம் உலகியல்வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் ஒப்பத் திகழ்கின்றது. தமிழ்மொழித் தொடர்பால் சில ஆயிர ஆண்டு களுக்குமுன் தோன்றிச் சிறந்த வடமொழி, இலத்தின் முதலிய மொழிகள் இன்று உலக வழக்கற்று நூல் வழக்கில் மட்டும் நுண்மையாய்க் காணப்படுகின்றன. இவ்வுண்மையெலாம் புலப் படவே, "மாதவஞ்செய் தென்திசை வாழ்ந்திட" என்பதன் பின் "தீதி லாத்திருத் தொண்டைத் தொகைதரப் போதுவார்" எனும் பொன்மொழியும் போந்தது என்க. 'தீதிலா'-(மக்களைத் தீமையினின்றும் விலக்கி நன்மையின்கண் உய்த்துச் சிவனடிக்கு ஆளாக்கும் வாய்மையினால் மக்களது மலப்பிணியாகிய) தீமையை

இல்லாமல் செய்கின்ற என்பது பொருள். இப்பொருள் அமைந்த நூல திருமுறைகள என்பது தோன்றத 'திருத் தொண்டத் தொகை' என மொழிந்தருளினர்.

மறை

இத திருத்தொண்டர் திருவரலாறு ஒன்றே தெய்வத் தமிழின பொதுமறையாம திருக்குறளுககு முழுமையும் வாயநத இலக்கிய நூலென்க தமிழின் பொதுமறை தேவர் குறள் தமிழின சிறபபுமறை மூவா தமிழ் மறைமுடிபு திருவாசகம திருக்கோவையார் என்னும முனிவா மொழி. தமிழாகமம திருமூலர் சொல் திருவளளுவா, மூவர், வாதவூா முனிவர், திருமூலர் ஆகிய நாற்பாலவரும செந் நெறித தலைவாகள அவாகள திருமொழி அனைத்தும் ஒரு மொழியே ஒபபில அருளமொழியே. நாட்டிலும, வீட்டிலும, ஏட்டிலும, திருக்கோவில் மாட்டும ஒப்பத்திகழும செபபரும் செமமொழி. இமமொழியின் மெய்மமை உணராது அயன் மொழி மயக்கால சில்லோர் அந்நாளும மருணடனா அவாகள் மயக்கொழிகக நாலவர் முதலிய பெருமக்கள் திருவருட்செயல் பலவும புரிநதனா. மறுபுலச சொறகளுக்கு இம மாதவமும், இம மாப்பேராற்றலும் இலலையெனச் சானறோா பலரும அறை கூவி மொழிநதனர். ஆளுடைய பிள்ளையாராம ஞானசம்பநதப் பெருமானார் அஞ்செழுத்துணமை வலியுறுததித தமிழ் மநதிரங்களே சாலச் சிறநதன எனவும், அம்மநதிரஙகளில் தலையாயதும தாய்மையானதும திருஐநதெழுததே எனவும் திருவாய மலாநதருளினா திருமுறைகள அனைததும திருவருண் மநதிரங்களே. சிவவேளவியே தவவேள்வி எனறரு ளினர். மறநதும் பிறமொழிக்கு வாயதிறந்திலர். சிறந்த திருக் கோவில்களிலும் அமிழ்தினும இனிய தம தமிழமொழிககு இடமில்லையானால அஙகுப போகவும மனம ஒருபபட்டிலர். போகாதொழியினும ஆஙகாங்குள்ள சிவபெருமானைத தனித் தமிழாற்பாடும தம கடப்பாடு வழுவாது தமிழ் வழஙகும் பெருந்தவ நாடாம திருக்காளததியினின்றே தமிழ்மறையாம் திருமுறை பாடியருளினா இம்மெய்மமையினைச் சேக்கிழார் அடிகள திறமபெறத் திருவாய் மலாநதருளினர். அத் திருப் பாட்டு வருமாறு :

"அஙகண்வட திசைமேலும் குடகின் மேலும்
அருந்தமிழின் வழககஙகு நிகழா தாகத
திஙகள்புனை முடியாாதம் தானம் தோறும்
சென்றுதமிழ் இசைபாடும் செயகை போல

மங்கையுடன் வானவர்கள் போற்றி சைப்ப
வீற்றிருந்தார் வடகயிலை வணங்கிப் பாடிச்
செங்கமல மலர்வாவித் திருக்கேதாரம்
தொழுதுதிருப் பதிகஇசை திருந்தப் பாடி.”

“ கூற்றுதைத்தார் மகிழ்ந்த கோ கரணம் பாடிக்
குலவுதிருப் பருப்பதத்தின் கொள்கை பாடி
ஏற்றின்மிசை வருவாரிந் திரன்தன் நீல
பருப்பதமும் பாடிமகிழ்ந் திறைவர் தானம்
போற்றியசொல் மலர்மாலை பிறவும் பாடிப்
புகலியர்தம் பெருந்தகையார் புனித மாகும்
நீற்றினணி கோலத்துத் தொண்டர் சூழ
நெடிதுமகிழ்ந் தப்பதியில் நிலவு கின்றார்.”

—கஉ. திருஞானசம்பந்தர்-க0உகு-எ.

இவற்றின் பொழிப்பு வருமாறு :

[திருஞானசம்பந்தப் பெருமானார் திருக்காளத்தி சென்று சிவபெருமானைத் தாளிணைக்கீழ்த் தொழுதுவீழ்ந்து வணங்கினர். வணங்கினவர் குலவேடர் பெருமானாகிய கண்ணப்ப நாயனாரைக் கும்பிட்ட பயன் காண்பார் போல் அவர்தம் திருவடியிலும் வீழ்ந்து வணங்கினர் சின்னாள் அங்கு உறைந்தனர்]

அக்காலத்துத் திருக்காளத்திக்கு வடபாலும் மேல்பாலும் தமிழ்வழங்காது தெலுங்கு இந்துத்தானி முதலிய பிறமொழிகள் வழங்கி வருவவாயினும் தாம் பாடும் திருமாமறைத் திருப்பாட்டுக்கள் இறைவன் திருச்செவி சாத்துதலேயன்றி வழிபாட்டிற்கு வரும் பெருந்திரள் மெய்யடியார்களாகிய மாந்தர்குழு கேட்டு, அவற்றை ஓதி உணர்ந்து உரைத்து, உளமுறைத்து ஒன்றி உய்யவேண்டும் என்னும் திருவருள் திருக்குறிப்பாம் திருவுள்ளமும் உடையவர். அதனால் அங்கு இருந்தருளியபடியே திருக்கேதாரம், திருக்கோகரணம், திருப்பருப்பதம், திருநீலப் பருப்பதம் முதலிய திருவூர்களில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானைப் பாடியருளினர். அங்ஙனம் பாடியருள்வது அவர்தம் பெருங்கடமையாம் என்க.

வழிபாடு

இவற்றான் நாம் அறியக் கிடப்பது அவ்வந் நாட்டு மொழிகளாலேயே வீட்டு வழிபாடு, கூட்டு வழிபாடு, திருக்கோவில் வழிபாடு, திருமண முதலியவற்றின் கரணங்களாகிய சடங்குகள் அனைத்தும் நடாத்துதல் வேண்டும் என்பதே. அங்ஙனமிருப்பவும் இந்நாளிலும் வழிபாடுகளிலும், திருக்கோவில்களிலும், சடங்குகளிலும் தாய்மொழியாம்-உயர்தனிச் செம்மொழியாம் தமிழ் மொழிக்கு இடனின்றிப் பிறமொழிக்கு இடனுய்ப் பெரும்பாலும் சொல்லுவார்க்கும் கேட்பார்க்கும்

ஒரு சிறிதும் புரியாதபடி செயல் நிகழ்கின்றது. அதனால் கருத்து அழுந்துவதற்கு வாய்ப்பின்றி வெறும் ஆரவார மாத்திரமாகவே பயனின்றிக் கழிந்து பாழாகின்றது.

மந்திரம்

அம்மட்டோ, செந்தமிழன்பும், சிவனெறிப் பற்றும், உடைய மெய்யுணர்வினா சடங்குகளும் வழிபாடுகளும தொன்மைபோல் தாய்மொழியிலேயே செய்யவேண்டும எனக் கைக்கொண்டு செய்து வருகின்றனா அதனைக் கண்ணுறும சிலர் உண்மை உணராது தொனமைக்கு மாறாக இடையே புகுந்த வேற்றுமொழி மயக்கால் அம்மொழிச் சொற்களே மநதிரம; ஏனைய மந்திரம் ஆகா என வம்புரைக்கின்றனர் திருமுறைகள் சித்தாநத நூல்கள் முதலிய செநதமிழ் நூல்களே கைகண்ட மநதிரம் என நம் முன்னோாகள உரைததருளிய வாய்மைச் செமமொழியை இவர்கள உணர்வாராயின் இங்ஙனம் மருண்டு கூறார். இவர்கள் தெருண்டு கைக்கொள்ளுமாறு அவவுண்மையினை வரைகின்றாம். அவை வருமாறு:

“ அருமறையைச சிச்சிலிபண டருந்தத் தேடும்
  அதுபோலன் றிதுஎன்றும உளதாம் உண்மைப்
பரபதமும் தற்பரமும் பானே அன்றிப்
  பலரில்லை என்றெழுதும் பனுவல் பாரின்
எரியினிடை வேவாதாற் றெதிரே ஓடும்
  என்புகடும் உயிாகொடுகும இடுநஞ் சாற்றும்
கரியைவளை விக்குஙகல மிதககப் பணணும
  கராமதலை கரையிலுறக் காற்றுங காணே.”
—திருமுறை கணட புராணம், கஎ.

அருமறை - வடமொழி மறை, இம்மறை பல கடவுளர் உண்மையும் வழிபாடும பயனும் கூறுவது திருமுறை ஒரு கடவுள் வழிபாடும், உண்மையும, மாறுப பயனும் கூறுவது. திருமுறை ஏழாதலின் அதன்கண் திருவருட் செயல் பலவற்றுள்ளும ஏழ்பெரும் செயல்களே ஈண்டு ஏத்திப் புகழப் பெற்றன. அவை: ஆளுடைய பிள்ளையார், க திருக்கூடலாம் மதுரைமாநகரின்கண் சிவனெறி உண்மை எழுதிய திரு ஏட்டை நினற சீா நெடுமாறன் அவைமுன் வளர்ப்பிதத எரியிலிட்டுக் குறித்த காலம கழிதது எடுததனா; அது முன்னையினும பசசையாக விளங்கியது. உ வையை யாற்றிலிட்ட திருபபாசுரம் எதிர்த்துச் சென்றது. ங. திருமயிலாபபூரில் என்பினினறும பூம்பாவை அம்மையாா தோன்றத் திருப் பாட்டுப் பாடியருளியது ஆளுடைய அரசர், க. நஞ்சு கலந்த பாற்சோறுண்டது. உ. யானையை வணங்கச் செய்தது.

௩. கல்லே மிதப்பாகக் கடல் கடந்தது. ஆளுடைய நம்பி,
௪. முதலையுண்ட பிள்ளையை அழைப்பித்தது.

" கொண்டுகுல சேகரனும் கோன்பால் வந்து
குருசரதசோன் அருள்செய்த கொள்கை எல்லாம்
மண்டுபெருங் காதலுடன் சொல்லி அந்த
வண்தமிழின் பெருமைதனை வகுத்துச் சொல்வார்
கண்டபெரு மந்திரமே மூவர் பாடல்
கைகாணு மந்திரங்கண் ணுதலோன் கூறல்
எண்டிசையும் சிவனருளைப் பெறுதற் காக
இம்மொழியின் பெருமையையான் இயம்பக் கேள்நீ."

—திருமுறைக்கண்ட புராணம், ௧௩.

மூவர் பாடல்: ஏழு திருமுறைகள் இவை முற்றும் கைகண்ட பெருமந்திரம்.

திருமுறை முற்றும் தமிழ்ப்பெரு மந்திரங்களே என்பது வெளிப்படையாகத் தோன்றத் திருமூலர் தமிழ்க்குத் திருமந்திரம் என்னும் திருப்பெயர் வழங்குவதாயிற்று. தமிழ்ப் பாக்கள் அனைத்தும் மந்திரம் என்னும் மெய்ம்மை ஆறாயிரம் யாண்டுகளுக்கு முன்னுள்ள ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பிய மேற்கோளானும், பிற்காலத்து நலிசைப்புலவர் வாழவும் தாழவும் பாடிய தமிழ்ப் பாக்களானும் காணலாம். ஏனைய தமிழ்ப் பாக்கள் மந்திரம் எனவும், திருமுறைகள் பெருமந்திரம் எனவும் கூறப்பெறும்.

சிறப்பு

தொல்காப்பிய மேற்கோள் பாட்டு ஆரிய மயக்கொழித்துச் சீரிய செந்தமிழின் சிறப்புணர்த்தும் திறத்தால் அவற்றை இங்குக் காட்டுதும்:

" நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப."

—தொல். பொருள். சகூ0.

மேற்கோள்:

" ஆரியம் நன்று தமிழ்தீ தெனவுரைத்த
காரியத்தாற் காலக்கோட் பட்டானைச்—சீரிய
அந்தண் பொதியில் அகத்தியனார் ஆணையால்
செந்தமிழே தீர்க்க சுவா."

" முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி
பரண கபிலரும் வாழி—அரணிய
ஆனந்த வேட்கையான் வேட்கோக் குயக்கொண்டான்
ஆனந்தஞ் சேர்க சுவா."

ஆனந்தம்—சாவு. சுவா இரண்டும் சிவா என இருந்திருக்குமென்பர். இவை நக்கீரரால் பாடப்பெற்றன.

திருவள்ளுவ நாயனாரும்,

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்" —திருக்குறள், உஅ

என அருளினார்.

திருமூல நாயனார் தாம் தமிழாகமம் செப்ப வந்ததாகவும் தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறு இறைவன் படைத்தருளினன் எனவுங் கூறியருளுகின்றனர் அவை வருமாறு :

"நந்தி இணையடி நான்தலை மேற்கொண்டு
புந்தியின் உள்ளே புகப்பெய்து போற்றிசெய்து
அந்தி மதிபுனை அரனடி நாடொறுஞ்
சிந்தைசெய் தாகமம் செப்பலுற் றேனே." —க0. எங.

"பின்னைநின் றென்னே பிறவி பெறுவது
முன்னைநன் றாக முயலதவம் செய்கிலர்
என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ்செய்யு மாறே." —க0. அக.

"தண்ணிலவார் சடையார்தாம் தந்தஆ கமப்பொருளை
மண்ணின்மிசைத் திருமூலர் வாக்கினால் தமிழ்வகுப்பக்
கண்ணியவத் திருவருளால் அவ்வுடலைக் கரப்பிக்க
எண்ணிறைந்த உணர்வுடையார் ஈசரருள் எனவுணர்ந்தார்."
—கஉ.—திருமூலர்—உங.

இங்ஙனமெலாம் மறையும் நூலும் (ஆகமம்) மல்கியிருப்பவும் பின்னும் குறை எனக் கூறுவார் குறையை என்சொல்வது? அவர்களுக்கு ஆண்டவனிடத்தும், அவன் உவக்கும் செந்தமிழினிடத்தும், அத்தமிழினையே அருளால் பாடி வையகமெலாம் அரன் நாமமாகிய 'சிவயநம' என்னும் தனித்திருமறையே சூழ்க எனப் பாடியருளிய செந்நெறி முதல்வர் நால்வரிடத்தும், இவற்றிற்கெலாம் இடனாகிய தமிழகத்தும், தமிழப்பெருமக்களிடத்தும், திருமுறை சித்தாந்த மறைகளிடத்தும் உண்மையான பற்று வந்து அவற்றை உயிரெனக்கொண்டு, அகத்தும் புறத்தும் ஒழுகி வருமாறு அருள்செய ஆண்டவனை வேண்டுவோமாக தமிழ்ச் செந்நெறி தழைத்தோங்குக

திருக்கோவில்களிலும் திருமுறை வழியாகவே மலர் தூவிப் போற்றுதலாகிய அருச்சனை புரியத் தேவாரமுதலிகள் மூவரும், திருவாசகத்தாரும், ஏனைத் திருமுறை ஆசிரியன்மார்களும் "போற்றி"த் தொடர் அமைத்துக் கட்டளை யிட்டருளினர். அவ்வுண்மை கடைப்பிடித்து ஒழுகல் அடியவர் கடனாம

உன்னடியேன் செய்பணிகள் உன்தொண்டே உன்னருளே
உன்னடிக்கே ஒப்புவித் தேன்.

# பள்ளிமாணவர் வார வழிபாடு

[சித்தாந்த பண்டிதர், திரு. ப. இராமநாத பிள்ளை, கழகப்புலவர்]

ஞாயிறு

முழுமுதல்வன் உண்மை அறிவு இன்பவடிவினன். உண்மை அறிவு இன்ப நிகழ்ச்சி நிகழும் இடமெல்லாம ஆண்டவன் விளக்கம காணலாம்.

அறிவுருவான ஆண்டவனே! மாணவராகிய அடியேங்களுக்கு நலலறிவைத் தந்தருளவீராக.

ஆகுக.

நலலறிவு விளங்கும் இடமெல்லாம் உமமுடைய திருவருள விளககம கண்டு வணஙக, வாழ்ததச, சோந்து வழிபட அருள புரிவீராக.

ஆகுக.

பிறர் துன்பமும் தம்துன்பம்போல் உண்மையாகக் கருதி விரைநது நீககுவதே நலலறிவாகும. அவ்வாறு செயய அருள் வீராக

ஆகுக.

அவ்அறிவு கல்வியால் விளக்கமும உறுதியும் எய்தும். அத்தகைய கல்வியை இளமையிலேயே எஙகளுக்கு அளித்தருள்வீராக.

ஆகுக.

குற்றத்தை நீககிக் குணத்தைக் கைக்கொண்டு ஒழுகுவதே நல்லறிவாகும். அநநல்லறிவை அருள்வீராக.

ஆகுக.

நல்லறிவு வாய்நத நல்லோர்வழி ஒழுகுவதே நன்மையாகும். அங்ஙனம் ஒழுக அருள்வீராக

ஆகுக.

எல்லா உலகிற்கும உயிாகட்கும் ஒப்பில்லா ஒரு தனித் தலைவரே! உம்மை வணங்குகினறோம. உமது திருவருள் கைவரபபெற்ற தவததோரை எங்களுக்குத் தலைவராக அருள் வீராக.

ஆகுக.

மறநதும் பிறன்கேடு செய்யக் கருதாதிருப்பதே நல்லறிவு. பிறா கேடு செய்தாலும் அதனைப் பொறுப்பதே நல்லறிவு. அவர்கட்கும் நன்மை செய்வது சிறப்பு. அவ்வறிவை அருள்வீராக.

ஆகுக.

உம்முடைய திருப்பெயரைக் காதலாகிக் கசிந்து ஓதவும், ஓதுவிக்கவும, இன்புறவும் அருள்வீராக.

ஆகுக.

திஙகள

ஒருவரோடு ஒருவர் உள்ளம நெகிழ்ந்து இணங்கும் இணககம நேயம் எனப்படும. இந்நேயம் அனபு, ஆர்வம், நண்பு, காதல், அருள், பததி என அறுவகைப்படும் இவையே ஒற்றுமைக்கும, உண்மை இன்பத்திற்கும, உலக அமைதிக்கும் வாயிலகள் ஆவன.

இன்புருவான இறைவனே! உம திருவடிக்கண் நீஙகாப் பத்தியுடன புகழ்ந்து தொழுமாறு அருள்வீராக ஆருக.

அன்புருவான ஆண்டவனே! பகுததறிவு வாய்ந்த மக்கட் பிறப்பு குடுமபததாருடன் தொடர்புபற்றிச் செய்யும அன்பி ஞலே சிறநதது. அதனை அருள்வீராக. ஆருக.

குடும்பம் என்பது ஈன்றாள் தந்தை உடன்பிறந்தார் என்ற முப்பெரும் பிரிவில் அமைநதது. கணவன் மனைவி மக்கள் என்னும முப்பெரும் பிரிவும உண்டு. இவர்களோடு சேர்ந்து வாழ இன்புற அருளவீராக. ஆருக.

இன்ப வடிவாம இறைவனே! குடும்பத்தைப் பேணுதலும. குடும்பததுடன் ஒற்றுமையாக வாழ்தலும சிறநத இனபம, அங்ஙனம வாழ அருள்வீராக. ஆருக

குடும்ப அன்புப்பயிற்சி நின்திருவடிப் பத்திப் பயிற்சிக்கு வழி. ஆர்வம, நண்பு, காதல், அருள் முதலிய வற்றிற்கும் வழி யாகும். அதனை அருளவீராக. ஆருக.

குடும்பத்தார்பால் செய்த அன்பு அக்கம் பக்கத்தார்பால் செய்யின் ஆர்வம ஆகும். உணர்வுத் துணையுடன் செய்யின் நண்பாகும. அவற்றை அருள்வீராக. ஆருக.

காதல் வடிவாம் கடவுளே! நாங்கள் நண்பர் சொல்வழி ஒழுக, நலம் பெற, கலவி கற்க, உரம் பெற, நாடு மொழி நன்னெறிகருப் பாடுபட அருள்வீராக. ஆருக.

அருள் உருவாம மெய்ப்பொருளே! சிற்றுயிர்களிடத்து வைக்கும் அன்பு அருளாகும். அவ்வருளே நின் திருவருளைக் கூட்டுவிக்கும். மெலியவரிடத்து மிகுநத இரககம் கொளவது அருள். அதனை அருள்வீராக. ஆருக.

செவ்வாய்

ஆற்றல் என்பது பிறர்க்கு நன்மை செய்து இன்புறுத்துவது. அவர்கள அடையும இனபததைக் கண்டு இனபுறுவதே உண்மை யான இன்பமாகும். அறிவு தொழில் விழைவு என ஆற்றல் மூவகை. விழைவு - விருப்பம்.

போராற்றல் வாய்ந்த பெரும்பொருளே! எங்கள் அறிவாற்றல் நாட்டுக்கும், மொழிக்கும், நன்னெறிக்கும் பயன்பெற அருள் வீராக. ஆகுக.

தொழிலாற்றல் விரிந்த வியன் உலகிற்கும் ஆருயிர்க்கும் மாறு நன்மைபுரிந்து இன்புறுத்த அருள்வீராக. ஆகுக.

விழைவாற்றல் தாய்மொழியும், ஆட்சிப் பொதுமொழியும், அனைத்துலகத் தொடர்பு மொழியும் வளர்ந்து சிறக்க விரும்பவும், தாய்மொழியே ஆட்சிச் சிறப்பு மொழியாகக் கொள்ளவும் அருள்வீராக ஆகுக.

அம்மை அப்பராக விளங்கும் ஆதிபகவனே! எங்கள் தொழிலாற்றலால் நாடு வளமுற அருள்வீராக. ஆகுக.

உடலுறுப்புப்போல் உலகியல் நிகழ்ச்சி செம்மையாய் நிகழ எல்லாத் தொழிலும் வேண்டத்தக்கன. அதனால் தொழில்களுள் ஏற்றத்தாழ்வு கருதாது உழைத்து உயர்வு பெற அருள்வீராக.

தொழில்களுள் ஏற்றத்தாழ்வு காட்டல் நாட்டுமுன்னேற்றத் துக்குத் தடையாகும். பிறர்க்குத் துன்பம் விளைக்கும் பாவத் தொழிலே தாழ்வாகும். உலகம் நன்கு மதிக்க எல்லாத் தொழிலையும் செய்ய அருள்வீராக. ஆகுக.

விழைவாகிய விருப்பமே விழுத்துணை யாவது. விழைவு இல்லாவிட்டால் ஒருவரும் உழைக்க முன்வரார். இன்பம் எய்தார். உண்மையாய் உழைக்க அருள்புரிவீராக. ஆகுக.

காக்கும் கடவுளே! உன் திருவடிக்கண்ணும், உன் அருள் பெற்ற மெய்யடியாரிடத்தும், பெரு விருப்பம் கொண்டு பணி செய்ய அருள்புரிவீராக. ஆகுக.

புதன்

கற்றல் என்பது உயிர்க்கு உறுதிதரும் அறம் பொருள் இன்பம் வீடு பேறு என்னும் ஐவகை நலங்களையும் பெற்று உய்வதற்குத் தக்க நூல்களைச் சான்றாண்மை மிக்க ஆசான்பால் அன்புடன் அகமுறக் கற்பது.

கற்றவர் நெஞ்சில் முற்ற உறைந்து வழிகாட்டும் கடவுளே! அடியேங்கள் பள்ளிக்கூடம், கல்லூரி, பல்கலைக் கழகம், திருக் கோவில் முதலிய நிலையங்களில் நல்லன ஓதி உணர்ந்து உய்ய அருள்புரிவீராக. ஆகுக.

எல்லாக் கலைகளையும் எங்கள் தாய்மொழியாம் தமிழில் கற்க விருப்பங்கொள்ளுமாறும், அத்தமிழே எங்கள் உயிரெனக் கருதுமாறும் அருள்புரிவீராக. ஆகுக.

கற்பிக்கும் ஆசான், ஆன்றோர் முதலானவர்களிடத்தில் பணிவும, நனமதிப்பும, பற்றுதலும் கொண்டு ஒழுகுமாறு அருளபுரிவீராக. ஆருக.

தாய்மொழியாம தமிழ் குறைவிலா நிறைவுடைய செம் மொழி இலக்கணம நிரமபிய புலமைத துணைமொழி. அம் மொழிக்குத தொண்டு புரியவும், பழமை போறறுவதுபோல் புதுமை ஆக்கம பேணவும அருளபுரிவீராக. ஆருக.

கறகும காலததுக் கல்விக்கு முரணான வெளியுலக நிகழ்ச்சி களிலும காட்சிகளிலும எங்கள் உள்ளம ஒரு சிறிதும செலலாத வாறு காத்து அருளபுரிவீராக. ஆருக.

செமமை மனததுறையும் செம்பொருளே! 'இளமையிற் கல்' எனனும் திருமொழியை மறவாது இளமைப் பருவத்திலும், வைகறைப பொழுதிலும நின்னடி வணங்கி நேர்மையுடன் கற்க அருள்புரிவீராக. ஆருக.

கசடறக் கற்றல் வேண்டும். கற்றாரோடே இணங்கல் வேண்டும கல்வி கேள்வி அறிவு ஒழுக்கம கடவுள்நினைவு நல் வாழ்வாகும. அவற்றை அருள்வீராக. ஆருக.

வியாழன்

கற்றலின் பயன் கற்பித்தலாம். முற்றும் கற்றுக் கற்பிக்க வேண்டும் என்று கருதுதல பொருநதாது. கசடறக் கற்ற அளவில் பிறர்க்கு அன்புடன் காலம் தாழத்தாது கற்பித்தல் வேண்டும். கறபித்தலே கறறற்குத் துணை.

கற்றவா விழுங்கும் கற்பகக் கனியே! எஙகள் கல்வி வளர வும், கற்கும் பொழுதே பிறர்க்குச் செய்யும் நல் உதவியை மேற் கொள்ளவும், கைம்மாறு கருதாம லிருக்கவும் வாய்ப்பாகிய கற்பிக்கும் ஆற்றலை அருள்வீராக. ஆருக.

உதவுவார்க்கு ஊக்கம் அருளும் ஒண்பொருளே! உடன் பயில்வார்க்கும், கீழ்வகுப்பு மாணவர்கட்கும் எஙகளாலியன்ற உதவியை நகைமுகம இன்சொல் நன்றாற்றல் அமையச் செய்யும் படி அருளபுரிவீராக. ஆருக.

கற்பித்தலாகிய இப்பணி கைகூடக் குடும்பத்தில உடன் பிறந்தாருடனும், பிறருடனும் ஒற்றுமையும் உதவியும் உடைய ராய் வாழ்தல் வேண்டும். இதனால் நாட்டு நற்பணியும, முற் போக்கு வாழ்வும் பெருகும். அதற்குத தகுந்த சூழ்நிலையை அளித்தருள்வீராக. ஆருக.

கற்றல் கற்பித்தல்களால் பொன்னும் பொருளும் போகமும புகழும வாய்க்கும். நின் அன்பர் இணக்கமும் உண்டாகும். நின் திருவடித் தொழுகையும் நிலைக்கும திரு அடையாளம் மேற் கொள்ளுதலும் எளிதாகும அவற்றிற்காம துணைகளை அருள் புரிந்து காபபாயாக. ஆகுக.

வாய்மைத் திருவுருவாம் வள்ளலே! கற்பார்க்கும கற்பிப் பார்க்கும் இன்றியமையாது வேண்டபபடுவன அகம புறம தூய்மை. அவை அமைய அருள்வீராக. ஆகுக.

உறையுள, உடை, உடல், உண்கலம், உழைப்பு, உறவு முதலியன தூய்மை யாதலே புறமதூய்மை. வாய்மையே அகம் தூய்மை. அதனை அருள்வீராக. ஆகுக.

வெள்ளி

ஆட்சி என்பது ஆண்மையின் விளைவு. ஆண்மை பிறர் வாழ்வுக்குத் துணை செய்வது; அவர்களால நன்றி பாராட்டி நன்கு மதிக்கப்படுவது.

அனைத்துயிர்க்கும் ஆண்மை அருளும் அண்ணலே! பிறர் நலம் பேணும பேராண்மை தந்து அருளவீராக. ஆகுக.

நல்லாண்மை அருளும் நாயனே! நாங்கள் எங்கள் பொறி புலன்களை அடக்கி ஆளவும, கற்றவற்றை மறவாது மீட்டும் மீட்டும நினைக்கவும், புதுப்பாடங்களை எமக்குரிய முழுவூக்கத் துடன் கற்றுத் தேறவும், திறமபெறப் பணிபுரியவும அருள வீராக. ஆகுக.

"நல்லாண்மை என்பது தான் பிறந்த இல்லாண்மை ஆக்கிக் கொள்ளல்". ஆண்மையுடையார் தீமை அகற்றி நனமை கைக் கொளவர். யாஙகளும் அவ்வாறு ஒழுகிப் பெயரும் புகழும் பெருவாழ்வும் எய்த அருள்வீராக. ஆகுக.

நன்மை யுருவாம் நம்பி! பணிவு, இன்சொல், தூங்காமை, கல்வி, துணிவுடைமை, அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம, வாய்மை முதலியன நின்பொன் உருவே யாகும. அடியேங் களுக்கு அந்நன்மைகளை மேற்கொண்டு ஒழுகும் நல்லறிவும் நல்லுறவும் அருளவீராக. ஆகுக.

ஆட்சித் தலைவராம் ஆண்டவரே! எல்லா உலகமும் உம் முடைய திருஅருளாட்சி. அந்த ஆட்சிவழி ஒழுகி நற்பயன் எய்தி நலமுடன் வாழ அருள்வீராக. ஆகுக.

ஆட்சிச் செம்மையால் மழை விளைவு ஒழுக்கம் எல்லாம் மேன்மேலும உயரும் மழையும் நின்னருளே வளம்பெருகும். மக்கள் வாழவு உயருமு. அதற்கு அருள்வீராக ஆருக.

அடக்கி ஆள்வதும் அல்லல் உறுத்துவதும் ஆட்சியன்று. அருளன்பால் மக்களும் மாநிலத தலைவரும் தககவாறு ஒழுகுவதே ஆட்சி. அதனை அருள்வீராக. ஆருக.

சனி

ஆக்கம் என்பது திருவருள் நோக்கம் திருவருள் நோக்குடையாரே பொருவரும ஆககம் உடையாராவா செமபொருளைத் தொழும் சீரியராவர்.

ஆக்கம அருளிக் காக்கும அருந துணையே! கலவியால், நண்பால, சுற்றததால, தொழின் முறையால உண்டாகும செலவமே தூய ஆககமாகும. அதனை அருள்வீராக ஆருக.

அற்றவர்க்கு உற்ற அருந்துணையே! எவ்வகைத துணையும் இல்லாதவாகட்கு நாஙகள ஏதும உதவ முன் வருவோமானல அது நினனுடைய திருவருளைப் போற்றும பெருந்தொண்டாகும. அதனை அருள்வீராக ஆருக.

எல்லாம அருளும் எநதாய்! கல்வி நிலையம், மருத்துவ நிலையம், முதியோா இல்லம, குழந்தை இல்லம, திருக்கோவில், திருநெறிக் கழகம, தொழிலகம, கூட்டுறவுப் பணணை முதலியவற்றிற்கு இயன்றவாறு எக்காலத்தும் உதவி செய்ய அருள்வீராக ஆருக.

வையம் காக்கும் வள்ளலே! வைகறைத்துயிலெழல், யாமத் துறஙகல, மீதூண் விருமபாமை, நல்லாரிணககம், வீட்டுவழிபாடு, கூட்டுவழிபாடு, திருக்கோவில் வழிபாடு யாண்டும் செவ்வையாக நிகழ்த்த அருள்புரிவீராக. ஆருக.

உடலுரத்திற்கு உடற் பயிற்சி வேண்டும. உளநலத்திற்குத் தெய்வ வழிபாடு வேண்டும். தெய்வ வழிபாட்டிற்குச சிறந்தோா துணை வேண்டும். இவைகளே அழிவிலா ஆக்கம். இவற்றைத் தந்து காததருள்வீராக. ஆருக.

நோயற்ற வாழ்வு, தீஙகற்ற செல்வம, பாஙகுற்ற நண்பு, ஓஙகும வாழ்க்கை, பகையையும் உறவாக்கும் நகைமுகம், நாடு மொழி நன்னெறி காக்கும பீடுகளே ஆக்கம். அவற்றை ஆன்றோா துணையுடன் அடியேஙகள் பெற அருள்வீராக. ஆருக.

# குறுகத்தறித்த குறள்

[திரு. பி. எல். சாமி. பி. எஸ் ஸி]

" உடுக்கை யிழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு " (788)

இக்குறளில வள்ளுவா ஒரு எளிய-ஆனல் ஆழ்ந்த பொருளுள்ள-அழகான உவமையைக் கையாணடுள்ளாா அதன் நயம 'நவில்தொறும் நூலநயமபோல்' எண்ணி உன்னுந்தொறும் இன்பததைத் தருகின்றது.

மேலாகப் பார்ப்போருக்கு இந்த உவமை எளியதாகவும் ஆழமற்றதாகவும தோன்றலாம. அன்றுடம வேட்டிகட்டிப் பழக்கமான நமக்கு இடுபபில் ஆடை நழுவுவதும, அதைக் கட்டுதற்குக் கை செல்வதும ஒரு எளிய நிகழ்சசியாகத் தோனற லாம. ஆனல் அததகைய எளிய பொருளை உவமையாகக் கொண்டு அதில் அரிய ஆழ்நத கருததைக் காட்டுவதே வள்ளுவரின் சிறபபு.

நணபனுக்கு இடுக்கண் வருங்கால் காலத்தில் உதவ வேண்டும். உறறுழி உதவாவிடில உதவி பயனற்றதாகிவிடுகிறது. உற்ற காலததில் உதவுவதும் முடியும்வரை விரைவில நடைபெறவேணடும் உதவி செய்பவன உதவியின் தன்மை, பயன் முதலியவைகளை எணணிப பின்னர் துணியக்கூடாது. அதற்குள் உதவி செய்யும காலம் கடந்துவிடும். அதனுல்தான் வள்ளுவர்.

" காலத்தி ஞற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின மாணப் பெரிது "

என்ருர். மற்றும்,

" பயன்றூக்கார் செய்த உதவி நயன்றூக்கின்
நன்மை கடலிற் பெரிது."

காலத்தினுல் பயன் கருதாது செய்யப்பட்ட நன்றி அளவிட முடியாத நன்மை வாய்ந்தது என்று வள்ளுவர் கூறுகிருர. "காலத்தில் செய்த ஒரு தையல், ஒன்பது தையல்களை மிச்சப் படுததும" (A stich in time saves nine) என்று ஆங்கிலப் பழமொழி கூறுகிறது. காலததிற செய்யப்படும் உதவி விரைவில் செய்யப்படவேண்டும. எண்ணித் துணியாது செய்யப்பட வேண்டும் என்ற இரு கருத்துக்களை வலியுறுத்த வளளுவர் மேற்கூறிய உவமையைக் கையாண்டார். இனி உவமையின் பொருத்தத்தைப் பார்க்கலாம்.

கழன்ற ஆடையைக் கட்டக் கை விரைந்து செல்வது உடல் நூற்படி (Physiology) அனிச்சைச் செயல்களில் (Reflex

action) ஒன்று. காலில் முள் உறுத்துகிறது, உடனே காலைத் தூக்கி முள் தைக்காது காப்பாற்றிக் கொள்கிறோம். இஃது ஒரு அனிச்சைச் செயல். பொதுவாக ஐம்புலன்களால் உணரப்பட்டு நிகழும செயலகளெல்லாம் நம் இச்சைக்குக் கட்டுப்பட்ட செயல்கள் ஐம்புலன்களால் அறியப்பட்ட செய்திகள் உணர்ச்சி நரம்புகளால தண்டுவடத்திறகு எடுத்துச் செல்லப்படுகின்றன. தண்டுவடத்திலிருந்து அச் செய்தி மூளைக்குச செல்கிறது; மூளை செய்திக்கேற்பக் கட்டளை இடுகிறது, கட்டளை தண்டுவடததின் வழியாக வநத கட்டளை நரம்புகளால் உறுப்புகளுக்கு எடுத்துச செல்லபபடுகிறது செயல் நிகழ்கிறது. ஆனால் அனிசசைச் செயலில் செய்தி தண்டுவடத்திற்குச சென்று மூளைக்குச் செலவதிலலை தண்டுவடமே மூளைக்குப் பதில் கட்டளையை விடுக்கினறது. இதனால் தண்டுவடத்திலிருநது மூளைக்கும் மூளையிலிருந்து தண்டுவடததிற்கும் செய்தியும கட்டளையும செல்லுங்காலம மிசசமாகிறது. இதனால் அனிசசைச் செயல பொதுவான செயல்களைவிடக் குறுகிய காலததில் விரைவாக நிகழ்கிறது.

பெரும் இடுக்கண் வருங்கால் செய்தி மூளைகுச் சென்று கட்டளை வருவதற்குள் இடுக்கண் நிகழ்ந்துவிடும் ஆதலின் இடுக்கணிலிருந்து தபபிக்கச் செயல் விரைவில் நடக்கவேண்டும. அதற்கு அனிச்சைச் செயல் பயன்படுகிறது. இடுப்பில ஆடை நழுவியதும் செய்தி தண்டுவடத்திற்குச் சென்று, தண்டுவடம் உடனே கைக்குக கட்டளையிடுகின்றது. இதில் மூளை எண்ணு வதோ துணிவதோ கிடையாது. இச்செயல் எப்படிப் பயன் கருதாது சிநதிபபதின்றி விரைவில் நிகழ்கினறதோ அதுபோல நண்பர்களும ஒருவனுக்கு இடுக்கண் வருங்கால் விரைவில் பயன் முதலியவைகளைத் தூக்கித துணியாமல் அவ்விடுக்கண் களைய முன்வர வேண்டும். திடீரென்று குலையும் ஆடையைத் தளையக் கை விரைவதுபோல ஒருவனைத் தளையும இடுக்கண் களைய அவனுடைய நண்பர் விரையவேண்டும்.

இச் செயலின் கால அளவைக் கணக்கிட்டுப் பார்க்கலாம். தமிழில் சொலலப்படும் மிகச் சிறிய கால அளவு மாத்திரை எனப்படும. "இயலபெழு மாந்தரிமை நொடி மாத்திரை" என்றார் நன்னூலார். இவ்விரண்டினும் நொடியைவிட இமை சிறநததென்பார்; ஏனெனில் உள்ளத்தால் நினைத்து நிகழாமை யின் என்று விளக்கங் கூறுவர். இமைபபது 'வசமில் செயல்' (Involuntary action) என்பர் உடல் நூலார். இமைப்பின் கால அளவை அளநதிருக்கிறார்கள். மேலிமையில் ஒரு சிறு ஆடி யைக் கட்டி அவ்வாடியில் விழுந்து விலகும ஒளிக்கற்றையை

நிழற்படம் பிடிப்பதன் மூலம் இமைப்பின் காலத்தைக் கணக்கிட்டனர். மேலிமை கீழே செல்வதற்கு ·05 (செகண்டுகள்) விநாடிகளும், கீழே பொருந்தியிருப்பதற்கு ·15 விநாடிகளும், மேலெழும்புவதற்கு ·02 விநாடிகளும் ஆவதாகக் கணக்கிட்டிருக்கிறார்கள் ஆனால் பொதுவாக இயல்புடைய ஒரு மனிதனுக்கு ஒரு இமைப்பிற்கு $\frac{4}{10}$ (அ) ·4 விநாடி ஆகிறதென்று சொல்லலாம். ஆதலின் மாத்திரை என்பது ·4 விநாடி இயல்பான ஒரு மனிதனின் உடலில் அனிச்சைச் செயல் இதைவிட மிக விரைவாக நடைபெறுகிறது ஒரு விநாடிக்கு 120 மீட்டர் வேகமாக அனிச்சைச் செயல் செல்கிறது. இயல்பான மனிதனின் உடலில் இடுப்பிலிருந்து கைவிரல்களுக்கு அனிச்சைச் செயல் செல்ல $\frac{8}{1000}$ (அ) ·008 விநாடிகள் ஆகும். ஆதலின் உடுக்கை இழந்தவனுக்குக் கை உதவுவதற்கு ஏற்குறைய ·008 விநாடிகள் ஆகிறது. இது கண்ணிமை மூடும் காலத்திலும் குறைவானது. ஆதலின் உதவுவதன் விரைவினை வலியுறுத்த வந்த வள்ளுவர் இத்தகைய விரைவான செயலை உவமையாகக் கூறினார்.

மற்றும் மானத்தைக் காக்கக் கை உதவுவதுபோல் வேறு எந்த உறுப்பும் பயன் படுவதில்லை. துச்சாதனன் திரௌபதையைத் துகிலுரிந்தபோது கையன்றோ மானங்காக்க விரைந்தது! உண்மை நிகழ்ச்சி என்று கருதப்படும் ஒரு செய்தி இதனை வலியுறுத்தும். வெகு காலமாகக் கீழே வராது முடங்கிக் கிடந்த கைகளையுடைய ஒரு பெண்ணை டாக்டர் அரங்காச்சாரியிடம் கொண்டுவந்தார்கள். அவர் உள்ளத்தின் உண்மையை நன்கு உணர்ந்தவர். அவர் அப் பெண்ணை ஒரு அறையில் தனியாக நிற்கச்சொல்லித் திடீரென்று அப் பெண்ணின் இடுப்பில் இருக்கும் ஆடையை அவிழ்ப்பதுபோல் செய்தார். ஆனால் முடங்கிக் கிடந்த கை மானத்தைக் காக்க விரைந்து சென்றது அன்றையிலிருந்து அப் பெண்மணிக்கு கை கீழும் மேலும் நன்றாக வந்தது என்பார்கள். இதிலிருந்து மானத்தைக் காப்பதில் கையிற் சிறந்த உறுப்பில்லை என்பது தெரிகிறது.

ஒருவனுக்கு இடுக்கண் வந்தால் காலத்தில்-விரைவில் பயன் தூக்காது உதவவேண்டும் உதவி செய்யப்பட வேண்டிய 'வல் விரைவை' வலியுறுத்தவே வள்ளுவர் உடுக்கை இழந்தவன் கை போல விரைவில் உதவ வேண்டுமென்றார். இச் சிறப்பினாலேயே,

"அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்"

என்று ஔவையார் கூறினார்.

# மறைவுற்ற தமிழ் நூல்கள்

[திரு. மயிலை சீனி. வேங்கடசாமி]

(சிலம்பு. உ அ, பரல் கo, சகூஉ-ஆம் பக்கத் தொடர்ச்சி)

## 64. இராமீசுரக் கோவை

இக்கோவையை இயற்றியவர் கயாதர நிகண்டு செய்த கயாதரர் ஆவார் இதனைக் கயாதர நிகண்டுச் செய்யுளினால் அறியலாம். என்னை?

"மேவு மரும்பொரு ளந்தாதி கேட்டிந்த மேதினியோர்
தாவும் வினைகெடச் சாற்றிய தென்றமிழ்த் தேவையென்னுங்
கோவை யிராமீசுரக்கோவை சொன்ன குருபரன்மற்
றேவுதலின்றி யமைத்தான் பத்தாவ தொலியியலே."

என்னும் செய்யுள் காண்க. தேவைநகரம் என்னும் பெயருள்ள இராமேச்சுரத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமான்மீது இக் கோவை பாடப்பட்டது இக்கோவையை இயற்றிய கயாதரர் தமது பெயரால் கயாதரம் என்னும் நிகண்டுநூலை இயற்றி யுள்ளார். கயாதரசம் இப்போது அச்சிடப்பட்டுள்ளது இவர் இயற்றிய இராமீசுரக் கோவை கிடைக்கவில்லை, இறந்துபட்டது போலும். இராமீசுரக் கோவை கி. பி. 15-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் இயற்றப்பட்டுள்ளது.

## 65. நூல்

நூல் என்னும் பெயருள்ள நூல் ஒன்று இருந்ததென்பது இறையனார் அகப்பொருள் உரை, அடியார்க்கு நல்லார் உரை, மயிலைநாதர் உரைகளினால் தெரிகிறது.

இறையனார் அகப்பொருள் உரையாசிரியர், உரைப்பாயிரத் தில் இநநூலைக் குறிப்பிடுகிறார் அவர் எழுதுவது வருமாறு:—

"நூற்பெயரென்பது நூலது பெயர் என்றவாறு. நூல் பெயர் பெறுமிடத்துப் பல்விகற்பத்தாற் பெயர்பெறும். என்னை? செய்தானாற் பெயர் பெறுதலும் செய்வித்தானாற் பெயர் பெறு தலும் இடுகுறியாற் பெயர் பெறுதலும் அளவினாற் பெயர் பெறுதலும் சிறப்பினாற் பெயர் பெறுதலுமென செய்தானாற் பெயர் பெற்றன, அகத்தியம் தொல்காப்பியம் என இவை. செய்வித்தானாற் பெயர் பெற்றன, சாதவாகனம் இளந்திரையம் என இவை. இடுகுறியாற் பெயர் பெற்றன, நிகண்டு, நூல், கலைக் கோட்டுத் தண்டென இவை. அளவினாற் பெயர் பெற்றன, பன்னிருபடலமென்பது. சிறப்பினாற் பெயர் பெற்றது களவிய லென்பது."

மயிலைநாதர் நன்னூல் உரையில் இவ்வாறு கூறுகிறார் — "இடுகுறியாற் பெயா பெற்றன நிகண்டு, நூல், கலைக்கோட்டுத் தண்டு"

நூல் எனப் பெயரிய இந்நூல், நாடகத் தமிழைப் பற்றிக் கூறும நூல என்று தெரிகிறது. இந் நூலிலிருந்து இரண்டு சூத்திரங்களை அடியார்க்கு நல்லார் மேற்கோள் காட்டுகிறார். சிலப்பதிகார உரைப்பாயிரத்தில் அவர் எழுதுவது வருமாறு :—

"இறக்கவே வரும் பெருங்கல முதலிய பிறவுமாம். இவற்றுட் பெருங்கல மாவது பேரியாழ், அது கோட்டின தளவு பன்னிரு சாணும, வணரளவு சாணும, பத்தரளவு பன்னிரு சாணும் இப பெற்றிக்கேற்ற ஆணிகளும் திவவும் உந்தியும் பெற்று ஆயிரங்கோல் தொடுத்தியல்வது. என்னை ?

'ஆயிர நரம்பிற் றாதியா ழாகும்
ஏனை யுறுப்பு மொப்பன கொளலே
பத்தர தளவுங் கோட்டின தளவும
ஒத்த வென்ப விருமுன் றிரட்டி
வணர் சாணொழித் தென வைத்தனர் புலவர்'

என நூலுள்ளும்............கூறினாராகலாற் பேரியாழ் முதலியன ஏனவும் இறந்தனவெனக் கொளக."

சிலப்பதிகாரம் அரங்கேற்று காதை 129—130-ஆம அடிகளாகிய, "இயல்பினின் வழாஅ விருக்கை முறைமையிற், குயிலுவ மாக்கள் நெறிப்பட நிறப" என்னும அடிகளுக்கு உரை எழுதிய அடியார்க்கு நல்லா, நூலிலிருந்து மற்றொரு சூத்திரத்தை மேற்கோள் காட்டுகிறா. அவா எழுதுவது இது :—

"முறைமையாவது

'ஆடிட முகக்கோ லாட்டுவார்க் கொருகோல்
பாடுநர்க் கொருகோ லந்தர மொருகோல்
குயிலுவர் நிலையிட மொருகோல'

என்று நூலிற் கூறின முறையெனக."

இதனால் நூல் என்னும் பெயருள்ள நூல் நாடகத் தமிழ் நூல் என்பது தெரிகிறது. இந் நூலைப்பற்றி வேறு செய்திகள் தெரியவில்லை.

## 66. மழவை யெழுபது

மழவை என்பது மழபாடி எனனும ஊர். அவ்வூரில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் மீது பாடப்பட்ட எழுபது பாக்களைக் கொண்ட மழவை யெழுபது என்னும் நூல் ஒன்று

இருந்தது என்பது, களவியற் காரிகை உரையினால் தெரிகிறது. களவியற் காரிகை யுரையாசிரியர், மழவை யெழுபதிலிருந்து ஒரு செய்யுளை மேற்கோள் காட்டியுள்ளார். அச்செய்யுள் இது:

செருமலை தானவர் முப்புரந் தீயெழத் தேவர்கட்கும்
வருமலை தீர்த்தவன் மாமழபாடியில் வந்தெதிர்ந்த
கருமலை வீட்டிய செம்மலை யன்றிக் கறங்குவதிம்
மருமலை கூந்தலை யார்கொள்ள வேண்டி மணமுரசே.

இந்நூல் அகப்பொருள் துறைகள் அமையப் பாடியது எனத் தெரிகிறது. இதைப்பற்றி வேறு செய்திகள் தெரிய வில்லை.

## 67. பரிமாணனார் யாப்பிலக்கணம்

பரிமாணனார் என்பவர் இயற்றிய ஒரு யாப்பிலக்கண நூலை யாப்பருங்கல விருத்தியுரைகாரரும், மயிலைநாதரும் தமது உரைகளில் குறிப்பிடுகிறார்கள் பரிமாணனார் நூலிலிருந்து சில சூத்திரங்களையும் மேற்கோள் காட்டுகிறார்கள்

இந்தப் பரிமாணனார் என்பவர் யாவர், எந்தக் காலத்தில் இருந்தவர், இவர் செய்த யாப்பிலக்கண நூலின் பெயர் என்ன என்பவை ஒன்றும் தெரியவில்லை. இந்நூல் இப்போது கிடைக்க வில்லை.

இந்நூலிலிருந்து, யாப்பருங்கல விருத்தியுரைகாரர் கீழ்க் கண்ட சூத்திரங்களைத் தமது உரையில் மேற்கோள் காட்டி யுள்ளார்.—

வஞ்சி யாசிரிய மென்றிரு பாட்டும்
எஞ்சா மூவடி யிழிபுயர் பாயிரம்.
　　　　அவற்றுள்,
ஆசிரிய மென்ப தகவலின் வழாது
கூறிய சீரொடுந் தளையொடுந் தழீஇ
மூச்சீ ரடியா யீற்றயல் நின்றும
அச்சீ ரடியிடை யொரோவழித் தோன்றியும்
அவ்வியல் பின்றி மண்டிலம ஆகியும்
மூவடி முதலா முறைசிறந் தேறித
தொளளா யிரததுத் தொண்ணூற் றெண்ணிரண்
டெயது மென்ப வியலபுணர்ந் தோரே.

வஞ்சிதானே யடிவரம் பின்றி
யெஞசா விசைநிலை தூங்க லெய்தியும்
ஆசிரிய மாகியு முடியு மென்ப.

செப்ப லோசையிற சீர்தளை சிதையாது
மெயபபடக் கிளநத வெண்பா விரிப்பிற்
குறணேர் நெடிலென மூன்று யவற்றின்
இறுதி யடியே முச்சீர்த தாகி
யதனீற் றசைச்சீ ரெய்தி யடிவகை

யோரிரண்டு முதலா முறைசிறந் தீரா
றேறு மென்ப வியல்புணர்ந் தோரே.
(யாப்பருங்கலம். அடியோத்து. 10. உரைமேற்கோள்)

அவைதாம்,
முதலோ டயல் கொள்வ திணையய வின்றி
மூன்றுஞ் சீரது பொழிப் பிரண டிடைவிட்
டிறுதியொடு கொள்வ தொரூஉ விறுதிச
சீரொழித் தேனைய தொன்றிற் கூழை
முதல் றடைந்தவற றிணமை யிருவகைக
கதுவாய முற்று நிகழ்வது முற்றே
முதலோ டெட்டாகு மென்மனா புலவா

என்றா பரிமணனா. அவா இயைபுத் தொடைக்கு விகறபம்
வேணடிற்றிலா. எனனை ?

செநதொடை யியைபிவை யல்லா நான்கு
முதற்சீ ரடியால் விகற்பங கொளப

என்றுராகலின்

"அடிமுழு தொருசீா வரினஃ திரட்டை"
(யாப்பருங்கலம் தொடையோத்து. 17. உரை மேற்கோள்)

மயிலைநாதா, தாம எழுதிய நனனூல் உரையில (பொது
வியல் 51-ஆம் சூததிரம) பரிமாணனா சூததிரம ஒனறை மேற்
கோள காடடியுளளாா. அது :

'விதந்த மொழியினம வேறுஞ செப்பும' என்றுா
பரிமாணனா என்பது.

## 68. பல்காபபியம்

பலகாப்பியனுர் இயற்றிய பல்காப்பியம் என்னும் இலக்கண
நூல் ஒன்று இருநததென்பது பேராசிரியர் உரையினல் தெரி
கிறது. பலகாபபியம தொலகாபபியததின் வழிநூல. இது
செய்யுளிலக்கணத்தை மடடும் கூறுவது. இந்நூலைப்பறறி வேறு
செயதிகள தெரியவில்லை.

தொல். பொருள், மரபு, "வழியெனபபடுவது அதன்
வழிததாகும" எனனும் சூத்திர உரையில பேராசிரியர்
இநநூலைபபறறி எழுதுவது வருமாறு :—

"மற்றுப பலகாப்பியம் முதலியனவோவெனின், அவை
வழிநூலே; தொல்காப்பியததின வழித் தோன்றின வென
பது. என்னை ?

'கூறிய குன்றினு முதனூல் கூட்டித்
தோமின் றுணர்த லொல்காப் பியன்ற
னூணையிற் றமிழறிந் தோர்க்குக கடனே.'

என்பவாகலானும், இவ்வாசிரியா பல்காப்பியர், பல்காயனார் முத லாயினுரை அவ்வாறு கூருராகலானுமென்பது. என்றூர்க்குத் தொல்காப்பியங் கிடப்பப் பல்காப்பியனூர் முதலியோர் நூல் செய்த தெற்றுக்கெனின்,—அவரும அவர் செய்த எழுத்துஞ் சொல்லும பொருளு மெல்லாஞ் செய்திலா. செய்யுளிலக்கணம் அகததியத்துட் பரநது கிடநததனை இவவாசிரியர் (தொல் காப்பியர்) சுருங்கச் செய்தலின அருமை நோக்கிப் பகுத்துக் கூறினூராகலானும அவா தந்திரததுக்கேற்ப முதனூலோடு பொருநத நூல் செய்தாராகலானும் அமையுமென்பது ”

பல்காப்பியச் சூததிரங்கள் ஒனறேனும் கிடைக்கவில்லை.

## 69 பல்காப்பியப் புறனடை

பலகாப்பியனூா இயற்றிய பலகாப்பியம என்னும் நூலுக் குப் பலகாப்பியப் புறனடை என்னும் சார்பு நூல ஒன்று இருந்த தென்பது பேராசிரியர் உரையினுல் தெரிகிறது பல்காபபியப் புறனடையும பல்காப்பியனூரே இயற்றியிருக்கவேண்டும என்று கருதலாம

தொல்: பொருள: மரபு: “வினையி னீங்கி விளங்கிய வறிவின, முனைவன் கணடது முதனூ லாகும” என்னும் சூத்தி ரத்திறகு உரையெழுதிய பேராசிரியர், பலகாபபியப் புறனடையி லிருந்து ஒரு சூததிரததை மேற்கோள் காட்டுகிறூா. அது வருமாறு:—

‘ கூறிய குன்றினு முதனூல் கூட்டித
தோமின றுணாத றெல்காப் பியன்றன்
ஆணையின் றமிழறிந தோர்ககுக கடனே ’

இது பல்காபபியப் புறனடைச சூததிரம ”

இதனுல, அவிநயம் என்றும இலக்கண நூலுக்கு நாலடி நாற்பது எனனும அவிநயப புறனடைநூல் இருநததுபோலவும், யாப்பருங்கலம என்னும இலக்கண நூலுககு யாப்பருஙகலக் காரிகை என்னும புறனடை நூல ஒன்று இருபபதுபோலவும் பல்காப்பியம என்னும் இலககண நூலுக்குப பல்காப்பியப் புறனடை என்னும் ஓர் புறனடைநூல இருநதது என்பது தெரிகிறது.

## 70. கிளவி விளக்கம்

களவியல் காரிகை உரையாசிரியர், கிளவி விளக்கம் என் னும் இந்நூலைக் குறிப்பிடுகிறூா. வன்னூட்டு நெய்தல்வாய் என்னும் ஊரிலிருநத ஒருவரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு வெண்பாவினுல் இய்ற்றப்பட்டது இந்நூல். இது

அகப்பொருள் சார்பான நூல். இந்நூலாசிரியரின் பெயர், காலம் முதலியன தெரியவில்லை. இந்நூலிலிருந்து களவியல் காரிகை உரையாசிரியர் மூன்று செய்யுள்களை மேற்கோள் காட்டுகிறார். அச்செய்யுள்கள் இவை :—

என்னுயிர் நான்கண் டிளமுலையும வேய்த்தோளும்
பொன்னிறமுங் கொண்டு புனமயில போல்—மன்னி
வயங்குகின்ற நெய்தலவாய (வனுடன) வெற்பி
லியங்குகின்ற தாயத திடை.

சோகங் முலைமேற் சிறியோர பெரும்பொருள்போல்
பாரகங் மறைக்கும பலகாலும்—காரக்கொடையால
வனைக் கலிகடந்த வனுட னெய்தல்வாய்
நினைத்த தழைவாங்கி நின்று

அருக்கன் வருவதன்முன் னம்புயப்பூங் கோயிற்
திருக்கதவ மாரோ திறந்தார்—மருக்கமழ்தார்
வனுட னெய்தலவாய வலலியில் வலலிருளில்
என்னுட னீவருவா னீங்கு.

## 71. தில்லையந்தாதி

சிதம்பரத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமான்மீது இயற்றப்பட்ட அந்தாதி நூல் இது அகப்பொருள் துறையமைந்த செய்யுள்களைக் கொணடது என்று தோன்றுகிறது இந்நூல் ஆசிரியர் பெயர், காலம முதலியன தெரியவில்லை இந்நூலிலிருந்து ஒரு செய்யுளைக் களவியற் காரிகையுரையாசிரியர் தமது உரையில மேற்கோள காட்டியுள்ளார். அச்செய்யுள் இது :—

தொடிவா னரமங்கை யன்றிமைக குங்கண்கள் தோயுநிலத
தடிவா னரந்த மலரும புலரு மயன்றலையைத
தடிவா னரன .... ..தாழ்சடை யோன்றில்லை யூசல்வலலிக்
கொடிவா னரம்புரி யும்பொழில வாயவந்த கோல்வளைக்கே.

## 72. கடிய நன்னியார் கைக்கிளைச் சூத்திரம்

கடிய நன்னியார் என்னும் புலவர் கைக்கிளைச் சூத்திரம் என்னும் நூலை இயற்றினார் என்பது, யாப்பருங்கல விருத்தியுரையினால் தெரிகிறது. யாப்பருங்கலம் செய்யுளியல் 2-ஆம் சூத்திர விருத்தியுரையில் உரையாசிரியர், கடிய நன்னியார் கைக்கிளைச் சூத்திரங்களை மேற்கோள் காட்டுகிறார் :—

“ கைக்கிளையும், வெண்பா முதலாய ஆசிரியம் ஈறாய் வருகின்றுழி ஆசிரியவடி இரண்டேயாய அவற்றுளீற்றடி நாற்சீராயீற்றயலடி முச்சீரானே வருவதெனக் கொள்க. என்னை ?

‘ இருதலைக் காம மனறிக் கைக்கிளை
யொருதலைக் காம மாகக் கூறிய
விலக்கண மரபி னியல்புற நாடி

யதர்ப்பட மொழிந்தனர் புலவ ரதுவே
பெறுதி வெணபா வுரிததாய் மற்றதன்
இறுதி யெழுசீ ராசிரி யமமே.'

'வெண்பா வாசிரி யததாய் மற்றதன்
இறுதி யெழுசீ ராசிரி யம்மே'

'கைக்கிளை மருட்பா வாகி வருகா
வாசிரியம் வருவ தாயின் மேவா
முசசீ ரெருததிற ருகி முடியடி
யெசசீ ராறு மேகாரத திறுமே'

"இது கடிய நன்னியாா செய்த கைக்கிளைச சூத்திரம்"

யாப்பருங்கலம், செய்யுளியல 18-ஆம் சூததிர விருத்தி யுரையில், உரையாசிரியா கடிய நன்னியாரை மேற்கேள் காட்டுகிறார். அது :—

"கைக்கிளைப் பொருள்மேல் ஆசிரியம வரும்வழி எருத்தடி மூச்சீரான் வரபபெறு வென்பா கடிய நனனியாா எனக் கொள்க. என்னை?

'கைககிளை யாசிரியம் வருவ தாயின்
முசசீ ரெழுததின் ருகி முடிவடி
யெசசீ ராறு மேகாரத திறுமே'

என்ருராகலின்" கடிய நனனியாரைப பற்றியும், அவர் இயற்றிய கைக்கிளைச் சூததிரததைப பறறியும வேறு செய்திகள தெரிய வில்லை.

## 73. பரத சேனுபதீயம்

இஃது, பரதநாட்டியததைப பறறிக் கூறும் நூல் இதனை இயற்றியவா ஆதிவாயிலாா என்பவா "ஆதிவாயிலார் செய்த பரத சேனுபதீயம" எனறு அடியாாககு நலலாா சிலப்பதிகார உரைச்சிறப்புப பாயிரததில் எழுதுவதனுல் அறியலாம. இந் நூலைப பற்றியும ஆசிரியரைப பற்றியும வேறு செய்திகள் தெரியவிலலை இநநூலிலிருநது சில செய்யுட்களை அடியாாக்கு நல்லார் தமது சிலபபதிகார உரையில மேறகோள் காட்டுகிருர். அச் செய்யுளகளை இவை :

"பண்ணியம்வைத் தானைமுகன் பாதம் பணிந்துநாட்
புணணிய வோரை புகன்றனகொண—டெண்ணியே
வணடிருககுங கூந்தல் மடவரலை யையாணடிற்
றண்டியனுசோ விப்பதே சால்பு.

எனவும்,

வட்டணையுந் தூசியு மணடலமும் பண்ணமைய
எட்டட னீரிரண்டாண் டெயதியபின்—கட்டளைய
கீதக குறிபபு மலஙகார முஙகிளரச
சோதித தாஙகேறச சூழ.

எனவும்,

நன்னர் விருப்புடையோ னற்குணமு மிக்குயர்ந்தோள்
சொன்னகுலத் தாலமைந்த தொன்மையனாயப்-பன்னிரண்டாண்
டேய்ந்ததற்பி னேடலுடன் பாடல்அழ கிம்மூன்றும்
வாய்ந்த வரங் கேற்றல் வழக்கு.

எனவும் கூறினர் பரத சேனபதியார்.''

(சிலம்பு : அரங்கேற்று : 10-ஆம் அடி. அடியார்க்கு நல்லார் உரைமேற்கோள்.)

[மேற்காட்டிய செய்யுள்களில், "வட்டணையுந் தூசியும்" என்னும் இரண்டாவது செய்யுளை, நச்சினர்க்கினியர் சீவக சிந்தாமணி 673-ஆம் செய்யுள் உரையில் மேற்கோள் காட்டு கிறார்.]

உவர்ப்பிற் கலக்கமாங் கைப்பின்வருங் கேடு
துவர்ப்பிற பயமாஞ் சுவைகள்--அவற்றிற்
புளிநோய்பசி காழப்புப் பூங்கொடியே யித்திப்
பனிபெருகு மாவ தரங்கு

என்றார் பரத சேனபதியார்.

(சிலம்பு : அரங்கு. 106-ஆம் அடி. அடியார்க்கு நல்லார் உரை மேற்கோள்.)

"அரிதரங்கிற்
செயதெழினி மூன்றமைத்துச் சித்திரத்தாற் பூதரைய
மெயத வெழுதி யியற்று."

என்றார் பரத சேனபதியார்."

(சிலம்பு அரங்கு - 109-ஆம் அடி. அடியார்க்கு நல்லார் உரை மேற்கோள்.)

"புண்ணியமால் வெற்பிற் பொருந்துங் கழைகொண்டு
கண்ணிடைக கணசாண் கனருசாரு--மெண்ணிய
நீளமெழு சாண்கொண்டு நீராட்டி நன்மையுனே
நாணிற் றலைக்கோலை நாட்டு."

'ஆவ தகத்தியனா சாபத்தா னென்மூங்கில்.'

என்றார் பரத சேனபதியார்"

(சிலம்பு : அரங்கு : 116-ஆம் அடி. அடியார்க்கு நல்லார் உரை மேற்கோள்.)

(தொடரும்)

# எழுத்தும் புணர்ச்சியும்

[செல்லூர்க்கிழார் திரு. செ. ரெ. இராமசாமிப்பிள்ளை]

(செல்வி, சிலம்பு: ௨௮. பரல்: ௧௦-இன் ௪௯௯-ஆம் பக்கத் தொடர்ச்சி)

அவ்வாறு தமிழ்ப் பாதுகாப்புக்கெனத் தனிக்குழு இருக்குமாயின் இற்றைநாள் புதுவனவாகக் கண்டுபிடிக்கப்பெற்று மேலை நாட்டில் இருந்து வெளிவந்துலவும பற்பல வகைப் பொருள்கட்கு அவ்வந்நாட்டுச சொற்களால் நந்நாட்டில் பெயர்கள் வழங்காது 'ரேடியோ' வானொலியாக வழங்கும்; 'ஏரோப்பிளேன்' வானூர்தியாக வழங்கும, 'மோட்டார்' உந்துவண்டியாக வழங்கும; 'சைக்கிள' ஈருருளியாக வழங்கும். பிறவும் இவ்வாறே இச்சென்னைநகரிலுங்கூட வணிக நிலையப் பெயர்ப்பலகைகள் (Name Boards) எங்கே பார்த்தாலும் தமிழ்மொழியல்லாமல் வேற்றுமொழியில் எழுதப்பெறறே தொங்குகின்றன ஒன்றிரண்டு தமிழில் எழுதப்பெறறிருக்குமானால் அவைகள் வேறறுச் சொல்லைத தமிழெழுததால எழுதியிருக்கும். அவை 'ஹேர் டிரசிங சலூன்' (மயிர் முடி திருத்தகம) 'பாரத் லாண்ட்ரி' (பாரத் சலவைத தொழிலகம், துணி வெளுப்பு இல்லம) 'கிளாத் மெர்ச்சண்ட' (புடைவைக்கடை) 'ஜுவெல்மார்ட்' (பொன் வணிகக்கடை, நகை வாணிபம) என்றெல்லாம் எழுதப்பெற்றிருக்கும. இவைகளெல்லாம் யாண்டுளது? எதற்கெடுத்தாலும் வேற்றுமொழிச்சொற்கள், வேற்றுமொழியெழுத்துக்களே! இஃது என்ன தமிழ்நாடா? தமிழ்நாடாயின் தமிழில பெயருண்டா? எழுத்துண்டா? புகைவண்டி நிலையங்களில், கார்களில், கார் நிலையங்களில் எழுதியிருக்கும் சொற்களைச் சொற்றொடர்களைப பார்த்தால் மானவுணர்ச்சியுள்ள தமிழன் எவனும தலைகவிழாமல் இருக்கவொண்ணாது! அங்கே எழுதியிருக்கும கொடுமை ஆண், பெண் என்றால எவருக்கும் நன்கு விளங்கும். புருஷர்கள, ஸ்திரீகள் என்றால் யாருக்குப் புரியும்? இவைதான் எழுதப்பெற்றிருக்கும் போதாக்குறைக்கு இந்தி, நாட்டுக்கு வந்து புகைவண்டி நிலையங்களிலும் அரசியலார் அலுவலகம் முதலிய இடங்களிலும இந்திமொழி தலைமையேற்க அதற்குக்கீழ் ஆங்கிலமும் அதற்குக்கீழ் அடிமையாக நந்தமிழும் எழுதப்பெற்றுள்ளன. இவை நகைப்புக்கு இடனாக அமைந்துள்ளன. இவ்விழுக்கு தமிழ்மொழிக்கன்றி ஏனைய மொழிகளபால் இல்லை. ஆங்கிலத்திலோ வேறு இந்திய நாட்டு மொழிகளிலோ அவ்வம்மொழிகளே ஆங்காங்கே வரைந்திருக்

கும்முதலில் ஒரு சொற்கேற்ற எழுத்தில் ஒன்றுந்திரிபடாமல் எழுதுதல் வேண்டும். தமிழில் எப்படியும் எழுதலாம் அதைக் கேட்பதற்கு ஆள் கிடையாது. பழத்தைப் பாம் என்று வரையலாம். அவர், அவற், மழை மலை கற்கண்டு கல்க்கண்டு, பால்குடம் என்றெல்லாம் தீட்டலாம். கேட்பாரில்லை இவ்வாறெழுதுதற்குப் பேசுதற்கு ஒரு கூட்டம்—பாராட்டும் ஆட்டம்—இங்கேதான் உண்டு. மற்ற நாடுகளில் பிழைபட இவ்வாறெழுதினால் கன்னம் வீங்கக் கைச்சாத்திடுவான். அஃது ஆங்கே; இஃது ஈங்கே. இலக்கணம் வேண்டா! அது இருப்புக்கடலை; படிக்கிற பிள்ளைகளைத் தலைகிறுக்கச் செய்யும் என்று கூறுகின்ற கிறுக்குக் கூட்டம் இன்னும் நம் நாட்டில் இருக்கின்றதென்றால் அது தமிழ்நாட்டைப் பிடித்த 'சனி' என்றேதான் கூற வேண்டும். எதற்கும் வரம்பு - ஒழுங்கு வேண்டும் அஃதின்றேல் எதுவும் முறையொடு படாது வழுவாகும். இலக்கணம் ஒழுங்கை நிறுத்துதற்கே அமைத்த வரம்புச் சட்டம். அஃதின்றேல் ஒரு மொழி வளர்ச்சியடைய முடியாது. இதை இவ்வாறு வழங்கவேண்டுமென்பதற்கு வரையறை கூறுவதே அஃது. இலக்கணம் இன்றேல் கரும்பைக் கறும்பு என்றும், மலையை மழையென்றும், கலையைக் கழையென்றும், கற்பைக் கல்ப்பு என்றும், வெற்றியை வெல்றியென்றும் எழுதி மொழியைக் குட்டிச்சுவராக்கலாம். ஆகவே, ஆண்டவர்களே! உங்களை ஒன்று வேண்டுவல்! தமிழைத் தமிழக்கண்கொண்டு பார்த்து அதன் இயற்கைக்கு முரணாது, தமிழ்மொழியை நன்கு பயிலுங்கள். அதுவே, கடமையென்பதையும் உணருங்கள் சாயம் பூசிக்கொண்ட நரிபோற் பிறரையும் கெடுக்க எண்ணாமல்,

'குருடும் குருடும் குருட்டாட் டமாடிக்,
குருடும் குருடும் குழிவீழ்ந் தற்றே.'

என்னும் திருமூலர் மொழிக்கு இலக்காகாது,

'எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.'

என்னும் வள்ளுவர் உண்மை மொழிப்படி உண்மையைக் கண்டு ஒழுகுமின்.

இதுபோழ்து தமிழை ஆட்சிக்குக் கொணரும் கிளர்ச்சிகள் தொடர்ந்து நிகழ்கின்றன. அதற்கு எக்கொள்கையினரும் மாற்றுரை கிளத்தாது ஏற்றுத் தம்மாலியன்ற துணைபுரிந்து நம் மொழியை ஆட்சியில் நிறுத்தவேண்டும்; அப்போதுதான் நாடு நாடாக மிளிரும்; அப்படியானால்தான், தமிழர் பிறநாட்டாரோடு ஒத்த தன்மையராய்த் தலைநிமிர்ந்து நிற்க இயலும்.

அதற்கு ஒல்லும்வகை கடனாற்றல் தலையாயது எனக்கொள்ளல் வேண்டும்.

இற்றைநாளில தமிழ்மொழியை எழுத்துக்களால் சீர் திருததும குழுவினரும், தமிழ்த தொடர்களைச் செய்யுட்களை ஆற்றொழுக்குபபோல இடையறாதோடும ஒலியமைப்பைச் சந்தி பிரிதலெழுதுகின்ற குழுவினரும, கொள்கையினருமாக நாட்டிற் பல்கிப் பிற்கால வருஙகால மக்கட்கு வெண்பா இன்னது, ஆசிரியப்பா இனனது, கலிபபா இன்னது, வஞசிபபா இன்னது, விருததம் இனனது என்று தெரிதற்கு இயலாவாறு குற்றிய லுகர முற்றியலுகரப புணர்ச்சிகளையும் வலலின மெல்லினப் புணர்ப்புக்களையும் எதுகை மோனைகளையும பாராது பிரிக் கின்றனர். அவ்வாறு பிரிப்பது ஒவ்வாத ஒன்றேயாகும். கற்கும ஊழ கருவிலேயே யமையப்பெற்றவர் கறறே தீருவர், கற்கும ஊழ கைவரப் பெறார்க்கு மலைபோல் நூல்களைக் குவிப் பினும, சொற்றொடர்களைக கால்வேறு கைவேறாகப பிரித்து நூல் எழுதிககொடுப்பினும் கற்கப் போவதில்லை. இதனாலேயே,

> 'இருவே றுலகத் தியற்கை திருவேறு
> தெள்ளிய ராதலும் வேறு'

எனவும்,

> 'புத்தகமே சாலத் தொகுத்தும் பொருடெரியா
> உய்த்தக மெல்லாம் நிறைப்பினும்—புத்தகததைப்
> போற்றும் புலவரும வேறு பொருடெரிந்து
> தேற்றும் புலவரும் வேறு'

எனவும் போநத பெரியார் திருமொழிகளும் பிறந்தன.

## புணர்ச்சியின் இயல்பு

புணர்ச்சியென்னும் சொல், சேர்க்கை, கூடுதல், ஒன்றுதல், இணைதல் என்னும பொருள் தருவதாகும். ஈங்கே கூறப் புகுவது எழுததுப் புணாசசி. உலகப் பொருள்களில் எதை யெடுத்தாலும சேர்க்கையின்றி-ஒன்றோடொன்று கூட்டுறவில் லாமல் நிகழ்வதேயிலலை. எங்கும் இணைப்பிலலாது ஒனறும் இயங்கக் கண்டிலேம் மக்களும் ஒவ்வொருவரும் கூடியே எதையும செய்யும் ஆற்றல் பெறுகின்றனர். இவ்வாறே எழுத் துக்களும் இணைந்தே ஆற்றல் பெறுகின்றன.

உயிரெழுத்துக்கள் பன்னிரண்டும் தாமே வேறு எழுத் துக்களின் கூட்டுறவின்றி இயங்குவனவேனும் அவைகளும் நுட்பமான சிறுசிறு ஒலிக்கூட்டங்கள் ஒன்றுபட்டே உருவா

கின்றன. அகரவுயிர் தோன்றி உருவாதற்கு முன் எழும் அளவிற் குறைந்த ஒலி, 'நுட்ப அகரம்' என, வழங்குவர் ஆன்றோர். இவ்வொலி நுண்மையைக் குறிக்கோளாகக்கொண்டு சமயப் பெரியாரும் இறைவனை,

'ஓசை ஒலி எல்லாம் ஆனாய் நீயே'

என்றருள்வதும் காண்க.

இவ்வாறு தோன்றிய உயிர்களின் சார்பு பெற்றே மெய் யெழுத்துக்கள் இயக்கமடைகின்றன. 'க' என்னும் மெய் யெழுத்து க்+அ,=க என்னும் இரண்டன் சேர்க்கை ககரமும் இதுபோன்ற ஏனைய மெய்யெழுத்துக்கள் பதினேழும் உயிரின் துணையின்றி ஒலியா. 'க்' என்பதை 'இந' என்றாலும் 'க' என்றாலும் இகரமேனும் அகரமேனும் ஒன்றுபடாமல் ஒலிப்பதில்லை. இதனைக் கூர்ந்தறிந்தே நம் சான்றோர், 'இக்' என ஒலித்தால் முதலில் மெய்யெழுத்தொலி எழுவதில்லை. உயிரெழுத்தொலியாகிய இகரமே ஒலிக்கின்றது. அவ்வாறொலி யெழின் மெய்யெழுத்தொலியாகாது எனக் கொண்டு க்+அ=க ஆக எழுதியமைத்து மெய்யொலியை முதலில் ஒலிக்கச் செய்தனர். உயிர் சேர்ந்த அடையாளமே மெய்யெழுத்துக்களின் மேல் புள்ளியில்லாதிருப்பது புள்ளியிடின் அது தனி மெய் யாகும். தனிமெய் சொற்களின் இடையே உயிர்முன்பேதான் தோன்றும். இதனான் உயிர்மெய்யெழுத்துக்கு இலக்கணங்கூறிய நன்னூலார்

'புள்ளிவிட் டவ்வொடு முன்னுரு வாகியும்'

என்றார். (தொடரும்)

---

# இராச நாயகம்

[பெருமழை, புலவர். பொ வே சோமசுந்தரனர்.]

(சிலம்பு - உஅ ; பரல் - அ, ௪0௬-ம் பக்கத் தொடர்ச்சி.)

நமது செநதமிழ்ப் பெருங் காபபியமாகிய இராசநாயகத் தின ஒபபற்ற தலைவி பலகீசு நலலாளைபபறறிய குறிப்புகள் பலவற்றை 'நார்மன ஸடோனபியனர்' என்னும அறிஞா வரைந்த கட்டுரை ஒனறிற கண்டு காட்டினும் அக கட்டுரை, அணமை யில் நிகழநதேறிய இரணடாவது உலகப பெரும போரின் தொடக்க நாளிலே வரையபபட்டதாகும இரண்டாவது உலகப் பெரும் போாககுக களபபலி யூட்டிக காலகோள செய்த நாடு 'அபிசீனியா' என்பது யாவரும அறிநததொன்று. அந் நாட்டு மன்னர் மன்னனை கெயலி சிலாசின மரபிற்கே நம் பல்கீசு நல்லாள் முதல்வியாவள என்று அக் கட்டுரையாசிரியர் காட்டி யுள்ளனர்.

மண் மூடிக் கிடக்கும 'மாரெப்' நகரிற் கண்ட புதை பொருட் சான்று கொணடு, அவ் வறிஞர் வரைநத வரலாற்றுக குறிபபுகள் பலவும, நமது இராசநாயகக காபபியத்திலே விளக்கமாகக கூறபபட்டுள்ளன. பல்கீசு உலகப பேரழகி, அந நாட்டிற்கோா புதுமைப்பெண் எனறெல்லாம அவ் வாசிரி யர் புகழ்நதாா. வணணககளஞசியப புலவரோ, தம் காப்பியத தலைவியின் பேரழகையும, வீரத்தையும, கற்புடைமையையும் காவியச் சுவைபட நனகு கூறியுளளனா.

பல்கீசு பிறக்கும்போதே அரசிளஞ செல்வியாகப பிறந் தவள் என்று அக் கட்டுரையிற் கூறபபட்டதறகு மாறாக, நம் வண்ணக்களஞசியப் புலவா, அவள ஒரு சிறநத அமைச்சன மகளாகத தோன்றித் தனது பேரறிவாலும, பேராற்றலாலும் முதனமுதலாகத் தானே அரசுகட்டில் ஏறியவள என்று கூறுகின்றனர் இவள் அரசுகட்டில் ஏறிய வரலாறு, இராசநாய கததில் மிகவும சுவையுடைய பகுதியாக விளஙகுகின்றது. இராசநாயகததிற் காணப்பட்ட அவ் வரலாறு வருமாறு .

பெரும்புகழ் படைத்த சபபநகர மன்னர் மரபில் 'சுருயிகது' என்னுந தீயவன் ஒருவன் தோனறினன. அவன் இயல்பி லேயே மிகவும் கொடியவனும், காமுகனுமாக இருநதனன்.

"பொய்வகை களவு நிந்தை
கொலைமதுப் புசித்தல் என்னும்
ஐவகைப் பவஙகி ரீட
மாயதற் கடுத்த புன்மைச

செய்வகை எவையுந் தேகக்
கலன்களாய்ச் சிறக்கப் பூண்டு
மொய்வகை இபுலீசுக்கு
முதன்மகன் ஆயி னானே."

என்று, வண்ணக்களஞ்சியப் புலவர் இவனை நமக்கு அறிவிக்கின்றார்.

காவியங்களிலே யாம் பற்பல காமுகக் கயவர்களைக் கண்டுள்ளோம் எனினும், இவன்றன்னைய பெருங் கயவரை யாண்டுங் கண்டிலேம். தனது ஆட்சிக்கீழமைந்த பரந்த நாட்டின்கண் அழகோடே பிறந்த மகளிர் அனைவரும் இவனது கொடிய காம வேட்டைக்கு ஆளாகினர். இம் மன்னன் அவைக்களத்தே அமைச்சுரிமை பூண்டிருந்தான் பல்கீசு நல்லாளின் தந்தை 'யூசறுகு' என்பான் இவன்,

"இத்தகைக் கொடுங்கோல் செய்யும் எந்தலுக் கமைச்ச னானேன்,
சத்திய மொழியின் மாறான், சகலநூற் கலையுந் தேர்ந்தோன்
புத்தியிற் கால மூன்றும் புரையறப் பிரித்துச் சொல்வோன்
பத்திகொள் ளுலகம் யாவும் மயங்கெழில் படைத்துள் ளோனே."

எனப் போற்றப்பட்டுள்ளான்.

காமுகனான சுறூயிக்கு வேந்தன், தன் நாட்டிலுள்ள பருவம் வரப்பெற்ற அழகிகளை, அவ்வப்போது கண்டு வந்து தனக்குக் கூறும்படி பற்பல ஒற்றர்களை நாடெங்கும் வைத்திருந்தான். அமைச்சன் யூசறுகுக்கு இறையருளாலே தோன்றிய பல்கீசுவோ மணப் பருவத்தை எய்தினள். அவள் முக்காலத்திலும் இருந்திராத அழகுத் தெய்வமாகத் திகழ்ந்தாள். அவ் வழகிக்குத் தாய் தந்தையர் இட்ட பெயர் பல்கீசு என்பதேயாயினும், அந்நாட்டறிஞர் அவளைச், 'சூறத்துல் ஈமன்' என்னும் சிறப்புப் பெயரானே அழைக்கலானார். சூறத்துல் ஈமன் என்னும் தொடர்க்கு, 'ஈமன் நாட்டுக் கடவுள் மலர்' என்பது பொருள் என வண்ணக் களஞ்சியப் புலவர் விளக்குகின்றனர்.

தன் செல்வியின் பேரழகு வளர வளர, யூசறுகின் உளத்தே அச்சமும் வளர்வதாயிற்று. 'இவள் அழகினைச் சுறூயிக்கு அறிந்தால், அந்தோ! என் நிலை என்னும்!' என்று எண்ணி நடுங்கினான். தனக்குள் நீளச் சிந்தித்துத் தன் மகளை அழைத்துக் கொண்டு இரவிலே பிறர் அறியாமல் சபேயிய அரசின் எல்லையைக் கடந்து வேறு நாட்டிற்குச் செல்வதே உறுதியாம் என்று துணிந்து, இக் கருத்தைப் பல்கீசுவிற் குணர்த்தி அவளை உடம்படும்படி வேண்டினான்.

வீரவுள்ளம் படைத்த பல்கீசு, தன் தந்தையின் கோழைமைக்குப் பரிந்தாளேனும், அவன் வேண்டுகோட்கு இணங்க மறுத்தாள். "அன்புமிக்க தந்தையே! தீமைக்குப் புறங் காட்டுதல் அறிவன்று; அதனை எதிர்த்து அழிப்பதே ஆண்மையாகும். அதனை அழிக்க இயலாவிடின், அதன் கண்முன்னே நாம் இறந்து பிணமாய்க் கிடத்தலே வேண்டும். காம வேடனாகிய சுருயிக்குவுக்கு அஞ்சி யாம் ஓடிவிட்டேமாயின் நாமமட்டுமே அவன் தீமைக்குத் தப்புவோம். என்போன்ற கற்புடைமகளிர் பலரையும் அவன் கெடுப்பது திண்ணம். ஆதலின் யான் என் உயிர் கொடுத்தேனும் அவன் தீமைக்குத் தப்புவேன். இன்றேல் என்னுடைய வீரத்தாலே அத் தீயவனைக் கொன்று சபேயிய நாட்டு மகளிர்க்கு விடுதலை யளிப்பேன். நீங்கள் விரும்பியபடி இந் நகரத்திலே வாழ்வதை விட்டு, இந் நகரத்தை அடுத்து நமக்கோர் மாளிகை எடுத்து அதன்கண் என்னை வையுங்கள். யான் பின்னர் இக் கொடுங்கோலனை அழிக்க வழி காண்பன்," என்றாள்.

தன் அருமந்த மகளின் வீரவுரை கேட்ட யூசறுகு, வேறு வழியின்றிப் பல்கீசு நல்லாளைச் சப்ப நகரத்தை அடுத்த ஒரு பூங்காவில் எடுக்கப்பட்ட தன் மாளிகையிற் பிறர் அறியாவாறு கொண்டுபோய்ச் சேர்த்தனன்.

சுருயிக்குவின் கூரிய கண்படைத்த ஒற்றர்கள், பல்கீசு நகர்ப்புறத்துத் தனி மாளிகையில் வசிப்பதனையும், அவள் அழகாலே ஈமன்நாட்டுக் கடவுள் மலர் எனப் புகழப்படுவதையும், கண்டுங் கேட்டும் தம் வேந்தனுக்கு உணர்த்தினர். கூறத்துல் ஈமன் என்னும் பெயர் கேட்ட துணையானே, "அத் தெய்வ மலரின் தீந்தேனைப் பருகும் வண்டல்லனோ இச் சுருயிக்கு மன்னன்," எனத் தனக்குத் தானே வாய்விட்டுக் கூறினன்; "விரைந்து போய் அமைச்சன் யூசறுகை என்முன் அழைத்து வம்மின்!" என்று தூதரை ஏவினன்.

எந்தப் பொழுதிலே, என்ன கேடு வந்துறுமோ! என அஞ்சிக்கிடந்த யூசறுகு, நம்மை அரசர் அழைக்கின்றார் எனத் தூதர் கூறக் கேட்டலும், இடியொலி கேட்ட அரவென நடுங்கி, அரசன்பாற் சென்றான். அவனும் யூசறுகை அன்போடே வரவேற்று,

"ஒளிப்பதேன் அமைச்சர் ஈன்ற
ஒண்டொடி யினரை வேந்தர்க்
களிப்பதும் வேந்தர் பெண்ணை
அமைச்சர்கட் களிக்கு மாறும்

வளப்பெரும் புவியி லென்றும்
வழக்கமே யன்றோ நின்
மொழிககரும் பிணைக்கல் யாண
முடிதனெனக் குதவு மென்றான்.”

இங்ஙனம், இதுதனை எளிதாகவே சுறாயிக்கு, யூசறுகின்பால் மகட்பேசி முடித்தான் இயமொழிகளைக்கேட்ட யூசறுகின் நிலையினை வண்ணக்களஞ்சியப் புலவர்,

“ கஙகத்தை அழைககும் வேலான்
கதைதத சொல் காதினுள்ளே
வங்கததை யுருககிச சாய்தத
வருததமொாத தயார்து வாடிப்
பஙகத்தை அடையுங் காலம்
இஃதெனப் பதைதது நெஞ்சில்
துஙகத்தை யுடையோய் கேட்டுச
சொல்வனென் மகளை என்றான்.”

எனத் தக்கதோர் உவமைகொண்டு அழகாக விளக்கியுள்ளார்

தன் தந்தையினது வேண்டுகோளை மறுத்து நகர் அண்மையிலே தனி மாளிகையிற் குடியேறிய பல்கீசுவும், அம்மாளிகையிலே வாளா இருந்துவிடவில்லை. தன் ஆருயிர்த் தோழியர் பலரைத் தனக்கு ஒற்றர்களாக ஆக்கிக்கொண்டாள். அவ்வொற்றர் வாயிலாய்ச் சபாநகரக் குடிமக்களும், பொருநிதிக் கிழவரும், அமைச்சரும், படைத்தலைவரும் ஆகிய மாந்தர்கள், காமுகனாகிய சுறாயிககுவின் திறத்தில் எத்தகைய மனப்பான்மையுடையராக இருக்கின்றனர் என்பதை, ஆராய்ந்து அறிந்து கொண்டாள். நகரப் பெருமக்கள் அனைவரும், சுறாயிக்குவை அகத்தே வெறுத்துப் புறத்தே நட்டு ஒழுகுகின்றனர் என்றும், அக்கொடுங்கோல் மன்னனின் வீழ்ச்சியை ஒவ்வொருவரும் ஆவத்துடனே எதிர்பார்த்திருக்கின்றனர் என்றும், நன்கு தெரிந்துகொண்டாள். சுறாயிக்குவின் காமவேட்டைக்குத் தான் இரையாகாது தப்புதல் அரிதென அவள் நன்குணர்ந்தாள் எனினும், அக்காமக்குணத்தின் உதவியாலேயே அவனைத் தன் வயப்படுத்தி, அவன் உயிரைப் போக்குதற்குரிய வழியினையும், இந்நிகழ்ச்சியிலே தனது கற்பைப் பேணிக்கொள்ளும் வழியினையும், அவள் நுண்ணிதின் ஆராய்ந்து தெளிந்துகொண்டாள். இவ்வழிச் சபேயிய அரசுகட்டில் தன்னுடையதாகும் என்பதும் அவள் முடிபாகும்.

இத்தகைய செயலிலிருந்த பல்கீசுவின்பால் யூசறுகு ஓடி வந்தான். “ என் அருமை மகளே ! என் சொற்கேளாது கெடுத்

தொழிந்தனையே! எளியேன் இப்பொழுது என்செய்கேன்! அந்தோ என்னிளம் பிணைமானே! நின்னை அச்சுருயிக்கென்னும் கொடும்புலிக்கோ இரையாக்குவேன்!" என்று பற்பல கூறி அழுதான். தந்தையின் பேதைமைக்கு அகத்தே குறுநகைகொண்டாள் பலகீசு. "தநதையே! பொறுமையுடனிருங்கள், அறம் வெல்லும் பாவந் தோறகும்" என்றுள.

உய்தற்கு வழிகாணுது என் அன்பே!

"அன்று யான் உரைத்த வண்ணம்
ஆயதெனை செய்கேன் அந்தோ!
உன்றனக் கிசைதத புததி
யணுவு முன்ஞது நீததாய்!
சென்றிதற் கென் சொல்வேன்? கட்
செவியின்வாயத தேரை யாஞேம்"

எனக் கல்லுமுருகக் கதறியழுந தந்தையின் செவியிடைச் சில மறை புகன்றுள. அமமறை கேட்டபின்னர் யூசறுகு முகம் சிறிது ஒளிபெற்றுத திகழ்நதது. "என் நங்கை வல்லள" என அவளைத தன் நெஞசினுளளே பாராட்டினுன். "முதுக்குறைவி! இனி நீ காட்டிய நெறியே யான் நடபபன! இப்போது அககய வேநதனுககு யான் என் சொல்லவேண்டும? நீயே கூறுதி" என்றுன்.

"எந்தாய்! நீயிா மன்னனை அணுகி, 'வேந்தே! நீ என் மகளை விரும்புவதனினும பன்மடஙகு என்மகள நின்னை விருமபுகின்றுள். திருமணம் என் சிறு மாளிகையிலே சிறப்பாக நிகழவேண்டும. அத்திருமணத்திற்கு, நமது நகரப் பெருமக்களும, அமைச்சர்களும, படைத்தலைவரும, பிறரும் தத்தம் பெண்டிரோடும, பிளளைகளோடும வநது எளியேமிடம் விருந்துண்டு மகிழவேண்டும இஃது என் அருஞ்செல்வியின் விருபபம் ஆகும் இன்னே மணவினை தொடங்குக!' என்று உடமபட்டோதுக. பின்னர் நிகழ்வன காண்க!" என்று பல்கீசு தந்தைக்குக் கூறி உய்த்தாள. அவனும் சுருயிக்குவின் அவைக்களம சென்று பல்கீசு கூறியவெல்லாம் அவனுக்குக் கூறிஞன்.

பல்கீசு தன்னை மிகமிக விரும்புகின்றுள் என்ற செய்தி கேட்டலும்,

"பெற்றனம் அரம்பை இன்பப்
பேறெனை வயிர மாலைக்
கற்றடம் புயம்பூ ரித்துக்
கஞ்சுகி கிழிந்த தன்றே"

என்பர் புலவர் பெருமான் கேட்டவுடன் கஞ்சுகி (சட்டை) கிழிந்ததாம் இனி, அத்தியவன் உடல்கிழிய இஃதோர் நிகழ்ச்சி தழும் ஆகலாம்.

இனிப் பல்கீசு நல்லாள் விரும்பியபடியே சுலைமான் மன்னனும் "மணச்சிறப்பனைத்தும் செய்து, மிகுந்திடும் இளைஞர், நண்பர், வேதியர், அரசர் மேலும், தருமபரி சனர்கள் சூழச் சங்கமே எங்கள் ஆர்ப்ப, நிகழ்ந்தெழில் குலவுந," தெய்வ மாளிகைக்கு வந்து வதுவைக்கியன்ற புறச்சடங்குகள் எல்லாம் நிகழ்த்தினான்.

பல்கீசு நல்லாளின் விருப்பப்படியே அமைச்சன் யூசறுகுபு, அம்மன்னனோடே வந்த அளவிலா மாந்தர் அனைவர்களும் அறுசுவையுண்டி விருந்து நல்கிப் போற்றினான். அன்று மாலைப் பொழுதினும் இரவின் முற்பகுதியினும் இன்னிசை விருந்து களும், ஆடல் விருந்தும், அமரரும் அதிசயிப்ப நிகழ்ந்தன.

மணவினைப் புறச்சடங்கெல்லாம் மகிழ்ந்தாள் போன்று ஏற்றுக்கொண்ட பல்கீசு நல்லாளின் பேரழகிலே, சுலைமான் பெரிதும் அழுந்தி, "என்னே! இவள் மானிட மடந்தையோ! தெய்வ நங்கையோ! அழகின் அழகோ!

"விண்ணுல கரம்பை மாதர்க
கரசியை விலைகொள் மாதோ!
மண்ணில கரிவை யார்கண
மணியொளி மழுக்கும் வேறோர்
பெண்ணிதோ! சோதி தானோ!"

என்று அப்பெண்ணுள்ளே தன் கூற்றுவன் கரந்துறைதல் அறியாது மயங்கிக் கிடந்தான்.

காலம் இடையறாது ஓடிக்கொண்டே இருக்கின்றதன்றோ? இரவின் முதல் யாமம் கழிந்தது; இடையாமம் எய்திற்று.

தோழியர் சுலைமான் மன்னனுக்கு, "அந்தமின் மணிக ளாலே" ஆலத்திசுற்றி "நின்தீமை ஒழிவதாக! இந்நாடு வாழ்வதாக!" என வாழ்த்துப் பாடினர். சிலதியர் பற்பல வாயில்களைக் கடந்து பள்ளியறைக்கு வழிகாட்டி மணமகனை அழைத்தேகினர்.

பள்ளியறையின்கண்ணே, முன்னரே பல்கீசு நல்லாள் "பட்டுடுத்து அணிகள் பூண்டு, பரிமளந் திமிர்ந்து சோதி, விட்டொளிர்மணிக் கிரீடம் தரித்துமென் மலர்கள் சூடி"

அழகுத் தெய்வமாக அமர்ந்திருந்தவள், எதிர்கொண்டு இன்முகம் காட்டி வரவேற்று, ஆண்டோர் மணியாதனத்தே இருத்தியபின்னர், "கிட்ட நின்றவரில் ஓர் பெண்கிளியின்பால் ஏதோ சொன்னாள்" அவள் சென்று மணிவள்ளங்களிலே 'காமபானம்' நிரப்பிக் கொணர்ந்தாள். ஒரு வள்ளம் பலகேசுவின்பாற் கொடுக்கப்பட்டது, மற்றொன்று சுருயிக்குவின் கையிற் சேர்ந்தது. சுருயிக்குவின் கண்கள் பலகேசுவின் அழகைப் பருகின; அவன் வாய் வள்ளத்தைச் சுவைத்துப் பருகிற்று; வள்ளத்திலிருந்த இனிமையூட்டப்பட்ட நஞ்சோ அவனது அறிவையும் உயிரையும் ஒருசேரப் பருகிற்று.

மயங்கி வீழ்ந்த மன்னன் சுருயிக்குவின் தலையை ஒருத்தி வாள்கொண்டரிந்து வேறு வைத்தாள். பின்னர் அவன் முத்திரை மோதிரத்தைக் கழற்றி, ஒரு முடங்கல் வரைந்து அதன்கண் மோதிரம் ஒற்றி முத்திரையிட்டு மணமன்றத்திலே ஆடல் பாடலில் ஈடுபட்டிருந்த படைத்தலைவர்க்கும், அமைச்சர்கட்கும் காட்டும்படி பலகேசு ஒரு தோழியின்பாற் கொடுத்துப் போக்கினாள். அத்தோழி கொண்டுவந்த கட்டளையை ஒரு அமைச்சன் படித்து மற்றையோர்க்கு அறிவித்தான். அக்கட்டளை வருமாறு:

"சபேயிய நாட்டு மன்னர் மன்னன் சுருயிக்குவின் கட்டளை! இன்றிரவு எமது பள்ளியறை இன்பத்தை மிகுவிக்கும் பொருட்டு அமைச்சரும், சேனைத்தலைவரும், பெருநிதிக்கிழவருமாகிய நீங்கள் அனைவீரும் நுங்கள் இளமனைவியர் அனைவரையும் எம் பள்ளியறைக்கு வரும்படி செய்துவிட்டு நீயிர் நுங்கள் மாளிகைக்குச் சென்மின். நாளை நும் மனைவியர் நும்பால் உய்க்கப்படுவர். இக்கட்டளையை மீறுவோர் கொலைத்தண்டனைக்குரியவர் ஆவர்," என்பதாம்.

இக்கட்டளையைக் கேட்டவுடனே படைத்தலைவர் முதலியோர் வெகுளி பொங்கியவராய,

"உழைத்தனன் நரகிற் போகும் உழைப்பெலாம்
பெரியோர் நெஞ்சைக்
குழைத்தனன் மிகுந்த பெண்கள் கற்புகள்
குடிபோக் கெண்ணித்
தழைத்தனன் இவையே யல்லால்
நமதுபெண் டிரைத் தானே
அழைத்தனன் படுக்கை வீட்டிற்
கதிசய மிதன்மே லுண்டோ!"

"நேயத்தைக் கெடுத்த பாவி
அரசென்று நிலைத்த வன்றே
ஞாயத்தைக் கெடுத்தான் முன்னோர்
நாமத்தைக் கெடுத்தான் நந்தந்
தேயத்தைக் கெடுத்தான் சேர்ந்தோர்
சிறப்பையுங் கெடுத்தான் பொய்யாம்
காயத்தை நிலையென் றெயிக்
கருமங்கள் தலைமேற் கொண்டான்"

என்றிவ்வாறு பலரும் பற்பல கூறிச் சினந்து ஆரவாரஞ் செய்வாராயினர்.

இங்ஙனம் இவர்கள் சினத்தைத் தூண்டவே பல்கீசு இத் தந்திரத்தைச் செய்தாள். இவர்கள் சினமூண்டு செய்யும் ஆரவாரத்தைக் கேட்டவுடன், நம் நினைவு இனி நிறைவேறுதல் உறுதி என எண்ணி மகிழ்ந்தவளாய்ப் பள்ளியறையைவிட்டுச் சில தோழியர் புடைசூழ மணமன்றத்திற்கு வந்தனள். பல்கீசு வினைக் கண்டவுடன் அனைவரும் ஆரவாரம் ஒழிந்து, அந்நல்லாள் யாது கூறப்போகிறாள் என்று ஆவத்தோடே எதிர்பார்த்து நின்றனர். அவர்களை அமருமபடி செய்து புன்முறுவல் பூத்த முகத்தினளாய் அவர்கள் முன்னிலையில் நெடியதோர் சொற் பொழிவு ஆற்றினள்.

(தொடரும்)

---

திரு. து. சு. கந்தசாமி முதலியார் மறைவு பற்றிய

## கையறவு நிலை

சிந்தையினில் அன்புடையாய்! சீலமிகும்
நல்லறிஞ! சிறந்த நந்தம
செந்தமிழ்ச்செய மாதவமே! நேர்மைதரு
வழக்கறிஞ! செய்ய பண்பார்
கந்தசா மிப்பெரியோய்! தமிழ்நூலாய்
திறனுடையாய்! கவினும மண்மேல்
அந்தமிலாப் புகழுடனே அமர்ந்திட்டாய்
மண்விட்டாய்! அந்தோ! அந்தோ!

**வித்துவான், தி. மு. சங்கரலிங்கம்.**

---

# திருக்குறள் அகவல்

[வித்துவான், திரு மா. வேதாசலம், எம்.ஏ., பி.ஓ.எல்.]

(சிலம்பு - ௨௮. பரல் - ௧0, பக்கம் ௪௮0-ன் தொடர்ச்சி)

## ௮. அன்புடைமை

1. அன்பிற் குண்டோ அடைக்குந் தாழே
அல்லல் கண்டுழி ஆர்வலர்
புன்கண் நீரே பூசல் தருமே.

2. அன்பிலார் பிறருக்(கு) ஆகா மையின்
அனைத்தும் உரியர் அவர்க்கே
என்பும் உரியர் ஏனையோர் பிறர்க்கே.

3. அன்பொடு தொடர்ந்த ஆற்றின் பயனென
அறிவிப் பாரே ஆருயிர்க்(கு)
உடம்போ டியைந்த ஒருவாத் தொடர்பே.

4. ஆர்வம் உடைமை அன்பீன் குழவி
ஆர்வக் குழவி ஆவது
நண்பெனக் கூறும் நாடாச் சிறப்பே.

5. அன்பின் அமர்ந்த ஆறெனத் தெரிப்பர்
இல்லற வாழ்க்கை இன்பம்
துய்த்தோர் எய்தும் துறக்கச் சிறப்பே.

6. அறமென் பதற்கே அன்பு துணையென்
றறியா ஒருசிலர் அறைகுவர்
மறமென் பதற்கும் மதலை அஃதே.

7. என்பு சிறிதும் இல்லா உடம்பைக்
கதிரவன் காய்வது கடுப்ப
அன்பில் லதனை அறங்கா யும்மே.

8. அகத்தின் கண்ணே அன்பில் லாவுயிர்
இல்லறங் கூடி இருத்தல்
வன்பால் வறள்மரம் வளர்ந்தால் அற்றே.

9. எழில்மெய் கூடியும் இல்லற உறுப்பாம்
அன்பினர் அல்லா தாருக்(கு)
ஏனை உறுப்புகள் எவன்செய் யும்மே.

10. அன்பு முதலா அதன்வழி நின்ற
உடம்பே உயிர்சேர் உடம்பாம்
ஏனையோர்க் குடம்புகள் என்பு தோலே.

---

# தென்னிந்திய தமிழ்ச் சங்கம், திருநெல்வேலி

# தமிழ்ப்புலவர் மாணவர் தேர்வு

இச்சங்கத்தார் சென்ற ஆண்டுகள்போல இவ்வாண்டும் மாசித் திங்களில் சென்னை மாநிலப்புலவர் கல்லூரி மாணவர்கட்குப் பரிசுத் தேர்வு நடத்தினார்கள்.

வித்துவான இறுதிநிலைக்கு 18. முதல் நிலைக்கு 27. புகுமுக வகுப்பிற்கு 24. ஆக 69 பேர் விண்ணப்பித்தவர்கள். இதில் ஒவ்வொரு வகுப்பிலும் ஒவ்வொருவர் எழுதவில்லை. எழுதிய 66 பேர்களில் ஒருவரே தவறியவர். பெரும்பாலும் மாணவர்கள் தேர்ச்சி சிறப்பாகவே தெரிகின்றது.

## வித்துவான் இறுதிநிலை

முதற் தகுதியில் தேர்ந்து பரிசு பெறுபவர்கள்

1. திருவள்ளுவர் செந்தமிழ்ப் புலவர் கல்லூரி மாணவி
   பதிவெண் · 80 ந. பாலம்மாள் — முதற் பரிசு ரூ 50
2. திருப்பனந்தாள், K. V. S. S கல்லூரி மாணவர்
   பதிவெண்: 73. அ. பாலசுப்பிரமணியன் — இரண்டாம் பரிசு ரூ. 40
3. தருமபுரம், கீழைத்திசைப் பல்கலைக் கல்லூரி மாணவர்
   பதிவெண் 66. சு. சேனாபதி — மூன்றாம் பரிசு ரூ. 30
4. கரந்தைப் புலவர் கல்லூரி மாணவர்
   பதிவெண். 77. ம. நல்லசாமி — ”

இரண்டாந் தகுதியில் தேர்ந்தவர்கள்

5. பதிவெண் · 74. S. புண்ணியகோடி, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்
6. ” 67. பொ. ஆதிகேசவலு, ” ”
7. ” 76. மு. சேதுராமன், கரந்தைப் புலவர் கல்லூரி
8. ” 70. R. கிருஷ்ணமூர்த்தி, K. V. S. S கல்லூரி, திருப்பனந்தாள்
9. ” 68. கி. இராமசாமி, ” ”

மூன்றாந் தகுதியில் தேர்ந்தவர்கள்

10. பதிவெண்: 72. த. பழநிவேலு, ” ”
11. ” 69. V R. கண்ணப்பா, ” ”
12. ” 71. S. D. கேசவன், ” ”
13. ” 81. ச. அரங்கம்மாள், திருவள்ளுவர் செந்தமிழ்ப் புலவர் கல்லூரி, திருநெல்வேலி
14. ” 79. அ. நக்கீரன், ஓரத்திரான்குடிக்காடு, உரத்தநாடு
15. ” 65. மு. ஏகாம்பரம், கீழைத்திசைப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்
16. ” 75. சி. கோபாலன், கரந்தைப் புலவர் கல்லூரி
17. ” 82. க. வ. முத்தைய பிள்ளை, திருவள்ளுவர் செந்தமிழ்ப் புலவர் கல்லூரி, திருநெல்வேலி

## முதனிலை

### முதற்றகுதியில் தேர்ந்து பரிசு பெறுபவர்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | பதிவெண் 169 | M. மணி, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள் | |
| 2. | ,, 161. | M. கலாநிதி, | ,, ,, |
| 3. | ,, 166. | A. ராமசாமி, | ,, ,, |

### முதற்றகுதியில் தேர்ந்தவர்கள்

| | | | |
|---|---|---|---|
| 4. | பதிவெண்: 167. | K. K. குழந்தைசாமி, | ,, ,, |
| 5. | ,, 159. | V சீனிவாசகம், | ,, ,, |
| 6. | , 168. | M. வேங்கடேசன், | ,, ,, |
| 7. | ,, 153 | V. கலியமூர்த்தி, | ,, ,, |
| 8. | ,, 165. | S. கோவிந்தன், | ,, ,, |
| 9. | ,, 150. | V. கோபாலகிருஷ்ணன், | ,, ,, |
| 10. | ,, 162. | T K. நாராயணன், | ,, ,, |
| 11. | ,, 154. | P. சத்தியமூர்த்தி, | ,, ,, |
| 12. | ,, 156. | S இளையபெருமாள், | ,, ,, |

### இரண்டாந் தகுதியில் தேர்ந்தவர்கள்

| | | | |
|---|---|---|---|
| 13. | பதிவெண் 153 | P. சுந்தரராஜன், | ,, ,, |
| 14. | ,, 163. | G சரசுவதி, | ,, ,, |
| 15. | ,, 151. | T ராமலிங்கம், | ,, ,, |
| 16. | ,, 171. | R. கலியமூர்த்தி, | ,, ,, |
| 17. | ,, 155. | S. விசாலாட்சி, | ,, ,, |
| 18. | ,, 170 | T. N. சிவஷண்முகம் | ,, ,, |
| 19. | ,, 164. | K. அருணாசலம், | ,, ,, |
| 20. | ,, 157. | M. ஆளவந்தார், | ,, ,, |
| 21. | ,, 148. | ந. செகதீசன், கரந்தைப் புலவர் கல்லூரி | |
| 22. | ,, 148. | R. சங்கரநாராயணன், K. V. S. S கல்லூரி, திருப்பனந்தாள் | |
| 23. | ,, 160. | S. சிவநேசன், | ,, ,, |

### மூன்றாந் தகுதியில் தேர்ந்தவர்கள்

| | | |
|---|---|---|
| 24. | பதிவெண்: 149. | அ. கந்தசாமி, கீழ்த்திசைப் புலவர் கல்லூரி, தருமபுரம். |
| 25. | ,, 173. | கி. குழைக்காதன், கொக்கிரகுளம் |
| 26. | ,, 172. | பட்சிராஜன், பாளையங்கோட்டை |

## புகுமுக வகுப்பு

முதற்றகுதியில் தேர்ந்து பரிசு பெறுபவாகள்

1. பதிவெண்· 148. விசயராகவன், K. V. S. S. கல்லூரி, ரூ. 20
2. „ 145. S. காநதிமதி, „ ரூ. 15
3. „ 162. சாவிததிரி முத்தையா, திருவள்ளுவர் செந்தமிழப் புலவா கல்லூரி, திருநெல்வேலி

முதற்றகுதியில் தேர்ந்தவாகள்

4. பதிவெண: 142. K. பரசுராமன், K. V. S. S கல்லூரி, திருப்பனந்தாள்
5. „ 146. S இராசகோபாலன், „ „
6. „ 151. M. மாணிககவாசகம், „ „
7. „ 163. க. சீதாராமன, திருவளளுவா செந்தமிழப் புலவா கல்லூரி, திருநெலவேலி
8. „ 143. M. பழனிவேலு, K. V S. S. கலலூரி, திருப்பனந்தாள்

இரண்டாங் தகுதியில் தோந்தவர்கள்

9. பதிவெண்: 144. K. M. கணணப்பன், „ „
10. „ 164. திருவேஙகடநாதன், திருவள்ளுவர் செந்தமிழப் புலவா கல்லூரி, திருநெல்வேலி
11. „ 141. K. பட்டாபிராமன், K. V. S. S. கலலூரி, திருபபனந்தாள்
12. „ 149. S R ராமமூாததி, „ „
13. „ 153. D. அருணசலம, „ „
14. „ 150. R. நேத்திரானந்தம், „ „
15. „ 152. K செலலமுதது „ „
16. „ 161. குருமூர்ததி, கீழதிசைப் பலகலைக் கல்லூரி, தருமபுரம்
17. „ 154. S. அருணசலம், K. V. S. S கல்லூரி, திருப்பனநதாள்
18. „ 156 வே. எட்வர்ட் கனகராசன், கரநதைப் புலவர் கல்லூரி

மூன்றுந் தகுதியில் தோந்தவர்கள்

19. பதிவெண்: 157. வேஙகடசுப்பிரமணியன், கரந்தைப் புலவர் கல்லூரி
20. „ 155. S. செயராமன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்
21. „ 158. சா. இராமச்சந்திரன், கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்
22. „ 160. சி. வ. கடாட்சம் „ „

நெல்லை,<br>5-6-1954.

பு. சி. புன்னைவனநாதன்,<br>புலவர்குழுத் தலைவர்.

# செய்திகளும் குறிப்புக்களும்

(க) மாதர் மணிவாசக சங்கம், விருதுநகர்

விருதுநகர் மணிவாசக சஙகத்தின முதலாவது ஆண்டு நிறைவு விழா 23-5-54-இல் பாலசுப்பிரமணிய சுவாமி கோவிலில அமைதத அழகிய கொட்டகையில் நிகழவுற்றது. அதற்கு சென்னை எதிராஜ் மகளிர் கல்லூரித தலைமை ஆசிரியை திருவாட்டி ஏ. ஆர். இநதிரா பி.ஏ, (ஹானர்ஸ்) தலைமை தாஙகினர். அறிவறிந்த பல பெணமணிகள் பல அரிய சொற்பொழிவு நிகழத்தினர். இரவு 12-மணிககு நன்றி கூறலுடன் விழா இனிது நிறைவேறியது.

**குறிப்பு:** உலகின் ஒரு கூறு பெணணினம. நாட்டின் எழுசசிக்குப் பெண்ணினமும் ஆணினத்தோடொத்த அறிவும், திறனும், ஆற்றலும் உடையதாதல் வேணடும். இப் பண்புகள் பணடைக்காலப் பெண்மணி கள்பால் வீறுகொண்டிருந்தன. இற்றை நாளினும் மாதர் மணிவாசக சஙகம் போன்ற அருஙகலைச சங்கங்கள் தோனறி அறிவுத்துறையில் முன்னேறிவருவது அறிநது கழிபேருவகை கொளளகினறோம்.

(உ) சிலப்பதிகார விழா, இலங்கைப் புங்குடு தீவில் கொண்டாட்டம

யாழப்பாணததை அடுத்துள்ள புஙகுடு தீவில் கண்ணகியம்மன் கோயில முன்றிலில் (23, 24, 25-4-54)-ஆம நாட்களில சிலப்பதிகார விழா சிறப்புற நிகழ்ந்தது. அதற்குப் பணடிதர் திரு. கா. பொ இரத் தினம் அவர்கள் தலைமை ஏற்றனர். தமிழகத்திலிருந்து பேரறிவு சான்ற அறிஞர்களும் உள்நாட்டு அறிஞர் பெருமக்களும் சென்று சிலப் பதிகார அரிய கருததுக்களைக் கேட்டார் இன்புறும வணணம் சொற் பெருககாற்றினா. பல்லாயிரககணக்கான மக்கள் கலந்துகொணடு அறிவு விருந்துண்டு அகமுகம் மகிழ்ந்தனா.

**குறிப்பு** கண்ணகியார் கற்புக்கடம் பூண்ட பொற்புடையார். அவர்தம் கற்பின் திறததை முற்ற முடிய விளக்கும் வரலாற்று நூலே சிலப்பதிகாரம் என்னும் செஞ்சொற்காப்பியம். இதன் நயமும, இதன் கண் பொதிந்து கிடக்கும் அறம், மறம், கல்வி, கேள்வி, கொடை, செஙகோல் மனனா திறம் யாவும் தமிழாதம் பண்பாட்டை உயர்த்துக் கூறுவதாகும. இதன அரிய சீரிய கருததைக கடல்கடநத வேற்று நாட்டிலும் உணர இத்தகைய விழா நிகழ்வது போற்றற்குரிய செய லாகும்.

(ங) திருச்சி மாவட்டத்தில் தமிழில் அரசியல் அலுவல்கள்

நம்நாடு விடுதலை பெற்று எட்டாண்டுகட்கு மேலாகின்றன. ஆயினும் அவ்வந்நாட்டு மொழிகள் ஆட்சி மொழியாக இன்னும ஆக

வில்லை. திருச்சி மாவட்டத்தில் மட்டும் எடுத்துக்காட்டுக்காகத் தமிழ் மொழியில் அரசியல் அலுவலை நிகழ்த்திவர சென்னை மாநில அரசினர் ஏற்பாடு செய்துள்ளனர். ஆனால், அரசினர் அதனை உண்மையின் பற்றுதலுடன் செய்யாது வேண்டா வெறுப்பாகவே அமைத்துள்ளனர். அங்கு ஏறக்குறைய ஆறு திங்கள் வரை தமிழில் அலுவல்கள் நடந்தேறச் செய்தும் தமிழில் அதற்கேற்ற சொற்கள் இல்லையென்றும், அதனால் ஆங்கிலத்திற் கலந்தே அரசியல் முறைகளை நிகழ்த்தவேண்டியிருக்கிறதென்றும் சிலர் குறைகூறியும், நையாண்டி செய்தும் எழுதிவருகின்றனர். எந்த மொழியும் உடனே ஆளுக எல்லாச் சொற்களும் கொண்டு அமைந்துவிடாது. அவ்வம்மொழி மக்கள் மடிதற்று முன்னின்று வளர்த்தாலன்றி வளராது. புதிதாக வந்த அமைச்சர் இராமசாமிப் படையாச்சியவர்கள் தமிழ்மொழி ஆட்சிமொழி ஆதற்கேற்ற காலம் இப்போதில்லை யென்கிறார். அமைச்சராவார் தத்தம் மொழியில் புலமையும், பற்றும் உள்ளராதல் வேண்டும். அப்போதுதான் நாட்டு மொழி வளரும், நாடு நாடாகப் பெருமையுறும். இன்றேல் வேற்று மொழிகட்கு அடிமையாகி உழலவேண்டியதுதான். இந்தி மொழியை வளர்க்க எத்தனை வகைகளில் அடிகோலுகின்றனர்? அம்முறையை நந்தமிழ் மொழியிடத்துக் கொணரலாகாதா? உலக வழக்கில் மறைந்த வடமொழியை ஆட்சி மொழியாக்க ஒரு சிலர் கனவு காண்கின்றனர். அவ்வுலகைக் கண்டும் கேட்டும் இருக்கின்ற அமைச்சர் காலத்தைக் காட்டிச் சொல்வது சாலுமா?

திருச்சியில் நிகழ்ந்துவரும் அரசியல் மொழியாகிய தமிழ்மொழியை நம் தமிழகமெங்கணும் கொணரப் பொதுமக்கள் உடனே வீறுகொண்டெழுதல் வேண்டும். தமிழில் எதையும் கொணர ஒல்லும் என்பதைக் காட்டுதல் வேண்டும். அப்போதுதான் பிற்போக்காளர் திருந்தி முற்போக்குறுவர். நமது என்றுமுள தென்றமிழ் ஏற்றமுடன் எழுச்சியுறுமெனக் கூறுகின்றோம். மொழி யெழுச்சிபெறின் நாட்டு நலங்களும் எழுச்சியுறும், அதனால் உலகமக்களோடொத்த உயர்நாடாக நம் தமிழகம் மிளிரும். மொழி, கலை, பண்பாடு முதலியவைகளில் தலைசிறந்து நின்ற நம் தமிழகம் இற்றைநிலையில் எவ்வாறிருக்கின்றதென்பதை எண்ணுதல் வேண்டாவா? எண்ணி அதற்காவன செய்ய வேண்டாவா? அண்மையில் நம் நாட்டை விட்டுப் பிரிந்த ஆந்திரநாடு, தன் மொழியில் ஆட்சி செலுத்த வீறுகொண்டு நிற்கின்றது. நாம் மட்டும் காலமில்லை, வாய்ப்பில்லை என்று காலத்தைக் கடத்துகின்றோம். விழுமின்! எழுமின்!

---

# மதிப்புரை

**'மாலைப் பாக்கள்' பக்கங்கள்:** அஅ. விலை. ரூ. க

**[ஆசிரியர்: புலவர் திரு. யம். பி. மாஸ்கரேனஸ் அவர்கள், தூத்துக்குடி]**

இந் நூல் அழகிய செந்தமிழ்ப் பாக்களால் இயன்றது. இதன்கண் 'அஞ்சலி' என்பது முதல் 'பாதமலர்' என்பது இறுதியாக நஅ தலைப்புகளில் அமைத்து இந்நூலை வெளியிட்டுள்ளார். இதில் அடங்கியுள்ள பாக்கள் செந்தமிழினபஞ் செறிந்து விழுமிய ஓசை நயமும் சொன்னலமும் பொருளாழமும் மிக்கனவாய் கற்பார்க்குக் கழிபேரின்பம் ஊட்டுவன. இதிற் பெரும்பகுதி ஆசிரியர் சமயமாகிய கிறித்துவ நெறியில் உறைத்துநின்ற பெரியார்களின் வாழ்த்தாக இருப்பினும் அவைகளில் அமைத்திருக்கும் கருத்துக்கள் சாதிசமய வேறுபாடின்றி யாவரும் கற்றற் கேற்றன; கேட்டற்கொத்தன. விழுமிய செம்பாக நடை; பாக்கள் கடல்மடை திறந்தெனன யாற்றொழுக்குப்போல தட்டுத் தடையின்றிச் செப்பமாக அமைந்துள்ளன. இஃது ஆசிரியரின் உள்ளம் நிரம்பிய புலமை நிறைவும் அன்பின் முதிர்வும் பாவாக ஊற்றெடுத்து உருவாகிய தெனக் கூறலாம். ஆசிரியர் இதுபோன்ற பாக்களை யாக்கும் பணியில் ஈடுபாடுற்று நம் தமிழன்னையின் திருவடிகட்கு வாடாத மாலையாக இதுபோன்ற நன்னூல் பலயாத்துப் பன்னெடு நாட்கள் வாழுமாறு இறையருளை வேண்டி வாழ்த்துகின்றோம்.

ஆசிரியர் பாட்டில் ஒன்று காட்டுவாம், இறைவன் முழுமுதல் தன்மையை விளக்கியிருக்கும் ஒப்பத்தைக் காண்மின் :

பெண்ணுடன் ஆணுமில்லான்
    பெயர்குலம் இடமும் இல்லான்
எண்ணுடன் அளவும் இல்லான்
    இணைமுதல் எதிரும் இல்லான்
கண்ணுடன் ஒளியாய் நிற்கும்
    களங்கமில் பளிங்கின் மிக்கான்
மண்ணுடன் விண்ணும் வாழ்த்தும்
    மலரடி சிரமேல் வைப்பாம்.

**காதல் நிலைக் கவிதைகள், பக்கங்கள் :** ௩உ. அணா. ௧0.

**[ஆசிரியர் அ. கி. பரந்தாமனார் அவர்கள், தியாகராசர் கல்லூரி, மதுரை]**

காதல் என்பது பருவம் பூத்த ஆண், பெண் இரு பாலாரிடத்தும் மலர்ந்து மணந்தரும் செவ்விய போது. இது கட்டற்ற ஒன்று. இக் காதலொன்றினாலேயே இன்றைய உலகம் இன்ப உலகமாக நிலைத்துளது.

இக் காதற்கனிவை ஆசிரியரவர்கள் '**காதல்**' என்பது முதல், '**எனக்கவள் கண்ணகி தேவியே**' என்பதிறுதியாக எண்வகைத் தலைப்புக்களில் அழகிய சீரிய கூரிய செஞ்சொற்கள் கொண்டு நல்ல பாக்களாக அமைத்து வெளியிட்டுள்ளனர்.

இதன்கண் உண்மைக் காதல் இன்னதெனவும் அன்மைக் காதல் இன்னதெனவும் ஆசிரியர் தம் அஃகியகன்ற அறிவின் மதுகையானும் நுண்மாணுழை புலத்தானும் யாரும் எளிமையிற் படித்துணருமாறு பாடியுதவியது புகழ்ச்சிக்கும், மகிழ்ச்சிக்கும் உரியது. இதுபோன்ற

நல்ல அரிய நூல்கள் இக் காலத்துக்கு வரவேற்கத் தக்கன. உயர் காதலைக் குறித்த ஆசிரியர் கருத்தொன்றைக் காட்டாகக் காட்டுவாம்:

'பலநாள் கண்டு பழகுவதால் பலவாம் குறைகள் அறிவதனால்
நலமாய் இருந்த ஒருவரிடம் நாடி வெறுப்பு வருவதுண்டு
பலநாள் பழகிக் குறையுணர்ந்தும் பாரில் இருவர் இணைவதென்றால்
உலகில் அதுவே உயர்காதல் உடையார் இருக்கும் அக்காதல்'

என்பதில் என்ன அழகிய கருத்து! இதுபோன்ற துறையில் ஆசிரியரவர்கள் ஈடுபட்டு தமிழ்கூறும் நல்லுலகத்துக்கு அரிய நூல்கள் யாத்துதவுமாறு வேண்டுகின்றோம்.

**திருவாசகம் - ஆராய்ச்சிப் பேருரை. விலை. ரூ. 15.**

**[உரையாசிரியர் யாழ்ப்பாணத்தைச் சார்ந்த மாவைக்கவுணியன் வெண்ணெய்க் கண்ணனார் என்னும் பண்டிதமணி திரு. க. சு. நவநீத கிருட்டின பாரதியார் அவர்கள்.]**

இவ்வுரை, நூலடைவு பொருளடைவுகளுடன் திருப்பாட்டுக்களின் கருத்துரை, பொழிப்புரை, விளக்கவுரைகளும், ஆங்காங்கு இன்றியமையாது வேண்டப்படும் வரலாறுகளும், சிறந்த இலக்கணக் குறிப்புக்களும் கொண்டு திகழ்கின்றது. உரையாசிரியர் செந்தமிழ்ப் புலமையும் வடமொழி வன்மையும் ஒருங்குடைத்த நன்மையர். பல நூல் ஆசிரியர். சங்ககாலப் புலவர்போன்று பாவன்மையும் உரைவன்மையும் நாவன்மையும் ஒருசேரப் பெற்ற பெரும்புலவர். தொடர்ந்த தமிழ்ப்பேராசிரியர். சமய நூல் வல்லுநர். இவ்வரும்பெரும் நூலுக்கு இத்தகையார் உரை எழுதி உதவியது தனிப்பெரும் பேறேயாம். மேலும் திருவாசகச் செழும் பனுவலைப் புகழ்நூற் கண்கொண்டு பெரும்பாலும் உரைவகுத்து ஐந்திணை அகநூற் கருத்தும் ஆங்காங்குச் சுட்டிக்காட்டினர் எனஉரையாசிரியர். இவ்வுரையாசிரியர் பாட்டுதோறும், சொற்றோறும் அகப்பொருள் நுணுக்கம் காட்டிச் செல்லும் தன்மை அனைவர்களாலும் போற்றத் தக்கதே. இவ்வுரையினைக் கற்பார் தொல்காப்பிய முதலிய சங்கநூல் அனைத்திலுமுள்ள நுண்பொருள்களெல்லாம் நுண்ணிதின் உணர்ந்த திண்ணியராவர். சித்தாந்த நுணுக்கங்கள் வேண்டுமிடங்களிலெல்லாம் விளக்கியுள்ளார்கள். இதற்கு மேற்கோளாகத் தென்மொழி வடமொழி நூல்கள் எழுபதுக்கு மேற்பட்டன கையாண்டுள்ளார்கள். இதனானே உரையின் திட்பமும் ஆசிரியர் ஒட்பமும் நன்கு புலனாகும். இவ்வுரை நூலைச் சிறப்பாகச் செந்நெறிச் செல்வர்களும் பொதுவாகச் செந்தமிழ் மக்களும் வாங்கிக் கற்றுப் பெரும்பயன் எய்துவார்களாக. இதனை வாங்கும் வாயிலாக இவ்வுரையாசிரியர் ஏனைத் திருமுறைகளுக்கும் இதுபோன்ற செவ்விய உரை எழுத முன்வருமாறு தூண்டுதல் பெருங்கடன். நடை, ஆற்றொழுக்கும் இனிமையும் எளிமையும் பொருந்தியது. அச்சு, தாள், கட்டடம் முதலியன சிறந்தன.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.